உ

श्रीगुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम्

# ஸ்ம்ருதி முக்தாபலம்

श्रीवैद्यनाथदीक्षितविरचितम्

पञ्चमो भागः ஐந்தாம் பாகம்

## श्राद्ध काण्डः - पूर्वभागः

## ச்ராத்த காண்டம் - பூர்வ பாகம்



வெளியிடுபவர்:

வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபை

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம், ஸ்ரீமடம் ஸம்ஸ்தானம்,

காஞ்சீபுரம்

உ

श्रीगुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम्

श्रीवैद्यनाथदीक्षितविरचितम्

पञ्चमो भागः

## श्राद्ध काण्डः - पूर्वभागः

द्रविडानुवादयुतम्

# ஸ்ம்ருதி முக்தாபலம்

ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் இயற்றியது

ஐந்தாம் பாகம்

## ச்ராத்த காண்டம் - பூர்வ பாகம்

தமிழுரையுடன்

தொகுத்தளிப்பவர் :

வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி, ஸ்ரீரங்கம்

வெளியிடுபவர் :

**வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபை**

(கும்பகோணம்) சார்பில்

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம், ஸ்ரீமடம் ஸம்ஸ்தானம்

1, சாலைத் தெரு, காஞ்சீபுரம் - 631 502

கர ஸு 2011

**SMRITI MUKTAPHALAM - PART - 5**

**SRADDHA KANDAM - PURVA BHAGA**

With Tamil translation :

Khara 2011 - II Edition

Edited by :

Vaidya **S.V. Radhakrishna Sastri, Srirangam**

Published on behalf of

**Veda Dharma Sastra Paripalana Sabha**

Kumbakonam

by

**Sri Kanchi Kamakoti Peetam,**

Sri Matam Samsthanam

1, Salai Street, Kancheepuram=631 502.

---

Lasertypeset & Prnted at :

V.K.N. Enterprises

164, R.H. Road, Mylapore, Chennai-4, Phone : 98402 17036

Phone : 044-2722115 e:mail:skmkanci@md3.vsnl.net.in
Fax : 044-27224305, 37290060

Sri Chandramouleeswaraya Namaha:
Sri Sankara Bhagavazdpadacharya
Paramaparagatha Moolamnaya Sarvagnapeeta:
His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi

**JAGADGURU SRI SANKARACHARYA SWAMIGAL**
**Srimatam Samasthanam**
**No.1, Salai Street, KANCHEEPURAM - 631 502.**



मङ्क्त्वा सत्स्मृतिसागरे सुगहने लब्ध्वा वरं मौक्तिकं
श्रुत्यम्बागलभूषणं समतनोत् श्रीवैद्यनाथो महान् ।
भूयस्तद्द्रविडानुवादकनकैस्तन्वन् स्रजं सुन्दरीं
राधाकृष्णसुधीस्सदा विजयतां श्रीचन्द्रमौलीक्षणात् ॥

अक्षैर्मा दीव्येति आम्नायामृताम्बुधिबिन्दुभिः निखिल-स्मृतिनिचयेन च प्रभुसम्मिततया, इतिहासपुराणबृन्द-माक्षिकधारया सुहृत्सम्मिततया, काव्यरसानुभूतीक्षुसारवर्षैः कान्तासम्मिततया च प्रतिपादितः धर्मकलापः सूक्ष्मगतिको विलसति । धर्म एव विशिनष्टि समाजं समजात् । मनीषिमनोगोचरस्य तस्य धर्मस्यावगतये परमकारुणिका ऋषयः स्मृतिग्रन्थान् विलिख्य महदुपकारमतानिषुः । धर्मकलापापकलनकलापटौ कलौ मानवानां बोधनाय वैद्यनाथदीक्षिताख्यो विद्वदग्रेगण्यः स्मृतिसागारं निर्मथ्य

पीयूषमाचिन्वन् स्मृतिमुक्ताफलाख्यं ग्रन्थमरीरचत् । सोऽयं ग्रन्थः वर्णाश्रमधर्मकाण्डः, आह्निककाण्डः, आशौचकाण्डः, श्राद्धकाण्डः, तिथिनिर्णयकाण्डः तथा प्रायश्चित्तकाण्डश्चेति काण्डषट्केन निखिलमपि धर्मं प्रतिपादयति । यं वै रक्षसि धर्मं त्वं धृत्या च नियमेन च । स वै राघवशार्दूल धर्मस्त्वामभि-रक्षत्विति श्रीमद्रामायणवचनेन धर्मो रक्षति रक्षित इति सुष्ठु अवगम्यते । लोकानां धारणाद्धर्म इति सार्थाभिधां बिभ्रतो धर्मस्य सेवनं लोकव्यवस्थायाः स्थिरीकरणमिति न संशीतिः । सोऽपि धर्मः अनेन ग्रन्थरत्नेन सुष्ठ्ववगम्यते । तस्यैतस्य ग्रन्थस्य वर्णाश्रमधर्मकाण्डादिः भागशः **वैद्यश्री शिवे. राधाकृष्णशास्त्रिभिः** द्रविडानुवादेन सह परिष्कृत्य वेदधर्मशास्त्रपरिपालनसभाद्वारा प्रकाश्यते इति ज्ञात्वा भृशं मोदामहे । सोऽयं यत्नः श्रीमहात्रिपुरसुन्दर्यम्बा-समेत श्रीचन्द्रमौलीश्वरकृपया सफलो भवत्विति ग्रन्थ-सम्पादकः एवमेव ग्रन्थरत्नानि प्रकाशयन्नैहिकामुष्मिकश्रेयो-विलासैः समेधतामिति प्रकाशने साहाय्यकर्तारश्च समस्त-मङ्गलानि अवाप्नुयुः पठितारश्च धर्मसेवनेन निखिलश्रेयांस्यधि-गच्छन्त्विति चाशास्महे ।

शाङ्करसंवत्सरः २५२०

काञ्चीपुरम् **नारायणस्मृतिः ।**

॥ श्रीः ॥

# சிராத்த காண்டம்

तव तत्त्वं न जानामि तदमेयं धिया मम ।

अनीदृशस्त्वं प्रथितस्ता दृशे ते गुरो नमः ॥

श्रद्धा - भक्तिः - சிரத்தை - பக்தி

श्रद्धा - आदरः, गुरुश्रुत्याद्युपदेशेषु विश्वासः, स्पृहा, शुद्धिः, प्रत्ययः । श्राद्धं - श्रद्धया पित्रादिभ्यः दत्तं, कृतं क्रियमाणं कर्म । சிரத்தா - சிரத்தை - அக்கரை, குரு வேதம் முதலியவர்களின் உபதேசத்தில். வழிகாட்டலில் நம்பிக்கை, புலப்படாததால் இல்லை என்று எண்ணுமல் அனுபவத்தால் உள்ளுணர்வால் உள்ளதெனத்தெளிந்து அக்கரையும் ஆர்வமும் நம்பிக்கையும் கொண்டு செயலில் ஈடுபடுதல், ஆர்வம், விரும்பிச் செயல்படுதல், தூய நம்பிக்கை. இப்பண்பாட்டுடன் செய்யப்படுகிற செய்கை, செய்முறை ச்ராத்தம். குறிப்பாக தம் முன்னோர்களின் உடல் முதலியவற்றின் அழிவை நேரில் கண்டும் கேட்டும் உணர்ந்தும் அவர்கள் தனக்கென் தனி உருக்கொண்டு இருப்பதை உணர்ந்து நம்பி அவர்களோடு ஆர்வத்துடன் தொடர்புகொள்ளுதல். இது இவ்வாறு உருவாவதற்கு அவர்களிடம் உள்ள பக்தி உதவுகிறது. அவர்களைச் சார்ந்தே நம் வாழ்வு அமைந்துள்ளதாக நம்பிக்கை. அதனுல் சிரத்தா பக்தி அல்லது பக்தி-சிரத்தை என்று இரு பண்புகளும் இணைத்தே குறிப்பிடப் பெறுகின்றன.

தாய், தந்தை என்றவாறு பல நிலைகளில் உயிர் நீங்கும் வரை உபசரிக்கப்பட்டிருந்த உடல், உயிர் நீங்கியதும் சவமாகிறது. அதனுள் உயிராக உலாவி வந்த ஜீவன் தனியே பிரிந்து அங்குவிட்டு வேருெரு உருப்பெற வெளியேறுகிருன். அப்போது அவன் பிரேதன் - பிரயாணத்திலிருப்பவன். இது காறும் முன்பெற்றிருந்த உடலின் தொடர்பு வாஸநா ஸம்ஸ்காரமாகிப் பசியும்

தாகமும் முன்கொண்டிருந்த உறவு உணர்ச்சியும் அவனை பொதுவாக 10-11 நாட்கள் வரை துன்பறுத்துகின்றன. புத்திரன் முதலிய நெருங்கிய உறவினர்கள் நீர் வார்த்து (உதகதானம்) பிண்ட மளித்து முறைப்படி அவனது உடலை எரித்தோ மண்ணுள் புதைத்தோ அதனை ஐம்பூத நிலைக்கு மாற்றி முன் கொண்டிருந்த உடல் - உள்ளத் தொடர்பை நீக்க உதவுகின்றனர். அதுவே ஈமச் சடங்கு - தசாஹ கர்மமாகிறது. அந்த ஜீவனின் பிரேத நிலையை இவ்வாறு நீக்கி அவனது முன்னோர்களான ஸபிண்டர் எனும் பித்ரு பிதாமஹ - ப்ரபிதாமஹக் கூட்டத்துடன் அவனை இணைக்கின்றனர். இது ஸபிண்டீகரணமாகிறது. இந்நிலை இறந்து ஒரு ஆண்டு முடியும் போதுதான் பெற முடியுமெனினும், ஈமச் சடங்கு செய்கிற புத்ரர் முதலானோரின் வாழ்நாள் நீடிப்பது கேள்விக் குறியாகுமாதலால் அதனை 12 நாட்களுக்குள் நிறைவுறுமாறு ஒரு வருஷம்வரை தொடர்ந்து அவ்வப்போது செய்ய வேண்டிய பல சிராத்தங்களை முன்னதாக ஆகர்ஷித்து 12வது நாளில் நிறைவுறுமாறு நடத்தி முடிப்பர். ஆக இந்த ஈமச் சடங்கு 12 நாட்களில் ஓரளவு நிறைவுற்ற போதிலும், ஓராண்டுவரை உரிய காலத்தில் மாஸிகம் முதலிய அந்தந்தச் சடங்குகளை முறைப்படி செய்து முதலாண்டின் முடிவில் நிறைவுறச் செய்வர். அதன் பின் ஆண்டிற் கொருமுறை பிரதி வருஷம் மரண திதியில் (பிரத்யாப்திக) சிராத்தம் செய்வர்.

முதலாண்டு முடியும்வரை வீட்டில் பும்ஸவனம் ஸீமந்தம் முதலிய சுபகர்மங்கள் செய்ய நேரிடும். ஈமச் சடங்கு செய்தவனுக்கு அதற்கான தூய்மை இராது. சுபகர்மங்களில் மறைந்த பிதா முதலிய முன்னோர்களும் பித்ரு தேவர்களாக ஆசி வழங்க வருவர். அவர்களை வரவேற்று அவர்களது ஆசியைப் பெற நாந்தீமுக சிராத்தம் செய்வர். நாந்தீ என்ற மங்களப் பொருளை ஏந்தி பித்ரு தேவர்கள் வருவதால் நாந்தீமுக பித்ருக்கள் என அவர்களைத் தனித்துக் குறிப்பிடுவர். ஆப்திக - பிரத்யாப்திக

சிராத்தங்களில் மறைந்த தந்தை வஸு வடிவில் முதலில் இடம் பெறுவார். தந்தையின் தந்தை ருத்ரராகவும் அவரது தந்தை ஆதித்யராகவும் இடம் பெறுவர். தாய், தந்தையின் தாய், தந்தையின் பாட்டி இவர்களும் வஸுருத்ர ஆதித்யர்களாக வருவர். வஸுவின் பின் வருபவர் ருத்ரர், அவருக்குப்பின் ஆதித்யர் என வரிசை ஸபிண்டீகரணத்தால் ஏற்பட்ட பித்ரு தேவ நிலை. சுபகர்மங்களிலோ நாந்தீமுக தேவர்களாக அவர்கள் வரும்போது ஆதித்யர் முதலில், அவரை தொடர்ந்து ருத்ரர், அவருக்குப் பின் வஸு என வரிசை. தந்தை தன் பாட்டனுருக்கு முன்னிடம் தந்து தனது தந்தையை ஒட்டி அவரது பின்வருவது ஆசி வழங்குவதில் அவர் காட்டும் பண்பெனக் கொள்ளலாம்.

நாந்தீமுக பித்ருக்களை வரவேற்கத்தக்க தூய்மை முதலாண்டு முடிவுவரை கர்த்தாவிற்கு மாஸிகம் முதலியவை செய்ய நேர்வதால் இல்லை எனக் கொண்டு முதல் ஆண்டின் இறுதிக்குள் செய்ய வேண்டிய மாஸிக ஊநமாஸிகாதிகளை ஆகர்ஷித்து சுபகர்ம நாளுக்குமுன் செய்வர்.

மறைந்தவரின் மேனிலைக்கு உதவவும், தனது முன்னோர்கள் சவமாகவோ பிரேதமாகவோ இருந்து சுத்தி இல்லாத நிலை நீடிக்காதிருக்கவும் பிரேத கர்மங்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. தந்தைக்குப் புத்திரன், கணவனுக்கு மனைவி, ஜ்யேஷ்டனுக்குக் கனிஷ்டன் என்ற வாறு கர்த்தாக்கள் மாறுவர். பல தாரமணத்திற்கு சாஸ்திரம் இடம் தருவதால் மனைவியரின் மூத்தவளுக்குப் பிறந்த மூத்தவன் முக்யமாகிறான். மூத்தாளுக்குப் பிள்ளைகளில்லாவிடில் பல மனைவியரில் முதலில் பிறந்த பிள்ளை ஜ்யேஷ்டனாகிறான். மக்கட் பேறு இல்லாதவருக்கு உற்றார் உறவினர் கூடப் பிறந்தவர் தந்தை எனக் கர்த்தா மாறலாம். ஆதலால் கர்த்தா யார் என்றசிந்தை முக்கிய இடம் பெறுகிறது

தந்தையோ தாயோ தேசாந்தரத்தில் மரித்தாலோ மரித்த செய்தி தாமதமாகக் கிடைத்தாலோ மரித்ததே தெரியாவிட்டாலோ கருமம் செய்வதில் சங்கடங்கள் நேரும்.

மூத்தவன் அருகில் இல்லாதபோது இளையவனுக்கு அப்பொறுப்பு நேரும். புத்ரர்களே இல்லாதபோது உற்ருருறவினருக்கோ ஊராருக்கோ அந்தப் பொறுப்புண்டு. சவம் ஊருக்குள் இருந்தால் ஊருக்கும் சுத்திக் குறைவுண்டு. இந்த நெருக்கடிகள் எண்ணற்றவை. இவையனைத்திற்கும் தக்க பரிஹாரத்தை முன்னோர்கள். பல வகையில் சிந்தித்து வழிகாட்ட முனைந்ததால் மரணத்தைத் தொடர்ந்த பன்னிருநாட்கள் அல்லது ஓராண்டிற்கான நடைமுறை விளக்கம் மிகவும் விரிவு பெற்றதால் ஸ்ம்ருதி முக்தாபலத்தின் சிராத்தகாண்ட பூர்வபாகம் மற்ற ஏழு பாகங்களைவிட மிகவும் விரிவடைந்துள்ளது.

கர்த்தாவின் ஆத்ம க்ஷேமம் மட்டுமின்றி அவனது வம்ச க்ஷேமமும் தேச க்ஷேமமும் இந்த அபர கர்மங்களின் அடிப்படை நோக்கமாகிறது. தனி மனிதனின் நல வாழ்வும் தூய்மையும் தேசத்தின் நலனுக்கும் தூய்மைக்கும் பெரிதும் உதவுகின்றது.

ஸ்ம்ருதி முக்தாபலத்தின் மறுபதிப்பை வெளிக்கொணர ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்களும் ஸ்ரீ சங்கர விஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்களும் தம் குருநாதர்களான ஸ்ரீ மஹா பெரியவாள் பூஜ்யஸ்ரீ சந்திர சேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்கள் பெருமுயற்சியால் உள்ளத்தில் ஆழ்ந்து முக்கியப் பணியாகக் கொண்டு வெளியிட்டதென்ற சிரத்தா பக்தியுடன் வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபையின் சார்பில் ஸ்ரீ மடத்தின் வெளியீடாக வெளிக்கொணர - அருள் புரிந்தார்கள். அதனைச் செயல் வடிவில் கொணர இவனுக்கு வாய்ப்பு அளித்தார்கள். அது அந்தப் பேரருளால் நிறைவுறுகிறது. இதனை பரம பூஜ்ய ஸ்ரீ சரணர்களின் திருவடிகளில் ஸமர்ப்பித்து நிறைவுறுகிறேன்.

**ஸ்ரீரங்கம் வைத்ய எஸ்.வி. ராதாகிருஷ்ணசாஸ்திரீ**

*20.6.2011*

# முகவுரை

*(முதல் பதிப்பில்(1953) உள்ள முகவுரையின் சுருக்கம் இது)*

*நமது தக்ஷிண பாரத தேசத்தில் ஸுப்ரஸித்தமாக விளங்கி வருகிற வைத்யநாத தீக்ஷிதீயமென்கிற ஸ்ம்ருதி முக்தாபல நிபந்தன க்ரந்தத்தின் ச்ராத்த காண்ட மென்கிற பெரிய முக்ய பாகமானது தார்மிக ஸமூஹ உபகாரார்த்தமாகத் தமிழில் வெளியிடப்படுகிறது. தற்காலம் நமது தேசத்தில் காலச் சீர்கேடு காரணமாக நமது தர்மங்களும் ஆசாரங்களும் அநுஷ்டானங்களும் மறைந்தும் குறைந்தும் போய்விட்ட துரதிர்ஷ்ட நிலைமையில் ச்ராத்த தர்மம் ஒன்றுதான் எப்படியோ சிறிது உயிர் தரித்து நிற்கிறது. அதற்கு வலிவூட்டி நல்ல நிலைமையில் நீடித்து வாழச் செய்யும் கைங்கர்யத்தில் வேத தர்மசாஸ்திர பரிபாலன ஸபையானது தனது உயரிய கடமையை இதன் மூலம் செய்திருப்பது ஆஸ்திக ஸமூஹத்தினரால் நன்றியுடன் வரவேற்கப்படும்.*

### தீக்ஷிதீயத்தின் உயர்வும் உபகாரமும்

*நிபந்தன க்ரந்தங்கள் எந்த நோக்கத்துடன் ஏற்பட்டனவோ அந்தக் கார்யத்தைத் தீக்ஷிதீயமானது வெகு திறமையுடன் நிறைவேற்றியிருக்கிறது. அதனாலேயே இந்த நிபந்தனத்துக்கும் நம் தேசத்தில் மிகுந்த மதிப்பு ஏற்பட்டிருக்கிறது. வைதிக மதத்தில் நிபந்தன க்ரந்தங்கள் அத்யந்தம் அபேக்ஷிதங்கள். நிபந்தன க்ரந்தங்கள் தோன்றாவிடில் தர்மாதர்ம வ்யவஸ்தைகளையும், அனுஷ்டான நியமங்களையும் தார்மிகர்கள் யதாவத்தாக அறிந்து அனுஷ்டிக்க முடியாது. குழப்பமே ஏற்படும். ஸ்ம்ருதிகள் தர்மாதர்ம வ்யவஸ்தைகளைச் செய்திருந்தபோதிலும் ஸ்ம்ருதிகளை மட்டும் வைத்துக் கொண்டு அநுஷ்டான நிர்ணயம் செய்வது ஸாத்யமாகாது.*

ஸ்ம்ருதிகள் பலவிதங்கள். ஒவ்வொன்றும் குறிப்பாக ஒரு சில விஷயத்தை மட்டும் ப்ரஸ்தாபித்து நின்றுவிட்டன. பூர்ணோபதேசம் காணப்படவில்லை. வைதிக மதத்தில் இருக்கிற ஸகல ஸ்ம்ருதிகளையும் பார்த்து ஸந்த்யா, ச்ராத்தாதி ப்ரயோகங்களை க்ரோடீகரித்து ஸ்வரூபப்படுத்துவது நிபந்தன க்ரந்தங்களின் கார்யமாகும். பரஸ்பரம் விருத்தம்போல் தோன்றும் ஸ்ம்ருதி வசனங்களுக்கும், கால - தேச - அதிகாரி பேதமாக விஷய வ்யவஸ்தை செய்து விரோதங்களைப் பரிஹரித்து அநுஷ்டானத்தை நிர்ணயிப்பதும் நிபந்தனங்களின் மிகப் பெரிய பொறுப்பாயிருக்கிறது. வர்ண தர்மங்கள், நான்கு ஆச்ரம தர்மங்கள், அபர ஸம்ஸ்காரம், ஆசௌசம், ச்ராத்தம், ப்ராயச்சித்தம், ஸ்த்ரீ தர்மம், தாயபாகம், த்ரவ்ய சுத்தி போன்ற ஸகல வைதிக தர்மங்களையும் ஒன்று விடாமல் ஸகல ஸ்ம்ருதிகளையும் பார்த்து வரிசைப்படுத்தி நிர்ணயிக்கும் நிபந்தனம்தான் பூர்ண நிபந்தனமாகும். தீக்ஷிதீயமானது, ஆப்ததமமான ப்ரமாண கோடியில் சேர்ந்த நிபந்தனங்களுள் ஒன்றாகக் கடைசியில் அவதரித்தது.

தீக்ஷிதீயத்திற்கு இந்த ஏற்றமிருப்பதால்தான் தக்ஷிண தேச வைதிக ஸமூஹத்தினரால் ஸம்ப்ரதாய பேதமின்றி இது அனுஷ்டாபக ப்ரமாண க்ரந்தமாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. எல்லா ஸம்ப்ரதாயஸ்தர்களும் தீக்ஷிதீய நிர்ணயங்களைப் புறக்கணிக்க முடியாமல் த்ருப்தியுடன் ஏற்றுக் கொள்கிறார்கள். சாஸ்த்ரம் விகல்பித்துக் கூறுமிடங்களில் ''தேசாசாரப்படி வ்யவஸ்தை'' ''உசிதம் போல் க்ரஹிக்கவும்'' ''சிஷ்டாசாரப்படி இதில் வ்யவஸ்தை'' என்று சொல்வதை எங்கும் காணலாம்.

**புருஷாஹுதி ஸம்ஸ்காரம் :—** இந்த ச்ராத்த காண்டத்தில் இரண்டு பாகங்கள் உண்டு. முதல் பாகத்தில் அபர கார்யங்கள் என்கிற சரீர ஸம்ஸ்கார விதிகள்,

கர்த்ருக்ரமம், அக்நி நிர்ணயம் போன்ற பற்பல முக்ய விஷயங்கள் ப்ரதிபாதிக்கப்படுகின்றன. இரண்டாவது பாகத்தில் பற்பலவித நித்ய நைமித்திக காம்ய ச்ராத்தங்கள் முதலியவைகளும் விரிவாகச் சொல்லப்படுகின்றன.

வைதிக மதத்தில் ஜாதகர்ம, நாமகரண, சௌள, உபநயநாதி ஸம்ஸ்காரங்களைப் போல் அபர கார்யமும் ஓர் சரீர ஸம்ஸ்கார தர்மமாக அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. பிறவி முதல் தர்ம ஸாதனமாயிருந்து தேவ பித்ரு கார்யங்களையும் பகவத் பக்தியையும் செய்து தெய்வத் தன்மையடைந்த இந்தப் புனித மனித சரீரத்தை வெறும் உடலென்று அலக்ஷ்யமாக எறிந்துவிடமுடியாது. ஆகையால் அதைச் சாஸ்த்ர விதிப்படி ப்ரயோக திட்டங்களையும் வகுத்துக் கொடுத்திருக்கிறது. ஸம்ஸ்காரங்களை "நிஷேகாதி-தஹநா(ச்மசாநா) ந்தங்கள்" என்று நமது சாஸ்த்ரங்கள் அபர ஸம்ஸ்காரத்தையும் சேர்த்தே வ்யவஹரிக்கின்றன.

ப்ராம்ஹணாதிகளுக்கு ஏற்பட்ட சாஸ்த்ரீய சரீர ஸம்ஸ்காரங்களில் அபர ஸம்ஸ்காரம் கடைசியான ஸம்ஸ்காரம். இதைத் தெய்வ ஸம்ஸ்காரமென்று தீக்ஷிதர் நிரூபித்து, இதனுல் தேவர்களுடைய ஸாம்யத்தையும் ஸாயுஜ்யத்தையும் இறந்தவன் பெறுகிருனென்று காட்டியுள்ளார். "க்ருஹஸ்தனுக்குக் கடைசியாகச் சொல்லப்படுகிற ச்மசான கர்மம் என்கிற அபர கர்மாவானது, யாவஜ்ஜீவம் அக்நிஹோத்ர ஔபாஸன யஜ்ஞாதி நாநாவித கர்மங்களைச் செய்தபின் கடைசியான புருஷ ஸம்ஸ்காரமாக விதிக்கப்பட்டுள்ளது. இந்தப் புருஷ ஸம்ஸ்காரத்திற்கு பிறகு எல்லையற்ற புண்யமும் ஸ்வர்க்க சப்தத்தால் சொல்லப்படுகிற மோக்ஷ பலனும் கிடைப்பதாக ச்ருதிகளில் காணப்படுகிறது" என்கிருர் தீக்ஷிதர்.

**ப்ரஹ்மஸாயுஜ்யம் - மோக்ஷம் :—** இந்த புருஷ ஸம்ஸ்காரத்தில் ப்ரஹ்மமேதம், பித்ரு மேதம் என்ற இரண்டு பிரிவுகள் சொல்லப்பட்டுள்ளன. இவ்விரண்டும் மிகுந்த உத்க்ருஷ்டங்களென்றும், நற்கதிக்கு ஸாதனமென்றும், ஈச்வர ஸாயுஜ்யம் பெற ஹேதுவென்றும் ச்ருதி ஸ்ம்ருதிகள் உபதேசிக்கின்றன. இவ்விரண்டு ஸம்ஸ்காரங்களும் புருஷோத்தமனை பகவானை அடைவதற்கு ஸாதனமென்று ஸகல யாகங்களையும் விட உயர்ந்த யாகம் இந்தப் புருஷாஹுதி யாகமென்பதைத் தீக்ஷிதீயம் நிரூபிக்கிறது.

**ச்ருதிகல்பஸூத்ர விஹிதம் :—** இவ்வாறாக தஹன ஸம்ஸ்காரமானது மிக உத்க்ருஷ்டமான தென்றும், யாகங்களுள் உத்தமமான யாகமென்றும், பரமாத்ம ஸாயுஜ்யமாகிற மோக்ஷ ஹேதுவென்றும் உத்கோஷிப்பதை வைதிக மதஸ்தர்களில் பலர் அறிந்திருக்க மாட்டார்கள். ''ப்ரேத கார்யம்'' என்ற அலக்ஷ்யப் போக்கு காரணமாக இதன் மஹிமை அறியப்படாமல் ஒதுக்கித் தள்ளி விடப்பட்டு விட்டது. இதனுல் புரோஹிதர்கள் என்கிற யாஜகர்களும் பலர் இந்தப் புருஷாஹுதி ப்ரஹ்மமேத ப்ரயோகத்தை யதாவத்தாக அறிந்து அனுஷ்டானம் செய்துவைக்க முடியவில்லை. ஆகையால் க்ருஹஸ்தர்களின் ஆச்ரம ஸம்ஸ்காரங்களில் கடைசியானதும் முக்யமானதும் பூர்த்திகரமானதுமான இந்த அபர ஸம்ஸ்காரத்தை இனியாவது ஆஸ்திகர்கள் ச்ரத்தையுடன் அனுஷ்டிக்க வேண்டியதற்காகவே அதன் மஹிமையை தீக்ஷிதீயம் விவரித்துக் கூறுகிறது.

இந்தப் புருஷாஹுதி ஸம்ஸ்காரமானது ப்ரத்யக்ஷ ச்ருதி விஹிதமாயிருப்பதுடன் தைத்திரீய ஆரண்யகத்தில் அதற்கான மந்த்ரங்களும் படிக்கப்பட்டுள்ளன. கல்பஸூத்ரகாரர்களான ஆபஸ்தம்ப, போதாயன, பாரத்வாஜாதி மஹர்ஷிகள் பித்ருமேத ஸூத்ரமென்கிற

கல்ப ஸூத்ரங்களைச் செய்து அபர ப்ரயோகத்தைப் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள். இறந்த சரீரத்தின் ஸம்ஸ்கார விஷயத்திலும் வைதிக ஸம்பந்தமும் தெய்வத்தன்மையும் பூர்ணமாயிருக்கும்படி செய்திருப்பது உலகத்தில் நமது வைதிகமதமொன்றில்தான் காணக் கூடியது.

**உலக மதங்கள் யாவற்றிலும் உண்டு :-** மரணத்திற்குப் பிறகும் ஜீவயாத்ரை உண்டென்றும் மறு ஜன்மம் உண்டென்றும் உலக ஆஸ்திக மதங்கள் யாவும் ஒவ்வொரு மாதிரியாக ஒப்புக் கொண்டிருக்கின்றன. ஆகையால்தான் இறந்தவரின் சரீர அடக்க கார்யத்தில் உலகிலுள்ள ஸகல ஆஸ்திக மதங்களும் ஒவ்வொரு விதமான மத ஸம்பந்த முறையை ஆசரித்தே வருகின்றன. மத ஸம்பந்த கார்யம் செய்யாமல் சரீரத்தைக் கட்டை, கல்போல் எறிந்து விடுவதில்லை. ஆனால் மத ஸம்பந்த ப்ரயோக முறையில் ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு வழியைப் பின்பற்றிச் செய்கின்றது. இதற்கு அந்தந்த மதங்களின் வேதவிதிகளும் குருமார்களின் கட்டளையுமே காரணமாகும்.

**அபரகர்மாவினால் ஐஹிக க்ஷேமம் :-** அபரகர்மாவிலுள்ள மந்த்ரங்கள் அச்லீலங்கள் (அச்சானியங்கள்) என்று எவரும் நினைத்துவிடக் கூடாது. அந்த மந்த்ரங்கள் அதிகம்பீரமானவை. இறந்தவனுக்கு ப்ரம்ஹ ஸாயுஜ்யாதி ச்ரேயஸ்களைக் கொடுக்கும்படி ப்ரார்த்திப்பவை அநேக மந்த்ரங்கள். க்ராமத்திற்கும், பசு முதலிய ப்ராணிக்கும் க்ஷேமத்தையும், சாந்தியையும், ஆனந்தத்தையும் பெரும்பாலும் ப்ரார்த்திக்கின்றன. அபர கர்மாக்களைத் தனது க்ஷேமத்திற்காகவும் குடும்ப க்ஷேமார்த்தமாகவும், க்ராம நகர க்ஷேமார்த்தமாகவும் விதிப்படி நன்கு அனுஷ்டிக்க வேண்டியது கடமையாகும்.

**அபரகர்மாவும் குடும்ப ஸொத்து பாத்யமும் :-** மனு யாஜ்ஞவல்க்யாதி தர்ம சாஸ்த்ரிகளும், சுக்ர, காமந்தகாதி ராஜநீதி சாஸ்த்ரிகளும் குடும்பஸொத்து பாகபாத்யத்திற்கும், அபரகர்மாவுக்கும் சட்டப்படி ஸம்பந்தத்தை ஏற்படுத்திவிட்டார்கள். குடும்ப ஸொத்து பாத்யத்திற்கு முக்யமான நிபந்தனை விதிக்கப்பட்டுள்ளது. ஸொத்து பாகம் அடைகிறவர்கள், முன்னோர்களுக்கு ச்ராத்தாதி கர்மாக்களைச் செய்து தீர வேண்டும். அந்தக் குடும்பத்தினரின், ஜாதி குல தர்மங்களையும் ஆசரிக்க வேண்டும். முன்னோர்கள் செய்துவந்த தர்ம கார்யங்களையும் செய்துவர வேண்டும். இந்த நிபந்தனை மீதுதான் குடும்பஸொத்து பாத்யம் ஏற்படுவதாக வைதிகமதம் நிர்ணயித்தது. 'सोऽम्शहरः स पिण्डदायी' அந்தந்த ஜாதி, குல, குடும்ப தர்மங்களைக் கைவிட்டவர்களுக்கும் ச்ராத்தாதி அபர கர்மாக்களைச் செய்யாதவர்களுக்கும் குடும்ப ஸொத்து பாத்யம் இல்லையென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

'काश्यां तु मरणान्मुक्तिः अथवा पुत्रसन्निधौ' என்பதாதிகளால் மரண காலத்தில் புத்ரன் ஸான்னித்யமிருப்பது அவச்யம் என்றும், முக்திஹேதுவென்றும் வற்புறுத்தப் பட்டிருக்கிறது.

**அபரகர்மாவில் சிகாதாரணம் அவச்யம் :-** நமது வைதிக கர்மாக்களுக்குச் சிகாதாரணம் ஓர் முக்ய அங்கமாக விதிக்கப்படுகிறது. அதிலும் அபரகர்மாக்களில் சிகையின் ஸம்பந்தம் விசேஷமாக வற்புறுத்தப்பட்டிருக்கிறது. யஜ்ஞோபவீதம் எப்படி ப்ராஹ்மணனுக்கு முக்யமோ, கர்மாக்களுக்கு அங்கமோ, அதுபோல் சிகையும் சிகாதாரணமும் அங்கமாகிறது. யஜ்ஞோபவீதமில்லாமல் கர்மா நிறைவேறாதென்பதை நாம் அறிந்திருப்பதுபோல், சிகையில்லாமல் போனாலும் கர்மா ஸபலமாகிறதில்லையென்பதை ஆஸ்திகர்கள் அறிய வேண்டும். கார்யங்களுக்கு அங்கமாக விதிக்கப்பட்ட

சிரோவபனம் ஸர்வாங்கவபனம் இவை கவனத்திற்குரியவை. 'ஆசௌசம் கேசேஷுலீயதே' என்று சாஸ்த்ரமானது, சாஸ்த்ரீய க்ஷெளரம் செய்துகொள்ளா விட்டால் ஆசௌசமானது அந்தக் கேசங்களில் மறைந்துநின்று அசுத்தியை உண்டாக்குமென்று சொல்லப்படுகிறது.

**ச்ராத்தப் பிரிவுகள் :-** ப்ரத்யாப்திகம், தர்சம், மஹாளயம், ஸங்க்ரமணம், அஷ்டகாந்வஷ்டகை போன்ற நித்யங்களான ச்ராத்தங்களும், மன்வாதி யுகாதி ச்ராத்தங்களும், அப்யுதயமென்கிற நாந்தீ ச்ராத்தம் முதலியவைகளும் விசேஷித்துச் சொல்லப்படுகின்றன. அன்னம், ஹிரண்யம், ஆமம் ஆகிய த்ரவ்யங்களைக் கொண்டு அந்தந்த ச்ராத்தங்களுக்கு நியமமும் காணப்படுகிறது.

எதைச் செய்யாவிட்டால் தோஷமும், ப்ராயச்சித்தமும் ஏற்படுகிறதோ அது நித்யமென்று சொல்லப்படுகிறது. இதில் மாதா பிதாக்கள் இறந்த தினத்தில் செய்ய வேண்டிய ச்ராத்தமானது நித்யமாகையால் அதைக் கட்டாயமாகச் செய்து தீரவேண்டியதென்றும், இல்லையேல் 'मृताहं समतिक्रम्य चण्डालः कोटिजन्मसु' இத்யாதிகளால் மிக ப்ரபலமான தோஷம் கூறப்படுகிறதென்றும், ச்ராத்தம் செய்யாதவன் பாபியாவதுடன் அவனுடன் எவ்வித ஸம்ஸர்க்கமும் செய்யக் கூடாதென்றும், அவன் வைதிக மதத்திலிருந்து பதிதனுவான் என்றும் தீக்ஷிதீயம் சாஸ்த்ர வசனங்களைக் கொண்டு நிரூபித்துள்ளது. மேலும் பித்ருதேவர்களுடைய சாபங்களும் ஏற்பட்டுக் குடும்ப க்ஷேமக் குறைவுகள் ஏற்படுமென்பதையும் சாஸ்த்ரம் வற்புறுத்துகிறது.

**வைதிக மதத்தின் அடிப்படை கொள்கை :—** ''மனிதர்கள் தங்களுடைய புண்ய பாப கர்ம வசத்தினுல் ஸ்வர்க்க நரகாதி பற்பல லோகங்களில் வஸிக்க நேரலாம்.

அவ்வளவு தூர லோகாந்தரத்தில் இருக்கும் அவர்கள், புத்ராதிகள் இங்கு ஸமர்ப்பிக்கும் அன்ன பானுதிகளைப் புஜிக்கமுடியாது. அதனுல் த்ருப்தியும் அடையமுடியாது. த்ருப்தியடைந்தாலும் அவர்கள் புத்ராதிகளுக்கு உத்தம போகங்களை அளிக்கச் சக்தியோ, அதிகாரமோ ஏது? அவர்கள் மனிதர்கள்தானே ? தேவதைகளல்லவே ?

இவ்வாறு ஒரு ஆசங்கையைத் தீக்ஷிதர் கிளப்பிக் கொண்டு யாஜ்ஞவல்க்யர் விஜ்ஞானேச்வரர் கூறியுள்ள ஸித்தாந்தத்தை வெளியிட்டு, ஸந்தேஹ சாந்தி செய்திருக்கிருர். அதாவது :- பித்ரு, பிதாமஹ, ப்ரபிதாமஹாதிகள் பரலோகத்தில் தனித்து நிற்பதில்லை. வஸு, ருத்ர, ஆதித்யர் என்கிற தேவர்களுடன் ஒன்ருக ஐக்யமாகி விடுகின்றனர். ஒருவனைத் தேவதத்தனென்று கூறும்போது அவனது சரீரம், ஆத்மா இரண்டும் சேர்ந்தே வ்யவஹரிக்கப்படுகிறது. பிரிந்து நிற்பதில்லை. அதுபோல் பித்ருக்கள் என்று சொன்னுல் வஸுருத்ராதி தேவர்களும் சேர்ந்தேயிருக்கும். பிரிந்து நிற்காது. அந்த வஸுருத்ராதி தேவர்கள் ச்ராத்தாதிகளால் ப்ரீதியடைந்து புத்ராதிகளுக்கு உத்தம லோகாதி க்ஷேமங்களையும் கொடுக்கிருர்கள். வஸ்வாதி தேவகணங்களில் நமது பித்ருக்கள் பிரிய முடியாமல் கலந்து தேவர்களாகிவிடுவர்.'' மேலும் இங்குப் புத்ராதிகள் கொடுக்கும் ஹவிஸ்களை மந்த்ர சக்தியானது பித்ருக்களிடம் கொண்டுபோய்ச் சேர்க்கிறது என்று வ்யாஸருடைய வசனத்தை தீக்ஷிதீயம் வெளியிடுகிறது. 'एवं श्राद्धेऽन्नमुद्दिष्टं मन्त्रः प्रापयते पितॄन्' என்று.

மேலும் நாமம், கோத்ரம் முதலியவைகளுடன் கொடுக்கப்படும் ஹவிஸ் பித்ருக்கள் கர்ம வசத்தால் வெவ்வேறுவித ஜந்மங்களைப் பெற்றவர்களாயிருந்தாலும் அவர்களிடம் போய்ச் சேருகிறது. நமது பித்ருக்கள் தேவர்களாயிருந்தால் நாம் கொடுக்கும் ஹவிஸ் அம்ருத ரூபமாகப் பரிணமித்து அவர்களிடம் போய்ச் சேருகிறது.

கர்ம வசத்தால், பசு பக்ஷி ஜந்மம் பெற்றிருந்தால், புல், ஜலம் முதலிய ரூபமாக ஹவிஸ் பரிணமித்து அவர்களிடம் போகிறது. இன்னும் இம்மாதிரி அவர்கள் எந்தெந்த ஜந்மமாக மாறியிருந்தபோதிலும் அததற்கு ஏற்ற ஆஹாரமாக மாறி ச்ராத்த ஹவிஸ் த்ருப்தி செய்துவைப்பதாகப் பல வசனங்களைக் காட்டி தீக்ஷிதீயம் உபபாதிக்கிறது.

நாம் செய்யும் எந்த கர்மாவிலும், அக்நி, இந்த்ராதி தேவர்களையும், வஸுருத்ராதி பித்ரு தேவர்களையும் உத்தேசித்து ஹோம, பிண்டாதிகள் செய்தபோதிலும், அவைகளால் அக்நீந்த்ராதி தேவர்கள் மூலமாகவும், வஸுருத்ராதி பித்ருக்கள் மூலமாகவும் ஸர்வாந்தராத்மாவான ஸாக்ஷாத் பகவானே த்ருப்தியடைந்து, அந்தந்த தேவதைகள் மூலமாகப் பலன்களையும் அளிக்கிறார் என்கிற விஷயம் கீதையில் வெகு தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

**ச்ராத்த ஹோம பலன் :—** ச்ராத்தத்தில், ஹோமம், ப்ராஹ்மண போஜனம், பிண்டதானம் ஆகிய மூன்றும் ப்ரதான அங்கங்கள். வைதிகமத ஸித்தாந்தத்தின்படி அக்நியில் நாம் செய்யும் ஹோமங்களை அந்தந்தத் தேவர்களிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பது அக்நியின் கார்யமாகும். இதனால் அக்னிக்கு ''ஹவ்யவாஹனன்'' என்ற காரணப் பெயர் ச்ருதிகளால் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. பித்ரு தேவர்களுக்கான ஹவிஸ்களுக்கு ''கவ்யம்'' என்ற பெயர் உண்டு. ச்ராத்த ஹவிஸ்களை ஸூக்ஷ்ம ரூபமாகப் பித்ருக்களிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பதால் அக்நிக்கு ''கவ்யவாஹனன்'' என்ற பெயரும் ச்ருதியில் காணப்படுகிறது. பொதுவாகவே நமது மதத்தில், நாம் செய்யும் ஹோமங்கள் ஸூக்ஷ்மரூபமாக ஸூர்யனிடம் போய்ச் சேருவதாக மனு முதலியவர்கள் கூறுகிறார்கள்.

अग्नौ प्रास्ताहुतिः सम्यगादित्यमुपतिष्ठते । என ஸ்ரீ ஆநந்தகிரி ஆசார்யரும் ஒரு ச்ருதியை காட்டியுள்ளார்.

ஸ்ருஷ்டி கர்த்தாவாகிய பகவான் பூலோகத்தில் தர்மங்களைக் கண்காணித்துப் பாதுகாக்க ப்ராஹ்மணர்களைத் தெய்வாம்சம் கொடுத்து ஸ்ருஷ்டித்ததாக நமது மன்வாதிகள் கூறுகின்றனர். "தர்மமென்கிற பொக்கிஷத்தை ரக்ஷிப்பதற்காக ப்ராம்ஹணன் ஸகல ப்ராணிகளுக்கும் ஈச்வரனாக ஸ்ருஷ்டிக்கப்பட்டான்" என்று மனு கூறினார். ச்ருதி கூறுகிறது.

परोक्षं वा अन्ये देवा इज्यन्ते । प्रत्यक्षमन्ये । एते वै देवाः प्रत्यक्षम् । यद्ब्राह्मणाः ॥

நாம் செய்யும் கர்மாக்களில், கண்ணுக்குப் புலப்படாத சில தேவதைகள் பூஜிக்கப்படுகிறார்கள். கண்ணுக்குப் புலப்படும் சில தேவதைகளும் பூஜிக்கப்படுகிறார்கள். அந்த ப்ரத்யக்ஷ தேவர்கள் யார்? ப்ராஹ்மணர்கள்தான்.

ब्राह्मणो वै सर्वा देवताः ப்ராஹ்மணன் ஸகல தேவதா ஸ்வரூபியாவான். यावतीर्वै देवतास्सर्वा वेदविदि ब्राह्मणे वसन्ति தேவலோகத்தில் எவ்வளவு தேவதைகள் இருக்கிறார்களோ அவர்கள் யாவரும் வேதவித்தான ப்ராஹ்மணனிடம் வஸிக்கிறார்கள். இத்யாதி ச்ருதிகளை அனுஸரித்து ஸகல ஸ்ம்ருதிகளும், ஸகல புராணங்களும் ப்ராஹ்ணர்களைப் பூலோக தேவர்களென்று ஒருமுகமாகக் கூறுகின்றன.

புராணாதிகளில் ப்ரஹ்மா, விஷ்ணு, மஹேச்வராதி தேவர்களே ப்ராஹ்மணர்களின் மஹிமையைக் கூறி முக்யமாகப் பித்ருகார்யங்களில் தேவதாஸ்வரூபிகளாயும், தேவதைகளின் ப்ரதிநிதிகளாயுமுள்ள ப்ராஹ்மணர்களைப் போஜனம் செய்துவைக்க வேண்டியதை வற்புறுத்தியுள்ளதைப் பார்க்கவும். ப்ராஹ்மண போஜனமும் அக்நி ஹோமம்போல் ஹோமமாகவே கூறப்படுகிறது.

இக்காலத்தில் ப்ராஹ்மண ஸமூஹத்தினருக்கே, நிமந்த்ரித ப்ராஹ்மணர்களிடத்தில் மனிதன் என்ற அலக்ஷ்யபுத்தி ஏற்பட்டு வருவதால் அவர்கள் சாஸ்த்ர உண்மைகளை அறியவேண்டி இவ்வளவுதூரம் நிரூபிக்க நேர்ந்தது. இக்காலத்தில் முன்போல் உயர்ந்த ப்ராஹ்மணர்களும் வேதாத்யயன ஸம்பந்நர்களும் ச்ராத்தத்திற்கு கிடைக்காமல் போனாலும் காயத்ரீ மாத்ர ஸித்திபெற்றவர்கள் போதுமென்று மந்வாதிகள் சொல்லும் ஸமாதானத்தைத் தீக்ஷிதீயம் உறுதிப்படுத்தியுள்ளது.

**ச்ராத்த கர்ம மஹிமை :-** ''ச்ராத்த கர்மாவைவிட மனிதனுக்கு ச்ரேயஸ்கரமான உயர்ந்த கர்மா வேறு கிடையாது. ஆகையால் ஸர்வவித முயற்சியாலும் ச்ராத்தத்தைச் செய்து தீரவேண்டும்.

ஆரோக்யம், தீர்க்காயுஸ், புத்ர பௌத்ராதி ஸந்ததி, தனதான்யாதி ஸம்ருத்தி இவைகள் ச்ராத்த கர்த்தாவுக்கு ஏற்படுகின்றன. பரலோகத்திலும் பல உயர்ந்த ஸ்தானங்கள் கிடைக்கின்றன. பித்ருக்களைப் பூஜிப்பதால் ஆயுஸ், புத்ரன், ஸ்வர்க்கம், புஷ்டி, பலம், ஸ்த்ரீ, பசு, ஸுகம், தனதான்யாதிகள் ஏற்படுகின்றன. ''இவ்வளவு மஹிமையுள்ள ச்ராத்தத்தைச் செய்வதால் அம்ருதத்வத்தை அடைகிறான்''.

ச்ராத்த கர்மாவைச் செய்யாவிட்டால், குலஸந்ததி வ்ருத்தியாகாது. ஆரோக்யம், தீர்க்காயுஸ் ஏற்படாது. வேறு பலவித ச்ரேயஸ்களும் கிடைக்காது. பித்ரு தேவதைகளின் சாபமும் ஏற்படும். ''பித்ரு பிதாமஹாதி தேவர்கள் கிடையாதென்ற நாஸ்திக எண்ணத்தால் ச்ராத்தத்தை த்யஜித்தவனுடைய ரக்தத்தை அவர்கள் பானம் செய்கிறார்கள். நாமம் கோத்ரம் உச்சரித்துப் பித்ருக்களுக்கு பிண்டதானம் செய்வதால் இருவரும் சாச்வதமான பரப்ரஹ்மத்தின் ஸாயுஜ்யத்தை அடைகிறார்கள்.

**கட்டாயமாக அனுஷ்டிக்க வேண்டியவை :—** இறந்த தினத்தில் செய்யப்படுகிற ச்ராத்தம் ப்ரத்யாப்திகம். அது ம்ருதாஹ ச்ராத்தமாகும். இதை எவ்வளவு ச்ரமம் இருந்தபோதிலும் முக்ய கல்பமாகவே, அதாவது அந்ந ரூபமாகவே செய்ய வேண்டும். ப்ரதிநிதியில் செய்யக் கூடாதென்று தீக்ஷிதீயத்தில் காண்கிறது. தர்சம், மஹாளயம், ஸங்க்ரமணம், அஷ்டகை, போன்ற மற்ற நித்ய ச்ராத்தங்களை ஹிரண்யம், ஆமம், தர்ப்பணம் ஆகிய ப்ரதிநிதிகளில் ஏதாவது ஒன்றை அனுஸரித்தும் கௌணமாகச் செய்யத் தீக்ஷிதீயத்தில் அனுமதி காண்கிறது. ஸௌகர்யமிருந்தால் இவைகளையும் முக்ய கல்பமாக அந்ந ரூபமாகச் செய்வது ச்ரேஷ்டமாகும்.

அஷ்டகாந்வஷ்டகை ச்ராத்தமானது நித்யமாகவும், செய்யாவிடில் தோஷ மேற்படுவதாயும் சாஸ்த்ர விதி காண்கிறது. ஆஸ்திகர்கள் கூடப் பலர் இந்த விதியை அறியாமல் அஷ்டகையை த்யஜித்து விடுகிறார்கள். தீக்ஷிதீயத்தை நன்கு பார்த்து யாவரும் இந்த நித்ய கர்மாவை விடாமல் செய்து ச்ரேயஸ் பெற வேண்டும். அப்யுதயமென்கிற நாந்தீ ச்ராத்தத்தைப் பற்றியும் தீக்ஷிதீயத்தில் விவரித்துக் கூறப்பட்டிருக்கிறது. வைதிக கர்மாவில் எல்லாவித சுபகர்மாக்களிலும் பித்ரு பூஜையை ஆரம்பத்திலோ கடைசியிலோ செய்து தீரவேண்டும். இதைத்தான் நாந்தீயென்றும், அப்யுதய ச்ராத்தமென்றும் கூறப்படுகிறது. இன்னும் இது போல் மந்வாதி யுகாதி போன்ற நைமித்திக காம்ய ச்ராத்தங்கள் பலவற்றையும் தீக்ஷிதீயம் கூறியுள்ளது. யதாஸௌகர்யம், யதாஸம்ப்ரதாயம் இவைகளையும் ஈச்வர ப்ரீதிக்காக அனுஷ்டிக்கலாம்.

மாதா பிதாக்களுடைய உபகார ஸ்ம்ருதியாக ச்ராத்த தினத்தைக் கொண்டாடலாம். மாதா பிதாக்கள் செய்துள்ள உபகாரமோ எல்லையற்றது. வாய்விட்டுச் சொல்ல முடியாது. தர்ம ஸாதனமான சரீரத்தை உத்பத்தி

செய்வதுடன், சிசுப் பருவம் முதல் யௌவனம் ஆகும் வரையில் அவர்கள் புத்ரனுக்குச் செய்யும் ஊழியங்களையும் உபசாரங்களையும், அபிமானத்தையும் அளவிட்டுச் சொல்லமுடியுமா? மாதா பிதாக்கள் கவனிக்கவிட்டால் குழந்தைகளின் கதி என்ன?

यथाशक्ति प्रदानेन स्नापनाच्छादनेन च ।

न सुप्रतिकरं तत्तु मात्रा पित्रा च यत्कृतम् ॥

என்று மாதா பிதாக்களுடைய உபகாரத்திற்கு ப்ரதியுபகாரம் செய்வதென்பது அஸாத்யமென்றே கூறப்பட்டது. ஒவ்வொருவரும் இதைச் சிந்தித்துப் பார்க்கலாம், மாதா பிதாக்களை ப்ரதான ஆசார்யர்களாக மதிக்கும்படி மஹர்ஷிகளும் கட்டளையிட்டனர். ஆதலால் அந்த மஹோபகாரிகளை, நமது சாஸ்த்ரம் வகுத்த முறையில் நாம் த்ருப்தி செய்துவைத்து நமது கடனை, கடமையைத் தீர்த்து த்ருப்தியடைய ச்ராத்த கர்மாவானது மிக்க அவச்யமாகும்.

பரலோகமிருப்பதில் ஸந்தேஹம் ஏற்பட்ட போதிலும் புத்திமானான மனிதன் அந்தத் தைர்யத்தால் தப்பு கார்யங்களைச் செய்துவிடக் கூடாது. தர்மங்களை விடக் கூடாது. பரலோகமிருப்பதாகவே நினைத்து தர்மங்களைச் செய்துவிடுவது நல்லது. உண்மையில் பரலோகமில்லை யானால் நாம் செய்த தர்மத்தால் நமக்குக் கெடுதியொன்றும் ஏற்பட்டு விடாது. பரலோகமிருந்துவிட்டாலோ தர்மத்யாகம் செய்த நாஸ்திகன், ஆயுதமில்லாமல் துஷ்ட ப்ராணியிடம் அகப்பட்டுக் கொண்ட மனிதன் போல் வதைக்கப்படுவான். ஆகையால் ச்ராத்தாதிகளை எல்லோரும் அனுஷ்டித்து விடுவது நல்லது.

அக்நிஹோத்ரம்

1953 கோபால தேசிகாசார்யர்

# श्राद्धकाण्डः - पूर्वभागः - विषयानुक्रमणिका

## சிராத்த காண்டம் - பூர்வபாகம் - பொருளடக்கம்

பக்கம் எண்

मुमूर्षोः आतुरस्य स्नानविधिः ।
மரணத் தருவாயில் ஸ்நானவிதி ........................ 1

पुण्ड्रविधिः - புண்டிரவிதி ........................ 3

सर्वप्रायश्चित्तम् - ஸர்வபிராயச்சித்தம் ........................ 5

कृच्छ्रं तत्प्रतिनिधिः - க்ருச்ரம் - பிரதிநிதி ........................ 5

प्रायश्चित्तकर्ता - பிராயச்சித்தகர்த்தா ........................ 9

भगवन्नामकीर्तनं - பகவந்நாம கீர்த்தனம் ........................ 12

दानानि - தானங்கள் ........................ 13

कर्णमन्त्रजपः - கர்ணமந்திர ஜபம் ........................ 17

मरणदिनगुणदोषाः - மரணதின குணதோஷம் ........................ 19

अशुद्धिप्रायश्चित्तम् - அசுத்தி பிராயச்சித்தம் ........................ 23

दुर्मरणे प्रायश्चित्तम् - துர்மரண பிராயச்சித்தம் ........................ 25

कर्तृक्रमः - கர்த்தா வரிசை ........................ 35

पत्नी रजस्वला - மனைவி வீட்டு விலக்கு ........................ 70

अग्नि निर्णयः - அக்நி நிர்ணயம் ........................ 87

प्रेताग्निसन्धानम् - பிரேதாக்னிஸந்தானம் ........................ 125

उपवीत-निवीत नियमः - உபவீத நிவீத நியமம் ........... 137
प्रेतनिर्हरणम् - பிரேதத்தை வெளியேற்றுதல் ................ 147
दहन देशः - क्रमश्च தஹன இடம் - முறை ..................... 154
वपनम् - வபனம் ..................................................... 169
केशधारणादिनियमः - கேசதாரணம் முதலிய நியமம் .... 202
नग्नप्रच्छादन श्राद्धं - நக்நப்ரச்சாதன சிராத்தம் ............... 215
उदकदानं एकोत्तर वृद्धिः -
உதக தானம் - ஏகோத்தர விருத்தி ................ 219
पिण्डदानं - பிண்ட தானம் ......................................... 235
प्रेतशरीरोत्पत्तिः - பிரேத உடல் தோற்றம் .................... 251
आतुराश्वासनम् - துக்கத்தை விசாரித்துத் தேற்றுதல் ....... 252
एकोत्तरवृद्धि-नवश्राद्धक्रमः -
ஏகோத்தர விருத்தி நவசிராத்தங்கள் ............ 256
आशौचिनियमः - ஆசௌசிகளின் நியமம் .................... 261
अस्थिसञ्चयनम् - அஸ்திஸஞ்சயனம் .......................... 264
प्रभूत बलिः - பிரபூத பலி ............................................ 284
मध्ये दर्शादिसंभवे - நடுவில் தர்சம் நேர்ந்தால் .............. 287
पाषाणोत्थापनं - பாஷாண உத்தாபனம் ........................ 302
मुख्यगौणकर्तृव्यवस्था - முக்ய கௌண கர்த்தா நிலை. ..... 305
मुख्यकर्तर्यसन्निहिते - முக்ய கர்த்தா அருகில் இல்லை ..... 307

मृते पुनर्जीवति - இறந்தவன் பிழைத்தெழுந்தால் .......... 320

पुनर्दाहविधिः - புநர்தஹனம் .................................... 353

पुनः संस्कारः - மறுபடி ஸம்ஸ்காரம் ......................... 371

मृति कालाज्ञाने - மரண நேரம் அறியப்படாவிடில் ....... 382

मातापित्रोः दशदिनान्तरे मरणे

தாயும் தந்தையும் பத்து நாட்களுள் மரித்தல் ... 398

दम्पत्योः सहमृतौ - தம்பதி சேர்ந்து மரித்தால் ............... 405

सङ्घातमरणे - பலர் சேர்ந்து மரித்தால் ......................... 410

पत्न्याः सहचित्यारोहे - மனைவி கூட சிதையேறினால் ..... 428

वृषभोत्सर्जनम् - விருஷபோத்ஸர்ஜனம் ..................... 441

एकोद्दिष्टक्रमः - ஏகோத்திஷ்ட முறை ......................... 449

आवृत्ताद्यमासिकम् - ஆவ்ருத்த ஆத்யமாஸிகம் ............ 466

षोडश श्राद्धानि - 16 சிராத்தங்கள் ............................... 475

मासिकादिषु आशौचप्रसक्तौ -

மாஸிகம் முதலியதின் இடையே வேறு
ஆசௌசம் நேர்ந்தால் ................................. 483

सापिण्ड्य-मासिक-कालनिर्णयः

ஸபிண்டீகரணம் மாஸிகம் - கால நிர்ணயம் ... 492

मासिक श्राद्धस्य एकोद्दिष्टत्वपार्वणत्वनिर्णयः

மாஸிகம் பார்வணமாக
ஏகோத்திஷ்டமாக ஆவது ............................. 505

प्रत्याब्दिकश्राद्धे पार्वणविधिः

பிரத்யாப்திகத்தில் பார்வண முறை .............. 506

भगिन्यादीनां मासिकविधिः -
சகோதரி முதலானவர்க்கு மாஸிக முறை ........ 517

सापिण्ड्यमनु एकोद्दिष्टे देववरणम् -
ஸபிண்டீயை ஒட்டிய ஏகோத்திஷ்டத்தில்
விச்வே தேவர்கள் ........................................ 519

महालये चतुर्दश्यां शस्त्रहतानां श्राद्धम् -
மஹாளய சதுர்தசியில் ஆயுதமரணமடைந்த
வருக்கு சிராத்தம் ........................................ 521

यतीनां पार्वणम् - துறவிகளுக்குப் பார்வணம் .............. 526

सपिण्डीकरणविधिः - ஸபிண்டீகரணமுறை ................. 532

सपिण्डीकरणं विना कर्तुः शुभेऽनधिकारः -
ஸபிண்டீகரணம் செய்யாமல் சுபங்களில்
கர்த்தாவிற்கு அதிகாரமின்மை ...................... 553

सपिण्डीकरणे अधिकारिणः तदर्हाश्च -
ஸபிண்டீகரணத்தில் அதிகாரி,
அதைப் பெறத் தகுதி .................................. 555

सपिण्डीकरणप्रकारः - ஸபிண்டீகரணமுறை ................. 577

मातृसापिण्ड्यविधिः - மாத்ருஸாபிண்ட்ய விதி ............ 595

मातुः सापिण्ड्यम् - தாயின் ஸபிண்டீகரணம் ............... 601

सोदकुम्भश्राद्धम् - ஸோதகும்ப சிராத்தம் ..................... 652

मातापित्रोः मृतिवत्सरे दर्शश्राद्धादिः
-மாதா பிதாக்களின் மரண ஆண்டில் தர்ச சிராத்தம்
முதலியவை ................................................ 668

मातापितृश्राद्धसन्निपाते -
தாய்-தந்தையரின் சிராத்தம் ஒரே நாளிலானால்678
अनेकश्राद्ध सन्निपाते - அநேக சிராத்தங்கள் சேர்ந்தால் .. 681
सपिण्डश्राद्ध सन्निपाते -
ஸபிண்டர்களின் சிராத்தங்கள் சேர்ந்தால் ....... 686



श्रीगुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम्

## श्राद्धकाण्डः पूर्वभागः

# ஸ்ம்ருதிமுக்தாபலம்

## *ப்ராத்த காண்டம் - பூர்வபாகம்*

श्रितरामपदाब्जेन वैद्यनाथविपश्चिता ।
स्मृतीनां सारमालोच्य श्राद्धकाण्डो वितन्यते ॥

*ஸ்ரீராமனின் பாதாரவிந்தத்தை அண்டிய வைத்யநாத ரெனும் வித்வானால் ஸ்ம்ருதிகளின் ஸாரத்தை ஆராய்ந்து ச்ராத்த காண்டம் இயற்றப் பெறுகிறது.*

### मुमूर्षोरातुरस्य स्नानविधिः ।

स्नात्वा कर्माणि कुर्वीत इति स्मरणात्, स्नातस्यैव प्रायश्चित्तकर्मण्यधिकारात्, वारुणस्नाने अशक्तो मुमूर्षुः ब्राह्मादिस्नानमाचरेत् ।

### ஆதுரனின் ஸ்நானவிதி

*(இந்த காண்டத்தில் ஆஸ்திகர்களால் பித்ருக்களை உத்தேசித்து சிரத்தையுடன் அனுஷ்டிக்கப்பெறும் சிராத்தத்தின் பேதங்கள், அவற்றின் காலம், விதி, நியமம் முதலியவை விளக்கப் பெறுகின்றன. மரணம் முதல் முதல் ஒரு வருஷம் முடிய புத்ரன் முதலியவர்களால் அவசியம் செய்யப்படுகிற கர்மங்கள், பின் ஒவ்வொரு வருஷத்திலும் செய்ய வேண்டிய ஆப்திகம், ப்ரத்யாப்திகம், தர்சம், ஸங்கிரமணம், அஷ்டகா, மந்வாதி, யுகாதி, மஹாளயம், விருத்தி சிராத்தம், முதலியவை பற்றி விரிவான விளக்கம் தரப்படுகிறது. மரணத்தருவாயில் அவனவன் செய்ய வேண்டிய ஸர்வ ப்ராயச்சித்தம் செய்ய நீராடுகிறமுறை முதலில் இடம் பெறுகிறது.*

*'ஸ்நானம் செய்து பிறகு கர்மங்களைச் செய்யவும்' என்று ஸ்ம்ருதி இருப்பதால் ஸ்நானம் செய்தவனுக்கே ப்ராயஶ்சித்தம் முதலிய கர்மங்களின் அனுஷ்டானத்தில் அதிகாரமானதால், முக்யமான வாருணஸ்நானத்தில் (நீரில் முழுகுவதில்) அசக்தனுன முமூர்ஷு வாழ்வில் இறுதிக்கட்டத்தில் உள்ளவன். (கௌணமான) ப்ராம்ஹாதி ஸ்நானத்தைச் செய்யவும்.*

तदाह योगयाज्ञवल्क्यः :- असामर्थ्याच्छरीरस्य वैषम्याद्देशकालयोः । स्नानान्येतानि तुल्यानि मान्त्रादीनि यथाबलम् इति । स एव—मान्त्रं भौमं तथाऽऽग्नेयं वायव्यं दिव्यमेव च । मानसं यौगिकं चेति सप्त स्नानान्यनुक्रमात् । आपोहिष्ठादिभिर्मान्त्रं मृदालम्भस्तु पार्थिवम् । आग्नेयं भस्मना स्नानं वायव्यं गोरजः स्मृतम् । यत्तु सातपवर्षेण दिव्यं तत् स्नानमुच्यते । मानसं ह्यात्मचिन्ता स्यात् यौगिकं विष्णुचिन्तनम् इति ॥

*அதைச் சொல்லுகிருர் யோகயாஜ்ஞவல்க்யர் :- சரீரசக்தியில்லாமலும், தேச காலங்களின் ஒற்றுமையில்லாமலும் இருந்தால், இந்த மந்த்ர ஸ்நானம் முதலியவைகளும் வாருணஸ்நானத்திற்குச் சமங்களாகும், அவரவர் சக்தியை அனுஸரித்து. யோகயாஜ்ஞவல்க்யரே:- மாந்த்ரம், பௌமம், ஆக்னேயம், வாயவ்யம், திவ்யம், மானஸம், யௌகிகம் என்று ஸ்நானங்கள் ஏழு. க்ரமமாய் 'ஆபோஹிஷ்ட' முதலிய மந்த்ரங்களால் செய்யப்படும் ஸ்நானம்' 'மாந்த்ரம்'. மண்ணைப் பூசிக்கொள்வது 'பார்த்திவஸ்நானம்'. விபூதியினுல் செய்யப்படுவது 'ஆக்னேயஸ்நானம்'. பசுவின் கால் தூளிகளால் செய்யப்படுவது 'வாயவ்யஸ்நானம்'. வெயிலுடன் சேர்ந்த மழையினுல் செய்யப்படுவது 'திவ்யஸ்நானம்' எனப்படுகிறது. ஆத்மாவை த்யானித்தல் 'மானஸஸ்நானம்' விஷ்ணுவை த்யானித்தல் 'யௌகிக ஸ்நானம்' எனப்படுகிறது. (விஸ்தாரத்தை ஆஹ்னிக காண்டத்தில் காண்க)*

## पुण्ड्रविधिः

तत ऊर्ध्वपुण्ड्रं त्रिपुण्ड्रं वा उभयमपि वा यथा स्वाचारं बिभृयात् ॥ यथाह मरीचिः — सर्पं दृष्ट्वा यथा लोके दर्दुरा भयविह्वलाः । ऊर्ध्वपुण्ड्राङ्कितं तद्वत् कम्पन्ते यमकिङ्कराः । विष्णुरपि – ऊर्ध्वपुण्ड्रधरो मर्त्यो म्रियते यत्र कुत्रचित् । श्वपाकोऽपि विमानस्थो मम लोके महीयते ॥ तथा पाद्मे ब्रह्मगरुडसंवादे – यस्यान्तकाले खग गोपिचन्दनं बाह्वोर्ललाटे हृदि मस्तके च । प्रयाति लोकं कमलासखस्य गोबालघाती यदि ब्रह्महा भवेत् इति । स्कान्दे – भस्मरुद्राक्षधारी तु यश्चापि म्रियते यदि । सोऽपि रुद्रत्वमाप्नोति किं पुनर्मानुषादयः ॥ तुलसीधारणान्मर्त्यो विष्णुलोके महीयते इति ।

### புண்ட்ர விதி

*சக்தியை அனுஸரித்து ஸ்நானம் செய்த பிறகு, ஊர்த்வபுண்ட்ரத்தை, அல்லது த்ரிபுண்ட்ரத்தை, அல்லது இரண்டையும், அவரவர் ஆசாரப்படி தரிக்கவும். அதைப்பற்றி,* **மரீசி:-** *உலகில், ஸர்ப்பத்தைக் கண்டால் தவளைகள் எப்படி பயத்தால் நடுங்குகின்றனவோ, அப்படியே ஊர்த்வபுண்ட்ரம் தரித்தவனைக் கண்டால் யமகிங்கரர்கள் நடுங்குகின்றனர்.* **விஷ்ணுவும்:-** *ஊர்த்வ புண்ட்ரம் தரித்த மனிதன் எந்த ப்ரதேசத்தில் மரித்தாலும், அவன் ச்வபாகனுயினும் ( நாயின் மாம்ஸத்தைப் புஜிப்பவனுயிலும்) விமானத்திலிருப்பவனுய் எனது லோகத்தில் (வைகுண்டத்தில்) சிறப்புறுகிறுன். அவ்விதமே,* **பாத்மபுராணத்தில்** *ப்ரம்ஹகருட ஸம்வாதத்தில்:- ஓ கருட! எவனது அந்த்ய காலத்தில், கைகளிலும், நெற்றியிலும், மார்பிலும், தலையிலும் கோபீசந்தனம் காணப்படுகிறதோ, அவன் லக்ஷ்மீபதியின் உலகத்தை அடைகிறுன், அவன் கோவதம், பாலவதம், ப்ராம்ஹணவதம் இவைகளைச் செய்தவனுயிருக்கட்டும்.*

ஸ்காந்தத்தில்:- எந்த ப்ராணியாயினும் விபூதி ருத்ராக்ஷங்களைத் தரித்து மரித்தால் அதுவும் ருத்ரத்தன்மையை அடைகின்றது. மனிதர் முதலியவர்களைப்பற்றிச் சொல்லவேண்டுமா? துளஸியைத் தரிப்பவன் விஷ்ணுலோகத்தில் சிறப்புறுகிறுன்.

**भगवत्तीर्थनिषेवणम् ।**

तुलसीदलसंमिश्रतीर्थपानं च कुर्यात् । तथा च स्मृतिचन्द्रिकायाम् — अन्त्यकालेऽपि यस्यास्ये दीयते पादयोर्जलम् । सोऽपि सद्गतिमाप्नोति यश्चाचारबहिष्कृतः इति । विष्णुपादयोरित्यर्थः । नारदीये – हरिपादोदकं यस्मान्मयि त्वं सिक्तवान्मुने । प्रापितोऽहं त्वया तस्मात् तद्विष्णोः परमं पदम् । तुलसीदलसंमिश्रमपि सर्षपमात्रकम् । गङ्गाजलं पुनात्येव कुलाना-मेकविंशतिम् इति । सिक्तवानिति वचनाच्छरीरे तीर्थसेचनमपि पावनमित्यवगम्यते ।

**பகவத்தீர்த்த நிஷேவணம்.**

பிறகு, துளஸீதளத்துடன் கூடிய தீர்த்தத்தைப் பருகவேண்டும். அவ்விதமே, ஸ்ம்ருதி சந்த்ரிகையில்:- அந்த காலத்தில் எவனது வாயில் பாதஜலம் கொடுக்கப்படுகிறதோ அவன் ஸதாசாரங்களைப் புறக்கணித்தவனுயினும். நற்கதியை அடைகிறுன், இங்கு, 'பாத ஜலம் ' என்பதற்கு விஷ்ணுபாதஜலம் என்று பொருள். நாரதீயத்தில்:- ஓ முனே! நீர் எக்காரணத்தால் விஷ்ணு பாதோதகத்தால் நனைத்தீரோ அதனுல், உம்மால் நான் விஷ்ணுவின் அந்தப் பரமபதத்தை அடைவிக்கப் பட்டேன். துளஸீதளத்துடன் கூடிய கங்காஜலம் கடுகளவாயினும், (பருகினவனின்) இருபத்தொரு குலங்களைப் பரிசுத்தமாக்குகின்றது. இங்கு, 'ஸிக்தவான்' என்று சொல்லியதால், சரீரத்தைத் தீர்த்தத்தால் நனைப்பதும் பரிசுத்திகரம் எனத் தெரிகிறது.

## सर्वप्रायश्चित्तम्

ततः परिषदनुज्ञापूर्वकं द्वादशाब्दकृच्छ्ररूपं षडब्दकृच्छ्ररूपं द्व्यब्दैकाब्दकृच्छ्ररूपं वा सर्वप्रायश्चित्तं यथाशक्ति स्वपापानुसारेण कुर्यात् । तथा चा स्मर्यते — सर्वजन्मार्जितानीह भ्रूणहत्यादिकान्यपि । सर्वपापानि नश्यन्ति कृच्छ्रैर्द्वादशवार्षिकैः ॥ जन्मप्रभृति यत्किञ्चित् पातकं चोपपातकम् । अर्वाक्तु ब्रह्महत्यायाः षडब्दान्नश्यति ध्रुवम् । यद्यप्यसकृदभ्यस्तं बुद्धिपूर्वमघं महत् । तच्छुद्ध्यत्यब्दकृच्छ्रेण महतः पातकादृते इति । त्रिंशत् कृच्छ्रा अब्दसंज्ञकाः ।

### ஸர்வப்ராயஶ்சித்தம்

*பிறகு, பரிஷத்தின் அனுஜ்ஞையை முன்னிட்டு, 12-அப்தக்ருச்ர ரூபமாகவோ, 6-அப்தக்ருச்ர ரூபமாகவோ, 2; அல்லது ஒரு அப்தக்ருச்ர ரூபமாகவோ, ஸர்வப்ராயஶ்சித்தத்தை, சக்தியை அனுஸரித்து, பாபத்திற்கனுகுணமாய்ச் செய்யவும். அவ்விதமே, **ஸ்ம்ருதியில்:-** ஸகல ஜன்மங்களிலும் இவ்வுலகில் ஸம்பாதிக்கப்பட்ட ப்ரம்ஹஹத்யாதி ஸகல பாபங்களும், 12-அப்தக்ருச்ரங்களால் நசிக்கின்றன. பிறந்தது முதல் செய்த பாபமும் உபபாதகமும், ப்ரம்ஹஹத்திக்குக் கீழ்ப்பட்ட பாபமும் ஆறு அப்த க்ருச்ரங்களால் நசிக்கின்றன. நிச்சயம். புத்தி பூர்வகமாய் அடிக்கடி செய்யப்பட்ட மிகுந்த பாபமும், மஹாபாதகம் தவிர, அப்தக்ருச்ரத்தால் நசிக்கின்றது. முப்பது க்ருச்ரங்களுக்கு 'அப்தம்' என்று ஸம்ஜ்ஞையாம்.*

## कृच्छ्र तत्प्रतिनिधिस्वरूपम् ।

कृच्छ्रोऽत्र प्राजापत्यः । तत्स्वरूपमुक्तं मनुना – त्र्यहं प्रातस्त्र्यहं सायं त्र्यहमद्यादयाचितम् । त्र्यहं न किञ्चिदश्नीयात्

प्राजापत्यं चरन् द्विजः इति । तस्य स्वरूपतोऽनुष्ठानाशक्तौ प्रतिनिधिरेवानुष्ठेयः, 'कृच्छ्रप्रतिनिधिं कुर्यात् गोभिरेव सवत्सकैः । गवामभावे निष्कं स्यात् तदर्धं पादमेव वा । पादहीनं न कर्तव्यं इति शातातपोऽब्रवीत् इति स्मरणात् । विष्णुः-प्राजापत्यक्रियाशक्तौ धेनुं दद्याद्विचक्षणः । धेनोरभावे तन्मूल्यं दातव्यं नात्र संशयः । धेनोरभावे निष्कं स्यात् तदर्धं पादमेव वा । पादहीनं न कर्तव्यमिति वेदविदो विदुः इति ।

### க்ருச்ரம், அதன் ப்ரதிநிதி இவைகளின் ஸ்வரூபம்

இங்கு க்ருச்ரம் என்றது ப்ராஜாபத்ய க்ருச்ரமாம். அதன் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறுர், மனு - ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை அனுஷ்டிக்கும் ப்ராம்ஹணன், மூன்று நாள் பகலில் மட்டும், மூன்று நாள் இரவில் மட்டும், மூன்று நாள் யாசிக்காமல் கிடைத்ததை மட்டும் புஜிக்கவும். மூன்று நாள் உபவாஸமிருக்கவேண்டும். இவ்விதம் 12-நாள் அனுஷ்டிக்கும் வ்ரதம் ப்ராஜாபத்ய க்ருச்ரமாம். அதைச் சொல்லியபடி அனுஷ்டிக்கச் சக்தியில்லாவிடில் ப்ரதிநிதியை (பதிலை) அனுஷ்டிக்கவேண்டும். ''க்ருச்ரத்திற்கு ப்ரதி நிதியை கன்றுடன்கூடிய பசுமாடுகளாலேயே செய்யவேண்டும். (அவைகளைத் தானம் செய்யவேண்டும்). பசுக்களில்லாவிடில் ஒரு பசுவின் ஸ்தானத்தில் ஒரு நிஷ்கம் ப்ரதிநிதி. அல்லது, அதன் பாதி, அல்லது அதன்பாதி. கால்நிஷ்கத்திற்குக் குறைந்து செய்யக்கூடாதென்று சாதாபர் சொன்னுர்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால். விஷ்ணு:- ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை அனுஷ்டிக்கச் சக்தியில்லாவிடில், அறிஞன், பசுவைக் கொடுக்கவேண்டும். பசு இல்லாவிடில் அதன் மூல்யத்தைக் (விலையை) கொடுக்கவேண்டுமு. அதற்கும் சக்தியில்லாவிடில் ஒரு நிஷ்கம் கொடுக்கவேண்டும். அல்லது அதன் பாதி, அல்லது அதன்பாதி கொடுக்கப்படவேண்டும். கால் நிஷ்கத்திற்குக் குறைந்து கூடாதென்று வேதமுணர்ந்தவர்கள் சொல்லுகின்றனர்.

प्रतिनिध्यन्तरमुक्तं हेमाद्रौ – कृच्छ्रोऽयुतं तु गायत्र्या विप्रद्वादशभोजनम् । तिलहोमसहस्रं वा सममेतत् चतुष्टयम् इति । स्मृत्यन्तरे – कृच्छ्रो देव्ययुतं चैव प्राणायामशतद्वयम् । तिलहोमसहस्रं च वेदपारायणं तथा । षष्टिश्चतुर्विंशतिर्वा भोज्या द्वादश वा द्विजाः । तावद्भोजनपर्याप्तं धान्यं तन्मूल्यमेव वा । तत्समृद्ध्यसमृद्धिभ्यां सङ्ख्यावैषम्यभाषणम् इति ।

*வேறு ப்ரதிநிதி சொல்லப்பட்டுள்ளது, **ஹேமாத்ரியில்** - விதிப்படி அனுஷ்டிக்கப்பட்ட க்ருச்ரம், காயத்ரியைப் பதினாயிரம் முறை ஜபிப்பது, பன்னிரண்டு ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிப்பது, ஆயிரம் முறை திலஹோமம் செய்வது இந்நான்கும் ஸமமாகும். **மற்றொரு ஸ்ம்ருதியில்**:- ஒரு ப்ராஜாபத்ய க்ருச்ரம், 10000 முறை காயத்ரீஜபம், 200 முறை ப்ராணாயாமம், 1000 முறை திலஹோமம், வேதபாராயணம், அறுபது, அல்லது 24, அல்லது 12-ப்ராம்ஹணர்களுக்குப் போஜனம் செய்விப்பது, அல்லது ப்ராம்ஹண போஜனத்திற்குப் போதுமான தான்யத்தைக் கொடுப்பது, அல்லது தான்யத்தின் மூல்யத்தைக் கொடுப்பது இவைகள் ஸமங்களாம். இங்கு ப்ராம்ஹண போஜனத்தின் கணக்கை நிறைவு குறைவுடன் சொல்லியது தாதாவின் தனஸம்பத்தி, தனக்குறைவு இவைகளை அனுஸரித்ததாகும்.*

तथा विज्ञानेश्वरीये–कृच्छ्रे पञ्चातिकृच्छ्रे त्रिगुणमहरह स्त्रिंशदेवं तृतीये चत्वारिंशाच्च तप्ते त्रिगुणनगुणिता विंशतिः स्यात् पराके । कृच्छ्रे सान्तापनाख्ये भवति षडधिका विंशतिः सैव हीना द्वाभ्यां चान्द्रायणे स्यात् तपसि कृशबलो भोजयेद्विप्रमुख्यान् इति । अहरहरिति सर्वत्र संबध्यते । तृतीयः-कृच्छ्रातिकृच्छ्रः । अत्र प्राजापत्यदिवसकलनया विद्वद्विप्राणां षष्टिभोजनानि भवन्ति । एव मतिकृच्छ्रादावूहनीयम् ।

**விஜ்ஞாநேச்வரீயத்தில்:-** தபஸ்செய்யச் சரீரபலமில்லாதவன், ப்ராம்ஹண போஜனம் செய்விக்க வேண்டும். ப்ராஜாபத்ய க்ருச்ரத்தில் ஒவ்வொருநாளும் ஐந்து ப்ராம்ஹணர்களுக்குப் போஜனமளிக்க வேண்டும். மொத்தம் 60 ப்ராம்ஹணர்களுக்கு. அதிக்ருச்ரத்தில் ஒவ்வொருநாளும் 15 ப்ராம்ஹணர் களுக்கும், மூன்றுவதான க்ருச்ராதிக்ருச்ரத்தில் ப்ரதிதினம் 30 ப்ராம்ஹணர்களுக்கும், தப்தக்ருச்ரத்தில் ப்ரதிதினம் 40 ப்ராம்ஹணர்களுக்கும், பராகக்ருச்ரத்தில் ப்ரதிதினம் 60 ப்ராம்ஹணர்களுக்கும், ஸாந்தபனக்ருச்ரத்தில் ப்ரதிதினம் 26 ப்ராம்ஹணர்களுக்கும், சாந்த்ராயணத்தில் ப்ரதிதினம் 24 ப்ராம்ஹணர்களுக்கும் போஜனம் செய்விக்கவேண்டும். வித்வத் ப்ராம்ஹணர்களுக்கே போஜனம்.

स्मृत्यन्तरेऽपि — कृच्छ्रादिकरणाशक्तौ प्रत्याम्नायान् समाचरेत् । प्राजापत्ये तु गामेकां दद्यात् सान्तपने द्वयम् । कृच्छ्रोऽयुतं तु गायत्र्या उपवासस्तथैव च । समुद्रगानदीस्नानं सममेतच्चतुष्टम् इति । नदीस्नानं मृत्तिकास्नानविधिपूर्वकम् । पराशरः – पुण्यतीर्थेऽनार्द्रशिरः स्नानं द्वादशसङ्ख्यया । द्वियोजनं तीर्थयात्रा प्राजापत्यसमं स्मृतम् इति ।

**மற்றொரு ஸ்ம்ருதியிலும்:-** க்ருச்ரம் முதலியவைகளைச் செய்யச் சக்தியில்லாவிடில் ப்ரதிநிதிகளைச் செய்யவும். ப்ராஜாபத்யக்ருச்ரத்தில் ப்ரதிநிதியாக ஒரு பசுவைக்கொடுக்கவும். ஸாந்தபனத்தில் ப்ரதிநிதியாக இரண்டு பசுக்களைக் கொடுக்கவும். க்ருச்ரம், 10000 முறை காயத்ரீஜபம், உபவாஸம், ஸமுத்ரத்தில் சேரும் நதியில் ஸ்நானம் இந்நான்கும் ஸமமாகும். இங்கு நதீஸ்நான மென்றதை ம்ருத்திகாஸ்நான பூர்வகமாய்ச் செய்யவேண்டும். (ம்ருத்திகாஸ்நானத்தை ஆஹ்னிக காண்டத்தில் காண்க) **பராசரர்:-** புண்ய தீர்த்தத்தில் 12 முறை ஈரமில்லாத சிரஸ்ஸுடன் ஸ்நானம் செய்தலும், இரண்டு யோஜனை தூரத்திலுள்ள புண்ய தீர்த்த யாத்ரை செய்தலும் ப்ராஜாபத்யக்ருச்ரத்திற்குச் சமமாம்.

## आपदि कर्त्रन्तरवरणादि

आपत्काले व्रतं स्वयं कर्तु मशक्तश्चेत् तदा ब्राह्मणैः कारयेदित्याह— पराशरः - व्याधिव्यसनिनि श्रान्ते दुर्भिक्षे डामरे तथा । उपवासो व्रतं होमो द्विजैः सम्पादितानि वा इति । व्याधिव्यसनी-रोगग्रस्तः । डामरः - परराजाद्युपद्रवः । अत्यन्तापदमभिप्रेत्य पक्षान्तरमाह स एव – अथ वा ब्राह्मणास्तुष्टाः सर्वं कुर्वन्त्यनुग्रहम् । सर्वान् कामानवाप्नोति द्विजसम्पादितैरिह इति । महापुरुषवचनमात्रसम्पादितैराशीर्विशेषैः अशेषकामप्राप्तिर्भवति । तत्र पापक्षयो भवतीति को विस्मयः ।

### ஆபத் காலத்தில் வேறு கர்த்தாவை வரித்தல்

*ஆபத் காலத்தில் நியமத்தைத் தான் செய்ய அசக்தனாயிருந்தால் அப்பொழுது, ப்ராமஹணர்களால் செய்விக்கலாம் என்கிறார் பராசரர்: வ்யாதியால் பீடிக்கப்பட்ட காலத்திலும், ச்ரமமுள்ள காலத்திலும், துர்ப்பிக்ஷத்திலும், சத்ரு ராஜாக்கள் முதலியவரின் உபத்ரவத்திலும், உபவாஸம், வ்ரதம், ஹோமம் இவைகளை ப்ராம்ஹணர்களாலாவது செய்விக்கலாம். அதிக ஆபத்தை அபிப்ராயத்தில் வைத்து வேறு பக்ஷம் சொல்லுகிறார், பராசரரே:- அல்லது ஸந்தோஷமுற்ற ப்ராம்ஹணர்களே எல்லா அனுக்ரஹத்தையும் செய்கின்றனர். ப்ராம்ஹணர்களால் செய்யப்பட்ட ஆசீர்வசனங்களாலேயே ஸகல மநோரதங்களையுமடைகிறான். மஹா புருஷர்களின் வாக்யத்தால் ஸம்பாதிக்கப்பட்ட ஆசீர்விசேஷங்களால் ஸகல காமங்களின் ப்ராப்தியுமுண்டாகிறது. அதில் பாபக்ஷயமுண்டாகின்றதென்பதில் ஆச்சர்யமென்ன?*

महापुरुषसङ्कल्पमात्रादेव कामप्राप्तिराथर्वणे श्रूयते – यं यं लोकं मनसा संविभाति विशुद्धसत्वः कामयते यांश्च कामान् । तं तं

लोकं जयते तांश्च कामान् तस्मादात्मज्ञं ह्यर्चयेद्भूतिकामः इति । महदनुग्रहविषयं दर्शयति देवलः – प्रायश्चित्तं यथोद्दिष्टमशक्यं दुर्बलादिषु । इष्यतेऽनुग्रहस्तेषां लोकसङ्ग्रहकारणात् इति ।

*மஹா புருஷர்களின் ஸங்கல்ப்பத்தாலேயே காம ப்ராப்தி உண்டாகின்றதென்பது ஆதர்வணத்தில் (முண்டகோபநிஷத்) கேட்கப்படுகிறது. க்லேசங்களற்றவனான 'நிர்மலாந்த:கரணனான ஆத்மஜ்ஞன்', மனதினால் பித்ருலோகம் முதலிய எந்த எந்த லோகத்தைத் தனக்கோ பிறருக்கோ ஸங்கல்ப்பிக்கின்றானோ, எந்தெந்த போகங்களை விரும்புகின்றானோ, அந்தந்த லோகத்தையும், அந்தந்த போகங்களையும் அடைகிறான். ப்ரம்ஹஜ்ஞன் ஸத்யஸங்கல்பனாகையால். ஆத்மஜ்ஞனை, ஐச்வர்யத்தை விரும்புகின்றவன் பாத ப்ரக்ஷாளனம், சுச்ரூஷை, நமஸ்காரம் இவைகளால் பூஜிக்கவேண்டும். (சாங்கரபாஷ்யம்) மஹான்களின் அனுக்ரஹத்திற்கு விஷயமானவனைத் தெரிவிக்கின்றார், தேவலர்:- சாஸ்த்ரத்தில் சொல்லியபடி ப்ராயஶ்சித்தத்தைப் பலமில்லாதவர் முதலியவர் செய்யமுடியாது. ஆகையால் லோகானுக்ரஹத்திற்காக, அவர்களுக்கு மஹான்கள் அனுக்ரஹம் செய்யவேண்டும்.*

पराशरोऽपि – दुर्बलेऽनुग्रहः प्रोक्तः तथा वै बालवृद्धयोः । ततोऽन्यथा भवेद्दोषस्तस्मान्नानुग्रहः स्मृतः इति । ततोऽन्यथा - प्रबलानुग्रह इत्यर्थः । दुर्बलस्य महदनुग्रहाच्छुद्धिं विशदयति स एव – ब्राह्मणा जङ्गमं तीर्थं तीर्थभूता हि साधवः । तेषां वाक्योदकेनैव शुद्ध्यन्ति मलिना जनाः । ब्राह्मणा यानि भाषन्ते मन्यन्ते तानि देवताः । सर्वदेवमयो विप्रो न तद्वचनमन्यथा इति ।

**பராசரரும்:-** *துர்பலன், பாலன், வ்ருத்தன் இவர்கள் விஷயத்தில் அனுக்ரஹம் செய்யத்தகுந்தது. இவர்களைத் தவிர்த்து ப்ரபலனையுள்ளவனிடத்தில் அனுக்ரஹம்*

செய்வது தோஷாவஹம். ஆகையால் வ்ரதானுஷ்டானத்தில் சக்தியுள்ளவனிடத்தில் அனுக்ரஹம் கூடாது. துர்பலனுக்கு மஹான்களின் அனுக்ரஹத்தால் சுத்தியைத் தெரிவிக்கின்றார் பராசரரே:- ப்ராம்ஹணர்கள் ஜங்கமமான தீர்த்தமாவர். ஸாதுக்கள் தீர்த்தமாயுள்ளவர்க ளல்லவா? அவர்களின் வாக்யமாகிய ஜலத்தினாலேயே மலினரான (அழுக்குள்ள, பாபமுள்ள) ஜனங்கள் சுத்தராகின்றனர். ப்ராம்ஹணர்கள் எவைகளைச் சொல்லுகிறார்களோ அவைகளைத் தேவர்கள் அனுமதிக்கிறார்கள். ப்ராம்ஹணன் ஸர்வதேவ ஸ்வரூபனாயிருக்கின்றான். அவனது வசனம் வேறு விதமாயாவதில்லை.

अनुग्रहयोग्यस्य दुर्बलस्य नियमविधानेऽपि प्रत्यवाय इत्याह स एव– शरीरस्यात्यये प्राप्ते वदन्ति नियमांस्तु ये । महत्कार्योपरोधेन तत्पापं तेषु गच्छति । न स्वस्थस्य कदाचन इति । शरीरस्यात्ययः - मुमूर्षोर्भूम्यां शयनम् । तस्मिन् प्राप्ते सति तेन कर्तुमशक्यं प्राजापत्यादिनियमं कर्तव्यत्वेन ये वदन्ति, तेषु तत् पापं गच्छति । तत्र हेतुः महत्कार्योपरोधेनेति । महतां देवतोपासकानां कार्यं महत्कार्यम् । अन्त्यकाले देवतास्मरणकीर्तनादि । तस्य उपरोधः प्रतिबन्धः । मुमूर्षुः परिसरवर्तिभिः आप्तैर्बोधितो देवान् स्मर्तुं उद्युङ्क्ते । तदानीमेतद्व्रतस्य कर्तव्यतां श्रुत्वा कर्तुमशक्नुवन् व्याकुलचित्तः पूर्वमुक्तां देवतास्मृतिमपि परित्यजति । सोऽयं पुरुषार्थप्रतिबन्धः । स्वस्थशरीरस्य तु पूर्वोक्तः कार्योपरोधः कदाचिदपि नास्ति, 'स्वस्थस्य मूढाः कुर्वन्ति वदन्त्यनियमं तु ये । ते तस्य विघ्नकर्तारः पतन्ति नरकेऽशुचौ इति स्मरणात् ॥

அனுக்ரஹத்திற்கு யோக்யனான துர்பலனுக்கு, நியமத்தை விதிப்பதிலும் தோஷமுண்டென்கிறார் பராசரரே - சரீராயாஸ ஸமயத்தில் எவர்கள் நியமங்களைச்

சொல்லுகின்றனரோ, அவர்களிடத்தில் சிறந்தவரின் கார்யத்திற்கு இடையூறு செய்ததாலுண்டாகும் பாபம் சேருகிறது. ஸ்வஸ்தனுக்கு நியமத்தைச் சொல்வதால் ஒரு காலும் தோஷமில்லை. முமூர்ஷுவானவன் பூமியில் படுத்திருக்கும்போது, அவனால் செய்யமுடியாத ப்ராஜாபத்யாதி வ்ரதநியமத்தைச் செய்யத் தகுந்ததாய் எவர்கள் உபதேசிக்கின்றனரோ அவர்களிடம் அந்தப் பாபம் சேருகிறது. அதன் காரணம் 'மஹத்கார்யோபரோதம்' என்பது. மஹான்கள்- தேவதோபாஸகர்கள். அவர்களின் கார்யம்- அந்தக் காலத்தில் தேவதாஸ்மரணம் கீர்த்தனம் முதலியவை மஹத்கார்யம். அதற்கு உபரோதம்= ப்ரதிபந்தம். முமூர்ஷுவானவன் ஸமீபத்திலுள்ள ஆப்தர்களால் போதிக்கப்பட்டு, தேவர்களை ஸ்மரிக்க முயற்சிக்கின்றான். அக்காலத்தில் இந்த வ்ரதத்தைச் செய்யவேண்டுமெனக் கேட்டுச் செய்வதற்குச் சக்தியற்றவனாதலால் சித்தம் கலங்கி, முன் சொல்லப் பட்ட தேவதாஸ்மரணத்தையும் விட்டுவிடுகிறான். இதுதான் புருஷார்த்த ப்ரதிபந்தம். ஸ்வஸ்த சரீரனாயுள்ளவனுக்கு முன்சொல்லிய மஹத்கார்யோபரோதம் என்பது ஒரு காலுமில்லை. (ஸ்வஸ்தனாயிருப் பவனுக்கு நியமாபாவத்தை எந்த மூடர்கள் சொல்லுகின்றனரோ, அவ்விதம் அனுக்ரஹிக்கின்றனரோ, அவர்கள் நியமத்திற்கு விக்னம் செய்தவர்களாகையால் அசுத்தமான நரகத்தில் விழுகின்றனர், என்று ஸ்ம்ருதி உள்ளது.

## अन्त्यकाले भगवन्नामकीर्तनम् ।

अन्त्यकाले हरिहरनामकीर्तनादिफलं स्मर्यते—यथाकथञ्चिद्गोविन्दे कीर्तिते वा श्रुतेऽपि वा । पापिनोऽपि विशुद्धाः स्युः शुद्धा मोक्षमवाप्नुयुः ॥ शिव शिव शिव चेति व्याहरन् वै त्रिवारं त्यजति निजतनुं यस्त्वायुषोऽन्त्यक्षणेऽस्मिन् । भवति भवभयानां

छेदकः पूर्वशब्दो न भवत इतरौ द्वौ कल्पितात्मोपकारौ ।। यं यं भावं स्मरन् योगी त्यजत्यन्ते कलेबरम् । तं तमेवैति कौन्तेय सदा तद्भावभावितः इति । महदवलोकनं च कार्यम् । महापातकयुक्तो वा युक्तो वा सर्वपातकैः । परं पदं प्रयात्येव महद्भिरवलोकितः इति स्मरणात् ।

**அந்த்ய காலத்தில் பகவந்நாமத்தைச் சொல்லுதல்**

*அந்த்யகாலத்தில் ஹரிஹரர்களின் நாமகீர்த்தனத்திற்குப் பலம் ஸ்ம்ருதியில் :- எவ்விதமாகவாவது கோவிந்த நாமத்தைச் சொன்னுலும், கேட்டாலும் பாபிகளும் சுத்தராவர். சுத்தர்கள் மோக்ஷத்தை அடைவார்கள். எவன் தனது ஆயுளின் முடிவு க்ஷணத்தில், சிவ சிவ சிவ என்று மூன்று தடவை உச்சரித்துத் தனது சரீரத்தை விடுகின்ருனே அவனுக்கு முதலில் உச்சரிக்கப்பட்ட சிவ சப்தமே ஸாம்ஸாரிக பயங்களைச் சேதிப்பதாக ஆகிறது. மற்ற இரண்டு சப்தங்கள் ஒருவித உபகாரமும் செய்தவைகளாய் ஆவதில்லை. ஓ அர்ஜுன ! யோகியானவன் அந்த்ய காலத்தில் எந்தெந்த தேவதா விசேஷத்தை நினைத்துக் கொண்டு சரீரத்தை விடுகின்ருனே, அந்தந்தத் தேவதா விசேஷத்தின் பாவனையை அப்யஸித்தவனுய். மஹத் தர்சனமும் செய்ய வேண்டும். ''மஹாபாபங்களுடன் கூடியவனுயினும், ஸகல பாபங்களுடன் கூடியவனுயினும், மஹான்களால் பார்க்கப்பட்டவன் பரமபதத்தை அடைகிருன், நிச்சயம்'' என்று ஸ்ம்ருதி உள்ளது.*

## मुमुर्षोर्दानविधिः

मुमूर्षुः परलोकार्थं यथाशक्तिदानं कुर्यात् । इतः प्रदानं ह्यमुष्मिन् लोके प्रजा उपजीवन्ति इति श्रुतेः । तथा च महाभारते – विद्या प्रवसतो दानं मित्रं मरिष्यतः ।। षडशीति सहस्राणि

योजनानां युधिष्ठिर। मानुषस्य च लोकस्य यमलोकस्य चान्तरम्। न तत्र वृक्षच्छाया वा न वाप्यो न च दीर्घिकाः। न ग्रामो नाश्रमो वाऽपि नोद्यानं काननानि च। न किञ्चिद्विश्रमस्थानं पथि तस्मिन् युधिष्ठिर। कण्टकाकीर्णमार्गेण तप्तवालुकपांसुना। दह्यमानास्तु गच्छन्ति नरा दानविवर्जिताः। तस्माद्दानं तु कर्तव्यं मृतिकाले कथञ्चन इति।

### முமூர்ஷு செய்யவேண்டிய தானங்களின் விதி

முமூர்ஷுவானவன் பரலோகத்திற்காக யதாசக்தி தானம் செய்யவேண்டும். ''ஸ்வர்க்கத்தை அடைந்த ப்ரஜைகள், இந்தப் பூலோகத்தில் அனுஷ்டிக்கப்பட்ட கர்மங்களால் ஸம்பாதிக்கப்பட்ட அன்னத்தையே ஸ்வர்க்கலோகத்தில் புஜிக்கின்றனர்'' என்று ச்ருதி உள்ளது. அவ்விதமே, **மஹாபாரதத்தில்**:- அயல் தேசம் செல்பவனுக்கு வித்யை மித்ரனும். வீட்டிலிருப்பவனுக்கு (க்ருஹஸ்தாச்ரமிக்கு) பார்யை மித்ரனும். வ்யாதிஸ்தனுக்கு வைத்யன் மித்ரனும். முமூர்ஷுவுக்குத் தானம் மித்ரனும். ஓ யுதிஷ்டிர! மனுஷ்ய லோகத்திற்கும், யமலோகத்திற்கும் நடுவிலுள்ள இடைவெளி 86000-யோஜனை தூரமாம். அந்த வழியில் மரத்தின் நிழலாவது, நடைவாபிகளாவது. ஓடைகளாவது கிடையாது. க்ராமம், ஆச்ரமம், உத்யானம், காடுகள், இளைப்பாறுமிடம் இவைகளில் ஏதாவது ஒன்றும் இல்லை. தபிக்கின்ற மணல் புழுதிகளையுடைய முட்கள் நிறைந்த வழியால் பொசுக்கப்பட்டவர்களாகச் செல்லுகின்றனர் தானம் செய்யாத மனிதர்கள். ஆகையால் மரண காலத்தில் எவ்விதமாகவாவது தானத்தைச் செய்யவேண்டும்.

दानविशेषमाह शातातपः - अन्नपानाश्वगोवस्त्र-भूशय्याश्वासनानि च। प्रेतलोके प्रशस्तानि दानान्यष्टौ विशेषतः। तिलाः पापहरा नित्यं तद्दानं तु प्रशस्यते। यो हिरण्यं ददात्यन्ते

ह्यमृतत्वं भजेत सः इति । मुमुक्षूणां ब्रह्मविदामपि गृहस्थानामीश्वरप्रीत्यर्थं देयमेव । दानक्रियाश्च विविधाः क्रियन्ते मोक्षकाङ्क्षिभिः इति स्मरणात् । संज्ञाहानौ मरणेऽपि वा हितैषी पुत्रादिर्दद्यात् । आतुरो वाऽथ पुत्रो वा दद्युरासन्नबान्धवाः इति व्यासस्मरणात् ।

*தான பேதங்களைச் சொல்லுகிறார் : சாதாதபர்:- அன்னம், ஜலம், குதிரை, பசு, வஸ்த்ரம், பூமி, படுக்கை, ஆஸனம் என்ற எட்டுத் தானங்களும் பரலோகத்தில் மிகச் சிறந்தவைகளாம். திலங்கள் பாபத்தைப் போக்குகின்றன. அவற்றின் தானம் நித்யமும் புகழப்படுகிறது. அந்த்ய காலத்தில் எவன் ஸ்வர்ணத்தைக் கொடுக்கின்றானோ அவன் மோக்ஷத்தை அடைகிறான். மோக்ஷேச்சை யுள்ளவர்களாயும், ப்ரம்ஹவித்துக்களாயுமுள்ள க்ருஹஸ்தர்களும் அவச்யம் தானம் செய்யவேண்டும். 'மோக்ஷத்தை விரும்பியவர்களால், பலவிதமான தான கார்யங்களும் செய்யப்படுகின்றன' என்ற ஸ்ம்ருதி. ப்ரஜ்ஞை தவறினாலும், மரணமேற்பட்டாலும், ஹிதத்தை விரும்பும் புத்ரன் முதலிய யாராவது தானத்தைச் செய்ய வேண்டும். 'ஆதுரனாவது, புத்ரனாவது, ஸமீப பந்துக்களாவது தானத்தைச் செய்யவேண்டும்' என்று வ்யாஸஸ்ம்ருதி*

स्मृतिरत्नेऽपि – उत्क्रान्तिवैतरण्यौ च दशदानानि चैव हि । प्रेतेऽपि कृत्वा तं प्रेतं शवधर्मे नियोजयेत् इति । प्रचेताः – गोभूतिलहिरण्याज्यवासोधान्यगुडानि च । रौप्यं लवणमित्याहु-र्दशदानानि पण्डिताः । एतानि दशदानानि नराणां मृत्युजन्मनोः । कुर्यादभ्युदयार्थं च प्रेतेऽपि हि परत्र च । भूमिर्भोजनपर्याप्ता द्रोणद्वयमितास्तिलाः । निष्कत्रयं सुवर्णं स्यादाज्यं प्रस्थचतुष्टयम् ।। सूक्ष्मवस्त्रद्वयं धान्यं सार्धखारीकमुच्यते । गुडं षष्टिपलं चैव रौप्यं निष्कचतुष्टयम् । लवणं सार्धखारीकं दशदानं प्रमाणतः इति ।

ஸ்ம்ருதி ரத்னத்திலும்:- முமூர்ஷுவானவன், தானங்களைச் செய்வதற்கு முன் இறந்துவிட்டாலும், புத்ரன் முதலியவன், உத்க்ராந்தி தானம், வைதரணீ தானம், தசதானங்கள் இவைகளைச் செய்து, பிறகுதான் இறந்தவனைச்சவ தர்மத்தில் சேர்க்கவேண்டும். ப்ரசேதஸ் பசு, பூமி, எள், பொன், நெய், வஸ்த்ரம், தான்யம், வெல்லம், வெள்ளி, உப்பு என்ற பத்து த்ரவ்யங்களின் தானங்கள் தசதானங்களெனப்படும். இவைகளை மனிதரின் பிறப்பிலும், இறப்பிலும் முறையே நன்மைக்காவும், பரலோகத்திற்காகவும் செய்ய வேண்டும். பூமி என்பது ஒருவனுக்குப் போஜனத்திற்குப் போதுமான நெல் விளையக்கூடியதாம். எள் இரண்டு த்ரோணம் (4-மரக்கால்) அளவுள்ளது. பொன் மூன்று நிஷ்கம் எடையுள்ளது. நெய் நான்குபடி அளவுள்ளது. வஸ்த்ரம் மெல்லியதாய் இரண்டு. தான்யம் 1 1/2-காரீ (புட்டி) அளவுள்ளது. வெல்லம் அறுபது பலமுள்ளது. வெள்ளி நான்கு நிஷ்கமெடையுள்ளது. உப்பு 1 1/2-காரீ (புட்டி) அளவுள்ளது. இவை தசதானங்களின் ப்ரமாணங்களாம். (நிஷ்க பரிமாணத்தை வேறு க்ரந்தத்தில் பார்க்கவும்).

महाभारते – यो मृत्युकाले सम्प्राप्ते गां ददाति पयस्विनीम्। गवा दर्शितमार्गस्तु ब्रह्मलोके महीयते । चतुःसागरपर्यन्तां सशैलवनकाननाम्। दत्वा यत्फलमाप्नोति सालग्रामात् तदश्नुते । ब्रह्माण्डकोटिदानेन यत् फलं भवति प्रभो । तत् फलं समवाप्नोति शिवलिङ्गप्रदानतः । हिरण्यं भूमिदानं च तिलान् शक्त्या च दापयेत्। कुटुम्बिने दरिद्राय श्रोत्रियाय तपस्विने । यद्दानं दीयते तस्मै तद्दानं स्वर्गसाधनम् । गृहीतदानपाथेयाः प्रयान्ति त्रिदिवं नराः । भ्रातरो वाऽथ पुत्रो वा दद्युरासन्नबान्धवाः इति । दशदानमन्त्रा दानप्रकरणे अभिहिताः । उत्क्रान्ति गोदाने तु मन्त्रः – अत्युत्क्रान्तौ प्रवृत्तस्य सुखोत्क्रमणसिद्धये । तुभ्यं सम्प्रददे धेनुमिमामुत्क्रान्तिसंज्ञिकाम् इति ।

மஹாபாரதத்தில் :- எவன் மரண ஸமயத்தில் பாலுள்ள பசுவைக் கொடுக்கின்றானோ அவன், பசுவினால் காட்டப்பட்ட வழியுடையவனாய் ப்ரம்ஹலோகத்தில் சிறப்புறுகிறான். நான்கு ஸமுத்ரங்களுக்குட்பட்டதும், மலைகளுடனும், காடுகளுடனும் கூடியதுமான பூமியைக் கொடுத்தால் எந்தப் பலனையடைவானோ அந்தப் பலனை ஸாளக்ராமதானத்தால் அடைவான். கோடி ப்ரம்ஹாண்டங்களைத் தானம் செய்வதால் எந்தப் பலனோ அந்தப் பலனைச் சிவலிங்க தானத்தால் அடைவான். பொன், பூமி, எள் இவைகளைச் சக்திக்குத் தக்கபடி கொடுக்கவேண்டும். குடும்பியாயும், தரித்ரனாயும், ச்ரோத்ரியனாயும், தபஸ்வியாயுமுள்ளவனுக்கு எந்தத் தானம் கொடுக்கப்படுகிறதோ அந்தத் தானம் தாதாவுக்கு ஸ்வர்க்க ஸாதனமாகும். தானமெனும் பாதேயத்தை (வழிச்சோறு) க்ரஹித்துள்ள மனிதர் ஸ்வர்க்கத்தை அடைகின்றனர். ப்ராதாக்களாவது, புத்ரனாவது, ஸமீப பந்துக்களாவது தானம் செய்யலாம். தசதான மந்தரங்கள் தான ப்ரகரணத்தில் (வர்ணாச்ரமதர்ம காண்டத்தில்) சொல்லப்பட்டன. உத்க்ராந்தி கோதானத்திலோ இது மந்த்ரம்-'அத்யுத்க்ராந்தௌ +ஸம்ஜ்ஞிகாம்' என்பது.

## अन्त्यकाले जप्यमन्त्राः

अन्त्यकाले जप्यमन्त्र माह शौनकः - नानानमिति सूक्तं तु ह्यन्त्यकाले जपेत् सकृत्। लब्ध्वा चैव परं स्थानममृतत्वं च गच्छति इति । विष्णुः – श्रावयेत् पुण्यसूक्तानि पुण्यमन्त्राक्षराणि च । द्विजस्य दक्षिणे कर्णे पुत्रादिः प्राणसंशये इति । स्मृत्यन्तरे – कर्णे जपेदीशवाक्यं शास्त्रादिभिरुदीरितम् इति । शुचिनिर्णये एतद्व्याख्यातम्, ईशवाक्यं, पञ्चाक्षरी, अष्टाक्षरी, रामषडक्षरी, प्रणवः, उपनिषद्वाक्यानि च इति ।

**அந்த்ய காலத்தில் ஜபிக்கவேண்டிய மந்த்ரங்கள்**

*அந்த்ய காலத்தில் ஜபிக்கவேண்டிய மந்த்ரத்தைச் சொல்லுகிறார் சௌனகர்:- அந்தய காலத்தில் 'நாநாகம்' என்னும் ஸூக்தத்தை ஒரு முறை ஜபித்தால் சிறந்த உலகத்தை அடைந்து, மோக்ஷத்தையும் அடைவான். விஷ்ணு:-ப்ராண ஸம்சய காலத்தில், புத்ரன் முதலியவன் ப்ராம்ஹணனின் வலது காதில் புண்ய ஸூக்தங்களையும், புண்ய மந்த்ரங்களையும் ஜபிக்கவேண்டும். மற்றொரு ஸ்ம்ருதியில்:- சாஸ்த்ரம் முதலியவைகளால் சொல்லப்பட்டுள்ள ஈசவாக்யத்தைக் காதில் ஜபிக்கவேண்டும். சுசிநிர்ணயமென்னும் க்ரந்தத்தில் இதற்கு வ்யாக்யானம் செய்யப்பட்டுள்ளது. ஈசவாக்யம்- பஞ்சாக்ஷரீ, அஷ்டாக்ஷரீ, ராமஷடக்ஷரீ, ப்ரணவம், உபநிஷத் வாக்யங்கள் என்று.*

आपस्तम्बः – ब्रह्मविदाप्नोति परं, भृगुर्वै वारुणिरित्येतावनुवाकौ ब्रह्मविदो दक्षिणे कर्णे जपत्यायुषः प्राणꣳसन्तन्विति च ॥ मरणसमीपकाले शुद्धभूमौ दक्षिणाग्रेषु दर्भेषु दक्षिणाशिरसं संवेश्य मुमूर्षोर्ब्रह्मविदो दक्षिणे कर्णे ब्रह्मविदाप्नोति, भृगुर्वै वारुणिरित्यनुवाकद्वयं, इतरस्य कर्णे आयुषः प्राणमित्यनुवाकं सन्निहितपुत्रादिः कश्चित् जपेदित्यर्थः । तथा च बोधायनः – भूमौ दर्भास्तृतायां तं शाययेन्मृतिसंशये । जपेत्तु दक्षिणे कर्ण आयुषः प्राणमित्यपि इति ।

*ஆபஸ்தம்பர் 'ப்ரம்ஹவிதாப்நோதி, ப்ருகுர்வை வாருணி:' என்ற இந்த இரண்டு அனுவாகங்களை ப்ரம்ஹவித்தினுடைய வலது காதில் ஜபிக்கவும். 'ஆயுஷ: ப்ராணம் என்ற அனுவாகத்தையும்' என்றார். மரணம் ஸமீபித்த காலத்தில், சுத்தமான ஸ்தலத்தில், தெற்கு நுனியாயுள்ள தர்ப்பங்களில், தெற்கில் சிரஸ்ஸுள்ளபடி முமூர்ஷுவைச் சயனிக்கச் செய்து, அவன் ப்ரம்ஹவித்தாகில் அவனது காதில் 'ப்ரம்ஹவிதாப்நோதி,*

*ப்ருகுர்வைவாருணி:' என்ற இரண்டு அனுவாகங் களையும், மற்றவனின் காதில் 'ஆயுஷ:ப்ராணம்'என்ற அனுவாகத்தையும், ஸமீபத்திலுள்ள புத்ரன் முதலியவன் ஜபிக்கவேண்டுமென்று பொருள். அவ்விதமே,* **போதாயனர்:-** *மரண ஸம்சய காலத்தில், தர்ப்பங்களால் பரப்பப்பட்ட பூமியில் படுக்க வைக்கவும். வலது காதில் 'ஆயுஷ:- ப்ராணம்' என்பதையும் ஜபிக்கவும்.*

कात्यायनः – दुर्बलं स्नापयित्वा च शुद्धचेलाभिसंवृतम् । दक्षिणाशिरसं भूमौ बर्हिष्मत्यां निवेशयेत् । मुमूर्षोर्दक्षिणे कर्णे ब्रह्ममन्त्रान् जपेत् सुतः इति । वसिष्ठो विशेषमाह – पितुर्मरणकाले तु पुत्रस्तु ऋणमोचनात् । मस्तकं तु समाधाय दक्षिणस्य तु जानुनि । श्रावयेत् पुण्यसूक्तानि पुण्यमन्त्राक्षराणि च । ततस्तु निर्गते वायौ कुशाग्रेषु विनिक्षिपेत् इति ।

**காத்யாயனர்:-** *துர்ப்பலனை (முமூர்ஷுவை) ஸ்நானம் செய்வித்து, சுத்த வஸ்த்ரத்தைத் தரிக்கச்செய்து, தர்ப்பங்களுள்ள பூமியில் படுக்கச்செய்யவும். அவனது வலது காதில், புத்ரன் வேதமந்த்ரங்களை ஜபிக்கவும்.* **வஸிஷ்டர் விசேஷத்தைச் சொல்லுகிறார்:-** *புத்ரனாகியவன் பிதாவின் மரண காலத்தில் ருணத்தை விடுவிப்பதற்காக, தனது வலது முழங்காலில் பிதாவின் தலையை வைத்துக்கொண்டு, புண்ய ஸூக்தங்களையும், புண்ய மந்த்ரங்களையும் ஜபிக்கவேண்டும். பிறகு ப்ராணவாயு வெளியிற் சென்ற உடன் தர்ப்பங்களின் நுனிகளில் தலையை வைக்கவேண்டும்.*

## मरणदिनगुणदोषौ ।

गौतमः - दिवोत्तरायणे शुक्ले पक्षे च मरणं शुभम् । भद्रे त्रिपदनक्षत्रे भृग्वङ्गारबृहस्पतौ । मरणं दहनं चापि सञ्चयं त्रिगुणं भवेत् । भद्रे तु भूमिदानं स्यात् त्रिपदर्क्षे हिरण्यकम् । वारे वाराधिनाथानां पूजनं मृत्युनाशनम् । तिलैः प्रतिकृतिं कृत्वा

दहेद्दोषोपशान्तये इति । मार्कण्डेयः – उत्तरायणगे सूर्य उत्तमा गतिरुच्यते । शुक्लपक्षे मृतिस्तत्र श्रेष्ठा वह्निमृतिस्तथा । श्रेष्ठा तत्रापि मध्याह्ने उभयोः पक्षयोरपि । एकादश्यां मृतिः श्रेष्ठा मोक्षदा सर्वकामदा । वह्निमृतिः – तृतीयायां मरणम् ।

**மரண தினத்தின் குணதோஷங்கள்**

**கௌதமர்**:- *பகலிலும், உத்தராயணத்திலும், சுக்லபக்ஷத்திலும் மரணமானால் அது சுபகரமாகும். பத்ரதிதியிலும், த்ரிபாத நக்ஷத்ரத்திலும், சுக்ரன், அங்காரகன், ப்ருஹஸ்பதி இவர்களின் வாரங்களிலும் ஏற்படும் மரணம், தஹனம், ஸஞ்சயனம் இவை மூன்று மடங்காகும் (அசுபமென்பதாம்). அதற்காகப் பத்ரதிதி விஷயத்தில் பூமிதானம் செய்யவும். வார விஷயத்தில் அந்தந்த வாரத்திற்கு நாதனான க்ரஹத்தைப் பூஜிக்கவும். இவ்விதம் செய்வது ம்ருத்யுவைப் போக்குவதாகும். தோஷசாந்திக்காக எள்ளால் ப்ரதிக்ருதியைச்(மனித உருவம்) செய்து தஹிக்கவும்.* **மார்க்கண்டேயர்:** *உத்தராயணத்தில் இறந்தவனுக்குச் சிறந்த கதி சொல்லப்படுகிறது. அதிலும் சுக்லபக்ஷத்தில் இறப்பது சிறந்தது. அதிலும் த்ருதீயையில் இறப்பது சிறந்தது. இரண்டு பக்ஷங்களிலும் ஏகாதசியில் இறப்பது மோக்ஷத்தையும் ஸகல காமங்களையும் கொடுப்பதாகும்.*

महाभारतेऽपि – स्यादुत्तरायणे यस्य मृतिस्तस्योत्तमा गतिः । शुक्लपक्षे हि मध्याह्ने कृष्णेऽप्येकादशीदिने इति । गार्ग्यः – भद्रे भूमिप्रदानं स्यात् त्रिपदर्क्षे हिरण्यकम् । अङ्गारके त्वनड्वाहं गुरौ वस्त्रं तु दक्षिणा । शुक्रे रजतदानं स्यात् तत्र द्रव्यप्रदस्सुखी । वारे वाराधिदेवत्यं द्रव्यं दत्वा न दोषभाक् इति ।

**மஹாபாரதத்திலும்**:- *உத்தராயணத்தில் எவனுக்கு ம்ருதியோ அவனுக்குச் சிறந்த கதியுண்டாகும். சுக்லபக்ஷமாகினும், க்ருஷ்ணபக்ஷமாகினும் ஏகாதசியில்,*

மத்யாஹ்னத்தில் மரணம் நற்கதியைக் கொடுக்கும். கார்க்யர் - பத்ரதிதியிலானால் பூமிதானமும், த்ரிபாத நக்ஷத்ரத்திலானால் ஸ்வர்ணதானமும், பௌமவாரத்திலானால் காளையின் தானமும், குருவாரத்திலானால் வஸ்த்ரதானமும், சுக்ரவாரத்திலானால் வெள்ளியின் தானமும் கொடுப்பவனுக்கு ஸுகத்தையளிப்பதாகும். வாரநாதனின் த்ரவ்யத்தைத் தானம் செய்தால் வாரதோஷத்தை அடையமாட்டான்.

एवं स्मृतिषूक्तो वारादिनिषेधः कालातिक्रमविषयः । प्रत्यक्षमरणे तिथ्यादिदोषाभावः । प्रत्यक्षमरणे तु न दोष इत्याह लोकाक्षिः – प्रत्यक्षे न किञ्चित् सूक्ष्मतः परोक्षे तु सूक्ष्मतः पश्येत् इति । स्मृत्यन्तरे – प्रत्यक्षमरणे पित्रोर्न पश्येत्तिथिवारभम् । नैव दोषावहं प्रोक्तमन्येषामपि सर्वदा । परोक्षे सूक्ष्मतः पश्येन्मृतौ तु तिथिवारभम् इति । बृहस्पतिः – मातापित्रोर्मृतिप्राप्तौ पुत्रैर्दाहादिकर्म च । प्राप्तकाले तु कर्तव्यं तिथ्यादिर्न तु दोषकृत् इति ।

இவ்விதம் ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்ட வாரம் முதலியவையின் நிஷேதம் காலாதிக்ரம விஷயமாகும். ப்ரத்யக்ஷ மரணத்தில் திதி முதலியவையின் தோஷமில்லை. ப்ரத்யக்ஷ மரணத்தில் தோஷமில்லை என்கிறார் லோகாக்ஷி: ப்ரத்யக்ஷ மரணத்தில் ஒன்றையும் ஸூக்ஷ்மமாய்க் கவனிக்கவேண்டாம். பரோக்ஷ மரணத்தில் ஸூக்ஷ்மமாய்க் கவனிக்கவேண்டும். மற்றொரு ஸ்ம்ருதியில்: மாதாபிதாக்களின் ப்ரத்யக்ஷமரணத்தில் திதிவார நக்ஷத்ரங்களைப் பார்க்கவேண்டாம். அவை தோஷாவஹங்களெனச் சொல்லப்படவில்லை. பிறர் விஷயத்திலும் தோஷாவஹமில்லை. பரோக்ஷ மரணவிஷயத்தில் திதிவார நக்ஷத்ரங்களைக் கவனித்துப் பார்க்கவேண்டும். ப்ருஹஸ்பதி மாதாபிதாக்களின் ம்ருதி ஏற்பட்டால் புத்ரர்கள் தஹநாதிக்ரியைகளை அப்பொழுதே செய்யவேண்டும். திதி முதலியவை தோஷாவஹங்களல்ல.

वसिष्ठश्च – वैधे कर्मणि तु प्राप्ते कालदोषं न चिन्तयेत्। सद्यः क्षौरं प्रकुर्वीत सद्यः श्राद्धादिकर्म च इति। एवं प्रत्यक्षमरणे यद्यपि वारादिदोषो नास्ति तथाऽपि शङ्कालेशापनुत्तये मनःप्रीतये च ब्राह्मणेभ्यः शक्तितः किञ्चिद्दत्वा अनुज्ञाप्य शङ्कितं दोषं नाशयेत्। तदाह हारीतः – कुर्वीत सर्वकर्माणि ब्राह्मणाना मनुज्ञया। ब्राह्मणैरभ्यनुज्ञानात् दोषा नश्यत्यसंशयमिति।

வஸிஷ்டரும்:- *சாஸ்த்ரவிஹிதமான கர்மம் ப்ராப்தமானால் கால தோஷத்தைச் சிந்திக்கக் கூடாது. உடனே க்ஷௌரத்தைச் செய்துகொள்ளவும். ச்ராத்தம் முதலிய கர்மத்தையும் செய்யவும். இவ்விதம் ப்ரத்யக்ஷ மரணத்தில் வாராதிதோஷமில்லையென்றிருந் தாலும், ஸ்வல்பசங்கையாவதிருக்குமாயின் அதையகற்றுவ தற்கும், மனதின் ப்ரீதிக்கும் யதாசக்தி ப்ராம்ஹணர் களுக்குக் கொடுத்து அனுஜ்ஞைபெற்று, சங்கிக்கப்பட்ட தோஷத்தைப் போக்கவேண்டும். அதைப்பற்றி,* ஹாரீதர்:- *எல்லாக் கர்மங்களையும் ப்ராம்ஹணர்களின் அனுஜ்ஞையினால் செய்யவேண்டும். ப்ராம்ஹணர்களின் அனுஜ்ஞையால் தோஷம் நசிக்கின்றது, ஸம்சயமில்லை.*

स्मृत्यन्तरेऽपि – ब्राह्मणानां विना वाक्यैः क्रियाः स्युर्निष्फलास्ततः। कर्तव्या ब्राह्मणानुज्ञा कर्मणां परिपूर्तये इति। महदनुग्रहश्च यथाशक्ति दक्षिणादानेनैव कारयितव्यः, 'दाने सर्वं प्रतिष्ठितमिति श्रुतेः, दानेन निर्दोषो भवति इत्यापस्तम्बस्मरणात्, ब्राह्मणान् सम्यगभ्यर्च्य पृच्छेत् कनकभूषणैः इति भारद्वाज-स्मरणाच्च।

மற்றொரு ஸ்ம்ருதியில் *ப்ராம்ஹணர்களின் அனுஜ்ஞையில்லாவிடில் கர்மங்கள் நிஷ்பலன்களா கின்றன. கர்மங்கள் ஸபலங்களாவதற்காக ப்ராம்ஹணர்களின் அனுஜ்ஞையைப் பெற வேண்டும். அந்த மஹதனுக்ரஹமும் யதாசக்தி தக்ஷிணையைக்*

கொடுப்பதாலேயே செய்விக்கப்பட வேண்டும். 'ஸகலமும் தானத்தில் வைக்கப்பட்டுள்ளது' என்று ச்ருதியிருக்கிறது. 'தானத்தால் தோஷமற்றவனாகிறான்' என்று ஆபஸ்தம்பரும், 'பொன் ஆபரணம் இவைகளால் ப்ராம்ஹணர்களை நன்கு பூஜித்துக் கேட்கவேண்டும்' என்று பாரத்வாஜரும் சொல்லியுள்ளார்.

एतच्च स्नात्वा आर्द्रवासाः कुर्यात्, स्नात्वा स्वशक्त्या द्रविणं दत्वा सभ्यान् प्रदक्षिणम् । परीत्य तैरनुज्ञातः कर्म सङ्कल्पयेत्ततः इति स्मरणात् । स्मृत्यन्तरेऽपि – आर्द्रवस्त्रो बहिः स्नातो नियतो वाग्यतः शुचिः । शक्त्या दत्वाऽभ्यनुज्ञातः कुर्यात्सङ्कल्पमादितः इति ।

இக்கார்யத்தை ஸ்நானம் செய்த ஈரவஸ்த்ர முடையவனாய்ச் செய்யவேண்டும். "ஸ்நானம் செய்து, யதாசக்தி பணத்தைக் கொடுத்து, ஸபையிலுள்ளோரை வலம் வந்து, அவர்களால் அனுமதிக்கப்பட்டுப் பிறகு கர்மத்தை ஸங்கல்ப்பிக்கவேண்டும்'' என்று ஸ்ம்ருதி உள்ளது. மற்றொரு ஸ்ம்ருதியிலும் வெளியில் ஸ்நானம் செய்தவனாய், ஈரவஸ்த்ரமுடையவனாய், நியமமுடையவனாய், மௌனியாய், சுத்தனாய், யதாசக்திதானம் செய்து, அனுஜ்ஞையைப் பெற்று ஆதியில் ஸங்கல்பத்தைச் செய்ய வேண்டும்.

कर्तुः संस्कारयोग्यतासिद्ध्यर्थं प्रायश्चित्तम् ।

चन्द्रिकायाम् – कर्तुः संस्कारयोग्यतासिद्ध्यर्थं प्रायश्चित्तमुक्तं चन्द्रिकायाम् – कर्ताऽधिकारसिद्ध्यर्थं त्रीन् कृच्छ्रान् पञ्च सप्त वा । चरेद्यद्वा तु दानाद्यैः पैतृमेधिकमाचरेत् इति । अत्र कृच्छ्रप्रतिनिधिः गवादिदानम् । तथा च स्मृत्यन्तरे – गवामभावे निष्कं स्यात्तदर्धं पादमेव वा । पादहीनं न कर्तव्यं ब्रह्मदण्डं मनीषिभिः इति । मृताहदाने वैशिष्ट्यमुक्तं चन्द्रिकायाम् –

उपरागसहस्राणि व्यतीपातायुतानि च । अमालक्षं तु द्वादश्याः कलां नार्हन्ति षोडशीम् । एवंविधाया द्वादश्याः तिस्रः कोट्यर्धकोटयः । मातापित्रोर्मृताहस्य कलां नार्हन्ति षोडशीम् इति ।

**கர்த்தாவுக்கு ஸம்ஸ்கார யோக்யதை ஸித்திப்பதற்கு ப்ராயஶ்சித்தம்**

*கர்த்தாவுக்கு ஸம்ஸ்கார யோக்யதா ஸித்திக்கான ப்ராயஶ் சித்தம்-சொல்லப்பட்டுள்ளது சந்த்ரிகையில் - கர்த்தா, அதிகாரம் ஸித்திப்பதற்காக மூன்று, அல்லது ஐந்து, ஏழு க்ருச்ரங்களை அனுஷ்டிக்கவும், அல்லது தானம் முதலியவைகளால் க்ருச்ரங்களைச் செய்து, பித்ரு க்ரியையை அனுஷ்டிக்கவும். இங்கு க்ருச்ரத்திற்கு ப்ரதிநிதி(பதில் ) கோ முதலியவற்றின் தானமாகும். அவ்விதமே,. மற்றொரு ஸ்ம்ருதியில் - கோக்கள் இல்லாவிடில் ஒரு நிஷ்கம் பதிலாகும். (அந்த எடையுள்ள தங்கத்தைத் தானம் செய்யவும்) அல்லது அதன் பாதி, அல்லது அதன் கால்பாகம் பதிலாகும். ப்ரம்ஹதண்டத்தை அறிந்தவர்கள் அதற்குக் குறைந்து செய்யக்கூடாது. (ப்ரம்ஹதண்டம்= ப்ராம்ஹணர்களுக்குக் கொடுக்கும் த்ரவ்யம்) மரணதினத்தில் செய்யும் தானம் சிறந்ததென்பது சொல்லப்பட்டுள்ளது, சந்த்ரிகையில் - ஆயிரம் க்ரஹணங்களும், பதினாயிரம் வ்யதீபாதங்களும், லக்ஷம் அமாவாஸ்யைகளும் ஒரு த்வாதசியின் கலைக்குச் (16-ல் ஒரு பாகம்) சமமாகா. இவ்விதமான த்வாதசியின் 3 1/2 -கோடிகள், மாதா பிதாக்களின் மரணதினத்தின் 16-ல் ஒரு பாகத்திற்குச் சமமாவதில்லை.*

**ऊर्ध्वोच्छिष्टादिप्रायश्चित्तम् ।**

मरणकालोपहतेः प्रायश्चित्तमाह पराशरः – ऊर्ध्वोच्छिष्टमधोच्छिष्टमन्तरिक्षमृतौ तथा । कृच्छ्रत्रयं प्रकुर्वीत साशौचमरणे तथा इति । मरणकाले वान्तादिकमूर्ध्वोच्छिष्टम् । मूत्रादिकमधस्तनोच्छिष्टम् । तयोरन्यतरत् यदा सम्पद्यते तदा संस्कर्ता पुत्रादिः

धनादिना प्रत्याम्नायेन कृच्छ्रत्रयं कुर्यात् । मञ्चादौ मरणमन्तरिक्षमृतिः । रजस्वलासूतिकादिमरणमाशौच-मरणम् ।

### ஊர்த்வோச்சிஷ்டாதி ப்ராயஶ்சித்தம்

*மரணகாலத்திலுண்டாகும் அசுத்திக்கு ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறார். பராசரர்:- ஊர்த்வோச்சிஷ்டம் (வாந்தி முதலியது), அதோச்சிஷ்டம்(மல மூத்ராதி), அந்தரிக்ஷமரணம்(கட்டில் முதலியதில் இறப்பது), ஸாஶௌச மரணம் (தீண்டாமையுடன் மரித்தல்). இவைகளில் மும்மூன்று க்ருச்ரங்களை அனுஷ்டிக்கவேண்டும். மரணகாலத்தில் ஸம்பவிக்கும் வாந்தி முதலியது ஊர்த்வோச்சிஷ்டமாம். மூத்ரம் முதலியது அதோச்சிஷ்டமாம். இவைகளுள் ஏதாவதொன்று ஏற்பட்டால், புத்ரன் முதலிய ஸம்ஸ்கர்த்தா தனதானம் முதலிய ப்ரதிநிதியால் மூன்று க்ருச்ரங்களைச் செய்யவேண்டும். கட்டில் முதலியதில் இறப்பது அந்தரிக்ஷமரணம். ரஜஸ்வலையாயாவது, ஸூதிகையாயாவது மரித்தல் ஸாஶௌச மரணம்.*

गौतमः – सूत्या नारी मृता पश्चाद्दशाहाभ्यन्तरे यदि । न तस्या यमलोकाद्वै निष्कृतिर्बहुवत्सरे ॥ तद्दोषपरिहारार्थं चत्वार ऋत्विजः पृथक् । एक एव द्विजो वाऽपि वारुणान् कलशान् क्षिपेत् । पूर्वादिदिक्षु सर्वत्र जलेनापूर्य यत्नतः । वरुणं पूजयेत्तत्र ऋत्विगेकश्चतुर्ष्वपि ॥ कलशान् पाणिभिः स्पृष्ट्वा मन्त्रानेतानु-दीरयेत् । नमकं चमकं चैव पुरुषसूक्तं च वैष्णवम् । पवमानानुवाकं च हिरण्यशृङ्गमिति क्रमात् । शान्तिभिर्दशभिश्चैव कलशानभि-मन्त्रयेत् । अन्येन वाससाऽऽच्छाद्य सूतिकां कृतशौचिकाम् । मार्जयेदृत्विजस्तोयैः कलशस्थैः पवित्रजैः । आपोहिष्ठादिभि-र्मन्त्रैर्देवस्यत्वेति मार्जयेत् । ततः शवं बहिर्देशे स्थापयित्वाऽथ देशिकः । शातकुम्भोदकैः प्रोक्ष्य नूतनेनैव वाससा । आच्छाद्य कुणपं पश्चाद्दहे दौपासनाग्निना इति ।

கௌதமர்: ப்ரஸவித்த ஸ்த்ரீ பத்து நாட்களுக்குள் இறந்தால் அவளுக்கு வெகு நாட்கள் வரையில் யமலோகத்திலிருந்து மீட்சி இல்லை. அந்தத் தோஷம் பரிஹரிக்கப்படுவதற்காக, நான்கு ருத்விக்குகள், அல்லது ஒரு ப்ராம்ஹணன், நான்கு கலசங்களைக் கிழக்கு முதலாக நான்கு திக்குகளிலும் வைத்து, அவைகளை ஜலத்தால் நிரப்பி, அவைகளில் வருணனைப் பூஜிக்கவேண்டும். ஒருவனே. அக்கலசங்களைக் கைகளால் ஸ்பர்சித்துக்கொண்டு இனிவரும் மந்த்ரங்களைப் படிக்க வேண்டும். நமகம், சமகம், புருஷஸூக்தம், விஷ்ணு ஸூக்தம், பவமான: எனுமனுவாகம், ஹிரண்யச்ருங்க மென்பது, தசசாந்திகள், இவைகளால் கலசங்களை அபிமந்த்ரிக்கவும். ஸூதிகையைச் சுத்தையாக்கி வேறு வஸ்த்ரத்தால் மறைத்த பிறகு, ருத்விக்குகள் பவித்ரத்துடன் கலசஜலங்களால், ஆபோஹிஷ்ட, தேவஸ்யத்வா முதலிய மந்த்ரங்களால் ப்ரோக்ஷிக்கவும். பிறகு சவத்தை வெளியிற் சேர்த்து, ஆசார்யன் ஸ்வர்ணத்துடன் கூடிய ஜலங்களால் ப்ரோக்ஷித்து, புது வஸ்த்ரத்தால் போர்த்திப் பிறகு ஔபாஸநாக்னியால் தஹிக்கவேண்டும்.

रजस्वलामरणेऽप्येवमिति हेमाद्रौ – यदा पुष्पवती नारी दैवाद्यदि विपद्यते । तस्यास्तु निष्कृतिर्नास्ति रक्तकुण्डाद्भयङ्करात् इति । तथा च त्रिकाण्डी – प्रत्यक्षे चाप्रतिहतौ संस्कारेण च शोधनम् । कुर्यात्तत्राधरोच्छिष्टे प्राजापत्यत्रयं चरेत् । ऊर्ध्वोच्छिष्टेऽपि च तथा प्राजापत्यत्रयं चरेत् इति । चन्द्रिकायाम् – अस्पृश्यस्पृष्टमरणे कृच्छ्रान् षड्गौतमोऽब्रवीत् । पराशरस्तु त्रीन् प्राह भृगुः पञ्च षडङ्गिराः इति । अस्पृश्याः - चण्डालसूतिकोदक्यादयः । तैः स्पृष्टस्य अस्नातस्य मरणे शक्त्यनुसारेण षट्कृच्छ्रादिकमित्यर्थः ।

ரஜஸ்வலையின் மரணத்திலும் இவ்விதமென்று, ஹேமாத்ரியில்:- 'ரஜஸ்வலையான ஸ்த்ரீ தைவவசத்தால்

இறந்தால் அவனுக்குப் பயங்கரமான ரக்தகுண்டமெனும் நரகத்தினின்றும் மீட்சி இல்லை. அவ்விமே த்ரிகாண்டீ-ப்ரத்யக்ஷ மரணத்திலும் அசுத்தியினுல் ப்ராயஶ்சித்தத்தால் சுத்தி செய்யவும். அதில் அதோச்சிஷ்டத்தில் மூன்று க்ருச்ரங்களை அனுஷ்டிக்கவும். ஊர்த்வோச்சிஷ்டத்திலும் அவ்விதமே மூன்று ப்ராஜாபத்யங்களை அனுஷ்டிக்கவும். சந்த்ரிகையில் அஸ்ப்ருச்யர்களால் தொடப்பட்டிருந்தவனின் மரணத்தில் ஆறுக்ருச்ரங்களை அனுஷ்டிக்கவேண்டுமென்று கௌதமர் சொன்னார். பராசரரோ மூன்று என்றார். ப்ருகு ஐந்து என்றார். அங்கிரஸ் ஆறு என்றார். அஸ்ப்ருச்யர்கள் -சண்டாளன், ஸூதிகை, ரஜஸ்வலை முதலியவர்கள். அவர்களால் தொடப்பட்டவன் ஸ்நானம் செய்யாமல் மரித்தால் சக்திக்கு இயன்றபடி ஆறு முதலிய க்ருச்ரங்களை அனுஷ்டிக்க வேண்டுமென்று பொருள்.

खट्वादिमरणे प्रायश्चित्तमाह विष्णुः – मण्डपे गोपुरे खट्वाप्रासादहर्म्यभित्तिषु । अकामतो मृतानां तु दापयेदैन्दवद्वयम् । प्राजापत्यं चरेत् कृच्छ्रं पराकेण विशुध्यति इति । खट्वादावकामतो मरणे चान्द्रायणद्वयम् । कामतस्तु प्राजापत्यं पराकं च कुर्यात् इत्यर्थः । तत्प्रतिनिधिः चतुर्विंशतिमते दर्शितः – प्राजापत्ये तु गामेकां दद्यात् सान्तपने द्वयम् । पराकतप्तकृच्छ्रातिकृच्छ्रे तिस्रस्तु गाः स्मृताः । अष्टौ चान्द्रायणे देयास्तिस्रो वा शक्त्यपेक्षया इति । स्मृत्यन्तरे – चान्द्रायणं त्रयः कृच्छ्राः गायत्र्या अयुतत्रयम् । आप्लावनं महानद्यां तुल्यमेतच्चतुष्टयम् इति ।

கட்டில் முதலியதில் மரித்தால் ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிறார், விஷ்ணு:- மண்டபம், கோபுரம், கட்டில், ப்ராஸாதம் (தேவாலயம்), ஹர்ம்யம்(உப்பரிகை), சுவர் இவைகளில் இச்சை யில்லாமல் மரித்தவர்களுக்கு இரண்டு சாந்த்ராயணங்களைக் கொடுக்கவேண்டும். ஒரு ப்ராஜாபத்யமும் ஒரு பராகமும் கொடுத்தால்

சுத்தனுகிருன். கட்டில் முதலியதில் அநிச்சையாசய் மரித்தால் இரண்டு சாந்த்ராயணமும், இச்சையால் மரித்தால், ப்ராஜாபத்யமும், பராகமும் செய்யப்பட வேண்டும் எனறு பொருள்.அவைகளுக்கு ப்ரதிநிதி (பதில்)சதுர்விம்சதிமதத்தில் சொல்லப் பட்டுள்ளது:- ப்ராஜாபத்யத்தில் ஒரு பசுவையும், ஸாந்தபனத்தில் இரண்டு பசுக்களையும், பராகம், தப்தக்ருச்ரம், அதிக்ருச்ரம் இவைகளில் மூன்று பசுக்களையும், சாந்திராயணத்தில் எட்டு பசுக்கஊயும் அல்லது மூன்று பசுக்களையும் சக்த்யனுஸாரமாய்க் கொடுக்கவும். மற்ருெரு ஸ்ம்ருதியில்:- சாந்த்ராயணம், மூன்று ப்ராஜாபத்ய க்ருச்ரங்கள்,முப்பதினுயிரம் காயத்ரீ ஜபம், மஹாநதீஸ்நானம், இந்த நான்கும் ஸமமாகியதாம்.

चतुर्विंशतिमते – यस्य धान्यसमृद्धिः सः कृच्छ्रादिव्रतानि ब्राह्मण भोजनेन संपादयेदिति। ब्राह्मणभोजन संख्या चोक्ता कृच्छ्रे पञ्चातिकृच्छ्रे त्रिगुणमहरह इति । शुद्धिनिर्णये - ऊर्ध्वोच्छिष्टा-धोच्छिष्ट खट्वादिमरणाशुचिस्पर्श नियमलोपाख्यानि पञ्च निमित्तानि । एकैकनिमित्तस्य त्रीणि कृच्छ्राण्येकैकं वा कृत्वा संस्कुर्यात् इति ।

சதுர்விம்சதிமதத்தில்:- எவனுக்குத் தானியம் நிறைந்துள்ளதோ அவன் க்ருச்ரம் முதலிய விரதங்களை ப்ராம்ஹணபோஜனத்தாலேயே செய்யவேண்டும். ப்ராம்ஹணபோஜனத்தில் கணக்கு சொல்லப்பட்டுள்ளது. க்ருச்ரே பஞ்சாதி க்ருச்ரே'என சுத்திநிர்ணயத்தில் ஊர்த்வோச்சிஷ்டம். அதோச்சிஷ்டம் கட்டிலில் மரணம், அசுசிஸ்பர்சம். நியமலோபம், என்ற ஐந்தும் பிராயச்சித்த நிமித்தங்கள். ஒவ்வொரு நிமித்தத்திற்கு மூன்று க்ருச்ரங்களை -அல்லது ஒவ்வொரு க்ருச்ரத்தைச் செய்து பிறகு ஸம்ஸகாரத்தைச் செய்யவும்.

## पर्युषितप्रायश्चित्तम्

पर्युषितप्रायश्चित्तमाह गार्ग्यः – पञ्चविंशघटैः पूर्वं दिवा प्रेतस्य संस्कृतिः । दिवा वा यदि वा रात्रौ शवस्तिष्ठति कर्हिचित् । तत्पर्युषितमित्याहुर्दहने तस्य का गतिः । ब्राह्मणेभ्यो विधिं लब्ध्वा कृच्छ्रत्रयमथाचरेत् । पञ्चगव्येन संस्नाप्य पावमान्याऽभिमन्त्र्य च । जलेन स्नापयित्वा च विधिवद्दहनं चरेत् । अन्यथा दहने तस्य सर्वं तन्निष्फलं भवेत् इति ।

### பர்யுஷிதப்ராயச்சித்தம்

*கார்க்யர் - இறந்தது முதல் 25 நாழிகைக்குள் பகலில் சவத்திற்கு ஸம்ஸ்காரத்தைச் செய்யவும். பகலிலாவது இரவிலாவது சவம் ஸம்ஸ்காரமில்லா திருந்தால் அதைப் பர்யுஷிதம் என்பர். அதைத் தஹிப்பதில் உள்ள விதி - ப்ராம் ஹணர்களிடமிருந்து விதியை அறிந்து, மூன்று க்ருச்ரங்களைக் கொடுத்து, பஞ்சகவ்யத்தால் ஸ்நானம் செய்வித்து, பாவமாநுனுவாகத்தால் அபிமந்த்ரித்து, ஜலத்தால் ஸ்நானம் செய்வித்து, விதிப்படி தஹனம் செய்யவும். இவ்விதமின்றி தஹனம் செய்தால் அவனுக்குச் செய்த ஸகலமும் நிஷ்பலமாகும்.*

कात्यायनस्तु – प्रत्यक्षशवसंस्कारे दिनं नैव विशोधयेत् । निर्दिष्टकालवीक्षायां शवः पर्युषितो भवेत् । दग्धः पर्युषितो यैस्तु पुत्रमित्रैश्च बन्धुभिः । महाभयप्रदस्तेषां तिथ्यादीन्नैव शोधयेत् । पञ्चगव्येन संस्नाप्य प्राजापत्यं समाचरेत् । पूतिगन्धे तथा क्लिन्ने स्नाप्य गोमयवारिणा । ब्राह्मणैरभ्यनुज्ञातः ततः कृच्छ्रं समाचरेत् । कृमिरुत्पद्यते यस्य श्वकाकैश्चापि दूषिते ॥ कृत्वा तु पूर्ववत् स्नानं सर्पिषा मधुना ततः । पुण्याद्भिरभिषिच्याथ सेचयेद्गन्धवारिणा । गां दत्वा द्विजमुख्याय तप्तकृच्छ्रं समाचरेदिति ।

**காத்யாயனரோவெனில்:-** ப்ரத்யக்ஷமாய் சவத்திற்கு ஸம்ஸ்காரம் செய்தால், தினத்தைச் சோதிக்கவேண்டாம். விஹித காலத்தை ப்ரதீக்ஷித்தால் சவம் பர்யுஷிதமாகும். அவ்விதமான சவத்தைத் தஹித்தவரான புத்ரர், மித்ரர், பந்துக்கள் எல்லோருக்கும் மஹாபயத்தைக் கொடுப்பதாகும். ஆகையால் திதி முதலியவைகளைச் சோதிக்கக்கூடாது. பஞ்சகவ்யத்தால் ஸ்நானம் செய்வித்து, ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை அனுஷ்டிக்கவும். துர்க்கந்த முண்டானாலும், அழுகிப் போனாலும் கோமய ஜலத்தால் ஸ்நானம் செய்வித்து, ப்ராம்ஹணானுஜ்ஞையைப்பெற்று, ப்ராஜாபத்ய க்ருச்ரம் செய்யவும். எந்தச் சவத்தில் புழு உண்டாகியதோ, எது நாய் காக்கை முதலியதால் தொடப்பட்டதோ அதற்கு முன்போல் ஸ்நானம் செய்வித்து, நெய், தேன், புண்ய ஜலங்கள் இவைகளால் நனைத்து, கந்த ஜலத்தாலும் நனைத்து, சிறந்த ப்ராம்ஹணனுக்குக் கோதானம் செய்து, தப்த க்ருச்ரமும் செய்ய வேண்டும். தப்த க்ருச்ரத்திற்குப்பதில் மூன்று மாடுகள். ''பராகம், தப்தம், அதி க்ருச்ரம் இவைகளில் மூன்று' பசுக்கள் ப்ரதிநிதியாய் விதிக்கப்பட்டுள்ளன'' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

वसिष्ठः – नासाग्रवर्तिना दोषैर्वायुना मृतवत् स्थितः । अज्ञानाद्यदि वा ज्ञानात् पितृमेधमुपक्रमेत् । पथि कर्मावसानाद्वा श्मशाने यदि जीवति । घृतकुम्भे निमज्ज्यैनं जातकर्मादि कारयेत् । यामं यामद्वयं तस्य मृतिं निश्चित्य नान्यथा । ब्रह्महत्यामवाप्नोति कर्ता भवति निन्दितः इति । स्मृत्यन्तरे – ब्राह्मान्मुहूर्ताद्यः पूर्वं मृतः पर्युषितो भवेत् । वैखानसोदितं कार्यं प्रायश्चित्तं विशुद्धये । याम्यपैतृकमन्त्राभ्यां वैश्वदेवेन वै तिलान् । व्यस्ताभिश्च समस्ताभिर्हुत्वा व्याहृतिभिर्दहेत् इति । वैखानसोदिता श्रुतिः – यमो दाधार पृथिवीम्, उशन्तस्त्वा निधीमहि, विश्वेदेवस्य नेतुर्मर्तो वृणीत इति ।

வஸிஷ்டர் தோஷங்களால் வாயு மூக்கின் நுனியிலிருந்தால் சரீரம் இறந்ததுபோல் இருக்கும். இதை அறிந்தோ அறியாமலோ ப்ரேதகார்யத்தை ஆரம்பித்தால், வீட்டில் செய்யும் கர்மங்கள் முடிந்ததும் சவம் ஜீவித்தால், ஆயுஷ்மதீ என்ற ருக்கை ஜபிக்கவும். வழியில் செய்யும் கர்மங்கள் செய்த பிறகோ, ச்மசானத்திலோ பிழைத்தால், அவனை நெய்க்குடத்தில் முழுக்கி, ஜாதகர்மம் முதலியவைகளைச் செய்விக்கவும். ஒரு யாமம், அல்லது இரண்டு யாமம் வரையில் தாமதித்து அவனது மரணத்தை நிச்சயித்த பிறகே செய்யவேண்டும். வேறு விதமாய்ச் செய்தால், கர்த்தா ப்ரம்ஹஹத்தையை அடைவான். நிந்தைக்குப் பாத்ரனுவான். மற்ெருரு ஸ்ம்ருதியில் ப்ராம்ஹ முஹூர்த்தத்திற்கு முன் இறந்த சவம் பர்யுஷிதமாகும். அதனது சுத்திக்காக வைகாநஸத்தில் சொல்லிய ப்ராயஶ்சித்தத்தைச் செய்யவேண்டும். யாம்ய மந்த்ரம், பைத்ருக மந்த்ரம், வைச்வதேவ மந்த்ரம், பிரிக்கப்பட்ட வ்யாஹ்ருதிகள், சேர்க்கப்பட்ட வ்யாஹ்ருதிகள் இவைகளால் திலங்களை ஹோமம் செய்து, பிறகு தஹிக்கவும், வைகாநஸத்தில் சொல்லிய மந்த்ரங்கள், 'யமோதாதாரப்ருதிவீம், உசந்தஸ்த்வா நிதீமஹி, விச்வேதேவஸ்யநேது:' என்பவைகள்.

व्यासस्तु – रवेरस्तमयात् प्राक्तु योग्यकाले तु दुर्लभे । श्वः प्रातरिष्टं दाहादि न हविस्तेन दुष्यति इति । अत्र व्यवस्थामाह बोधायनः – रात्रौ यदि मृतः कश्चित् प्रमादात् कालपर्ययात् । नवनाडीष्वधस्ताच्चेद्दह्नौ तु जुहुयाच्छवम् ।। ऊर्ध्वं श्वः प्रातरेव स्यान्न रात्रौ तु कदाचन इति । शवस्योपहतौ प्रायश्चित्तमुक्तं वैखानससूत्रे - शवेऽन्याशौचयुक्ते च कुक्कुटसूतिकारजस्वलाद्य-स्पृश्यस्पर्शने च मृतं पञ्चगव्यैः कुशतोयैश्च स्नापयित्वा प्रोक्षणैः प्रोक्ष्य विधिवद्दहनं करोति इति । स्मृत्यन्तरे तु – श्वसूकरसृगालाद्यैर्ग्राम्यसूकरकुक्कुटैः । शवास्थिभस्मदेहानां स्पर्शनं चेत् प्रमादतः ।। गव्यैः प्रक्षाल्य कृच्छ्राणां त्रितयं च समाचरेत् इति ।

36. **வ்யாஸர்:-** ஸூர்யாஸ்தமயத்திற்கு முன் யோக்யமான காலம் துர்லபமானால், மறுநாள் காலையில் தஹநம் செய்யலாம். அதனால் சவம் பர்யுஷிதமாகாது. இவ்விஷயத்தில் வ்யவஸ்தையைச் சொல்லுகிறார், **போதாயனர்:-** ராத்ரியில் ஒருவன் இறந்தால், கவனமின்மையால் காலமதிக்ரமித்தால், ஒன்பது நாழிகைக்குள் தஹனம் செய்யவேண்டும். அதற்கு மேற்பட்டால் மறுநாள் காலையிலேயே தஹிக்கவும். ஒரு காலும் ராத்ரியில் கூடாது. சவத்திற்கு அசுத்தி ஏற்படுமாகில், ப்ராயஶ்சித்தம் சொல்லப்பட்டுள்ளது, **வைகாநஸ ஸூத்ரத்தில்:-** சவம் வேறு' ஆசௌசத்துடன் ஸம்பந்தித்திருந்தாலும், கோழி, ப்ரஸவித்தவள், ரஜஸ்வலை முதலிய அஸ்ப்ருச்யரால் தொடப்பட்டிருந்தாலும், சவத்தை பஞ்சகவ்யங்களாலும் குசஜலங்களாலும் ஸ்நானம் செய்வித்து, ப்ரோக்ஷண மந்த்ரங்களால் ப்ரோக்ஷித்து, விதிப்படி தஹனம் செய்யவும். **மற்றொரு ஸ்மிருதியிலோவெனில்:-** நாய், பன்றி, நரி முதலியவைகளாலாவது, ஊர்ப்பன்றி, கோழி முதலியவைகளாலாவது, சவம், அஸ்தி, பஸ்மம் இவைகளுக்கு, கவனமின்மையால் ஸ்பர்சம் ஏற்பட்டால், பஞ்ச கவ்யங்களால் அலம்பி, மூன்று க்ருச்ரங்களையும் அனுஷ்டிக்கவேண்டும்.

## निशादिमरणप्रायश्चित्तम्

निशादिमरणे प्रायश्चित्तमुक्तं बोधायनीये – निशि कृष्णे च पक्षे च मरणे दक्षिणायने । ता सूर्या इति वै षड्भिर्हुत्वा स्यात् संस्क्रिया ततः ॥ जले मृतस्य जुहुयादिमं मे वरुणेत्यृचा । सर्पेण चेन्नमो अस्तु त्रिभिर्हुत्वाऽथ संस्क्रिया इति । स्मृत्यन्तरे – निशायां कृष्णपक्षे च दक्षिणे चायने मृतः । ता सूर्येत्यादिषण्मन्त्रैः जुहुयाच्च पृथक् पृथक् ॥ चतुर्गृहीतेनाज्येन दाहकस्तु समाहितः ॥ पितृमेधविधानेन दह्यते यः सुतादिभिः । ता सूर्येत्यादि तस्यैव प्रायश्चित्तमुदीरितम् । एकर्चविधिना दाहे प्रायश्चित्तं तु नेष्यते इति ।

## ராத்ரி மரணாதி ப்ராயஶ்சித்தம்

*ராத்ரி முதலிய காலத்தில் மரித்த விஷயத்தில் ப்ராயஶ்சித்தம் சொல்லப்பட்டுள்ளது* **போதாயநீயத்தில்:-** *ராத்ரியிலும், க்ருஷ்ண பக்ஷத்திலும், தக்ஷிணாயனத்திலும் மரித்தால், 'தாஸூர்யா' என்பது முதலாகிய ஆறு ருக்குகளால் ஹோமம் செய்து, பிறகு ஸம்ஸ்காரம் செய்யவும். ஜலத்தில் மரித்தவனுக்கு 'இமம்மேவருண' என்ற ருக்கினுல் ஹோமம் செய்யவும். ஸர்ப்பத்தினுல் மரித்தால், 'நமோ அஸ்து' முதலிய மூன்று ருக்குகளால் ஹோமம் செய்து பிறகு ஸம்ஸ்காரம் செய்யப்பட வேண்டும்.* **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** *ராத்ரியிலாவது, க்ருஷ்ண பக்ஷத்திலாவது, தக்ஷிணாயனத்திலாவது இறந்தால், 'தாஸூர்யா' என்பது முதலிய ஆறு மந்த்ரங்களால் தனித்தனியாக, நான்கு தடவை க்ரஹிக்கப்பட்ட ஆஜ்யத்தினுல் தஹனம் செய்பவன் கவனமுடையவனுய் ஹோமம் செய்யவேண்டும். எவன், புத்ரன் முதலியவர்களால் பித்ரு மேத விதானத்தால் தஹிக்கப்படுகின்றுனே அவன் விஷயத்தில்தான் ப்ராயஶ்சித்தம் சொல்லப்பட்டுள்ளது. ஏகர்ச்சவிதியால் செய்யப்படும் தாஹ விஷயத்தில் ப்ராயஶ் சித்தம் விதிக்கப்படவில்லை.*

सर्पहतस्य विज्ञानेश्वरीये विशेषः – 'सुवर्णतारनिष्पन्नं नागं कृत्वा तथैव गाम् । व्यासाय दत्वा विधिवत् पितुरानृण्यमाप्नुयात् इति । व्यासाय - वेदविदे इति यावत् । अशन्यादिदुर्मरणे प्रायश्चित्तमाह आपस्तम्बः – यद्याहिताग्निरशनिहतो म्रियेत तस्य प्रायश्चित्तं मूर्धानं दिवो अरतिं पृथिव्या इति चतुर्गृहीतेनाज्येन जुहुयादेतदेवास्य प्रायश्चित्तं भवतीति विज्ञायते । यद्याहिताग्निर्विषहतो म्रियेत तस्य प्रायश्चित्तं नमो अस्तु सर्पेभ्यः इति तिसृभिश्चतुर्गृहीताज्याहुतीर्जुहुयात् । यद्याहिताग्निरप्सु म्रियेत तस्य प्रायश्चित्तं इमं मे वरुण, तत्त्वायामि इति द्वे चतुर्गृहीते जुहुयात् ।

यद्याहिताग्निर्दंष्ट्रिभ्यो म्रियेत तस्य प्रायश्चित्तं दंष्ट्राभ्यां मलिम्लून् इति द्वे चतुर्गृहीते जुहुया देतदेवास्य प्रायश्चित्तं भवतीति विज्ञायते । यद्याहिताग्निः पशुभ्यो म्रियेत तस्य प्रायश्चित्तं आगावो अग्मन् इति द्वे चतुर्गृहीते जुहुयात् इति । अत्र निमित्तस्य तुल्यत्वादेकाग्नेरपि तदुक्तं प्रायश्चित्तं भवत्येव ।

ஸர்ப்பத்தால் தீண்டப்பட்டவனுக்கு விசேஷம் சொல்லப்பட்டுள்ளது **விக்ஞாநேச்வரீயத்தில்:-** ஸ்வர்ணம், அல்லது வெள்ளியால் ஸர்ப்பத்தையும் பசுவையும் செய்து, வேதமறிந்த ப்ராம்ஹணனுக்குக் கொடுத்தால், பிதாவுக்குக் கடனற்றவனுவான். இடி முதலியவைகளால் ஏற்படும் துர்மரணத்தில் ப்ராயஶ்சித்தத்தைச் சொல்லுகிருர் **ஆபஸ்தம்பர்** - ஆஹிதாக்னி, இடியினுல் அடிக்கப்பட்டு மரித்தால் அவனுக்கு ப்ராயஶ்சித்தம்-'மூர்த்தாநம்திவ: என்ற மந்த்ரத்தால், நாலுதடவை க்ரஹிக்கப்பட்ட ஆஜ்யத்தினுல் ஹோமம் செய்யவும். இதுவே இவனுக்கு ப்ராயஶ்சித்தம் எனத்தெரிகிறது. ஆஹிதாக்னி, விஷத்தால் கொல்லப்பட்டு மரித்தால் 'நமோ அஸ்து' என்பது முதலாகிய மூன்று ருக்குகளால், நான்கு தடவை க்ரஹிக்கப்பட்ட ஆஜ்யத்தால் ஆஹுதிகளைச் செய்யவும். ஆஹிதாக்னி, ஜலத்தில் மரித்தால் 'இமம்மேவருண, தத்வாயாமி' என்ற இரண்டு ருக்குகளால், நான்கு தடவை க்ரஹித்த ஆஜ்யத்தால் ஹோமம் செய்யவும். ஆஹிதாக்னி, பல்லுள்ள புலி முதலியவைகளால் இறந்தால் 'தம்ஷ்ட்ராப்யாம்' முதலான இரண்டு ருக்குகளால் நான்கு தடவை க்ரஹிக்கப்பட்ட ஆஜ்யத்தால் இரண்டு ஆஹுதிகளைச் செய்யவும். இதுவே இவனுக்கு ப்ராயஶ்சித்தமெனத் தெரிகிறது. ஆஹிதாக்னி பசுக்களினுல் மரித்தால் 'ஆகாவோ அக்மன்' என்பது முதலான இரண்டு ஆஹுதிகளைச் செய்யவும். இங்கு நிமித்தம் ஸமானமாகியதால், ஆஹிதாக்னிக்குச் சொல்லிய ப்ராயஶ்சித்தமே அநாஹிதாக்னிக்கும் விஹிதமாகிறது.

## कर्तृक्रमः

दाहादिप्रेतकार्यकर्तारमाह सुमन्तुः – मातुः पितुश्च कुर्वीत मृतयोरौरसः सुतः । पैतृमेधिकसंस्कारं मन्त्रपूर्वकमादृतः इति । पुत्रस्य प्रेतकार्यकरणाशक्तौ तत्प्रकारमाह जमदग्निः – पितुः पुत्रेण कर्तव्याः पिण्डदानोदकक्रियाः । अशक्तोऽप्यग्निदः पुत्रः शेषमन्यः समापयेत् सति । औरसपुत्राणां समवाये ज्येष्ठ एव पितुरौर्ध्वदैहिकं कुर्यात्, सर्वैरनुमतिं कृत्वा ज्येष्ठेनैव तु यत् कृतम् । द्रव्येण चाविभक्तेन सर्वैरेव कृतं भवेत् इति वचनात् ॥

### கர்த்ருக்ரமம்

*தாஹம் முதலிய ப்ரேதகார்யங்களைச் செய்வதற்குரியவனைச் சொல்லுகிறுர் :-* **ஸுமந்து:-** *இறந்த மாதாவுக்கும், பிதாவுக்கும், ஔரஸ புத்ரன் ஆதரவுள்ளவனுய்ப் பித்ருமேத ஸம்ஸ்காரத்தை மந்த்ரபூர்வமாகச் செய்யவேண்டும். புத்ரனுக்கு, ப்ரேத கார்யங்களைச் செய்ய சக்தியில்லாவிடில் செய்ய வேண்டிய ப்ரகாரத்தைச் சொல்லுகிறுர்,* **ஜமதக்னி :-** *புத்ரன், பிதாவுக்கு பிண்டதானம், உதகதானம் இவைகளைச் செய்யவேண்டும். அவன் அசக்தனுகில், புத்ரன் அக்னிப்ரதானத்தைச் செய்யவேண்டும். மற்றக் கார்யத்தை வேறொருவன் முடிக்கவேண்டும். ஔரஸபுத்ரர்கள் பலரிருந்தால், ஜ்யேஷ்ட புத்ரனே பிதாவுக்கு அபரக்ரியையைச் செய்யவேண்டும். ''எல்லா ப்ராதாக்களும் அனுமதிக்க, பொதுவான தனத்தைக்கொண்டு ஜ்யேஷ்டனுலேயே செய்யப்பட்ட அபரக்ரியை, எல்லோராலுமே செய்யப்பட்டதாகிறது'' என்று வசனமுள்ளது.*

स्मृत्यन्तरेऽपि – नवश्राद्धं सपिण्डत्वं श्राद्धान्यपि च षोडश । एकेनैव तु कार्याणि संविभक्तधनेष्वपि इति । चन्द्रिकायाम् – प्रेतस्य पुत्रो दाहादि दद्यादेवौरसः सुतः । बहुत्वेऽपि गुणी दद्यात्

समे तु ज्येष्ठ एव तु इति । ऋश्यशृङ्गस्तु – पुत्राणां मध्यमो वाऽपि कनिष्ठो ज्येष्ठ एव वा । पितुर्यस्तु प्रियतमः सर्वं तेनैव कारयेत् । पुत्राः सर्वे पितुः प्रेष्ठाः पत्नी भ्राता सखाऽपि वा । अग्निदानादिकर्माणि कुर्युः पुत्रादयः पितुः इति । जमदग्निः – ज्येष्ठपुत्रेण कर्तव्या दाहपिण्डोदकक्रियाः । यदि कर्तुमशक्तः स्यात् सर्वमन्येन कारयेत् इति ।

**மற்ெருரு ஸ்ம்ருதியிலும்:-** *ப்ராதாக்கள் பலர் இருந்தாலும், அவர்கள் விபக்தர்களாயிருந்தாலும், நவச்ராத்தம், ஸபிண்டீகரணம், ஷோடச ச்ராத்தங்கள் இவைகளை ஜ்யேஷ்டனே செய்யவேண்டும்.* **சந்த்ரிகையில்:-** *இறந்தவனுக்கு, ஔரஸபுத்ரனே தஹநம் முதலியதைச் செய்யவேண்டும். ஔரஸபுத்ரர்கள் அநேகர் இருந்தால் அவர்களுள் சிறந்த குணமுள்ளவன் செய்யலாம். எல்லோரும் ஸமமாயிருந்தால் ஜ்யேஷ்டனே செய்யவேண்டும்.* **ருச்யச்ருங்கரோவெனில்:-** *அநேகம் புத்ரர்களுள், மத்யமனோ, கனிஷ்டனோ, ஜ்யேஷ்டனோ, எவன் பிதாவுக்கு அதிக ப்ரியனோ, அவனாலேயே எல்லா க்ரியைகளையும் செய்விக்கவேண்டும். புத்ரர்கள் எல்லோருமே பிதாவுக்கு அதிக ப்ரியர்களாயிருந்தால் ஜ்யேஷ்டனாலேயே செய்யப்படவேண்டும். புத்ரனில்லாதவனுக்கு, பத்னீ, ப்ராதா, ஸகா, பெண் முதலியவர்கள் இவர்களுள் ஒருவர் செய்யவேண்டும்.* **ஜமதக்னி :-** *தஹனம், பிண்டதானம், உதகதானம் இந்த க்ரியைகளை ஜ்யேஷ்டபுத்ரன் செய்யவேண்டும். அவன் செய்வதற்கு அசக்தனாகில், அன்யனால் எல்லாவற்றையும் செய்விக்க வேண்டும்.*

सर्वज्येष्ठस्याशक्तावसन्निधाने वा अवस्थितेषु पुत्रेषु मध्ये जन्मज्येष्ठेनैव कारयेत्, जन्मज्येष्ठः पितुः कुर्यात् इति स्मरणात् । जन्मज्येष्ठ इत्यस्यार्थान्तरमप्याहुः – भिन्नमातृकाणां पुत्राणां समवाये यो जन्मतो ज्येष्ठः स एव पितुः कुर्यात्, न मातृतो ज्येष्ठः,

सर्वत्र जन्मज्येष्ठस्यैव ग्रहणात् इति । तथा च मनुः – सदृशस्त्रीषु जातानां पुत्राणामविशेषतः । न मातृतो ज्यैष्ठ्यमस्ति जन्मतो ज्यैष्ठ्यमुच्यते । जन्मज्यैष्ठ्येन चाह्वानं सुब्रह्मण्यास्वपि स्मृतम् इति ।

ஸர்வஜ்யேஷ்டன் அசக்தனுயிருந்தாலும், ஸமீபத்திலில்லாமலிருந்தாலும், ஸமீபத்திலுள்ள பல புத்ரர்களுள் எவன் பிறப்பால் பெரியவனே அவனுலேயே செய்விக்கவேண்டும். 'ஜன்ம ஜ்யேஷ்டனே பிதாவுக்குச் செய்யவேண்டும்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால். 'ஜன்மஜ்யேஷ்டன்' என்பதற்கு வேறு அர்த்தமும் சொல்லுகின்றனர்-''மாத்ருபேதமுள்ள பல புத்ரர்களிருந்தால், அவர்களுள் எவன் பிறப்பினுல் மூத்தவனே அவனே பிதாவுக்குச் செய்யவேண்டும். மாதாவினுல் ஜ்யேஷ்டன் செய்யக்கூடாது. எல்லாவற்றிலும் ஜன்மஜ்யேஷ்டனையே க்ரஹிப்பதால்'' என்று. அவ்விதமே, மனு:- ஸவர்ணைகளான பல ஸ்த்ரீகளிடம் உண்டாகிய புத்ரர்களுக்கு விசேஷமில்லாததால், மாதாவை அனுஸரித்து ஜ்யேஷ்டத்வமில்லை, பிறப்பினுலேயே ஜ்யேஷ்டத்வம். யாகங்களில் செய்யப்படும் ஸுப்ரம்ஹண்யாஹ்வானமும் ஜன்ம ஜ்யைஷ்ட்யத்தைக் கொண்டே செய்யப்படவேண்டும்.

यत्तु स्मृत्यन्तरे – ज्येष्ठो वाऽपि कनिष्ठो वा ज्येष्ठभार्यासुतो दहेत् । अग्निकार्यप्रधानत्वात् ज्येष्ठभार्यासुतोऽग्रजः इति । अन्यच्च – एककर्ता द्विभार्यश्चेदुभयोः पुत्रसम्भवे । पितुर्मरणकाले तु ज्येष्ठभार्यासुतोऽग्रजः इति । अत्र ज्येष्ठभार्यासुत इति श्रेष्ठभार्यासुत इत्यर्थः । सवर्णस्त्रीजात इति यावत् । अन्यथा सदृशस्त्रीषु जातानामिति मनुवचनविरोधापत्तेः । तथा च सवर्णभार्योत्पन्नस्यैव पितृऋणमोचन हेतुत्वमुक्तं बोधायनेन– प्रजामुत्पादयेद्युक्तः स्वे स्वे वर्णे जितेन्द्रियः । स्वाध्यायेन ऋषीन् पूज्य सोमेन च पुरन्दरम् । प्रजया च पितॄन् पूर्वाननृणो दिवि मोदते इति ॥

ஆனால் மற்றொரு ஸம்ருதியில் - ''வயதால் பெரியவனாயினும், சிறியவனாயினும், ஜ்யேஷ்ட பார்யையின் புத்ரனே தஹனம் செய்யவேண்டும். அக்னிகார்யம் ப்ரதானமானதால், ஜ்யேஷ்டபார்யையின் புத்ரனே ஜ்யேஷ்டனாகிறான்'' என்றும், மற்றும் ''ஒருவனுக்கு இரண்டு பார்யைகளிருந்து, இருவருக்கும் பிள்ளைகளிருந்தால், பிதாவின் மரண காலத்தில் ஜ்யேஷ்டபார்யையின் புத்ரனே தஹநம் செய்யவேண்டும்'' என்றும் வசனம் காணப்படுகிறதே எனில், இங்குள்ள ஜ்யேஷ்ட பார்யாஸுதன் என்பதற்கு ச்ரேஷ்ட பார்யையின் புத்ரன் என்று பொருள். அதாவது ஸவர்ண ஸ்த்ரீயினிடமுண்டானவனென்பதேயாம். இவ்விதம் சொல்லாவிடில் 'ஸத்ருச ஸ்த்ரீஷு ஜாதாநாம்' என்று முன்சொல்லிய மனு வசனத்திற்கு விரோதம் நேரிடும். அவ்விதமே ஸவர்ண பார்யையினிடம் பிறந்த புத்ரனுக்கே, பித்ரு ருணத்தினின்றும் விடுவிப்பதற்குக் காரணத்வம் சொல்லப்பட்டுள்ளது போதாயனரால் :-'க்ருஹஸ்தன், நியதனாய், ஜிதேந்த்ரியனாய், தன் தன் ஸவர்ண ஸ்த்ரீயினிடத்தில் புத்ரனை உத்பத்தி செய்ய வேண்டும். வேதாத்யயனத்தால் ருஷிகளையும், யாகத்தால் இந்த்ரனையும், புத்ரனால் முன்னோர்களான பித்ருக்களையும் பூஜித்து ருண மற்றவனாய் ஸ்வர்க்கத்தில் ஸந்தோஷிக்கிறான்'' என்று.

४३. ज्येष्ठः पत्न्यन्तरपुत्रः पितुरेव कुर्यादौरसत्वात्, न सपत्नीमातुः भिन्नोदरोत्पन्नत्वात् ।। कनिष्ठोऽपि स्वमातुः स्वयमेव कुर्यात्, विदध्यादौरसः क्षेत्रो जनन्या और्ध्वदैहिकम् । तदभावे सपत्नीजः इति स्मरणात् ।

ஜ்யேஷ்டன் ஔரஸனாகியதால். பிதாவுக்கு மட்டில் செய்யலாம், பின்னோதரத்தில் உண்டாகியவனாதால் ஸபத்நீ மாதாவுக்குச் செய்யக் கூடாது. பின்னோதரத்தி லுண்டாகிய சிறியவனாகினும் தன் மாதாவுக்கு அவனே

செய்யவேண்டும் "ஔரஸன், அல்லது க்ஷேத்ரஜன் தன் மாதாவுக்கு அபரக்ரியையைச் செய்யவேண்டும். அவர்களில்லாவிடில் ஸபத்னீபுத்ரன் செய்யவேண்டும்" என்று ஸ்ம்ருதி உள்ளது.

**यमलयोर्ज्येष्ठकनिष्ठत्वनिर्णयः**

यमलविषये मनुः – यमयोश्चैकगर्भे तु जन्मतो ज्येष्ठता स्मृता इति । स्मृत्यन्तरेऽपि – यमयोर्जातयोर्ज्येष्ठो जन्मना प्रोच्यते बुधैः । गर्भस्य कस्यचिल्लोके चिराज्जननदर्शनात् इति । अन्यत्रापि – यमयोर्जननात् ज्यैष्ठ्यमाधानं चेष्यते बुधैः इति । एतत् समभागस्थगर्भविषयम् । पार्श्वयोः संस्थितौ गर्भौ तयोर्यः पूर्वजः स तु । ज्येष्ठ इत्युच्यते सद्भिर्जातकादिषु कर्मसु इति बादरायण-स्मरणात् ।

**யமளர்களுள்(இரட்டைப்பிள்ளைகளுள்)பெரியவன் யார் என்பதன் நிர்ணயம்:**

யமள விஷயத்தில், மனு ஒரே கர்ப்பத்தில் உண்டாகிய இரட்டைப்பிள்ளைகளுக்கு, பிறப்பினுல் ஜ்யேஷ்டத்வம் சொல்லப்பட்டுள்ளது. முதற்பிறந்தவன் ஜ்யேஷ்டனென்பதாம். மற்ருெரு ஸ்ம்ருதியில் இரட்டையாய்ப் பிறந்தவர்களுள் முதலில் பிறந்தவனே ஜ்யேஷ்டனென அறிந்தவர்கள் சொல்லுகின்றனர். உலகில் ஒரு கர்ப்பம் சில காலம் தாமதித்தும் பிறப்பதைக் காண்கிருேம். மற்ருேரிடத்திலும்:- இரட்டைப் பிள்ளைகளுள், பிறப்பினுல் ஜ்யேஷ்டத்வமும் ஆதானமும் அறிந்தவர்களால் விதிக்கப்படுகிறது. இவ்விதம் சொல்லியது, ஸமபாகத்திலுள்ள கர்ப்பங்களைப் பற்றியது. "இருபாகங்களிலும் இரண்டு கர்ப்பங்களிருந்தால், அவைகளுள் எது முதலில் பிறந்ததோ அதையே ஜாதகர்மம் முதலிய கர்மங்களில் ஜ்யேஷ்டனென ஸாதுக்கள் சொல்லுகின்றனர்" என்று பாதரராயணர் சொல்கிருர்.

**अत एवोपर्यधोभागस्थगर्भविषये स्मृत्यन्तरम् –**

यमलौ चैकगर्भे तु स्त्री वा पुरुष एव वा । कनिष्ठ आद्यजातः स्यात् पश्चात् जातोऽग्रजः स्मृतः इति । स्थलविशेषापरिज्ञाने तु शिष्टाचारात् कनिष्ठ आद्यजातः स्यात् इति वचनार्थो ग्राह्यः । तथा च भागवते – प्रजापतिर्नाम तयोरकार्षीद्यः प्राक् स्वदेहाद्यमयो रजायत । तं वै हिरण्यकशिपुं विदुः प्रजा यं तं हिरण्याक्षमसूत साऽग्रतः इति । श्रीधरीये व्याख्यातमिदम् – यदा गर्भाधानसमये योनिपुष्पं विशद्वीर्यं द्वेधा विभक्तं सत् आदिपश्चाद्भावेन प्रविशति, तदा यमौ भवतः । तयोश्च पितृतः प्रवेशक्रमविपर्ययेण मातृतः प्रसूतिः । यदा विशद्द्विधाभूतं वीर्यं पुष्पं परिक्षरत् । द्वौ तदा भवतो गर्भौ सूतिर्वेशविपर्ययात् इति पिण्डसिद्धिस्मरणात् । अतः स्वदेहात् पूर्वं यो जातः तस्य हिरण्यकशिपुरिति, दितेः प्रथमं प्रसूतस्य हिरण्याक्ष इति नाम कृतवान् इति ।

*ஆகையால்தான் மேலும் கீழுமாக உள்ள கர்ப்பங்கள் விஷயத்தில்,* **மற்றொரு ஸ்ம்ருதி:-** *"ஒரு கர்ப்பத்திலுள்ள இரட்டைக் குழந்தைகள் ஆணாகிலும் பெண்ணாகிலும் முதலில் பிறந்தது கனிஷ்டன், பிறகு பிறந்தது ஜ்யேஷ்டன்" என்கிறது. ஸ்தலவிசேஷம் தெரியாவிடில், சிஷ்டாசாரத்தால் 'முதலில் பிறந்தது சிறியது' என்ற வசனத்தின் அர்த்தத்தை க்ரஹிக்க வேண்டும். அவ்விதமே,* **பாகவத்தில்:-** *'ப்ராஜாபதிர்நாம +ஸாக்ரத:' என்று. ஸ்ரீ தரீயத்தில் இதற்கு வ்யாக்யானம் -'எப்பொழுது, கர்ப்பாதான ஸமயத்தில் கர்ப்பாசயத்தில் ப்ரவேசிக்கும் வீர்யம் இரண்டு பாகமாய்ப் பிரிந்து முன் பின்னாக ப்ரவேசிக்கின்றதோ அப்பொழுது இரண்டு கர்ப்பங்கள் உண்டாகின்றன. அவைகளுக்கு, பிதாவினிடமிருந்து ப்ரவேசித்த க்ரமத்திற்க மாறுதலாய் மாதாவினிட மிருந்து ப்ரஸவம். 'எப்பொழுது சுக்லம் இரண்டாகப் பிரிந்து*

கர்ப்பாசயத்தில் ப்ரவேசிக்கின்றதோ, அப்பொழுது இரண்டு கர்ப்பங்கள் உண்டாகின்றன. அவைகளுக்கு ப்ரவேச க்ரமத்திற்கு மாறுதலாய் ப்ரஸவம்' என்று பிண்ட ஸித்தியில் சொல்லியுள்ளது. ஆகையால், தன் தேஹத்திலிருந்து முதலில் எவன் உண்டானுனே அவனுக்கு ஹிரண்யகசிபு என்றும், திதியினிடமிரந்து எவன் முதலில் பிறந்தானே அவனுக்கு ஹிரண்யாக்ஷ னென்றும் பெயரைச் செய்தார் கச்யபர்" என்று.

पुत्रप्रतिग्रहानन्तरमौरसे जाते कनिष्ठोऽप्यौरस एव पितुर्दाहादि सर्वं कुर्यात् । औरसे तु समुत्पन्ने पुत्रस्य ग्रहणादनु । औरसस्तु पितुः कुर्यात्तदा दत्तो विसर्जयेत् । औरसे तु समुत्पन्ने दत्तो ज्येष्ठो न चेष्यते इति स्मरणात् । जनयितुः पुत्रपौत्रप्रपौत्राभावे दत्त एव कुर्यात्, पूर्वभ्रातुः पितुश्चार्तौ कृत्यं स्वत्वं च दत्तके । आब्दिकाद्यखिलं श्राद्धं कृत्वा रिक्थमवाप्नुयात् । दत्तस्य जनकापत्ये मृतेऽथ जनकेऽपि वा । संस्काराद्यखिलं कृत्वा दत्तो रिक्थमवाप्नुयात् इत्यादिस्मरणात् ।

புத்ரனை ஸ்வீகாரம் செய்துகொண்டபிறகு, ஔரஸன் பிறந்தால், கனிஷ்டனுனலும் ஔரஸனே பிதாவுக்குத் தஹநம் முதலிய எல்லாவற்றையும் செய்யவேண்டும். "புத்ர ஸ்வீகாரம் செய்து கொண்ட பிறகு, ஔரஸன் உண்டாகிவிட்டால், ஔரஸனே பிதாவுக்குச் செய்யவேண்டும் தத்தன் விட்டுவிட வேண்டும். ஔரஸன் உண்டாகி விட்டால் ஸ்வீக்ருதன் ஜ்யேஷ்டனெனப்படுவதில்லை" என்ற ஸ்ம்ருதி உள்ளது. ஜநகனுக்குப் புத்ரன், பௌத்ரன், ப்ரபௌத்ரன் ஒருவருமில்லாவிடில், தத்தனே செய்யவேண்டும். "ஜநகப்ராதாவும் ஜநகபிதாவும் மரித்தால், ஸம்ஸ்காரம் முதலிய ச்ராத்தம் எல்லாவற்றையும் செய்துவிட்டு, அவன் தனத்தை அடையவேண்டும்.தத்தனின் ஜநகப்ராதாவோ, ஜநகபிதாவோ இறந்தால், ஸம்ஸ்காரம் முதலிய

எல்லாவற்றையும் செய்து தத்தன் தனத்தை அடையவேண்டும்" என்பது முதலிய ஸ்ம்ருதி உள்ளது.

ऋश्यशृङ्गः – पुत्रेषु विद्यमानेषु नान्यं वै कारयेत् स्वधाम्। पितरो हिंसितास्तेन यस्त्वेवं कुरुते नरः ॥ स्वधां - प्रेतकर्म । गर्भवानपि पित्रादीन् संस्कुर्यात् । अन्यत्र न कुर्यात् । तथा च वृद्धमनुः – वपनं दहनं वाऽपि प्रेतस्यान्यस्य गर्भवान्। न कुर्यादुभयं तत्र कुर्यादेव पितुः सदा। ज्येष्ठस्य चानपत्यस्य मातुलस्यासुतस्य च इति। वृद्धवसिष्ठश्च – गर्भवता ज्येष्ठेन दाह्यः पिता माता चानपत्यो मातुलश्च इति । अत्र मातुलग्रहणं मातामहादेरप्युपलक्षणम् । अत एव मातामहादिसंस्कारे गर्भवतो वपनं विहितम् । मातामहपितृव्याणां मातुलाग्रजयोर्मृतौ । श्वशुराचार्ययोरेषां पत्नीनां च पितृष्वसुः ॥ मातृष्वसुर्भगिन्याश्च गर्भवानपि वापयेत्। सपिण्डो वाऽसपिण्डो वा संस्कर्ता वापयेद् द्विजः इति । गौतमोऽपि – ज्येष्ठस्य चानपत्यस्य मातुलस्यासुतस्य च। अग्निदानं तु यः कुर्यात् स केशान् वापयेत् बुधः इति । स एव – अपुत्रस्य पितृव्यस्य ज्येष्ठस्याप्यसुतस्य च। अन्तर्वान् दहनं कुर्यात् केशश्मश्रूणि वापयेत् इति।

**ருச்யச்ருங்கர்:-** புத்ரர்களிருக்கும்பொழுது அன்யனால் ப்ரேதகர்மத்தைச் செய்விக்கக்கூடாது. எவன் இவ்விதம் செய்கின்றானோ அவனால் பித்ருக்கள் ஹிம்ஸிக்கப்பட்டவராகின்றனர். கர்ப்பவானாயிருந்தாலும் பிதாமுதலியவர்களுக்கு ஸம்ஸ்காரம் செய்யவேண்டும். அன்யர்களுக்குச் செய்யக்கூடாது. அவ்விதமே, **வ்ருத்தமனு:-** கர்ப்பமுடையவன், வபனம் தஹனம் இவைகளை அன்யனுக்குச் செய்யக்கூடாது. பிதாவுக்கு எப்பொழுதும் செய்யவே வேண்டும். புத்ரனில்லாத ஜ்யேஷ்டப்ராதாவுக்கும், புத்ரனில்லாத அம்மானுக்கும்

செய்யவேண்டும். வ்ருத்தவஸிஷ்டரும்:- கர்ப்பவானுன ஜ்யேஷ்டன், பிதா, மாதா, அபுத்ரனுன மாதுலன் இவர்களை ஸம்ஸ்கரிக்கலாம். இங்கு மாதுலனைச் சொல்லியது மாதாமஹன் முதலியவர்க்கும் உபலக்ஷணம். ஆகையாலேயே மாதாமஹன் முதலியவர்களின் ஸம்ஸ்காரத்தில் கர்ப்பவானுக்கு வபனம் விதிக்கப்பட்டுள்ளது. "மாதாமஹன், பித்ருவ்யன், மாதுலன், தமையன், மாமனுர், ஆசார்யன், இவர்களின் பத்னிகள், அத்தை, மாத்ருபகினீ, பகினீ இவர்களின் ம்ருதியில் ஸம்ஸ்கர்த்தா கர்ப்பவானுயிருந்தாலும், ஸபிண்டனுனுலும், அஸபிண்டனுனுலும் வபனம் செய்துகொள்ளவேண்டும்." கௌதமரும் - புத்ரனில்லாத ஜ்யேஷ்டனுக்கும், புத்ரனில்லாத மாதுலனுக்கும் அக்னி தானம் செய்தவன் வபனம் செய்து கொள்ளவேண்டும்.

## ब्रह्मचारिण: संस्काराधिकार:

ब्रह्मचार्यपि पित्रादीन् संस्कुर्यात् । यदाह सुमन्तुः – मातुः पितुः प्रकुर्वीत संस्थितस्यौरसः सुतः । व्रतस्थो वाऽव्रतस्थो वा एक एव भवेद्यदि इति । व्रतस्थः - उपनीतः । स्मृत्यन्तरेऽपि – पित्रोश्चैवं पितुः पित्रोरौरसस्याग्र-जन्मनः । संस्कारादिक्रियां कुर्यात् ब्रह्मचारी गुरोरपि इति । अन्यत्रापि – दहनादि सपिण्ड्यन्तं ब्रह्मचारी करोति चेत् । अन्यत्र मातापित्रोः स्यादुपनीय पुनर्व्रती इति । अतः प्रेतकृत्यैकदेशकरणे न ब्रह्मचर्यहानिः । कृच्छ्राचरणमेव । सपिण्डीकरणमात्रकरणे न पुनरुपनयनम् । दाहादिसापिण्ड्यान्त-करणे पुनरुपनयनमित्यर्थः ।

### ப்ரம்ஹசாரிக்கு ஸம்ஸ்காரத்தில் அதிகாரம்

ப்ரம்ஹசாரியாயினும், பிதா முதலியவர்க்கு ஸம்ஸ்காரம் செய்யலாம். அதைச் சொல்லுகிறுர், ஸுமந்து: ஔரஸ புத்ரன் ஒருவனுகவே இருந்தால்,

உபநீதனானாலும் அனுபநீதனானாலும், மாதாவுக்கும், பிதாவுக்கும் ஸம்ஸ்காரத்தைச் செய்யலாம். மற்றொரு ஸ்ம்ருதியிலும் :- ப்ரம்ஹசாரியாயினும், மாதா பிதாக்களுக்கும், பிதாவின் மாதா பிதாக்களுக்கும், ஔரஸனான ஜ்யேஷ்டப்ராதாவுக்கும், குருவுக்கும் ஸம்ஸ்காரம் முதலிய க்ரியையை செய்யலாம். மற்றோரிடத்தில்:- ப்ரம்ஹமசாரியானவன், மாதா பிதாக்களைத் தவிர்த்து மற்றவர்க்குத் தஹநம் முதல் ஸபிண்டீகரணம் முடியும் வரையில் செய்தால் மறுபடி உபநயனத்திற்கு அர்ஹனாவான். இவ்விதமிருப்பதால் ப்ரேத கார்யத்தின் சில பாகத்தைச் செய்தால் ப்ரம்ஹசர்யத்திற்கு ஹானியில்லை. புனருபநயநம் வேண்டியதில்லை, க்ருச்ராசரணமே போதுமானது. தஹனம் முதல் ஸபிண்டீகரணம் முடிய உள்ள க்ரியைகளைச் செய்தால் புநருபநயநம் செய்ய வேண்டுமென்பது பொருள்.

अत्र मातापितृग्रहणमाचार्यादिरुपलक्षणम् । तथा च वसिष्ठबोधायनौ – ब्रह्मचारिणः शवकर्मिणो व्रतान्निवृत्तिरन्यत्र मातापित्रोराचार्याच्च इति । याज्ञवल्क्यश्च – आचार्यपित्रुपाध्याया न्निर्हृत्यापि व्रती व्रती । सङ्कटान्नं च नाश्नीयान्न च तैः सह संवसेत् इति । सङ्कटान्नं - आशौचान्नम् । तैः - आशौचिभिः । मनुरपि – आचार्यं स्वमुपाध्यायं पितरं मातरं गुरुम् । निर्हृत्य तु व्रती प्रेतं न व्रतेन वियुज्यते इति । भृगुः – मातामहं मातुलं च तत्पत्न्यौ चानपत्यके । व्रती संस्कुरुते यस्तु व्रतलोपो न तस्य हि इति । स्मृत्यन्तरे – मातापित्रोर्व्रती कुर्यात् पितृमेधं सदैव हि । ज्येष्ठभ्रातुस्तथैव स्यादन्येषां न कदाचन इति ।

இங்கு மாதா பிதாக்களை க்ரஹித்தது, ஆசார்யாதிகளுக்கும் உபலக்ஷணமாகும். அவ்விதமே, வஸிஷ்டரும், போதாயனரும்:- மாதா பிதாக்கள்,

ஆசார்யன் இவர்களைத் தவிர மற்றவருக்கு ப்ரேதகர்மம் செய்தால், ப்ரம்ஹசாரிக்கு ப்ரம்ஹசர்யத்தினின்றும் நிவ்ருத்தி. (புநருபநயனம் செய்யவேண்டும்) **யாஜ்ஞவல்க்யரும்:-** ஆசார்யன், மாதா, பிதா, உபாத்யாயன் இவர்களுக்குச் சவக்ரியையைச் செய்தாலும், ப்ரம்ஹசாரிக்கு ப்ரம்ஹசர்யலோபமில்லை. ஆனால் ஆசௌசிகளின் அன்னத்தைப் புஜிக்கலாகாது. ஆசௌசிகளுடன் சேர்ந்து வஸிக்கக்கூடாது. **மனுவும்:-** தனது ஆசார்யன், உபாத்யாயன், பிதா, மாதா, குரு இவர்களுக்கு ப்ரேத க்ரியை செய்தாலும், ப்ரம்ஹசாரீ வ்ரதத்தால் விடுபடுவதில்லை. (ப்ரம்ஹசர்யத்திற்கு ஹானி இல்லை) **ப்ருகு** - மாதாமஹன், மாதுலன், புத்ரனில்லாத மாதாமஹீ, மாதுலீ இவர்களை ஸம்ஸ்கரித்த ப்ரம்ஹசாரிக்கு ப்ரம்ஹசர்ய வ்ரதலோபமில்லை. **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** ப்ரம்ஹசாரீ, மாதா பிதாக்களுக்கும், ஜ்யேஷ்ட ப்ராதாவுக்கும் அபரக்ரியையைச் செய்யலாம், மற்றவர்க்குச் செய்யக்கூடாது.

अन्यत्रापि – मातापित्रोरुपाध्यायाचार्ययोरौर्ध्व दैहिकम् । कुर्वन्मातामहस्यापि व्रती भ्रश्येन्न हि व्रतात् इति । पुराणेऽपि - यथा व्रतस्थोऽपि सुतः पितुः कुर्यात् क्रिया नृप । उदकाद्या महाबाहो दौहित्रोऽपि तथाऽर्हति इति । उदाहृतेषु वचनेषु पितृव्यादेः कण्ठोक्त्यभावेऽपि गुरुत्वात् तत्संस्कारे च न व्रतिनो व्रतहानि-रित्याहुः ।

**மற்றொரு ஸ்ம்ருதியிலும்:-** ப்ரம்ஹசாரீ, மாதா பிதாக்கள், உபாத்யாயன், ஆசார்யன், மாதாமஹன் இவர்களுக்கு அபரக்ரியையைச் செய்தாலும் ப்ரம்ஹசர்யத்தினின்றும் நழுவுவதில்லை. **புராணத்திலும் :-** புத்ரன் ப்ரம்ஹசாரியாயினும் பிதாவுக்கு உதகதானம் முதலிய க்ரியைகளைச் செய்வதுபோல், தௌஹித்ரன் ப்ரம்ஹசாரியாயினும் மாதாஹனுக்குச் செய்யவேண்டும். முன் சொல்லப்பட்ட வசனங்களில் பித்ருவ்யன்

*முதலியவைரை ஸ்பஷ்டமாய்ச் சொல்லாவிடினும், அவர்களும் குருவானதால் அவர்களுக்கு ஸம்ஸ்காரம் செய்தால், ப்ரம்ஹசாரிக்கு ப்ரம்ஹசர்யலோபமில்லை யென்கின்றனர்.*

## अनुपनीतस्यापि पितृसंस्काराधिकारः

अनुपनीतोऽपि पुत्रः पित्रोः संस्कारादि मन्त्रवदेव कुर्यात् । तथा च मनुः – न ह्यस्मिन् विद्यते कर्म किञ्चिदामौञ्जिबन्धनात् । नाभिव्याहारयेद्ब्रह्म स्वधानिनयनादृते इति । स्वधानिनयनशब्देन दाहादिसपिण्डीकरणान्तं प्रेतकर्म लक्ष्यते । ब्रह्म-वेदः । अन्यत्र न वाचयेत् । पितृकृत्ये तूच्चारयेत् । न तत्र दोष इति व्याख्यातम् । स्मृत्यन्तरेऽपि – पुत्रस्त्वनुपनीतोऽपि पित्रोः संस्कारमर्हति । अन्योऽप्युच्चारयेन्मन्त्रान् तेन कर्माणि कारयेत् इति । अन्यः - उपाध्यायादिः अनुपनीतं वाचयेत् तेनैव कर्माणि कारयेत्, न स्वयं कुर्यादित्यर्थः ।

### உபநயனமாகாதவனுக்கும், மாதாபிதாக்களின் ஸம்ஸ்காரத்தில் அதிகாரம்

*உபநயனமாகாதவனுயினும், புத்ரன் மாதா பிதாக்களுக்கு ஸம்ஸ்காரம் முதலியதை மந்த்ரத்துடனேயே செய்யவேண்டும். அவ்விதமே,* **மனு:-** *அனுபனீதனிடத்தில், உபநயநமாகும் வரையில் ஒரு கர்மாவும் கிடையாது. அவனை வேத மந்த்ரத்தை உச்சரிக்கும்படி செய்யக்கூடாது. ப்ரேத கர்மாவைத் தவிர்த்து, 'ஸ்வதாநிநயநம்'' என்பதால் தாஹம் முதல் ஸபிண்டீகரணம் முடியும் வரையிலுள்ள கர்மம் சொல்லப்படுகிறது. அந்தக் கர்மத்தில் மட்டில் உச்சரிக்கும்படி செய்யலாம். அதில் தோஷமில்லை. மற்றக் கர்மத்தில் கூடாது.* **மற்றொரு ஸ்ம்ருதியிலும்** *- புத்ரன் அனுபநீதனுனலும் மாதா பிதாக்களின் ஸம்ஸ்காரத்தில்*

*அர்ஹனுகிறான். மற்றொருவன் உபாத்யாயன் முதலியவன் அவனை மந்த்ரங்களை உச்சரிக்கச் செய்யவேண்டும். அவனைக்கொண்டே கர்மங்களைச் செய்விக்கவேண்டும். தான் செய்யக்கூடாது.*

सुमन्तुरपि – नाभिव्याहारयेद्ब्रह्म यावन्मौञ्जी न बध्यते । मन्त्राननुपनीतोऽपि प्रेतकृत्ये वदेत् पितुः इति । वदेदेवैक एव हि इति पाठान्तरम् । तत्र पितृप्रेत कृत्ये इत्यध्याहर्तव्यम् । वृद्धमनुरपि – कुर्यादनुपनीतोऽपि श्राद्धमेको हि यः सुतः । पितृयज्ञाहुतिं पाणौ जुहुयान्मन्त्रपूर्वकम् इति । श्राद्धं - सपिण्डीकरणादि । विश्वामित्रः – पित्रोरनुपनीतोऽपि विदध्यान्मन्त्रवत् सुतः । और्ध्वदैहिकमन्ये तु संस्कृताः श्राद्धकारिणः इति । अन्ये - भ्रात्रादयः, उपनीताः श्राद्धकारिणः स्युः, कर्मशूद्रः स्मृतो विप्रो यावन्मौञ्जी न बध्यते। तदूर्ध्वं मन्त्रपूतेषु कर्मस्वप्यधिकार्यसौ इति सुमन्तुस्मरणात् ।

**ஸுமந்துவும்** :- *உபநயனம் ஆகும் வரையில் வேதமந்த்ரங்களை உச்சரிக்கும்படி செய்யக்கூடாது. அனுபநீதனும் பிதாவின் ப்ரேத க்ருத்யத்தில் மட்டில் மந்த்ரங்களை உச்சரிக்கலாம்.* **வ்ருத்தமனுவும்:** *அனுபநீதனானாலும் ஒரே புத்ரனாயிருந்தால் ஸபிண்டீகரணத்தைச் செய்யலாம். ஹோமத்தை மந்த்ரத்துடன் ப்ராம்ஹணனின் கையில் செய்யவேண்டும்.* **விச்வாமித்ரர்** :- *புத்ரன் அனுபநீதனாயினும், மாதா பிதாக்களின் ப்ரேத க்ருத்யத்தை மந்த்ரத்துடனேயே செய்யவேண்டும். மற்றவர்கள் ப்ராதா முதலியவர்கள் உபநீதர்களாயிருந்தால் மட்டில் ச்ராத்தார்ஹர்களாயாகின்றனர். '' ப்ராம்ஹணன் உபநயனமாகும். வரையில் கர்மசூத்ரன் (அனர்ஹன்) எனப்படுகிறான். இவன் உபநயநத்திற்குப் பிறகே மந்த்ரங்களால் சுத்தமான கர்மங்களில் அதிகாரமுள்ளவனாகிறான்'' என்று ஸுமந்து வசனமுள்ளது.*

यत्तु – असंस्कृतेन पत्न्या च ह्यग्निदानं समन्त्रकम् । कर्तव्यमितरत् सर्वं कारयेदन्यमेव तु इति कात्यायन वचनम्, तत् मन्त्रोच्चारणाशक्तविषयम् । एतदेवाभिप्रेत्य, व्याघ्रपादः – नवश्राद्धे मासिके च सपिण्डीकरणे तथा । ऋत्विक्छिष्यादिभिः कार्यं ब्राह्मणं वा नियोजयेत् इति । शक्तः सर्वं प्रेतकर्म मन्त्रवदेव कुर्यात् । अशक्तस्तु दाहमात्रं मन्त्रवदेव कुर्यात् । अन्यत् सर्वं प्रत्यासन्नेन कर्त्रन्तरेण दर्भप्रदानानुज्ञया कारयेत् ।

*ஆனால், ''அனுபநீதனும், பத்னியும் அக்னிதானத்தை மட்டில் மந்த்ரத்துடன் செய்யலாம். மற்றக் கார்யமெல்லாவற்றையும் இதரனைக் கொண்டே செய்விக்கவேண்டும்'' என்ற காத்யாயன வசனமுள்ளதேயெனில், அது மந்த்ரோச்சாரணத்தில் சக்தியில்லாதவனைப் பற்றியது. இந்த அபிப்ராயத்தைக் கொண்டே, வ்யாக்ரபாதர்:- ''நவச்ராத்தம், மாஸிகம், ஸபிண்டீகரணம் இவைகளை ருத்விக், சிஷ்யன் முதலியவர்களால் செய்விக்கலாம். வேறு ப்ராம்ஹணனாலாவது செய்விக்கலாம்'' என்றார். அனுபநீதன் மந்த்ரோச்சாரணத்தில் சக்தனாகில், ப்ரேதகர்மம் முழுவதையும் தானாகவே செய்யவும். அசக்தனாகில் தஹனத்தை மட்டில் ஸமந்த்ரமாகச் செய்து, மற்றதை ஸமீபமாயுள்ள மற்றொரு கர்த்தாவைக்கொண்டு, தர்ப்பத்தைக் கொடுத்து, அனுஜ்ஞை செய்து, செய்விக்க வேண்டும்.*

अयं च मन्त्रोच्चारणाधिकारः त्रिवर्षकृतचूडस्य त्रिवर्षस्य वा । तथा च सुमन्तुः – अनुपेतोऽपि कुर्वीत मन्त्रवत् पैतृमेधिकम् । यद्यसौ कृतचौलः स्याद्यदि वा स्यात्त्रिवत्सरः इति । स्मृत्यन्तरे – पुत्रस्त्वकृतचौलोऽपि पित्रोः संस्कारमर्हति । चौलं ह्यविधिना कुर्यात् पश्चाच्चौलं यथाविधि इति । पश्चात् - सपिण्डीकरणानन्तरम् ।

இவ்விதம் சொல்லிய மந்த்ரோச்சாரணாதிகாரம், மூன்றுவது வயதில் சௌளஸம்ஸ்காரம் செய்யப் பட்டவனுக்கும், அல்லது மூன்று வயதானவனுக்கும். அவ்விதமே, ஸுமந்து:- அனுபநீதனானாலும், சௌள மாகியவனாயிருந்தால், அல்லது மூன்று வர்ஷமாகியவனா யிருந்தால் மந்த்ரத்துடன் ப்ரேதகர்மத்தைச் செய்யலாம். **மற்றொரு ஸம்ருதியில்:-** புத்ரன் சௌளமாகாதவனாயினும் மாதாபிதாக்களின் ஸம்ஸ்காரத்தில் அர்ஹனாகிறான். அக்காலத்தில் மந்த்ரமில்லாமல் சௌளத்தைச் செய்யவும். பிறகு (ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு) விதிப்படி சௌளத்தைச் செய்யவும்.

यत्तु व्याघ्रवचनम् - कृतचौलस्तु कुर्वीत उदकं पिण्डमेव च। स्वधाकारं प्रयुञ्जीत वेदोच्चारं न कारयेत् इति । यदपि स्मृत्यन्तरवचनम् – कृतचूडोऽनुपेतस्तु पित्रोः श्राद्धं समाचरेत् । उदाहरेत् स्वधाकारं न तु वेदाक्षराण्यसौ इति । एतयोः पूर्वोक्तमन्वादिवचनानां च विकल्प इति चन्द्रिकायामुक्तम् । एतद्वचनद्वयं प्रथमवर्षकृतचूडविषयमिति कालादर्शटीकादौ ।

ஆனால், ''சௌளமானவனே உதகபிண்ட தானங்களைச் செய்யலாம். ஸ்வதா சப்தத்தை உச்சரிக்கலாம். ஆனால் வேதமந்த்ரத்தை உச்சரிக்கக் கூடாது'' என்ற வ்யாக்ரரின் வசனமும், மற்றொரு ஸ்ம்ருதியில்- ''சௌளமாகியவன் அனுபநீதனாகிலும் மாதா பிதாக்களின் ச்ராத்தத்தைச் செய்யலாம், இவன் ஸ்வதா சப்தம் தவிர வேதாக்ஷரங்களை உச்சரிக்கக்கூடாது'' என்ற வசனமும் உள்ளதேயெனில், இவ்விரண்டு வசனங்களுக்கும், முன் சொல்லிய மந்வாதி வசனங் களுக்கும் விகல்பம் என்பது சந்த்ரிகையில் சொல்லப் பட்டுள்ளது.' இந்த இரண்டு வசனமும் முதல் வர்ஷத்திலேயே சௌளனம் செய்யப்பட்டவனின் விஷயமாகியது' என்று காலா தர்சடீகை முதலியதிலுள்ளது.

अत्रिवर्षस्य अकृतचौलस्य वपननिषेधोऽपि स्मर्यते – पुत्रस्त्वकृतचौलोऽपि पित्रोः संस्कारमर्हति । न तस्य वपनं कुर्यात्तेन कर्माणि कारयेत् इति । प्रथमवत्सरे तु संस्काराधिकारी न भवतीत्याह सुमन्तुः – पुत्रः स्वोत्पत्तिमात्रेण संस्कुर्यादृण-मोचनात् । पितरावाब्दिकाच्चौलात् पैतृमेधेन कर्मणा । चौलं यदाब्दिकादर्वाङ्नकुर्यात्पैतृमेधिकम् । तृतीयवत्सरादूर्ध्वं मन्त्रवत्तत् समापयेत् इति । प्रथमवत्सरात् प्रथमवर्षचौलाद्वा परमृणमोच-नाद्धेतोः पितरौ संस्कुर्यात् । अब्दपरिसमाप्तेः प्रथमवर्ष चौलाद्वा पूर्वं पैतृमेधिकं न कुर्यात् । दर्भदानेनान्य एव कुर्यात् । तृतीयवत्सरा-च्चौलाद्वा परं मन्त्रवदेव पैतृमेधिकं समापयेदित्यर्थः ।

*மூன்று வயதாகாதவனுக்குச் சௌளஸம்ஸ்காரமாகாவிடில் அவனுக்கு வபனம் நிஷேதிக்கப்படுகிறது ஸ்ம்ருதியில் - 'சௌளமாகாவிடினும் புத்ரன் மாதாபிதாக்களின் ஸம்ஸ்காரத்திற்கு அர்ஹனாகிறான். அவனுக்கு வபனம் கூடாது. அவனைக்கொண்டே கர்மங்களைச் செய்விக்க வேண்டும்' என்று. முதல் வர்ஷத்தில் ஸம்ஸ்காரத்திற்கு அதிகாரியாவதில்லை என்கிறார் ஸுமந்து:- புத்ரன் தான் பிறந்தது முதற்கொண்டே ருணத்தைத் தீர்ப்பதற்காக மாதா பிதாக்களுக்குப் பித்ருமேத விதியால் ஸம்ஸ்காரம் செய்யவேண்டும். பிறந்து ஒரு வர்ஷத்திற்குப் பிறகும், ஒரு வர்ஷத்திற்குள் சௌளம் செய்யப்படாவிடில் தர்ப்பதானத்தால் அன்யனைக்கொண்டு செய்விக்க வேண்டும். சௌளத்திற்குப் பிறகும், மூன்றாவது வயதிற்குப் பிறகும் மந்த்ரத்துடனேயே பைத்ருமேதிகத்தை முடிக்கவேண்டும்.*

## दीक्षामध्ये मातापितृसंस्काराधिकारः ।

दीक्षितस्य दीक्षामध्ये मातापितृमरणविषये कौण्डिन्यः – दीक्षितोऽप्येकपुत्रश्चेन्मातापित्रोर्मृतिर्यदि । संस्कृत्य शाला मागत्य

यज्ञशेषं समापयेत् इति । शाण्डिल्योऽपि – दीक्षितोऽप्येकपुत्रश्चेन्मातापित्रोर्मृतिर्यदि । दीक्षारूपं निधायात्र संस्कुर्यान्नोदकप्लवः । (वाप) पावयेद्दर्भपुञ्जीलैर्दीक्षारूपं यथाविधि इति । एक पुत्र इति विशेषोपादानात् पुत्रान्तरसद्भावे स एव कुर्यात् । नोदकप्लवः - उदकदानमपि नास्ति । स्नानमात्रमस्ति । सद्यः शौचस्योक्तत्वात् ।

### தீக்ஷையின் மத்தியிலும், மாதாபிதாக்களின் ஸம்ஸ்காரத்தில் அதிகாரம்

*யாகத்தில் தீக்ஷையடைந்தவனுக்கும், தீக்ஷையின் நடுவில் மாதா பிதாக்களின் மரணம் ஸம்பவித்தால்,* **கௌண்டின்யர்** - *தீக்ஷிதன் ஒரே புத்ரனாயிருந்தால் தீக்ஷா மத்யத்தில் மாதா அல்லது பிதாவுக்கு மரணம் நேர்ந்தால், ஸம்ஸ்காரத்தைச் செய்துவிட்டு யாகசாலைக்கு வந்து யாகத்தின் மீதியை ஸமாப்தி செய்யவேண்டும்.* **சாண்டில்யரும்**- *தீக்ஷிதனாயினும், ஏகபுத்ரனாயின், மாதாவுக்கோ, பிதாவுக்கோ மரணமாயின். தீக்ஷாரூபத்தை யாகசாலையில் வைத்துவிட்டு, ஸம்ஸ்காரத்தைச் செய்யவேண்டும். உதகதானம் செய்யவேண்டியதில்லை. ஸ்நானம் மட்டில் உண்டு. ஸத்யஶ்ஶௌசம் சொல்லப்பட்டிருப்பதால். பிறகு தீக்ஷாரூபத்தைத் தர்ப்பபுஞ்ஜீலங்களால் விதிப்படி பாவனம் செய்யவேண்டும். இங்கு 'ஏகபுத்ரன்' என்ற விசேஷணமிருப்பதால், வேறு புத்ரனிருந்தால் அவனே செய்யவேண்டும். தீக்ஷிதன் செய்யக்கூடாது.*

स्मृत्यन्तरे – ज्येष्ठस्य तु क्रतोर्मध्ये मातापित्रोर्मृतिर्यदि । संस्कृत्य शालामागत्य यज्ञशेषं समापयेत् इति । अत्र ज्येष्ठशब्दोऽप्येकपुत्रपरः । अन्यथा – दीक्षितोऽप्येकपुत्रश्चेत् इति वचनविरोधापत्तेः । विवाहादिकर्ममध्ये पित्रोर्मृतौ विशेषः स्मर्यते – मातापित्रोर्मृतिप्राप्तौ विवाहादिषु कर्मसु । तिलपिण्डं तु कर्तव्यमन्यच्छ्राद्धं तु वर्जयेत् इति । दहनं तिलमिश्रपिण्डदानं च कर्तव्यम् । अन्यत् श्राद्धं नवश्राद्धादिकं वर्जयेदित्यर्थः ।

மற்ெறாரு ஸ்ம்ருதியில்:-ஜ்யேஷ்டபுத்ரனின் யாகத்தின் மத்தியில் மாதா பிதாக்களின் மரணம் நேர்ந்தால், புத்ரன் ஸம்ஸ்காரம் செய்துவிட்டு, யஜ்ஞசாலையையடைந்து, யாகசேஷத்தைப் பூர்த்தி செய்யவேண்டும். இங்குள்ள ஜ்யேஷ்டசப்தமும் ஏகபுத்ரன் என்பதைக் குறிக்கின்றது. இல்லாவிடில் 'தீக்ஷிதோப்யேக புத்ரச்சேத்' என்ற வசனத்திற்கு விரோதம் நேரிடக்கூடும். விவாஹாதி கார்ய மத்யத்தில் மாதா பிதாக்களின் மரணம் நேர்ந்தால், அதில் விசேஷம் சொல்லப்படுகிறது:- "விவாஹம் முதலிய கர்மங்களில் மாதா பிதாக்களின் மரணம் நேர்ந்தால் தில பிண்டத்தைக் கொடுக்கவேண்டும். மற்ற ச்ராத்தத்தை வர்ஜிக்கவும்" என்று. தஹனத்தையும் திலத்துடன் கூடிய பிண்டத்தின் தானத்தையும் செய்யவும். மற்ற நவச்ராத்தம் முதலியதைச் செய்யக்கூடாதென்பது பொருள்.

क्रमेण प्रेतकार्यकर्तॄनाह मरीचिः – पुत्रः पौत्रश्च तज्जश्च पुत्रिकापुत्र एव च। पत्नी भ्राता च तज्जश्च पिता माता स्नुषा तथा। भगिनी भागिनेयश्च सपिण्डो धनहार्यपि । पूर्वपूर्वविनाशे स्युरुत्तरोत्तरपिण्डदाः इति। पराशरोऽपि – पुत्रः पौत्रः प्रपौत्रो वा तद्वद्वा भ्रातृ सन्ततिः इति । कालादर्शेऽपि – दाहादि मन्त्रवत् पित्रोर्विदध्यादौरसः सुतः । तदभावे तु पौत्रश्च प्रपौत्रः पुत्रिकासुतः। क्षेत्रजो दत्तिमः क्रीतः कृत्रिमो दत्त एव च । अपविद्धश्च पत्नी च गूढजः कन्यकासुतः। पौनर्भवः सहोढोत्थो नन्दनश्च सुतीकृतः। दौहित्रो धनहारी च भ्राता तत्पुत्र एव च। पिता माता स्नुषा चैव स्वसा तत्पुत्र एव च। सपिण्डः सोदको मातुः सपिण्डश्च सहोदरः। स्त्री च शिष्यर्त्विगाचार्या जामाता च सखाऽपि वा । उत्सन्नबन्धो रिक्थेन कारयेदवनीपतिः इति । गर्भिण्यां परिणीतायां ततो जातः सहोढोत्थः । सुतीकृतः - मातामहेन पुत्रत्वेन स्वीकृतः ।

கர்த்ருக்ரமம் ப்ரேதகார்யத்தில் அதிகாரிகளை க்ரமமாய்ச் சொல்லுகிறார், மரீசி -புத்ரன், பௌத்ரன், ப்ரபௌத்ரன், புத்ரிகாபுத்ரன், பத்நீ, ப்ராதா, ப்ராத்ருபுத்ரன், பிதா, மாதா, நாட்டுப்பெண், பகினீ, பாகினேயன், ஸபிண்டன், தனஹாரீ என்ற இவர்களுள் முந்தியவன் இல்லாவிடில் பிந்தியவன் பிண்டதானத்திற்கு அதிகாரியாவான். பராசரரும்:- புத்ரன், பௌத்ரன், ப்ரபௌத்ரன், அது போல் ப்ராதாவின் ஸந்ததி இவர்கள் அதிகாரிகள்.காலாதர்சத்திலும்,- மாதா பிதாக்களுக்கு ஔரஸ புத்ரன் தஹநம் முதலியதை விதிப்படி செய்யவும். அவனில்லாவிடில், பௌத்ரன், ப்ரபௌத்ரன், க்ஷேத்ரஜன், தத்திமன், க்ரீதன், க்ருத்ரிமன், தத்தன், அபவித்தன், பத்னீ, கூடஜன், கந்யகாபுத்ரன், பௌனர்பவன், ஸஹோடோத்தன், நந்தனன், ஸ்வீக்ருதன், தனஹாரீ தௌஹித்ரன், ப்ராதா, ப்ராத்ருபுத்ரன், பிதா, மாதா, நாட்டுப்பெண், பகினீ, பகினீபுத்ரன், ஸபிண்டன், ஸமானோதகன், மாத்ருஸபிண்டன்,அவளின் ஸஹோதரன், ஸ்த்ரீ, சிஷ்யன், ருத்விக், ஆசார்யன், ஜாமாதா, ஸகா இவர்கள் கர்த்தாக்கள். பந்துக்களிலொருவருமில்லாதவனுக்கு, அவன் தனத்தினால் அரசன் செய்விக்கவேண்டும். கர்ப்பிணியா யிருப்பவளை விவாஹம் செய்துகொண்டபின் அவளிடம் பிறந்தவன் ஸஹோடோத்தன். ஸ்வீக்ருதன் = மாதா மஹனால் புத்ரனாய் ஸ்வீகரிக்கப்பட்டவன்.

## औरसादिलक्षणम्

औरसादीनां लक्षणमनुक्रमं चाह याज्ञवल्क्यः – औरसो धर्मपत्नीजस्तत्समः पुत्रिकासुतः । क्षेत्रजः क्षेत्रजातस्तु सगोत्रेणेतरेण वा । गृहे प्रच्छन्न उत्पन्नो गूढजस्तु सुतः स्मृतः । कानीनः कन्यकाजातो मातामहसुतो मतः । अक्षतायां क्षतायां वा जातः पौनर्भवः सुतः । दद्यान्माता पिता वा यं स पुत्रो दत्तको

भवेत् । क्रीतस्तु ताभ्यां विक्रीतः कृत्रिमः स्यात् स्वयं कृतः । दत्तिमस्तु स्वयं दत्तो गर्भे विन्नः सहोढजः । उत्सृष्टो गृह्यते यस्तु सोऽपविद्धो भवेत् सुतः । पिण्डदोंऽशहरश्चैषां पूर्वाभावे परः परः इति ।

### ஔரஸாதிகளின் லக்ஷணம்

ஔரஸன் முதலியவர்களின் லக்ஷணத்தையும், க்ரமத்தையும் சொல்லுகிருர், **யாஜ்ஞவல்க்யர்** :- தர்மபத்னியினிடம் பிறந்தவன் ஔரஸன்; புத்ரிகாபுத்ரன் அவனுக்குச் சமமானவன். ஸகோத்ரனுலாவது, அஸகோத்ரனுலாவது பத்னியிடம் பிறந்தவன் க்ஷேத்ரஜன். க்ருஹத்திலேயே மறைவாய் உண்டானவன் கூடஜன் எனப்படுகிருன். விவாஹமாகாதவளிடம் பிறந்தவன் காநீனன் எனப்படுவான். இவன் மாதாமஹனின் பிள்ளையாவான். விவாஹமான பிறகு அக்ஷதையாகவோ, க்ஷதையாகவோ பிறனுல் விவாஹத்தையடைந்தவளிடம் பிறந்தவன் பௌநர்பவன் எனப்படுவான். மாதாவே, பிதாவோ, இருவருமோ எவனைக் கொடுத்தார்களோ அவன் தத்தபுத்ரன் எனப்படுவான். மாதா பிதாக்களால் விக்ரயம் செய்யப்பட்டவன் க்ரீதன் எனப்படுவான். அபுத்ரனுல் பணம் முதலியவைகளைக் காண்பிவித்து ஆசையுண்டாக்கி புத்ரனய்ச் செய்துகொள்ளப்பட்டவன் க்ருத்ரிமன் எனப்படுவான். தானகவே அபுத்ரனை வந்து அடைந்தவன் ஸ்வயம் தத்தன், தத்திமன் எனப்படுவான். கர்ப்பமுள்ளவளை விவாஹம் செய்துகொண்டு பிறகு அவளிடம் பிறந்தவன் ஸஹோடஜன் எனப்படுவான். மாதா பிதாக்களால் கைவிடப் பட்டவனுகிய எவன் க்ரஹிக்கப்படுகிருனே அவன் அபவித்தனும். இந்தப் பன்னிரண்டு புத்ரர்களுள் முந்தியவனில்லாவிடில் பிந்தியவன் பிண்டதானத்திற்கும், தனத்திற்கும் அதிகாரியாவான்.

बृहस्पतिरपि – प्रमीतस्य पितुः पुत्रैः श्राद्धं देयं प्रयत्नतः। ज्ञातिबन्धुसुहृच्छिष्यैः ऋत्विग्भृत्यपुरोहितैः इति । अत्र पुत्रैरिति बहुवचनादुक्ता औरसादि द्वादशविधपुत्रा गृह्यन्ते । तदाह मनुः – क्षेत्रजादिसुतानेतानेकादश यथोदितान् । पुत्रप्रतिनिधीनाहुः क्रियालोपान्मनीषिणः इति । एतत् गौणपुत्रपरिग्रहवचनं युगान्तरविषयम् । चन्द्रिकास्मृत्यर्थसारादौ – दत्तौरसेतरेषां च पुत्रत्वेन परिग्रहः इति कलियुगवर्ज्यधर्ममध्ये परिगणनात् । पुत्रिकापुत्रस्तु न निषिध्यते । पुत्रिकायां कृतायां तु यदि पुत्रोऽनुजायते । समस्तत्र विभागः स्यात् ज्यैष्ठ्यं तत्र न विद्यते । रिक्थे च पिण्डदाने च समानौ परिकीर्तितौ । औरसो धर्मपत्नीजस्तत्समः पुत्रिकासुतः । पुत्रास्तु द्वादश प्रोक्ता मनुना येऽनुपूर्वशः । सन्तानकारणं तेषामौरसः पुत्रिकासुतः । आज्यं विना यथा तैलं सर्पिः प्रतिनिधिः स्मृतम् । तथैकादशपुत्रास्तु पुत्रिकौरसयोर्विना इति मनुयाज्ञवल्क्यादिभिरौरससाम्य स्मरणा-दित्याहुः ।

*ப்ருஹஸ்பதியும்:- இறந்த பிதாவுக்கு, புத்ரர்கள் அவச்யம், அபரக்ரியையைச் செய்யவேண்டும். ஜ்ஞாதி, பந்து, மித்ரன், சிஷ்யன், ருத்விக், ப்ருத்யன், புரோஹிதன் இவர்களாவது செய்யவேண்டும். இங்கு 'புத்ரர்கள்' என்று பஹுவசநத்தால் முன் சொல்லப்பட்ட பன்னிரண்டு விதமான புத்ரர்கள் க்ரஹிக்கப்படுகின்றனர்.*

*அதைச் சொல்லுகிறுர் மனு:- முன் சொல்லப்பட்ட இந்தப் பதினொரு விதமான க்ஷேத்ரஜன் முதலான புத்ரர்களையும் புத்ரனுக்கு ப்ரதியாகவே அறிந்தவர்கள் சொல்லுகின்றனர். புத்ரோத்பாதன விதிலோபமும், புத்ரன் செய்யவேண்டிய ச்ராத்தாதி லோபமும் ஏற்படாமலிருப்ப தற்காக. இவ்விதம் கௌணபுத்ரர்களை ப்ரதிக்ரஹிக்கலா*

மென்ற வசனம் மற்ற யுகங்களைப் பற்றியது, சந்த்ரிகை, ஸ்ம்ருத்யர்த்தஸாரம் முதலியவைகளில் ''தத்தன், ஔரஸன் இவர்களைத்தவிர மற்றவர்களைப் புத்ரனுய் பரிக்ரஹிப்பது(கூடாது)'' என்று கலியுகத்தில் தள்ளக் கூடிய தர்மங்களின் நடுவில் எண்ணப்பட்டுள்ளது. புத்ரிகா புத்ரனுே வெனில் நிஷேதிக்கப்படவில்லை. ''புத்ரிகையை ஏற்படுத்திக்கொண்ட பிறகு, புத்ரன் பிறந்தால், அங்கு பாகம் ஸமமாகும். அவர்களுள் மூத்தவனெனும் தன்மை கிடையாது. அவ்விருவரும் பணத்திலும், பிண்ட தானத்திலும் ஸமானர்களாகச் சொல்லப்பட்டுள்ளனர். தர்மபத்னியினிடத்தில் பிறந்தவன் ஔரஸன். புத்ரிகா புத்ரனும் அவனுக்கு ஸமனுனவன். மனுவரிசையாக எந்தப் பன்னிரண்டு புத்ரர்களைச் சொன்னுரோ அவர்களுள் ஔரஸன், புத்ரிகாபுத்ரன் என்ற இருவரே ஸந்தாநத்திற்கு (வம்சவ்ருத்திக்கு)க் காரணம். நெய் இல்லாவிடில் தைலத்தை நெய்க்கு ப்ரதிநிதியாக எப்படிச் சொல்லப்படுகிறதோ அவ்விதமே பதினுெரு புத்ரர்களும் புத்ரிகா புத்ரன் ஔரஸன் இவ்விருவருமில்லாவிடில் ப்ரதிநிதிகள், என்று மனு யாஜ்ஞவல்க்யர் முதலியவர்களால் ஔரஸனுக்கு ஸமமாகச் சொல்லப்பட்டிருப்பதால் என்கின்றனர்.

एवञ्च पुत्रपौत्रप्रपौत्राभावे पुत्रिकापुत्रस्य सत्वे स एव संस्काराधिकारी भवति, यश्चार्थहरः स पिण्डदायी इति विष्णु-स्मरणात्। पौत्रादेः सत्वे तु तस्यैव प्राथम्यम्, न पुत्रिकापुत्रादेः। पुत्रेषु सत्सु पौत्रेषु नान्यं वै कारयेत् स्वधाम् इति निषेधात्। तथा च क्रमं दर्शयति मरीचिः – पुत्रः पौत्रश्च तज्जश्च पुत्रिकापुत्र एव च इति। तथैव स्मृतिरत्नकालादर्शादौ निर्णीतम्।

இவ்விதமிருப்பதால் புத்ரன், பௌத்ரன், ப்ரபௌத்ரன் இவர்களில்லாவிடில், புத்ரிகா புத்ரனிருந்தால் அவனே ஸம்ஸ்காரத்திலதிகாரியாக ஆகிறுன். 'பணத்தை அடைபவன் பிண்டதானம் செய்ய

உரிமையுடையவன்', என்று விஷ்ணு ஸ்ம்ருதி இருப்பதால். பௌத்ரன் முதலியவர் இருந்தால் அவருக்கே முதன்மை, புத்ரிகாபுத்ரன் முதலியவர்க்கல்ல. 'புத்ரர்களோ பௌத்ரர்களோ இருந்தால் அன்யனைக் கொண்டு ப்ரேதக்ரியையைச் செய்விக்கக் கூடாது' என்று நிஷேதமிருப்பதால். அவ்விதமே கர்மத்தைக் காண்பிவிக்கின்றார், மரீசி:- 'புத்ரன், பௌத்ரன், ப்ரபௌத்ரன், புத்ரிகாபுத்ரன்' என்று அவ்விதமே, ஸ்ம்ருதிரத்னம், காலாதர்சம் முதலியதில் நிர்ணயிக்கப் பட்டுள்ளது.

अत एव पुत्रिकापुत्रस्य पौत्रसाम्यमुक्तम् बृहस्पतिना – पौत्रश्च पुत्रिकापुत्रः स्वर्गप्राप्तिकरावुभौ । रिक्थे च पिण्डदाने च समानौ परिकीर्तितौ इति । तत्समः पुत्रिकासुतः इत्यौरससाम्य-वचनमौरस सन्तत्यभावे पुत्रिकासुतस्य समनन्तराधिकारित्व-प्रतिपादनपरम् । नैतत्पौत्रेण कर्तव्यं पुत्रवांश्चेत्पितामहः इति वचनं मुख्यसन्तानविषयम् । अतः पुत्रिकापुत्रदत्तापेक्षया पौत्र एव मुख्यः । पुत्रिकापुत्रस्योभयसम्बन्धोऽपि स्मर्यते देवलेन – द्व्यामुष्यायणका दद्युर्द्वाभ्यां पिण्डोदके पृथक् इति ।

ஆகையாலேயே புத்ரிகா புத்ரனுக்குப் பௌத்ர ஸாம்யத்தைச் சொன்னார் ப்ருஹஸ்பதி 'பௌத்ரன், புத்ரிகாபுத்ரன் என்ற இருவரும் ஸ்வர்க்க ப்ராப்தியைச் செய்பவர்கள். தனத்திலும், பிண்ட தானத்திலும் ஸமானர்களாகச் சொல்லப்பட்டுள்ளனர்' என்று. 'ஔரஸனுக்கு ஸமன் புத்ரிகா புத்ரன்' என்று ஔரஸனுக்கு ஸமத்வத்தைச் சொல்லும் வசனம், ஔரஸனின் ஸந்ததியில்லாவிடில் புத்ரிகாபுத்ரன் அடுத்த அதிகாரீ என்பதைச் சொல்வதில் தாத்பர்யமுடையது. 'பிதாமஹன் புத்ரவானாயிருந்தால், பௌத்ரன் ப்ரேத க்ரியையைச் செய்யக்கூடாது.' என்ற வசனம் முக்ய ஸந்தானத்தைக் குறித்தது. ஆகையால், புத்ரிகாபுத்ரன், தத்தன் இவர்களை

அபேக்ஷித்துப் பௌத்ரனே முக்யன். புத்ரிகா புத்ரனுக்கு இருவருடன் ஸம்பந்தமும் சொல்லப்படுகிறது தேவலரால்:- த்வ்யாமுஷ்யாணகர்கள் (இருவருக்கும் உரியவர்கள்) இருவருக்கும் பிண்டோதகங்களைத் தனித்தனியே கொடுக்கவேண்டும், என்று.

स्मृत्यन्तरेऽपि – यस्मादुभयसम्बन्धः पुत्रिकायाः सुतो ह्यसौ । पूर्वं मातामहश्राद्धं पश्चात्पैतृकमाचरेदिति । अभ्रातृकां प्रदास्यामि तुभ्यं कन्यामलङ्कृताम् । अस्यां यो जायते पुत्रः स नौ पुत्रो भवेदिति प्रदान समयेऽभिधाने मातामहस्य जनकस्य च संस्कारेऽधिकारी । स मे पुत्र इत्युक्त्वा दाने तु मातामहेनैव संबन्धः । तथा चन्द्रिकायाम् – द्विविधो हि पुत्रिकापुत्रः, एको मातामहेन सम्बद्धः, अपरः पितृमातामहाभ्याम् । तत्र प्रथमो मातामहस्य कुर्यात् पितुरिच्छया । य उभयसम्बन्धः स उभयोरपि इति ।

மற்றொரு ஸ்ம்ருதியிலும்:- இந்தப் புத்ரிகாபுத்ரன் இருவருடன் ஸம்பந்தமுள்ளவனாகையால், முதலில் மாதாமஹ ச்ராத்தத்தையும், பிறகு பித்ரு ச்ராத்தத்தையும் செய்யவேண்டும் என்றுள்ளது. ''ப்ராதா இல்லாதவளும், அலங்காரமுள்ளவளுமான இந்தப் பெண்ணை உனக்குக் கொடுக்கிறேன். இவளிடத்தில் எந்தப் புத்ரன் பிறக்கின்றானோ அவன் நம்மிருவருக்கும் புத்ரனாகக் கடவன்'' என்று கன்யாதான ஸமயத்தில் சொல்லியிருந்தால், அந்தப் புத்ரன் மாதா மஹனுக்கும் ஜநகனுக்கும் ஸம்ஸ்காரத்தில் அதிகாரியாகிறான். 'ஸ மே புத்ர:' என்று மந்த்ரத்தைச் சொல்லி, தானம் செய்திருந்தால் மாதாமஹனோடுமட்டில் ஸம்பந்தம். அவ்விதமே, சந்த்ரிகையில்:- புத்ரிகாபுத்ரன் இரண்டுவிதமானவன் ஒருவன் மாதாமஹனுடன் ஸம்பந்தமுள்ளவன். மற்றொருவன், பிதாவுடனும், மாதாமஹனுடனும் ஸம்பந்தமுள்ளவன். முதல்வன் மாதாமஹனுக்கு

*க்ரியையைச் செய்யவேண்டும். இச்சையிருந்தால் பிதாவுக்கும் செய்யலாம். இரண்டாமவன் இருவருக்கும் க்ரியையைச் செய்யவேண்டும்.*

पुत्रिकापुत्राभावे दत्तः कर्ता, कस्मिंश्चित्प्रतिगृहीते यद्यौरस उत्पद्येत स चतुर्थांशभाक् इति वसिष्ठ स्मरणेन औरसचतुर्थांशभाजो दत्तस्य व्यवहितत्वेन समांशभाजः पुत्रिकापुत्रस्यैव प्राथम्यम् । दत्तभावे धनहारी दौहित्रः कर्ता । तत्र विष्णुः – अपुत्रपुत्रसन्ताने दौहित्रा धनमाप्नुयुः । पूर्वेषान्तु स्वधाकारे पुत्रदौहित्रका मताः इति। अपुत्र पुत्रसन्ताने - गौणमुख्यरूपोभयविध पुत्रपौत्रतत्सन्तत्यभावे इत्यर्थः । स्मृत्यन्तरेऽपि – पुत्रश्च दुहिता चैव तुल्यसन्तानकारकौ इति । पुत्रिकापुत्रभावे दत्तः कर्ता, कस्मिंश्चित्प्रतिगृहीते यद्यौरस उत्पद्येत स चतुर्थांशभाक्, इति वसिष्ठ स्मरणेन औरस-चतुर्थांशभाजो दत्तस्य व्यवहितत्वेन समांशभाजः पुत्रिकापुत्रस्यैव प्राथम्यम् । दत्ताभावे धनहारी दौहित्रः कर्ता । तत्र विष्णुः – अपुत्रपुत्रासन्ताने दौहित्रा धनमाप्नुयुः । पूर्वेषान्तु स्वधाकारे पुत्रा दौहित्रका माताः इति । अपुत्रपुत्रसन्ताने - गौणमुख्यरूपोभय-विधपुत्रपौत्रतत्सन्तत्यभावे इत्यर्थः । स्मृत्यन्तरेऽपि – पुत्रश्च दुहिता चैव तुल्यसन्तानकारकौ इति ।

*புத்ரிகாபுத்ரனில்லாவிடில் தத்தன்(ஸ்வீக்ருதன்) கர்த்தா. "ஒருவனை ஸ்வீகாரம் செய்துகொண்ட பிறகு ஔரஸன் உண்டானல், அவன்(ஸ்வீக்ருதன்) நாலிலொரு பாகத்தை அடைய உரியவன்' என்ற வஸிஷ்ட ஸ்ம்ருதியினல், ஔரஸனுடைய தனத்தில் நாலிலொரு பாகத்தையடையும் ஸ்வீக்ருதன் வ்யவஹிதனுயிருப்பதால், பாதி பாகத்தையடையும் புத்ரிகாபுத்ரனே முதல்வனுகிருன். தத்தன் (ஸ்வீக்ருதன்) இல்லாவிடில், தனஹாரியான (பணத்தை அடைபவனுன) தௌஹித்ரன் கர்த்தா. அவ்விஷயத்தில், விஷ்ணு:- புத்ர பௌத்ர*

ஸந்தானமில்லாதவன் விஷயத்தில், தௌஹித்ரர்கள் தனத்தை அடையவேண்டும். முன்னோர்களுக்கு க்ரியை செய்யும் விஷயத்தில், தௌஹித்ரர்கள் பௌத்ரர்களாக மதிக்கப்பட்டுள்ளனர். 'அபுத்ரபௌத்ர ஸந்தானே' என்பதற்குக் கௌண முக்யரூபமாய் இருவிதமான புத்ரன் பௌத்ரன் அவன் ஸந்ததி இவை இல்லாவிடில் என்பது பொருள். **மற்றொரு ஸ்ம்ருதியிலும்:-** புத்ரனும் பெண்ணும் ஸமானமான ஸந்ததிக்குக் காரணமாகியவர்கள்.

मनुरपि – पुत्रदौहित्रयोर्लोके विशेषो नास्ति धर्मतः । दौहित्रो ह्यखिलं रिक्थमपुत्रस्य पितुर्हरेत् । स एव दद्याद्द्वौ पिण्डौ पित्रे मातामहाय च इति । स्मृत्यन्तरेऽपि – श्राद्धं मातामहानां च अवश्यं धनहारिणा । दौहित्रेण विधिज्ञेन कर्तव्यं पूर्वमुत्तरम् इति । धनग्रहणाभावेऽपि दौहित्रोऽधिकारी । तथा भविष्यत्पुराणे – यथा व्रतस्थोऽपि सुतः कुर्यात् प्रेतक्रियां नृप । मातामहस्य दाहाद्यां दौहित्रोऽपि तथाऽर्हति इति । गृह्यपरिशिष्टे – पितामहस्य तत्पत्न्या मातामह्योस्तथैव च । पिण्डदानादिकं सर्वं मातापित्रोः समं विदुः इति । पराशरः – पूर्वाः क्रिया मध्यमाश्च तथा चैवोत्तराः क्रियाः । आद्यादाद्वादशाहाच्च मध्ये याः स्युः क्रिया मताः । ताः पूर्वा मध्यमा मासि मास्येकोद्दिष्टसंज्ञिताः । प्रेते पितृत्वमापन्ने सपिण्डीकरणादनु । क्रियन्ते याः क्रियाः पित्र्याः प्रोच्यन्ते तास्तथोत्तराः । पितृमातृसपिण्डैस्तु समानसलिलैस्तथा । तत्सङ्घातगतैश्चापि राज्ञा वा धनहारिणा । आद्या मध्याः क्रियाः कार्याः पुत्राद्यैरपि चोत्तराः । दौहित्रैर्वा तथा कार्याः सर्वास्तत्तनयैस्तथा इति । एकोद्दिष्टान्ताः सापिण्ड्यान्तास्तदुत्तराश्च त्रिविधा इत्यर्थः ।

**மனு:-** உலகில் பௌத்ரனுக்கும், தௌஹித்ரனுக்கும் பேதமில்லை. புத்ரனில்லாதவனின் தனம் முழுவதையும் தௌஹித்ரன் அடையவேண்டும். அவனே பிதாவுக்கும்,

மாதாமஹனுக்கும் இரண்டு பிண்டங்களைக் கொடுக்கவேண்டும். மற்றொரு ஸ்ம்ருதியில் தனஹாரியான தௌஹித்ரன் விதியை அறிந்து, மாதாமஹனுக்குப் பூர்வம் உத்தரம் என்ற க்ரியைகளை அவச்யம் செய்யவேண்டும். தனத்தை க்ரஹிக்காவிடினும் தௌஹித்ரன் க்ரியாதிகாரீ. அவ்விதம், **பவிஷ்யத் புராணத்தில்:-** ஓ அரசனே! ப்ரம்ஹசாரியாயினும் புத்ரன் பிதாவுக்கு ப்ரேதக்ரியையை எப்படிச் செய்யவேண்டுமோ அப்படியே தௌஹித்ரனும் மாதாமஹனுடைய தாஹாதிகளைச் செய்ய அர்ஹனாகிறான். **க்ருஹ்ய பரிசிஷ்டத்தில்:-** பிதாமஹன், பிதாமஹீ, மாதா மஹன், மாதாமஹீ இவர்களுக்குப் பிண்டதானம் முதலியதெல்லாம் மாதா பிதாக்களுக்குச் செய்வதுபோல் செய்யவேண்டுமென்கிறார்கள்.

पराशरः – पूर्वाः क्रिया मध्यमाश्च तथा चैवोत्तराः क्रियाः । आद्यादाद्वादशाहाच्च मध्ये याः स्युः क्रिया मताः । ताः पूर्वा मध्यमा मासि मास्येकोद्दिष्टसंज्ञिताः । प्रेते पितृत्वमापन्ने सपिण्डी-करणादनु । क्रियन्ते याः क्रियाः पित्र्याः प्रोच्यन्ते तास्तथोत्तराः । पितृमातृसपिण्डैस्तु समानसलिलैस्तथा । तत्सङ्घातगतैश्चापि राज्ञा वा धनहारिणा । आद्या मध्याः क्रियाः कार्याः पुत्राद्यैरपि चोत्तराः । दौहित्रैर्वा तथा कार्याः सर्वास्तत्तनयैस्तथा इति । एकोद्दिष्टान्ताः सापिण्ड्यान्तास्तदुत्तराश्च त्रिविधा इत्यर्थः ।

**பராசரர்:-** க்ரியைகள், பூர்வங்கள் என்றும், மத்யமங்கள் என்றும், உத்தரங்கள் என்றும் மூன்று விதங்கள். முதல் நாள் முதல் 11-ஆவதுநாள் முடியும் வரையிலுள்ள க்ரியைகள் பூர்வக்ரியைகள். பிறகு ஒவ்வொரு மாதத்திலும் ஏகோத்திஷ்ட மெனப்படும் மாஸிகங்கள் மத்யமக்ரியைகள். ஸபிண்டீகரணமான பிறகு செய்யப்படும் க்ரியைகள் உத்தரக்ரியைகள் எனப்படும். பிதாவின் ஸபிண்டர்கள், மாதாவின் ஸபிண்டர்கள், ஸமானோதகர்கள், அவர்கள் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள்,

தனஹாரியான அரசன் இவர்கள் பூர்வக்ரியைகள், மத்யக்ரியைகள் இவைகளைச் செய்யவேண்டும். புத்ரன் முதலிய கர்த்தாக்களோ உத்தரக்ரியைகளையும் செய்ய வேண்டும். தௌஹித்ரகளும் அவர்களின் புத்ரர்களும் உத்தர க்ரியைகளைச் செய்யவேண்டும். ஏகோத்திஷ்டம் வரையிலுள்ளவைகளும், ஸாபிண்ட்யம் வரையிலுள்ளவைகளும், அதற்கு மேலுள்ளவைகளுமாக மூன்று விதம் க்ரியைகள் என்பது பொருள்.

अह्नां दशानां मध्ये याः क्रिया दाहादिकाः स्मृताः। ताः पूर्वा मध्यमा मासि इति पाठमाश्रित्य कालादर्शकारेण सङ्गृहीतम् – दाहाद्दशाहपर्यन्ताः सापिण्ड्यान्ता अथ क्रियाः। तदूर्ध्वाश्च क्रमात् पूर्वा मध्यमाश्चोत्तराः स्मृताः। पुत्रैश्च भ्रातृतत्पुत्रैः पत्न्या शिष्येण वाऽखिलाः। क्रियाः कार्याः समादिष्टाः शेषैः पूर्वाश्च मध्यमाः इति।

இங்கு "அஹ்நாம் தசாநாம் + மாஸி" என்ற பாடபேதத்தை ஆச்ரயித்து காலாதர்சகாரர் மேல் வருமாறு ஸங்க்ரஹித்துள்ளார். அதாவது " தாஹம் முதல் தசாஹம் வரையுள்ள க்ரியைகளும், அதற்குமேல் ஸபிண்டீகரணம் வரையுள்ள க்ரியைகளும், அதற்குமேலுள்ள க்ரியைகளும், முறையே பூர்வக்ரியைகள், மத்யம க்ரியைகள், உத்தர க்ரியைகள் எனப்படுகின்றன. புத்ரர்கள், பிராதாக்கள், ப்ராத்ருபுத்ரர்கள், பத்னீ, சிஷ்யன் இவர்கள் மூன்று விதமான எல்லா க்ரியைகளையும் செய்யவேண்டும். மற்றவர்கள் பூர்வக்ரியைகள், மத்யம க்ரியைகள் இவைகளை மட்டும் செய்யவேண்டும்" என்று.

अपुत्रस्य मातामहस्य मरणे धनहारिणा दौहित्रेण त्रिविधा अपि क्रियाः कार्याः – मलमेतन्मनुष्याणां द्रविणं यत् प्रकीर्तितम्। तद्गृह्णन् मलमादत्ते दुर्जरं ज्ञानिनामपि। ऋषिभिस्तस्य निर्दिष्टा निष्कृतिः पावनी परा। आदेहपतनात्तस्य कुर्यात् पिण्डोदक-क्रियाम् इति स्मरणात्।

*அபுத்ரனுன மாதாமஹனின் மரணத்தில், தனஹாரியான தௌஹித்ரன் மூன்றுவிதமான க்ரியைகளையும் செய்யவேண்டும். தனமென்பது மனிதர்களின் மலம்(பாபம்) எனச் சொல்லப்பட்டுள்ளது. தனத்தை அடைபவன், ஞானிகளாலும் அழிக்க முடியாத பாபத்தையே க்ரஹித்துக்கொள்ளுகிறுன். அவனுக்கு மிகப் பரிசுத்திகரமான ப்ராயச்சித்தத்தை முனிவர்கள் சொல்லியுள்ளனர். 'தன் தேஹமழியும் வரையில் இறந்தவனுக்கு பிண்டோதகதானத்தைச் செய்ய வேண்டும்' என்று.*

धनग्रहणाभावेऽपि कर्त्रन्तराभावे त्रिविधा अपि क्रियाः कार्याः – अप्यदायहरोऽपुत्रीकृतोऽपि दुहितुः सुतः । मातामहस्य विधिवत् कुर्यादेवोत्तराः क्रियाः इति स्मरणात् । पूर्वमध्यक्रिया-करणाभावे अवश्यकर्तव्याया उत्तरक्रियायाः कर्तुमयुक्तत्वात् । कर्त्रन्तरसद्भावे तु धनहरणयोग्यतारहितेन दौहित्रेणाद्यादिक्रिया न कार्याः । तत्राब्दिकव्यतिरिक्त महालयादयस्तु कर्तव्याः – पितॄन्मातामहांश्चैव द्विजः श्राद्धेन तर्पयेत् । अनृणी स्यात् पितॄणां तु ब्रह्मलोकं च गच्छति । पार्वणं कुरुते यस्तु केवलं पितृहेतुतः । मातामहे न कुरुते पितृहा स प्रजायते इति व्यासस्मरणात् । कर्षूसमन्वितं मुक्त्वा तथाऽऽद्यश्राद्धषोडशम् । प्रत्याब्दिकं च शेषेषु पिण्डाः स्युष्षडिति स्थितिः इति कात्यायनस्मरणाच्च । कर्षूसमन्वितं - कुण्डान्वितम्, सपिण्डीकरणमिति यावत् । शेषेषु महालयमन्वाद्यादिषु, वर्गद्वयपितॄनुद्दिश्य भोजनं षट्पिण्डाश्च भवन्तीत्यर्थः ।

*தனத்தை அடையா விடினும், வேறு கர்த்தா இல்லாவிடில் மூன்று விதமான க்ரியைகளையும் செய்யவேண்டும். ''பணத்தை அடையாதவனுயினும் புத்ரனுய்ச் செய்யப்பட்ட தௌஹித்ரன், மாதாஹனுக்கு*

உத்தரக்ரியைகளை விதிப்படி செய்யவே வேண்டும்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால். பூர்வ மத்யக்ரியைகளைச் செய்யாவிடில், அவச்யம் செய்யவேண்டிய உத்தர க்ரியைகளைச் செய்வது யுக்தமாகாதானதால். வேறு கர்த்தா இருந்தால், தனத்தை அடைவதற்கு யோக்யதை யில்லாத தௌஹித்ரன் பூர்வக்ரியை முதலியவைகளைச் செய்யவேண்டியதில்லை. அவைகளுள் ப்ரத்யாப்திகம் தவிர மற்ற மஹாளயம் முதலியவைகளைச் செய்ய வேண்டும். '' ப்ராம்ஹணன் பித்ருக்களையும், மாதா மஹர்களையும் ச்ராத்தத்தால் தர்ப்பிக்கவேண்டும். இதனால் பித்ருக்களுக்கு ருணமற்றவனாகிறான். ப்ரம்ஹ லோகத்தையுமடைகிறான். எவன் பிதாவுக்கு மட்டும் பார்வணத்தைச் செய்கின்றானோ, மாதாமஹனுக்குச் செய்வதில்லையோ அவன் பித்ருஹத்யை செய்தவனாகிறான்'' என்று வ்யாஸஸ்ம்ருதியாலும், ''ஸபிண்டீகரணம், ஆத்ய ச்ராத்தம், ஷோடச ச்ராத்தம், ப்ரத்யாப்திகம் இவை தவிர மற்ற ச்ராத்தங்களில் ஆறு பிண்டங்கள் உண்டு என்பது நிர்ணயம்'' என்று காத்யாயன ஸ்ம்ருதியாலும். மூலத்திலுள்ள 'கர்ஷூஸமன்விதம்' என்பதற்கு ஸபிண்டீகரணம் என்பது பொருள். 'சேஷேஷு' என்பதற்கு மஹாளய மன்வாத்யாதிகளில் என்ற பொருள். இவைகளில் வர்க்கத்வய பித்ருக்களை உத்தேசித்துப் போஜனமும், ஆறு பிண்டங்களும் உண்டு என்பது பொருள்.

मातामहस्य भ्रात्रादिसद्भावे संसृष्टस्य तस्य धनग्रहणरहितो दौहित्रोऽनधिकारी, योंऽशहरः स पिण्डदायी इति स्मरणात् । अविभक्तभ्रात्रादिरेवाधिकारीति केचिदाहुः । यथा व्रतस्थोऽपि सुतः कुर्यात् प्रेतक्रियां नृप । मातामहस्य दाहादौ दौहित्रोऽपि तथाऽर्हति इति भविष्यत्पुराणादिवचनात् पुत्रसमत्वेनाविभक्त-भ्रात्रादेः सत्वे धनग्रहणरहितोऽपि दौहित्र एव प्रेतक्रियायामधि-कारीत्यन्ये । यथोचितमत्र ग्राह्यम् ।

மாதாமஹனுக்கு ப்ராதா முதலியவர் இருந்து, பாகமாகாமல் சேர்ந்திருந்து, அவனுடைய தனத்தை யடையாமலிருக்கும் தௌஹித்ரன் அதிகாரியல்ல. 'எவன் தனஹாரியோ அவன் க்ரியாதிகாரீ' என்று ஸ்ம்ருதியிருப்பதால். விபாகமாகாமலிருக்கும் ப்ராதா முதலியவனே க்ரியாதிகாரீ, என்கின்றனர் சிலர். 'யதாவ்ரதஸ்தோ+ததார்ஹதி' என்ற பவிஷ்யத்புராணாதி வசனங்களால் புத்ரனுக்குச் சமானனானதால் விபாகமாகாத ப்ராதா முதலானவரிருப்பதால் தனக்ரஹண மில்லாதவனாயினும், தௌஹித்ரனே மாதாமஹனின் ப்ரேதக்ரியையில் அதிகாரீ என்கின்றனர் மற்றவர். இவ்விஷயத்தில் எது உசிதமோ அதை க்ரஹிக்கவும்.

## दौहित्राभावे पत्न्या अधिकारः ।

अत्र वृद्धमनुः – अपुत्रा शयनं भर्तुः पालयन्ती व्रते स्थिता । पत्न्येव दद्यात्तत्पिण्डं कृत्स्नमंशं लभेत च इति । सुमन्तुरपि – अपुत्रे संस्थिते कर्ता न भवेच्छ्राद्धकर्मणि । तत्र पत्न्यपि कुर्वीत सापिण्ड्यं पार्वणं तथा इति । कर्ता न भवेत् - पौत्रादिदौहित्रान्तः कर्ता यदि न भवेदित्यर्थः ।

### தௌஹித்ரனில்லாவிடில் பத்நிக்கு அதிகாரம்.

இவ்விஷயத்தில், வ்ருத்தமனு பர்த்தாவின் சயனத்தைப் பரிபாலிப்பவளும் பதிவ்ரதையுமான பத்னீ புத்ரனில்லாதவளாகில் அவளே பர்த்தாவுக்கு க்ரியையைச் செய்யவேண்டும். பர்த்தாவின் தனம் முழுவதையும் அவளே அடையவேண்டும். ஸுமந்துவும்:- புத்ரனில்லாதவனிறந்தால், உத்தர க்ரியைக்குக் கர்த்தா இல்லாவிடில், அவன் விஷயத்தில் பத்னியும் ஸாபிண்ட்யம் ச்ராத்தம் இவைகளைச் செய்யலாம். கர்த்தா இல்லாவிடில் என்பதற்குப் பௌத்ரன் முதல் தௌஹித்ரன் வரையுள்ள கர்த்தா இல்லாவிடில் என்பது பொருள்.

दौहित्रापेक्षया पत्न्याः प्राथम्यमाह, सङ्ग्रहकारः – पुत्रः कुर्यात् पितुः श्राद्धं पत्नी च तदसन्निधौ । धनहार्यथ दौहित्रस्ततो भ्राता च तत्सुतः इति । तथा च शङ्खः – पितुः पुत्रेण कर्तव्या पिण्डदानोदकक्रिया । पुत्राभावे तु पत्नी स्यात् पत्न्यभावे तु सोदरः इति । चन्द्रिकायामिदं व्याख्यातम् – पुत्रग्रहणेनात्र गौणा मुख्याश्च गृह्यन्ते तदपि पौत्राभावविषयम् । तदपि दायहरत्वाभावविषयम् । अन्यथा तु यो दायहरः स एव दद्यात् । अत एव विष्णवापस्तम्बौ – यश्चार्थहरः स पिण्डदायी । पुत्रः पितृवित्ताभावेऽपि पिण्डं दद्यात् इति ।

*தௌஹித்ரனைவிடப் பத்னிக்கு முதன்மையைச் சொல்லுகிறார் **ஸங்க்ரஹகாரர்:-** பிதாவுக்குப் புத்ரன் க்ரியை செய்யவேண்டும். அவன் ஸன்னிஹிதனு யில்லாவிடில் பத்னீ செய்யவேண்டும். அவளில்லாவிடில் தனஹாரியான தௌஹித்ரன், பிறகு ப்ராதா, பிறகு ப்ராத்ரு புத்ரன் செய்யவேண்டும். **அவ்விதமே சங்கர்:-** பிதாவுக்குப் புத்ரன் பிண்டோதகதான க்ரியையைச் செய்யவேண்டும். புத்ரனில்லாவிடில் பத்னீ, அவளில்லாவிடில், ஸஹோதரன் செய்யவேண்டும். சந்த்ரிகையில் இதற்கு வ்யாக்யானம் செய்யப்பட்டுள்ளது- ''புத்ரனென்றதால் இங்குக் கௌணபுத்ரர்களும் முக்யபுத்ரர்களும் க்ரஹிக்கப்படுகின்றனர். அதுவும் பௌத்ரனில்லாத விஷயம். அதுவும் தனத்தை அடைபவனில்லாத விஷயம். மற்ற விஷயத்தில் எவன் தனஹாரியோ அவனே க்ரியாதிகாரீ. ஆகையால் தான் **விஷ்ணுவும், ஆபஸ்தம்பரும்:-** 'எவன் தனஹாரியோ அவனே பிண்டதானுதிகாரீ, புத்ரன் பிதாவின் தனத்தை அடையாவிடினும் பிண்டதானம் செய்யவேண்டும்'' என்றனர்.*

अत एव याज्ञवल्क्येनापि – पिण्डदोंऽशहरश्चैषां पूर्वाभावे परः परः इति पिण्डदत्वांशहरत्वयोरैकाधिकरण्यमुक्तम् । एवं

सोदरेऽपि द्रष्टव्यमिति । अनेनैवाभिप्रायेण गौतमोऽपि – पुत्राभावेऽस्य बान्धवाः सपिण्डाः पिण्डं मातृसपिण्डाः शिष्याश्च दद्युस्तदभाव ऋत्विगाचार्यौ इति ।

*ஆகையால்தான் யாஜ்ஞவல்க்யராலும், 'இவர்களுள் க்ரியையைச் செய்பவனும், தனத்தை அடைபவனும், முந்தியவன் இல்லாவிடில் பிந்தியவன்' என்று பிண்டதத்வமும், தனஹாரித்வமும் ஒரே இடத்திலுள்ளதெனச் சொல்லப்பட்டது. இவ்விதம் ஸஹோதர விஷயத்திலும் காணவேண்டும் என்று. இந்த அபிப்ராயத்தைக் கொண்டே, கௌதமரும்:- புத்ரனில்லாவிடில், இவனின் பந்துக்கள், ஸபிண்டர்கள், மாத்ரு ஸபிண்டர்கள், சிஷ்யர்கள் பிண்டத்தைக் கொடுக்கவேண்டும். அவர்களில்லாவிடில், ருத்விக், ஆசார்யன் இவர்கள் கொடுக்கவேண்டும்.*

अंशहरत्वे भ्रात्रादिसपिण्डानां पत्न्याद्यपेक्षयाऽभ्यर्हितत्वमाह मार्कण्डेयोपि– पुत्राभावे सपिण्डास्तु तदभावे तु सोदकाः । मातुः सपिण्डा ये वा स्युर्ये वा मातुश्च सोदकाः इति । मातुः सपिण्डाः - मातुलादयः । मार्कण्डेयपुराणेऽपि – पुत्रो भ्राता च तत्पुत्रः पत्नी माता पिता तथा । वित्ताभावेऽपि शिष्यश्च कुर्वीरन्नौर्ध्वदैहिकम् इति ।

*தனஹாரித்வமிருந்தால் ப்ராதா முதலிய ஸபிண்டர்களுக்கு பத்னியைவிட ஸாமீப்யத்தைச் சொல்லுகிறுர்* **மார்க்கண்டேயரும்:-** *புத்ரனில்லாவிடில் ஸபிண்டர்கள், அவர்கள் இல்லாவிடில் ஸமாநோதகர்கள், மாத்ருஸபிண்டர்கள், மாத்ருஸமாநோதகர்கள் அதிகாரிகள். மாத்ருஸபிண்டர்கள் - மாதுலாதிகள்.* **மார்க்கண்டேய புராணத்திலும் :-** *பணமில்லாவிடினும், புத்ரன், ப்ராதா, ப்ராத்ரு புத்ரன், பத்னீ, மாதா, பிதா, சிஷ்யன் இவர்கள் அபரக்ரியையைச் செய்யவேண்டும்.*

अंशहरत्वे तु पत्न्याः प्राथम्यमाह कात्यायनः – अपुत्रस्याथ कुलजा पत्नी दुहितरोऽपि वा। तदभावे पिता माता भ्राता तत्पुत्र एव च इति। एतच्च ब्राह्मादिविवाहोढाविषयम्। तस्या यज्ञान्वितत्वेन तत्रैव पत्नीशब्दप्रयोगात्। इतरत्र तु - क्रयक्रीता तु या नारी न सा पत्न्यभिधीयते। न सा दैवे न सा पित्र्ये दासीं तां कवयो विदुः इति पत्नीत्वाभावात्।

*தனஹாரித்வமிருக்கும் பக்ஷத்தில் பத்னிக்கு முதன்மையைச் சொல்லுகிறார். காத்யாயனர் - புத்ரனில்லாதவனுக்கு நற்குலத்தில் பிறந்த பத்னீ, அல்லது பெண்கள், அவர்களில்லாவிடில் பிதா, மாதா, ப்ராதா, ப்ராத்ரு புத்ரன் இவர்கள் கர்மாதிகாரிகள். பத்னியைச் சொல்லியது ப்ராம்ஹாதி விவாஹத்தால் மணக்கப்பட்டவளின் விஷயம். அவள் யஜ்ஞத்தில் சேர்ந்திருப்பதால் அவளிடத்திலேயே 'பத்நீ' சப்தம் ப்ரயோகிக்கப்படுகிறது. மற்ற பத்நீ விஷயத்திலோ 'க்ரயத்தால் வாங்கப்பட்டவளெவளோ அவள் 'பத்னீ' எனப்படுவதில்லை. அவள் தைவ கர்மத்திலும் யோக்யையல்லள், அவள் பித்ரு கர்மத்திலும் யோக்யையல்லள். அவளை 'வேலைக்காரி என்கின்றனர் அறிந்தவர்கள்: பத்னித் தன்மையே இல்லாததால்.*

अत एवासुरादिविवाहोढाविषये विष्णुपुराणे पराशरः – पुत्रः पौत्रः प्रपौत्रो वा तद्वद्वा भ्रातृसन्ततिः। सपिण्डसन्ततिर्वापि क्रियार्हा नृप जायते। तेषामभावे सर्वेषां समानोदकसन्ततिः। मातृपक्षस्य पिण्डेन सम्बद्धा ये ज(कु)लेन वा। कुलद्वयेऽपि चोत्सन्ने स्त्रीभिः कार्या क्रिया नृप। उत्सन्नबन्धो रिक्थेन कारयेदवनीपतिः इति। मार्कण्डेयोऽपि – सर्वाभावे स्त्रियः कुर्युः स्वभर्तॄणाममन्त्रकम्। तदभावे च नृपतिः कारयेत् स्वकुटुम्बिनाम्। तज्जातीयैर्नरैः सम्यग्दाहाद्याः सकलाः क्रियाः। सर्वेषामेव वर्णानां

बान्धवो नृपतिर्यतः इति । स्वभर्तॄणाममन्त्रकमिति चाधर्मविवाहोढाविषयम्। ब्राह्मादिविवाहोढा तु मन्त्रवदेव कुर्यात्, यज्ञेषु मन्त्रवत्कर्म पत्नी कुर्याद्यथाविधि । तदौर्ध्वदैहिके सा हि मन्त्रार्हा धर्मसंस्कृता इति स्मरणात्।

ஆகையால்தான், ஆஸுராதி விவாஹத்தால் மணக்கப்பட்டவள் விஷயத்தில், **விஷ்ணு புராணத்தில், பராசரர்:-** புத்ரன், பௌத்ரன், ப்ரபௌத்ரன், அதுபோல் ப்ராதாவின் ஸந்ததி, ஸபிண்டனின் ஸந்ததி இவர்கள் க்ரியைக்கு அர்ஹராகின்றனர். அவரெல்லோரு மில்லாவிடில் ஸமாநோதக ஸந்ததி, மாத்ரு ஸபிண்டர்கள், மாத்ரு குலத்தைச் சேர்ந்தவர்கள் இவர்கள் அதிகாரிகள். இருகுலத்திலுமொருவரு மில்லாவிடில் ஸ்த்ரீகள் க்ரியையைச் செய்யவேண்டும். அவருமில்லாவிடில் பந்துகளில்லாதவனின் பணத்தைக்கொண்டு அரசன் செய்விக்கவேண்டும். **மார்க்கண்டேயரும்:-** எல்லோரு மில்லாவிடில் ஸ்த்ரீகள் தன் பர்த்தாக்களுக்கு மந்தர மில்லாமல் செய்யவேண்டும். அவர்களு மில்லாவிடில் அரசன் தன் குடும்பத்தி லிருப்பவரும் இறந்தவனுக்கு ஸஜாதீயர்களுமான மனிதர்களைக் கொண்டு, தாஹம் முதலிய ஸகலக்ரியைகளையும் நன்றாகச் செய்விக்க வேண்டும். எல்லா வர்ணங்களுக்குமே அரசன் பந்து. 'தம் பர்த்தாக்களுக்கு மந்த்ரமில்லாமல் செய்யவேண்டும்' என்றது அதர்ம விவாஹத்தால் மணக்கப்பட்டவளின் விஷயம். ப்ராம்ஹாதி விவாஹத்தால் மணக்கப் பட்டவளோ மந்த்ரத்துடனேயே செய்யவும். 'யஜ்ஞங்களில் பத்னீ மந்த்ரத்துடன் விதிப்படி கர்மத்தைச் செய்யவேண்டும். மந்த்ரத்தால் ஸம்ஸ்காரமடைந்த அவள், பர்த்தாவின் அபரக்ரியையிலும் மந்த்ரத்திற்கு அர்ஹையாகிறாள்' என்று ஸ்ம்ருதியிருப்பதால்.

## रजोमध्ये पतिमरणे –

रजोमध्ये पतिमरणे सङ्ग्रहकारः – रजोमध्ये तु भार्याया दैवात् भर्तुर्मृतिर्यदि । पुत्रहीनस्य कर्तव्यं न तया दहनादिकम् । अन्यैस्तदनुमत्या च न कार्यं प्रेतकर्म हि । तूष्णीं दग्ध्वा चतुर्थेऽह्नि पुनः स्नानं विधाय च ॥ प्रेतकर्म तया कार्य मथवा पञ्चमेऽहनि । रजोमध्ये तु यः कश्चिद्द्रव्याशापरिमोहितः । कुर्याच्चेत् प्रेतकृत्यं तु कर्ता चैव प्रमीयते । अधोगतिं प्रयात्येव कुलहानिर्भवेद्ध्रुवम् इति । मरणदिने तूष्णीं दाहयित्वा चतुर्थे पञ्चमे वा तया पुनर्दहनं कार्यमित्यर्थः ।

**ரஜோ மத்யத்தில், பதியின் மரணத்தில்**

*ரஜ: கால மத்யத்தில் பதியின் மரணமேற்பட்டால்,* **ஸங்க்ரஹகாரர்:-** *பார்யையின் ரஜ: கால மத்யத்தில் தைவாதீனமாய்ப் பர்த்தாவின் மரணமேற்பட்டால், அவன் புத்ரனில்லாதவனுகில் பார்யை தஹனம் முதலியதைச் செய்யக்கூடாது. அவள் அனுஜ்ஞையினுல் பிறரும் செய்யக்கூடாது. ம்ருதி தினத்தில் மந்த்ரமில்லாமல் தஹனம் செய்து, நான்காவது நாளில் பார்யை மறுபடி ஸ்நானம் செய்து ப்ரேதகர்மத்தைச் செய்யலாம். அல்லது ஐந்தாவது நாளில் செய்யலாம். வேறு எவனுவது பணத்தாசையால் மயங்கி ப்ரேத க்ருத்யத்தைச் செய்தால் அந்தக் கர்த்தா மரிப்பான். நரகத்தை யடைவான். குலத்திற்கு ஹானிவரும். நிச்சயம். மரண தினத்தில் மந்த்ரமில்லாமல் தஹித்து நான்காவது நாளில், அல்லது ஐந்தாவது நாளில், பார்யையினுல் தஹனம் செய்யப்படவேண்டுமென்பது பொருள்,*

सङ्ग्रहान्तरे – प्राजापत्यं तीर्थकृच्छ्रं वारुणं च समाचरेत् । ब्राह्मणानां च वाक्येन गृहीत्वा तत्करात् कुशम् । विधिवद्दहनं कुर्यात् पिता भ्राताऽथवा परः इति । रजस्वलास्नानप्रकारेणोद्धृततोयेन स्नापयित्वा तद्धस्तात् कुशमादाय कुर्यादित्यर्थः ।

மற்றொரு ஸங்க்ரஹத்தில்:- ப்ராஜாபத்யம், தீர்த்தக்ருச்ரம், வாருணம் இவைகளைச் செய்யவும். ப்ராம்ஹணர்களின் அனுஜ்ஞையினால் அவளின் கையிலிருந்து தர்ப்பையை க்ரஹித்து, பிதா அல்லது ப்ராதா, அன்யன் விதிப்படி தஹனம் செய்யவும். 'ரஜஸ்வலாஸ்நானப்ரகாரம் உத்த்ருதஜலத்தால் ஸ்நானம் செய்வித்து,அவள் கையிலிருந்து தர்ப்பத்தை க்ரஹித்துச் செய்யவேண்டுமென்பது பொருள்.

पुत्रादिदौहित्रान्तराभावे पत्न्याः पतिः कुर्यात् । तथा च कात्यायनः – तेषामभावे तु पतिस्तदभावे सपिण्डकाः । अपुत्रायाः पतिर्दद्यात् सपुत्राया न तु कचित् । सङ्ग्रहे – भार्यापिण्डं पतिर्दद्यात् भर्तृभार्ये परस्परमिति ।

பௌத்ரன் முதல் தௌஹித்ரன் வரையிலுள்ளவர்கள் இல்லாவிடில், பத்னிக்குப் பதி செய்யவேண்டும். அவ்விதமே, காத்யாயனர்:- அவர்களில்லாவிடில் பதி, அவனில்லாவிடில் ஸபிண்டர்கள். புத்ரனில்லாதவளுக்கே பதி செய்யவேண்டும். புத்ரனுடையவளுக்குப் பதி ஒருகாலும் செய்யக்கூடாது. ஸங்க்ரஹத்தில்:- பார்யைக்குப் பிண்டத்தைப் பதி கொடுக்கவேண்டும். பர்த்தாவும் பார்யையும் பரஸ்பரம் கர்த்தாக்களாவர்.

तथा च स्मृतिरत्ने – अप्रजायामतीतायां भर्तुरेव तदिष्यते । पतिरेव क्रियां कुर्यादपुत्राया मृतस्त्रियाः इति । तत् - पत्नीधनम् । सपत्नीपुत्रसद्भावेऽपि भर्त्रैव दाहादिकं कार्यमित्यर्थः । तत्रैव — एकभर्तृक पत्नीनामपुत्रा निधनं गता । अन्यस्याः पुत्रवत्त्वेऽपि कर्ता भर्तैव तत्र तु । पत्यभावे तु सापत्न्यः पुत्र एव नियुज्यते । तदभावे तु तत्पुत्र आसन्नोऽन्यस्ततः परम् इति । एतच्च सपत्नीपुत्रापेक्षया भर्तुरभ्यर्हितत्ववचनं स्त्रीधनग्रहणविषयम् । अन्यथा सपत्नीपुत्र एव कर्तेत्याहुः ।

**ஸ்ம்ருதிரத்னத்தில்:-** ப்ரஜையில்லாத பார்யை இறந்தால் அவளின் தனம் பர்த்தாவினுடையதே எனப்படுகிறது. புத்ரனில்லாமல் இறந்த ஸ்த்ரீக்குப் பதியே க்ரியையைச் செய்யவேண்டும். இறந்தவளின் ஸபத்னீக்குப் புத்ரனிருந்தாலும் பர்த்தாவே தாஹம் முதலியவைகளைச் செய்யவேண்டுமெனச் சொல்லப் பட்டுள்ளது. **ஸங்க்ரஹத்திலேயே:-** "ஒருவனுக்குப் பத்னீகளான பல ஸ்த்ரீகளுள் புத்ரனில்லாத ஒருத்தி இறந்தால், மற்றொருத்திக்குப் புத்ரனிருந்தாலும் பர்த்தாவே கர்த்தாவாக ஆவான். பர்த்தா இல்லாவிடில் ஸபத்னீ புத்ரன் கர்த்தா. அவனில்லாவிடில், அவனுடைய புத்ரன். அவனில்லாவிடில் ஸமீபபந்து கர்த்தா" இவ்விதம் ஸபத்னீ புத்ரனைவிடப் பர்த்தாவுக்கு ப்ராதம்யம் சொல்லியது, இறந்தவளின் தனத்தை அடைவதைப் பற்றியது. இல்லாவிடில் ஸபத்நீபுத்ரனே கர்த்தா என்கின்றனர்.

धनग्रहणविषये मनुराह – ब्राह्मदैवार्षगान्धर्वप्राजापत्येषु यद्धनम् । अप्रजायामतीतायां भर्तुरेव तदिष्यते इति । याज्ञवल्क्योऽपि – अप्रजस्त्रीधनं भर्तुर्ब्राह्मादिषु चतुर्ष्वपि । दुहितॄणां प्रसूता चेच्छेषेषु पितृगामि तत् इति ।

தனத்தை அடையும் விஷயத்தில் சொல்லுகிறார் **மனு** - ப்ராம்ஹம், தைவம், ஆர்ஷம், காந்தர்வம், ப்ராஜாபத்யம் என்ற விவாஹங்களுளொன்றால் க்ரஹிக்கப்பட்ட பத்னீ ப்ரஜையில்லாமல் மரித்தால் அவளுடைய தனம் பர்த்தாவையே சேர்ந்ததாகும். **யாஜ்ஞவல்க்யரும்:-** ப்ராம்ஹம் முதலிய நான்கு விவாஹங்களில் க்ரஹிக்கப்பட்ட பத்னீ ப்ரஜையில்லாமல் இறந்தால் அவளுடைய தனம் பர்த்தாவினுடையதே. பெண்ணையுடையவளானால் பெண்ணினுடையது. மற்ற விவாஹங்கள் விஷயத்தில் அவளுடைய தனம் பிதாவைச் சேர்ந்தது.

आसुरादिषु धनग्रहणाभावे तु सपत्नीपुत्रस्य प्राथम्यमाह, कात्यायनः – विदध्यादौरसक्षेत्र्यो जनन्या और्ध्वदैहिकम् । तदभावे सपत्नीजः क्षेत्रजाद्यास्तथा मताः । तेषामभावे तु पति स्तदभावे सपिण्डकाः इति । औरसक्षेत्र्यः स्वीयसन्तानः । स्मृत्यन्तरेऽपि – अपुत्रायाः सपत्नीजः क्षेत्रजाद्याः पतिस्तथा । पूर्वाभावे परः कुर्यात् विधिवत् पैतृमेधिकम् इति । मनुरपि – बह्वीनामेकपत्नीनामेका चेत् पुत्रिणी भवेत् । सर्वास्तास्तेन पुत्रेण प्राह पुत्रवतीर्मनुः इति । बृहस्पतिश्च – बह्वीनामेकपत्नीनामेक एष विधिः स्मृतः । एका चेत् पुत्रिणी तासां सर्वासां पिण्डदस्तु सः इति ।

*ஆஸுராதிவிவாஹங்களில் தனக்ரஹணமில்லாவிடில், ஸபத்னீபுத்ரனுக்கு முதன்மையைச் சொல்லுகிறார், **காத்யாயனர்:-** மாதாவுக்கு, ஔரஸ புத்ரன் உத்தரக்ரியையைச் செய்யவேண்டும். அவனில்லாவிடில் ஸபத்னீ புத்ரன் செய்யவும். அவனில்லாவிடில் க்ஷேத்ரஜன் முதலியவர் கர்த்தாக்கள். அவர்களில்லாவிடில் பதி கர்த்தா. அவனில்லாவிடில் ஸபிண்டர்கள் கர்த்தாக்கள். **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** புத்ரனில்லாதவளுக்கு ஸபத்னீ புத்ரன் கர்த்தா, பிறகு க்ஷேத்ரஜன் முதலியவர், பிறகு பதி. முந்தியவனில்லாவிடில் பிந்தியவன் கர்த்தா. **மனு:-** ஒருவனுக்குப் பத்னிகளான அநேகருள், ஒருத்திக்குப்புத்ரனிருந்தால், அவர்கள் எல்லோரையும் புத்ரவதிகளாகச் சொன்னார் மனு. **ப்ருஹஸ்பதியும்:-** ஒருவனுக்குப் பத்னிகளான பலருக்கும் இது ஒரே விதி சொல்லப்பட்டுள்ளது. அவர்களுள் ஒருத்திக்குப் புத்ரனிருந்தால் அவனே மற்ற எல்லோருக்கும் கர்த்தாவாக ஆகவேண்டும்.*

गौतमोऽपि – पितृपत्न्यः सर्वा मातरः इति। केचिदाहुः – अन्यस्याः पुत्रवत्त्वेपि कर्ता भर्तैव तत्र तु इत्यादिवचनमसवर्णस्त्रीविषयम्, विदध्यादौरसक्षेत्र्यः इत्यादिवचनं सपत्नीपुत्रस्य प्राथम्यप्रतिपादकं सवर्णस्त्रीविषयम् इति । अन्ये तु अत्र प्रमाणाभावात् योंऽशहर इति वचनेनांशग्रहणाग्रहणप्रयुक्ता व्यवस्था युक्तेत्याहुः । अत्र केचित् पौत्रदौहित्राद्यपेक्षया सपत्नीपुत्रस्य प्राथम्यमाहुः। अपरे तु अपुत्रायाः सपत्नीजः इत्यादेः स्वसन्तानाभावविषयत्वात् योंऽशहरः स पिण्डदायी इति स्मरणादंशहरेषु पौत्रादिषु सत्सुदं कथं सापत्न्यस्य प्राथम्यमिति वदन्तस्तन्न क्षमन्ते।

**கௌதமரும்:** *பிதாவின் பத்னிகள் எல்லோரும் மாதாக்கள். இங்கு சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர்:- 'மற்றொருத்திக்குப் பிள்ளையிருந்தாலும் பர்த்தாவே கர்த்தா என்பது முதலிய வசனம் அஸவர்ணஸ்த்ரீ விஷயம். ஔரஸனில்லாவிடில் ஸபத்னீ புத்ரன் கர்த்தா என்பது முதலிய வசனம் ஸவர்ணஸ்த்ரீ விஷயம்' என்று. மற்றவரோவெனில், ''இவ்விதம் சொல்வதில் ப்ரமாணமில்லாததால் 'யோம்சஹர:' என்ற வசனப்படி, தனத்தை அடைவது, அடையாமலிருப்பது இவைகளைப் பற்றியது வ்யவஸ்தை'' என்கின்றனர். (பணத்தை அடைந்தவனே கர்த்தா என்பதாம்) இதில் சிலர், பௌத்ரன் தௌஹித்ரன் இவர்களைவிட ஸபத்னீ புத்ரனுக்கு முதன்மையைச் சொல்லுகின்றனர். மற்றவர் 'அபுத்ராயாஸ் ஸபத்னீஜ:' என்பது முதலிய வசனங்கள் தனது ஸந்தானமில்லாத விஷயத்தைப் பற்றியதால் 'தனத்தை யடைந்தவன் பிண்டத்தைக் கொடுக்கவேண்டும்' என்று ஸ்ம்ருதியிருப்பதால் தனத்தையடையும் பௌத்ராதிகள் இருக்கும்போது, ஸபத்னீ புத்ரனுக்கு எப்படி முதன்மை உண்டு என்று சொல்லுகின்றவர்களாய் அதை ஒப்புவதில்லை.*

तदुक्तं स्मृत्यन्तरे – सपत्न्याः पुत्रवत्त्वेऽपि ह्यपुत्रायाः क्रियां पतिः । दौहित्रपत्यभावे तु सपत्नीपुत्र इष्यते इति । धनग्राहिणोः पतिदौहित्रयोरभावे सपत्नीपुत्रः कर्तेत्यर्थः । एतच्च विभक्तविषयम् । अविभागे तु दौहित्रापेक्षया सपत्नीपुत्र एव प्रथमः । पुत्रादेः पत्यन्तस्याभावे दुहिता कर्त्री । अत्र शङ्खः – पुत्राभावे तु कुर्यातां भर्तृभार्ये परस्परम् । अपुत्रस्य तु या पुत्री सैव पिण्डप्रदा भवेत् इति ।

*அது சொல்லப்பட்டது, மற்றொரு ஸ்ம்ருதியில் :- 'ஸபத்னீக்குப் புத்ரனிருந்தாலும், புத்ரனில்லாதவளுக்கு க்ரியையைப் பதியே செய்யவேண்டும். தௌஹித்ரன், பதி ஒருவருமில்லாவிடில் ஸபத்னீ புத்ரனே கர்த்தாவெனப் படுகிறான்' என்று. தனஹாரிகளான பதி, தௌஹித்ரன் இவர்களில்லாவில் ஸபத்னீ புத்ரன் கர்த்தா என்பது பொருள். இதுவும் விபக்தனின் விஷயம். விபாகமில்லாவிடில், தௌஹித்ராதிகளைவிட ஸபத்னீ புத்ரனே முந்தியவன். புத்ரன் முதல் பதி வரையுள்ளவர் இல்லாவிடில், பெண் கர்த்ரீ, இதில், சங்கர்:- புத்ரனில்லாவிடில், பர்த்தாவுக்குப் பார்யையும், பார்யைக்குப் பர்த்தாவும் செய்யவேண்டும். அபுத்ரனுக்குப் புத்ரியிருந்தால், அவளே பிண்டத்தைக் கொடுப்பவளாக வேண்டும்.*

भर्त्रभावे दुहिता मातुः कुर्यात्, पत्न्यभावे पितुश्चेत्यर्थः । पितृधनभाक्त्वं च तस्याः स्मर्यते देवलेन – अपुत्रकस्य स्वं कन्या धर्मजा पुत्रवद्धरेत् इति । कन्या - ऊढा अनूढा च । स्मृत्यन्तरेऽपि – यथैवात्मा तथा पुत्रः पुत्रेण दुहिता समा । तस्यामात्मनि तिष्ठन्त्यां कथमन्यो धनं हरेत् इति । अत्र केचित् – पुत्रः कुर्यात् पितुः श्राद्धं पत्नी च तदसन्निधौ । धनहार्यथ दौहित्रस्ततो भ्राता च तत्सुतः इति स्मरणात् पत्नी दुहितरश्चैव पितरौ भ्रातरस्तथा इति धनग्रहणे

क्रमस्मरणाच्च पत्न्या दुहितुश्च दौहित्रात् पूर्वभावित्वमाहुः । पौत्रा दौहित्रका मता इति विष्णुस्मरणात् शिष्टाचाराच्च पत्नीदुहित्र पेक्षया दौहित्रस्यैव प्राथम्यमपरे वदन्ति ।

*பர்த்தா இல்லாவிடில் பெண் மாதாவுக்குச் செய்யவேண்டும். பத்னீ இல்லாவிடில் பிதாவுக்கும் செய்யவேண்டும் என்பது பொருள். பித்ரு தனத்தை அடையும் அதிகாரமும் அவளுக்குச் சொல்லப் பட்டுள்ளது, தேவலரால் 'புத்ரனில்லாதவனின் தனத்தைத் தர்மஜையான கந்யை புத்ரனைப்போல் அடையவேண்டும்' என்று. கந்யை= பெண்-விவாஹமாகியவளும், ஆகாதவளும். மற்ெறாரு ஸ்ம்ருதியில்: தன்னைப்போல் புத்ரன். புத்ரனுக்குச் சமமானவள் பெண். ஆத்மாவான பெண் இருக்கும்பொழுது பிறன் எப்படித் தனத்தை அடையலாம்? இங்குச் சிலர்:-'' பிதாவுக்கு க்ரியையை புத்ரன் செய்யவேண்டும். அவனில்லாவிடில் பத்னீ, பிறகு தனஹாரியான தௌஹித்ரன், பிறகு ப்ராதா, பிறகு ப்ராத்ரு புத்ரன்'' என்ற ஸ்ம்ருதியாலும், ''பத்னீ, பெண்கள், மாதாபிதாக்கள், ப்ராதாக்கள்'' என்று தனத்தையடைவதில் க்ரமம் சொல்லப்பட்டிருப்பதாலும், பத்னீக்கும் பெண்ணுக்கும் தௌஹித்ரனைக் காட்டிலும், முன்பு இருப்பைச் சொல்லுகின்றனர். மற்றவரோவெனில் 'தௌஹித்ரர்கள் பௌத்ரர்களாக மதிக்கப்படுகின்றனர்' என்றுவிஷ்ணு வசனமிருப்பதாலும், சிஷ்டாசாரத்தாலும், பத்நீ, பெண் இவர்களை விடத் தௌஹித்ரனுக்கே முதன்மையைச் சொல்லுகின்றனர்.*

दुहितुरभावे भ्रात्रादिः कर्ता । भ्रातुः सहोदरो भ्राता कुर्याद्दाहादि तत्सुतः । ततस्त्वसोदरो भ्राता तदभावे तु तत्सुतः इति स्मरणात् । स्मृत्यन्तरेऽपि – पत्नी भ्राता च तज्जश्च पिता माता स्नुषा तथा । भगिनी भागिनेयश्च सपिण्डः सोदकस्तथा । असन्निधाने पूर्वेषा मुत्तरे पिण्डदाः स्मृताः इति । विष्णुपुराणेऽपि – पुत्रो भ्राता

च तत्पुत्रः पत्नी माता तथा पिता । वित्ताभावेऽपि शिष्यश्च कुर्वीरन्नौर्ध्वदैहिकम् इति ।

*பெண் இல்லாவிடில், ப்ராதா முதலியவன் கர்த்தா. ''ப்ராதாவுக்கு ஸஹோதர ப்ராதா தாஹம் முதலியதைச் செய்யவும். பிறகு அவனின் புத்ரன், பிறகு பின்னோதர ப்ராதா, அவனில்லாவிடில் அவனது புத்ரன்' என்று ஸ்ம்ருதியிருப்பதால்.* **மற்றொரு ஸ்ம்ருதியிலும்:-** *பத்னீ, ப்ராதா, ப்ராத்ருபுத்ரன், பிதா மாதா, நாட்டுப்பெண், பகினீ, பாகிநேயன், ஸபிண்டன், ஸமானோதகன் என்ற இவர்களுள் முந்தியவர் இல்லாவிடில் பிந்தியவர் க்ரியாதிகாரிகள்.* **விஷ்ணு புராணத்திலும்:-** *புத்ரன், ப்ராதா, ப்ராத்ருபுத்ரன், பத்னீ, மாதா, பிதா, சிஷ்யன் இவர்கள் பணமில்லாவிடினும் அபரக்ரியையைச் செய்யவேண்டும்.*

यत्तु मनुवचनम् — भ्रातॄणामेकजातानामेकश्चेत् पुत्रवान् भवेत् । सर्वे ते तेन पुत्रेण पुत्रिणो मनुरब्रवीत् इति, तत् भ्रात्रपेक्षया भ्रातृपुत्रस्य नाभ्यर्हितत्वप्रतिपादनपरम्, किन्तु भ्रातृपुत्रपरिग्रह-संभवे अन्यं न परिगृह्णीयादित्येवं परमिति विज्ञानेश्वरादिभि-र्व्याख्यातम् ।। अत्र केचिदाहुः – अपुत्रस्याथ कुलजा पत्नी दुहितरोऽपि वा । तदभावे पिता माता भ्राता पुत्राश्च कीर्तिताः इति कात्यायनस्मरणात्, पत्नी दुहितरश्चैव पितरौ भ्रातरस्तथा इति धनग्रहणे क्रमस्मरणाच्च पित्रोः प्राथम्यं भ्रात्रादेस्तु ततो विप्रकर्ष इति ।

*ஆனால்:- ''ஸஹோதரர்களான ப்ராதாக்களுள் ஒருவன் புத்ரனுடையவனாகில், அந்தப் புத்ரனால் எல்லா ப்ராதாக்களும் புத்ரனுடையவர்கள் என்றார் மனு'' என்ற மனுவசனம் உள்ளதே எனில், அந்த வசனம், ப்ராதாவைவிட ப்ராத்ருபுத்ரன் முந்தியவன் என்று சொல்வதில் தாத்பர்யமுள்ளதல்ல. ஆனால், 'ப்ராதாவின் புத்ரனை ஸ்வீகாரம் செய்துகொள்ளும்படியிருந்தால்,*

*மற்றவனை ஸ்வீகரிக்கக்கூடாது என்பதில் தாத்பர்ய முள்ளது' என்று விஜ்ஞானேச்வரர் முதலியவர்களால் வ்யாக்கியானம் செய்யப்பட்டுள்ளது. இங்கு சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர்:- 'அபுத்ரனுக்கு, நற்குலத்திலுத்த பத்னீ, பெண்கள் இவர்களில்லாவிடில் பிதா, மாதா, ப்ராதா, ப்ராத்ருபுத்ரர்கள்' என்று காத்யாயன வசனத்தாலும், 'பத்னீ, பெண்கள், மாதாபிதாக்கள், ப்ராதாக்கள்' என்று தனத்தை அடைவதில் கிரமம் சொல்லப்பட்டிருப்பதாலும், மாதா பிதாக்களுக்கு முதன்மையும், ப்ராதா முதலியவர்க்கு அவர்களை விடத் தூரத்தன்மையும் என்று*

अन्ये तु — पत्नी भ्राता च तत्पुत्रः पिता माता इति पूर्वोक्त वचननिचयबलात् भ्रात्रादेः प्राथम्यमिति वदन्ति । यत्तु बोधायनवचनम् — न च माता न च पिता कुर्यात् पुत्रस्य पैतृकम् । नाग्रजश्च तथा भ्राता भ्रातॄणां च कनीयसाम् इति, यदपि कात्यायनवचनम् – पित्रा श्राद्धं न कर्तव्यं पुत्राणां च कथञ्चन । भ्रात्राऽग्रजेन कर्तव्यं न भ्रातॄणां यवीयसाम् इति, यदपि स्मृत्यन्तरम् – 'न पुत्रस्य पिता कुर्यान्नानुजस्य तथाऽग्रजः इति, तत्सर्वं मुख्याधिकारिपुत्रकनिष्ठभ्रात्रादिसद्भावविषयं, स्नेहविहीनविषयं वा । तथा देवलबोधायनौ — संस्कार्यश्च पिता पुत्रैर्भ्रातरश्च कनीयसा ॥ मातुलस्याप्यपुत्रस्य स्वस्रीया अपि वा मताः । न पुत्रस्य पिता कुर्यान्नानुजस्य तथाऽग्रजः । यदि स्नेहेन कुर्यातां सपिण्डीकरणं विना इति ।

*மற்றவரோவெனில், 'பத்னீ, ப்ராதா, ப்ராத்ருபுத்ரன், பிதா, மாதா' என்று முன் சொல்லிய வசனங்களின் பலத்தால் ப்ராதா முதலியவர்க்கு முதன்மை என்கின்றனர். ஆனால், போதாயனர் சொல்லிய "புத்ரனுக்கு மாதா, பிதா இவர்கள் அபரக்ரியையைச் செய்யக்கூடாது. தமையன் தம்பிகளுக்கும் செய்யக்கூடாது" என்ற வசனமும்,*

*காத்யாயனர் சொல்லிய ''பிதா புத்ரனுக்கு ச்ராத்தத்தை எவ்விதத்திலும் செய்யக்கூடாது. தமையன் தம்பிக்குச் செய்யக்கூடாது'' என்ற வசனமும்,* **மற்றொரு ஸ்ம்ருதியில்** *உள்ள ''புத்ரனுக்குப் பிதா செய்யக்கூடாது. தமயன் தம்பிக்குச் செய்யக்கூடாது'' என்ற வசனமும் உள்ளதே எனில், அவை எல்லாம், முக்யாதிகாரிகளான புத்ரன் கனிஷ்ட ப்ராதா முதலியவர் இருக்கும் விஷயத்தைப் பற்றியது, அல்லது ஸ்நேஹமில்லாதவனின் விஷயத்தைப்பற்றியதாம். அவ்விதமே,* **தேவலரும், போதாயனரும்:-** *புத்ரர்கள் பிதாவை ஸம்ஸ்கரிக்க வேண்டும். தம்பி, தமயனை ஸம்ஸ்கரிக்கவேண்டும். புத்ரனில்லாத அம்மானை மருமான்கள் ஸம்ஸ்கரித்தாலும் ஸம்ஸ்கரிக்கலாம். புத்ரனுக்குப் பிதாவும், தம்பிக்குத் தமயனும் செய்யக்கூடாது. ஸ்நேகத்தால் இருவரும் செய்தால், ஸபிண்டீகரணம் தவிர மற்றதைச் செய்யலாம்.*

कर्त्रन्तराभावे तदपि कार्यमित्याह सङ्ग्रहकारः — अन्याभावे पिता माता ज्येष्ठो वाऽपि सपिण्डनम् । कुर्याज्जीवन्तमाक्रम्य पिण्डभागं नियोजयेत् इति । आक्रम्य = अतिक्रम्येत्यर्थः । स्मृत्यन्तरेऽपि — सर्वाभावे पिता वाऽपि कुर्यात् भ्राताऽथवाऽग्रजः । गयायां च विशेषेण ज्यायानपि समाचरेत् इति । अकरणे प्रत्यवायश्च स्मृतिसारसमुच्चये दर्शितः – उत्सन्नबान्धवं प्रेतं पिता भ्राता तथाऽग्रजः । जननी वाऽपि संस्कुर्यान्महदेनोऽन्यथा भवेत् इति । पित्रग्रजयोः समवाये प्रत्यासन्नत्वात् पितैव कुर्यात्, तदभावे ज्येष्ठ इति क्रमोऽपि लक्ष्यते । कनिष्ठभ्रातृसमवाये अनन्तर एव कनिष्ठो ज्येष्ठस्य कुर्यात्, न व्यवहितोऽनुजः, अनन्तरः सपिण्डो यः क्रमेण तनयस्तयोः इति मन्वादिस्मरणात् ।

*வேறு கர்த்தா இல்லாவிடில் ஸபிண்டீகரணத்தையும் செய்யவேண்டுமென்கிறார்* **ஸங்க்ரஹகாரர்:-** *அன்யனில்லாவிடில், பிதா, மாதா, ஜ்யேஷ்டன் யாராவது*

ஸபிண்டனத்தைச் செய்யவும். ஜீவித்திருப்பவனை அதிக்ரமித்து, பிண்டபாகத்தைச் சேர்க்கவும். **மற்றொரு ஸ்ம்ருதியிலும்** :-ஒருவருமில்லாவிடில், பிதா, அல்லது தமயன், ஸம்ஸ்கரிக்கவும். கயையிலும், விசேஷமாகத் தமயனும் தம்பிக்குச் செய்யலாம். செய்யாவிடில் தோஷம், ஸ்ம்ருதிஸாரஸமுச்சயத்தில் சொல்லப் பட்டுள்ளது. "முக்யகர்த்தா இல்லாதவனாய் இறந்தவனைப் பிதா, ஜ்யேஷ்டப்ராதா, மாதா, யாராவது ஸம்ஸ்கரிக்கவேண்டும். இல்லாவிடில் அதிக பாபம் ஸம்பவிக்கும்" என்று. பிதாவும், தமையனும் இருந்தால், ஸாமீப்யமிருப்பதால் பிதாவே செய்யவேண்டும், பிதா இல்லாவிடில் ஜ்யேஷ்டன் என்று க்ரமமும் காணப்படுகிறது. கநிஷ்டப்ராதாக்கள் அநேகர் இருந்தால் அடுத்த கநிஷ்டனே ஜ்யேஷ்டனுக்குச் செய்யவேண்டும். மற்றவன் செய்யக்கூடாது. 'அடுத்த கனிஷ்டன் எவனோ அவனே ஜ்யேஷ்டனுக்குக் கர்த்தா' என்று மன்வாதி வசனமிருப்பதால்.

जीवति पितरि भ्रात्रादेरन्येन कारयितव्यमित्युक्तं स्मृतिरत्ने — प्रेतश्राद्धं सपिण्ड्यन्तं प्रत्यब्दं श्राद्धमेव च । भ्रात्रादेः कार्यमन्येन स्वपिता यदि जीवति इति । एवं भ्रातृतत्पुत्रयोरभावे पिता, माता, मातापित्रोरभावे स्नुषा, तदभावे स्वसा अनुजाऽग्रजा वा, तदभावे तत्सुतः, सोदरस्वस्रभावे असोदरस्वसा, ततस्तत्सुतः, ततः सपिण्डः, ततः समानोदकः, ततो मातृसपिण्डः, मातृसमानोदकः, तदभावे सगोत्रः, ततः शिष्टः, तदभावे ऋत्विक्, तत आचार्यः तदभावे जामाता, तदभावे सखेति क्रमः ।

பிதா ஜீவித்திருந்தால் ப்ராதா முதலியவர்க்கு, அன்யனைக் கொண்டு செய்விக்கவேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது, **ஸ்ம்ருதி ரத்னத்தில்**:- ஸபிண்டீகரணம் முடியும் வரையிலுள்ள ப்ரேத

ச்ராத்தத்தையும், ப்ரத்யாப்திக ச்ராத்தத்தையும் ப்ராதா முதலியவர்க்கு, அன்யனைக்கொண்டு செய்விக்க வேண்டும், தன் பிதா ஜீவித்திருந்தால் என்று, இவ்விதம், ப்ராதாவும், ப்ராத்ரு புத்ரனு மில்லாவிடில் பிதா, மாதா, மாதாபிதாக்களில்லாவிடில் நாட்டுபெண், அவளில்லாவிடில் பகினீ, தமக்கையாவது தங்கையாவது, அவளில்லாவிடில் அவளின் புத்ரன், ஸஹோதரபகினீ இல்லாவிடில் பின்னோதர பகினீ, பிறகு அவளின் பிள்ளை, பிறகு ஸபிண்டன், பிறகு ஸமானோதகன், பிறகு மாத்ருஸபிண்டன், மாத்ருஸமானோதகன், அவனில்லாவிடில் ஸ்கோத்ரன், பிறகு சிஷ்யன்,அவனில்லாவிடில் ருத்விக், பிறகு ஆசார்யன், அவனில்லாவிடில் மாப்பிள்ளை, அவனில்லாவிடில் ஸகா என்பது க்ரமம்.

तथा च स्मृतिसारे — पत्नीभ्राता च तज्जश्च पिता माता स्नुषा तथा । भगिनी भागिनेयश्च सपिण्डः सोदकस्तथा । असन्निधाने पूर्वेषामुत्तरे पिण्डदाः स्मृताः इति । कात्यायनः – अनुजा वाऽग्रजा वाऽपि भ्रातुः कुर्याच्च संस्क्रियाम् । ततस्त्वसोदरा तद्वत् क्रमेण तनयस्तयोः इति । चन्द्रिकायाम् – पुत्राभावे सपिण्डास्तु तदभावे तु सोदकाः । मातुः सपिण्डा ये वा स्युर्ये वा मातुश्च सोदकाः । कुर्युरेनं विधिं सम्यगपुत्रस्य सुताः स्मृताः इति । मातुः सपिण्डाः मातामहतत्सुतादिपञ्चपुरुषपर्यन्ताः । पञ्चपुरुषादूर्ध्वं त्रिपुरुषपर्यन्ता मातृसमानोदकाः ।

ஸ்ம்ருதிஸாரத்தில்:- பத்னீ, ப்ராதா, ப்ராத்ரு புத்ரன், பிதா, மாதா, நாட்டுப் பெண், பகினீ, பாகிநேயன், ஸபிண்டன், ஸமாநோதகன். இவர்களுள் முந்தியவன் ஸன்னிதியிலில்லாவிடில் பிந்தியவர் பிண்டத்தைக் கொடுப்பவர்கள் ஆகவேண்டும். காத்யாயனர்:- தங்கையாயினும் தமக்கையாயினும் ப்ராதாவுக்கு ஸம்ஸ்காரத்தைச் செய்யவும். பிறகு பின்னோதரபகினீ,

பிறகு அவர்களின் புத்ரன். சந்த்ரிகையில்:- புத்ரனில்லாவிடில் ஸபிண்டர்கள், அவர்களில்லாவிடில் ஸமாநோதகர்கள், மாத்ரு ஸபிண்டர்கள், மாத்ரு ஸமாநோதகர்கள், புத்ரனில்லாதவனுக்கு அபர க்ரியையைச் செய்யவும். மாத்ரு ஸபிண்டர்கள் என்பவர்கள், மாதாமஹன் அவன் பிள்ளை முதலாக ஐந்து தலைமுறை வரையிலுள்ளவர்கள். ஐந்து தலை முறைக்கு மேல் மூன்று தலைமுறை வரையிலுள்ளவர்கள் மாத்ரு ஸமாநோதகர்களாம்.

पराशरः — अभावे तु सपिण्डानां समानोदकसन्ततिः । मातृपक्षस्य पिण्डेन सम्बद्धा ये जलेन वा इति । बृहस्पतिः - प्रमीतस्य पितुः पुत्रैः श्राद्धं देयं प्रयत्नतः । ज्ञातिबन्धुसुहृच्छिष्यैः ऋत्विग्भृत्यपुरोहितैः इति । कात्यायनोऽपि — पुत्रः शिष्योऽथवा पत्नी पिता माताऽथवा गुरुः । स्त्रीहारी धनहारी च कुर्युः पिण्डोदकक्रियाम् इति । स्त्रीहारी - रागतः कलत्रहारी ।

**பராசரர்**:- ஸபிண்டர்களில்லாவிடில் ஸமாநோதகரின் ஸந்ததி, அதில்லாவிடில் மாத்ரு ஸபிண்டர்கள், அவரில்லாவிடில் மாத்ரு ஸமாநோதகர்கள். **ப்ருஹஸ்பதி**:- இறந்த பிதாவுக்கு, புத்ரர்கள் ச்ராத்தம் செய்யவேண்டும். ஜ்ஞாதி, பந்து, ஸுஹ்ருத், சிஷ்யன், ருத்விக், ப்ருத்யன், புரோஹிதன் இவர்களாவது செய்யவேண்டும். **காத்யாயனரும்**:- புத்ரன், சிஷ்யன், அல்லது பத்னீ, பிதா, மாதா, அல்லது குரு, ஸ்த்ரீஹாரீ, தனஹாரீ இவர்கள் பிண்டோ தகங்களைக் கொடுக்கவேண்டும். ஸ்த்ரீஹாரீ=ஆசையால் களத்ரத்தை அபஹரித்தவன்.

धनहारिणस्तु मनुना दर्शिताः – अनन्तरः सपिण्डो यस्तस्य तस्य धनं हरेत् । अत ऊर्ध्वं सकुल्यः स्यादाचार्यः शिष्य एव वा । सर्वेषामप्यभावे तु ब्राह्मणा रिक्थभागिनः । त्रैविद्याः शुचयो दान्तास्तथा धर्मो न हीयते । अहार्यं ब्राह्मणद्रव्यं राज्ञा नित्यमिति

दद्यादष्टौ वृषणयोः पञ्च मेहे तु विन्यसेत् । एकविंशतिमूरुभ्यां द्विशतं जानु जङ्घयोः । पादाङ्गुलीषु षट् दद्याद्यज्ञपात्रं ततो न्यसेत् । शम्यां शिश्ने विनिक्षिप्य अरणी मुष्कयोरपि । जुहूं तु दक्षिणे हस्ते वामे तूपभृतं न्यसेत् । पृष्ठे तूलूखलं दद्यात् पृष्ठे च मुसलं न्यसेत् । उरसि क्षिप्य दृषदं तण्डुलाज्यतिलान्मुखे । श्रोत्रे च प्रोक्षणीं दद्या दाज्यस्थालीं च चक्षुषोः । कर्णे नेत्रे मुखे घ्राणे हिरण्यशकलं न्यसेत् । अग्निहोत्रोपकरणमशेषं तत्र निक्षिपेत् । असौ स्वर्गाय लोकाय स्वाहेत्येकाहुतिं सकृत् । दद्यात् पुत्रोऽथवा भ्राताऽप्यन्यो वाऽपि च बान्धवः । यथा दहनसंस्कारस्तथा कार्यं विचक्षणैः । ईदृशं तु विधिं कुर्यात् ब्रह्मलोकगतिर्ध्रुवा । दहन्ति ये द्विजास्तं तु ते यान्ति परमां गतिम् । अन्यथा कुर्वते कर्म त्वात्मबुद्ध्या प्रचोदिताः । भवन्त्यल्पायुषस्तेन पतन्ति नरकेऽशुचौ इति ।

பராசரரும்:- *ஆஹிதாக்னியான ப்ராம்ஹணன் தேசாந்தரம் சென்றிருந்த பொழுது காலவசத்தால் மரணமடைந்து அவனது அக்னி க்ருஹத்திலிருந்தால், அவனுக்கு ப்ரேதாக்னிஹோத்ர ஸம்ஸ்காரத்தைக் கேளுங்கள், ஓ முனி சிரேஷ்டர்களே! க்ருஷ்ணாஜிநத்தை விரித்து, அதன் மேல் குசங்களால், 700 பலாச வ்ருந்தங்களால் புருஷாக்ருதியைச் செய்யவும். தலையில்40, கழுத்தில் 100, கைகளில் 100, விரல்களில் தனித்தனி 10-10, முதுகில் 100, வயிற்றில் 20, வ்ருஷணத்தில் 8, சிச்னத்தில் 5, துடைகளில் 21, ஜாநுக்கள், ஜங்கைகள் இவைகளில் 200, கால்விரல்களில் தனித்தனி 6, இவ்விதம் சரீராக்ருதியைச் செய்து, அதன்மேல் யஜ்ஞபாத்ரங்களை ஸாதனம் செய்யவும். சம்யையைச் சிச்னத்திலும், அரணிகளை வ்ருஷணங்களிலும், ஜுஹுவை வலது கையிலும், உபப்ருத்தை இடது கையிலும், முதுகில் உரலையும், உலக்கையையும், மார்பில் கல்லையும், வாயில் அரிசி நெய் திலம் இவைகளையும் வைக்கவும்.*

காதில் ப்ரோக்ஷணியையும், கண்களில் ஆஜ்ய ஸ்தாலியையும், காது, வாய், மூக்கு இவைகளில் ஸ்வர்ண சகலத்தையும் வைக்கவும். அக்னிஹோத்ரோபகரணங்கள் எல்லாவற்றையும் அங்கு வைத்து, 'அஸெள ஸ்வர்க்காய லோகாய ஸ்வாஹா' என்று ஒரு ஆஹுதியைச் செய்யவும். புத்ரன் அல்லது ப்ராதா, அல்லது வேறு பந்து இவ்விதம் செய்யவும். தஹந ஸம்ஸ்காரத்தை விதிப்படி அறிந்தவர்கள் செய்யவேண்டும். இவ்விதம் செய்தால் சாச்வத ப்ரம்ஹலோக ப்ராப்தியுண்டு. தஹித்தவர் சிறந்த கதியை அடைகின்றனர். தம் புத்திக்குத் தோன்றியபடி விதியை மாறிச் செய்பவர்கள் அல்பாயுஸ்ஸுகளாய் இறந்து அசுத்த நரகத்தில் விழுவார்கள்.

यदा प्रोषित आहिताग्निर्देशान्तरे म्रियते अग्निश्च स्वगृहे वसति तदानीमास्तीर्णे कृष्णाजिने पालाशवृन्तैर्देहाकृतिं कुशबन्धान्निर्माय तदवयवेषु यज्ञपात्राणि निक्षिप्य असौ स्वर्गाय लोकाय स्वाहा इत्याहुतिं जुहुयात् ततः कल्पसूत्रोक्तप्रकारेण कृत्स्नं संस्कारं समापयेत्, तत्र संस्कार्यस्याहिताग्नेः ब्रह्मलोकप्राप्तिः, संस्कर्तुः परमा गतिः, अयथोक्तकारिणः पण्डितंमन्यस्य नरकप्राप्तिरित्यर्थः ।

தேசாந்தரம் சென்ற ஆஹிதாக்னி தேசாந்தரத்திலேயே மரித்தால் அக்னி க்ருஹத்திலிருந்தால், அப்பொழுது, பரப்பப்பட்ட க்ருஷ்ணாஜிநத்தில், பலாச பர்ணங்களால் தேஹாக்ருதியைக் குசங்களைக் கட்டுவதால் செய்து, அதனவயங்களில் யாக பாத்ரங்களை வைத்து, 'அஸெள ஸ்வர்க்காய லோகாய ஸ்வாஹா' என்று ஆஹுதியைச் செய்யவும். பிறகு கல்ப ஸூத்ரத்திற் சொல்லிய படி ஸம்ஸ்காரம் முழுவதையும் முடிக்கவும். அதில் ஸம்ஸ்கரிக்கப்பட்ட ஆஹிதாக்னிக்கு ப்ரம்ஹலோக ப்ராப்தி உண்டாகிறது. ஸம்ஸ்கரிப்பவனுக்குச் சிறந்த உலகம் கிடைக்கும். இவ்விதம் செய்யாது, பண்டிதனுகத்

*தன்னை நினைத்து இஷ்டப்படி செய்தவனுக்கு நரக ப்ராப்தி உண்டாகிறது என்பது பொருள்.*

आपस्तम्बस्तु – आहिताग्निं विजने प्रमीतं तैलद्रोण्यामवधाय शकटेनाहरन्ति तानि ग्राममर्यादायां प्रतिष्ठाप्याग्नीन् पितृमेधभाण्डं च निर्हरन्ति इति । गृहेऽग्न्यभावे देशान्तरे आहिताग्निमरणे प्रेताधानं कृत्वा दहेत् । प्रेताधानासम्भवे लौकिकाग्निना दग्धस्याहिताग्नेः प्रेताधानाहिताग्नित्रयेण पुनर्दाहः, न तमन्येन त्रेताग्निभ्यो दहन्तीति नियमात् । एवं विच्छिन्नौपासनस्यानाहिताग्नेर्मरणे प्रेताग्नि सन्धानम् । देशान्तरे तस्य मरणे लौकिकाग्निना विधिवद्दग्धस्यापि प्रेताग्निसन्धानेन पुनर्दाहः, औपासनेनानाहिताग्निं दहेदिति नियमात् । औपासनेन विनाकृतस्याकिञ्चित्करत्वात् । गृहे सत्यसति वा औपासने प्रेताग्निसन्धानेन औपासनमुत्पाद्य तेन दाहे कृते सति न पुनर्दाहः, अग्नेर्देशान्तरप्राप्तिर्दूरस्थोऽपि च पुत्रकः । अग्निमुत्पाद्य कर्तव्यं दाहकर्म स्वबन्धुभिः इति स्मरणात् ।

*ஆபஸ்தம்பரோவெனில்:- தேசாந்தரத்தில் மரித்த ஆஹிதாக்னியை எண்ணெய்க் கடாகத்தில் வைத்து வண்டியினால் கொண்டு வரவேண்டும். அவைகளை க்ராமத்தின் எல்லையில் வைத்து, அக்னிகளையும் பித்ருமேதத்திற்கு வேண்டிய த்ரவ்யங்களையும் அங்கு கொண்டு போக வேண்டும். வீட்டில் அக்னி இல்லாவிடில், தேசாந்தரத்தில் மரித்த ஆஹிதாக்னியை, ப்ரேதாதானம் செய்து அதனால் தஹிக்கவும். ப்ரேதாதானம் ஸம்பவிக்காததால் லௌகிகாக்நியால் தஹிக்கப்பட்ட ஆஹிதாக்னிக்கு, ப்ரேதாதானம் செய்த மூன்று அக்னிகளால் புனர் தஹநம். 'ஆஹிதாக்னியை ச்ரௌதாக்னிகள் தவிர்த்த மற்ற அக்னியால் தஹிக்கக் கூடாது' என்று நியமமிருப்பதால். இவ்விதமே*

விச்சின்னௌபாஸநனுன அநாஹிதாக்னியின் மரணத்தில் ப்ரேதாக்னி ஸந்தாநம். தேசாந்தரத்தில் மரித்த அவனுக்கு லௌகிகாக்நியால் விதிப்படி தஹநம் செய்யப் பட்டிருந்தாலும் ப்ரேதாக்னி ஸந்தாநம் செய்து அதனுல் புனர்தஹநம் செய்யவேண்டும். 'ஔபாஸநாக்னியால் அநாஹிதாக்நியைத் தஹிக்கவேண்டும்' என்ற நியமத்தால். ஔபாஸநத்தால் செய்யாமல் மற்றதால் செய்யப்பட்டது பயனற்றது. வீட்டில் ஔபாஸநாக்னி இருந்தாலும் இல்லாவிடினும் ப்ரேதாக்னி ஸந்தாநத்தால் ஔபாஸநத்தை உண்டு பண்ணி அதனுல் தஹநம் செய்யப்பட்டால் புநர்தாஹம் வேண்டியதில்லை. ''அக்னி தூரதேசத்திலிருந்து, புத்ரனும் தூரதேசத்திலிருந்தால், இறந்தவனின் பந்துக்கள் ஔபாஸநாக்னியை உத்பாதநம் செய்து தஹந கர்மத்தைச் செய்யவும்'' என்று ஸ்ம்ருதி உள்ளது.

गृहे अग्नौ विद्यमाने सति देशान्तरे मृतस्य तस्य लौकिकाग्निना दग्धस्यास्थीन्याहृत्य पुनरौपासनाग्निना दाहः, अस्थ्यसंभवे प्रतिकृतिदाहः । निकटदेशे मृतस्य गृहे विद्यमानमौपासनं नीत्वा तेन दाहः कर्तव्यः । औपासनानयनासम्भवे लौकिकाग्निना दग्ध्वा औपासनेन पुनर्दहेत् । अस्थिसंस्कारपर्यन्तमन्यदीयेन द्रव्येणौपासनं हावयेत् । विच्छिन्नौपासनस्य देशान्तरमरणे पुत्रासन्निधानविषये लौकिाग्निं केचिदिच्छन्ति ।

வீட்டில் அக்னி இருக்கும் பொழுது தேசாந்தரத்தில் மரித்தவன் லௌகிகாக்னியால் தஹிக்கப்பட்டால், அவனது அஸ்திகளைக் கொண்டு வந்து, ஔபாஸனுக்னியால் மறுபடி தஹநம் செய்யப்பட வேண்டும். அஸ்தி கிடைக்காவிடில் ப்ரதிக்ருதி தாஹம். ஸமீபதேசத்தில் இறந்தவனுக்கு, வீட்டிலுள்ள ஔபாஸநாக்னியைக் கொண்டு சென்று அதனுல் தாஹம்

செய்யவும். ஔபாஸநத்தைக் கொண்டு வருவது ஸம்பவிக்காவிடில் லௌகிகாக்நியால் தஹித்து ஔபாஸநாக்னியால் புநர்தாஹம் செய்யவும். அஸ்திஸம்ஸ்காரம் வரையில் அன்யனுடைய த்ரவ்யத்தால் ஹோமம் செய்விக்கவும். விச்சின்னௌபாஸநன் தேசாந்தரத்தில் மரித்தால், புத்ர ஸந்நிதியில்லாவிடில் லௌகிகாக்நியால் செய்யலாமெனச் சிலர் அபிப்ராயப்படுகிறார்கள்.

तथा च पारिजाते – पुत्रो दूरगतः पित्रोर्मृतिरत्र भवेद्यदि। लौकिकाग्निर्भवेदत्र केचिदाहुर्मनीषिणः इति। पूर्वमौपासनाग्निना दाहे केनापि निमित्तेन पुनर्दाहप्राप्तौ प्रेताग्निसन्धानम्। पुनर्दाहनिमित्तमग्रे वक्ष्यते॥ यत्तूच्यते – अग्नौ सति स्यादथ देहक्लृप्तिरस्थ्यस्ति चेदग्निरपेक्षणीयः। अनस्थिकस्याप्यशरीरकस्य विनष्टवह्नेरुदकक्रियैव इति, अस्यार्थं केचिदाहुः – अग्नौ गृहे विद्यमाने सति देशान्तरमृतस्य लौकिकाग्निना दग्धस्यास्थिसम्भवे गृहे विद्यमानेनौपासनेन पुनरस्थिदाहः। अस्थ्यसम्भवे प्रतिकृतिकल्पनेन पुनर्दाहः। विनष्टवह्नेः - विच्छिन्नाग्नेस्तु देशान्तरे मृतस्य प्रेताग्निसन्धानाहितौपासनेन दग्धस्य अत एवानस्थिकस्य अस्थिसंस्काररहितस्य, अशरीरकस्य प्रतिकृतिशरीरसंस्कार-रहितस्य केवलमुदकक्रियैवेति।

பாரிஜாதத்தில்:- புத்ரன் தூரதேசத்திலிருக்கும் போது, மாதா, அல்லது பிதாவுக்கு இங்கு ம்ருதி ஏற்பட்டால், இங்குலௌகிகாக்னி க்ராஹ்யமாகும். என்று சில புத்திமான்கள் சொல்லுகின்றனர்; முதலில் ஔபாஸநாக்னியால் தஹிக்கப்பட்டவனுக்கு ஏதாவது ஒரு காரணத்தால் புனர்தாஹம் நேர்ந்தால், ப்ரேதாக்நி ஸந்தாநம் செய்யவும். புனர்தாஹ நிமித்தம் மேலே சொல்லப்படப் போகிறது. ஆனால், "அக்நௌ ஸதி+உதகக்ரியைவ" என்று ச்லோகம் கேட்கப்படுகிறது.

இந்த ச்லோகத்திற்குச் சிலர் இவ்விதம் அர்த்தம் சொல்லுகின்றனர்-'அக்னி க்ருஹத்திலிருக்கும் பொழுது, தேசாந்தரத்தில் மரித்து லௌகிகாக்நியால் தஹிக்கப்பட்டவனுக்கு அஸ்தி ஸம்பவித்தால் க்ருஹத்திலுள்ள ஔபாஸநாக்னியால் மறுபடி அஸ்திதாஹம். அஸ்தி ஸம்பவிக்காவிடில் ப்ரதிக்ருதியைக் கல்பித்து புநர்தஹநம். விச்சிந்நாக்னியானவன் தேசாந்தரத்தில் மரித்து ப்ரேதாக்னிஸந்தாநம் செய்யப்பட்ட ஔபாஸநாக்னியால் தஹிக்கப்பட்டால், அவனுக்கு அஸ்தி ஸம்ஸ்காரமும் ப்ரதிக்ருதி ஸம்ஸ்காரமும் இல்லையாதலால் உதகக்ரியை மட்டுமே'' என்று.

अन्ये त्विमं श्लोकमन्यथा व्याचक्षते - प्रोषितस्यानग्नेरलब्धास्थिकस्य केवलोदकदानमात्रं न प्रतिकृतिदाहः । अग्न्यस्थिशरीराणामन्यतमस्य सद्भाव एव दाह इति, तत् अस्थीनि यद्यलब्धानि पर्णैस्तत्पुरुषाकृतिम् । कृत्वा तद्गतदिग्भागे दहेयुः पितृमेधतः इति पूर्वोक्तबोधायनादि बहुस्मृतिविरोधात् अनाकर्णितवार्तस्य पित्रादेः प्रोषितस्य पञ्चदश द्वादशवर्षानन्तरमग्न्यस्थिशरीरासम्भवेऽपि कृत्वा तत्प्रतिरूपकम् इति प्रतिकृतिदाहविधानात्, पुरुषाहुतिर्ह्यस्य ...... प्रियतमा मृतसंस्कारेणामुं लोकमभिजयतीति दहनस्यावश्यकर्तव्यत्वस्मरणाच्चोपेक्ष्य मित्याहुः । यथोचितमत्र ग्राह्यम् । अतोऽच्छिन्नेताग्नेरस्थ्यलाभे प्रेताधानेन प्रतिकृतिदाहः । अनाहिताग्नेः प्रेताग्नि सन्धानेन तद्दाहः ।

மற்றும் சிலரோவெனில் இந்த ச்லோகத்திற்கு வேறு விதமாக வ்யாக்யாநம் செய்கின்றனர்- ''தேசாந்தரம் சென்றவன் அநக்னிகனுயிருந்து அஸ்தியும் கிடைக்காவிடில், அவனுக்கு உதகதானம் மட்டில், ப்ரதிக்ருதி தாஹமில்லை. அக்னி, அஸ்தி, சரீரம்

இவைகளுள் ஒன்று இருந்தால் தான் தஹநம்'' என்று. இவ்விதம் சொல்வது, 'அஸ்திகள் கிடைக்காவிடில் இலைகளால் புருஷாக்ருதியைச் செய்து அவன் சென்ற திக்கின் பாகத்தில் பித்ருமேத விதியால் தஹிக்கவும்' என்று முன் சொல்லிய போதாயநாதி பஹுஸ்ம்ருதிகளுக்கு விரோதிப்பதாலும், தேசாந்தரம் சென்ற பிதா முதலியவனின் வார்த்தையே கேட்கப்படாமலிருந்தால். அவனுக்கு 15-12 வர்ஷங்களுக்குப் பிறகு, அக்னி, அஸ்தி, சரீரம் ஒன்றும் இல்லாவிடினும் 'ப்ரதிக்ருதி செய்து' என்று ப்ரதிக்ருதி தஹநம் விதிக்கப்பட்டிருப்பதாலும், 'புருஷாஹுதி அக்னிக்கு மிகப்ரியமாகியது. ம்ருத ஸம்ஸ்காரத்தால் ம்ருதன் பரலோகத்தை அடைகிறான்' என்று தஹநம் அவச்யம் செய்யப்படவேண்டுமென்று ஸ்ம்ருதி இருப்பதாலும் உபேக்ஷிக்கத் தகுந்ததென்கின்றனர் அறிந்தவர்கள். இவ்விஷயத்தில் உசிதமான பக்ஷத்தை க்ரஹிக்கவும். ஆகையால் விச்சிந்நாக்னிகளுன ஆஹிதாக்னிக்கு அஸ்தி கிடைக்காவிடில் ப்ரேதாதாநத்தால் ப்ரதிக்ருதிதாஹம். அநாஹிதாக்னிக்கு ப்ரேதாக்னி ஸந்தாநத்தால் ப்ரதிக்ருதி தஹநம்.

## प्रेताग्निसन्धानविधिः

तत्र प्रेताधानस्वरूपमाह गृह्यसङ्ग्रहकारः – अथातः प्रेताधानविधिं व्याख्यास्यामो विच्छिन्नाग्न्यादिमरणे प्राचीनावीत्यग्न्यायतनान्युद्धत्यावोक्ष्य विहारं कल्पयित्वा प्रेतस्य दक्षिणं हस्तमरण्योरन्वारम्भयित्वा येऽस्याग्नयोऽजुह्वतो मांसकामाः सङ्कल्पयन्ते यजमानं मांसं जानन्तु ते हविषे सादिताय स्वर्गं लोकमिमं प्रेतं नयन्तु इति मथित्वा गार्हपत्यायतने निधाय तूष्णीं विहृत्य दक्षिणाग्निं तत आहवनीयं प्रणीय द्वादशगृहीतेन स्रुवं पूरयित्वा प्रजापतिं मनसा ध्यायन्नाहवनीये जुहुयात् ततः संस्कारोपक्रमः ।

## ப்ரேதாக்னி ஸந்தாநம்

அதில் ப்ரேதா தானஸ்வரூபத்தைச் சொல்லுகிறார், க்ருஹ்ய ஸங்க்ரஹகாரர்:- இனி ப்ரேதாதான விதியைச் சொல்லுகிறோம். விச்சின்னக்ந்யாதி மரணத்தில், ப்ராசீனவீதியாய் அக்ந்யாயதநங்களைக் கல்லி, அவோக்ஷித்து, விஹாரத்தைக் கல்பித்து, ப்ரேதனின் வலதுகையை அரணிகளில் அந்வாரம்பம் செய்வித்து, 'யேஸ்யாக்னயோ + நயந்து' என்று மதநம் செய்து, கார்ஹாபத்யாயதநத்தில் வைத்து, தூஷ்ணீமாக விஹாரம் செய்து, தக்ஷிணாக்னியையும் ஆஹவநீயத்தையும் ப்ரணயநம் செய்து, த்வாதச க்ருஹீதத்தால் ஸ்ருக்கைப் பூரணம் செய்து ப்ரஜாபதியை மனஸால் த்யானித்து, ஆஹவநீயத்தில் ஹோமம் செய்யவும். பிறகு ஸம்ஸ்காரோபக்ரமம்.

आत्मारूढेष्वग्निषु दक्षिणं पाणिं लौकिकेऽग्नौ निधायाध्वर्युः उपावरोह इत्युपावरोहयेत् तं त्रेधाकृत्वा दाहयेत् । अरण्यारूढे तु मृतस्य दक्षिणेन पाणिनाऽरणिं स्पर्शयित्वा मथित्वाऽवरोहयेत्, आत्मसमारूढेष्वग्निषु पत्नीमरणे स्वयमेवावरोहयेत्, तं त्रेधा कृत्वा दाहयेत् । शरीरनाशे पलाशपर्णैः समूलैः कृष्णाजिने शरीराकृतिं कुशैर्वेष्टयित्वा विधिवद्दहेत् देशान्तरमरण श्रवणे आसंस्कारादग्नि-संरक्षणार्थमग्निहोत्रं जुहुयात् । मृतिश्रवणानन्तरं पाथिकृतीमिष्टिं पूर्णाहुतिं वा जुहुयात् । तदर्थं विहृत्याजस्रान् कुर्यात् । या गौर्मृतवत्सा वत्सान्तरेण दुह्यते तां दोहयित्वा, प्राचीनावीती परिस्तरणदर्भान् प्रागग्रान् दक्षिणाग्रांस्तृणुयात् । गार्हपत्यस्य दक्षिणार्धे शीते भस्मन्यधिश्रित्य दक्षिणत उद्वास्य सकृदेव सर्वं परिषेचनादिवर्जं तूष्णीं जुहुयात् । प्रेतं तैलद्रोण्यामवधाय शकटेन ग्राममर्यादामानयेन्निर्मन्थ्येन वा दग्ध्वाऽस्थीनि कृष्णाजिने सन्नह्य ब्रह्मचारी नियतभोज्यधः शायी नयेत्तत्राग्नीन् नीत्वा दहेत् इति ।

அக்னிகள் ஆத்மாரூடங்களா யிருக்கும்போது மரித்தால், வலது கையை லௌகிகாக்னியில் வைத்து அத்வர்யு 'உபாவரோஹ' என்ற மந்த்ரத்தால் உபாவரோஹணம் செய்து, அதை மூன்றாகச் செய்து தஹிக்கச்செய்யவும். அக்னி அரண்யாரூடமாகயிருந்தால் ம்ருதனுடைய வலது கையினால் அரணியை ஸ்பர்சிக்கச்செய்து மதநம் செய்து அவரோஹணம் செய்விக்கவும். அக்னிகள் ஆத்மாரூடங்களாயிருக்கும் பொழுது பத்நீ மரித்தால் தானாகவே அவரோஹணம் செய்விக்கவும். அதை மூன்றாகச் செய்து தஹிக்கச் செய்யவும். சரீரம் காணப்படாவிடில் மூலத்துடன் கூடிய பலாசபர்ணங்களால் க்ருஷ்ணாஜிநத்தில் சரீராக்ருதியைச் செய்து குசங்களால் அதைச் சுற்றி விதிப்படி தஹிக்கவும். தேசாந்தரத்தில் மரணமாகியதாகக் கேட்டால், ஸம்ஸ்காரம் வரையில் அக்னி ஸம்ரக்ஷணத்திற்காக அக்னி ஹோத்ர ஹோமம் செய்யவேண்டும். ம்ருதி ச்ரவணத்திற்குப் பிறகு பாதிக்ருதீஷ்டியையாவது பூர்ணாஹுதி ஹோமத்தையாவது செய்யவும். அதற்காக விஹரணம் செய்து அஜஸ்ரங்களாய்ச் செய்யவும். எந்தப் பசு கன்று இறந்த பிறகு வேறுகன்றின் உதவியால் கறக்கப்படுகின்றதோ அந்தப் பசுவைக் கறந்து, ப்ராசீநாவிதியாய், பரிஸ்தரண தர்ப்பங்களைக் கிழக்கு நுனியாகவும் தெற்கு நுனியாகவும் பரப்பவும். கார்ஹபத்யத்தின் தக்ஷிணபாகத்தில் சீதமான பஸ்மத்தில் அதிச்ரயணம் செய்து தெற்கிலிறக்கி, ஒரே தடவையாக முழுவதையும் பரிஷேசநம் முதலியதில்லாமல் மந்த்ரமில்லாமல் ஹோமம் செய்யவும். சவத்தை எண்ணெய்க் கடாஹத்தில் வைத்து வண்டியினால் க்ராமத்தின் எல்லைக்குக் கொண்டு வரவும். அல்லது நிர்மந்த்யத்தினால் தஹித்து அஸ்திகளை க்ருஷ்ணாஜிநத்தில் வைத்துக்கட்டி, ப்ரமஹசாரியாக, நியமத்துடன் புஜிப்பவனாக, பூமியில் படுப்பவனாகத் கொண்டு வரவும். அங்கு அக்னிகளைக் கொண்டு போய் தஹிக்கவும்.

प्रेताग्निसन्धानमाहापस्तम्बः – द्वादशगृहीतेन स्रुचं पूरयित्वा तूष्णीं हुत्वा प्रेतेऽमत्या इत्यादि कर्म प्रतिपद्यते इति । तद्व्याख्याने तु द्वादशगृहीतेनाज्येन व्याहृतिभिरयाश्चेति मन्त्रेणानाज्ञातत्रयेण चाग्निसिद्धिः, भूर्भुवः सुवरिति सर्वप्रायश्चित्तम्, तदिदं सर्वप्रायश्चित्तं सर्वत्र क्रियत इत्याश्मरथ्य इति च, अनाज्ञातमिति तिस्रोऽनाज्ञाते जुहुयादिति चापस्तम्बेनोक्तत्वादिति । अग्नौ नष्टे त्रयः कृच्छ्राः कर्तव्या वत्सरं प्रति इत्युक्तकृच्छ्राचरणं च तत्तदतीतकालानुगुणं कार्यम् ।

*ப்ரேதாக்னி ஸந்தாநத்தைச் சொல்லுகிறார், ஆபஸ்தம்பர் - த்வாதசக்ருஹீதாஜ்யத்தினால் ஸ்ருக்கைப் பூரணம் செய்து தூஷ்ணீம் ஹோமம் செய்து "ப்ரேதேமாத்யா:" என்பது முதல் கர்மத்தை ஆரம்பிக்கவும். வ்யாக்யானத்திலோவெனில்: சதுர்க்ருஹீதாஜ்யத்தினால், வ்யாஹ்ருதிகளாலும், 'அயாச்ச' மந்த்ரத்தாலும், 'அநாஜ்ஞாதாதி' மூன்று மந்த்ரங்களாலும் அக்னிஸித்தி. 'பூர்ப்புவஸ்ஸுவ:'என்று ஸர்வப்ராயஶ்சித்தம். இந்த ஸர்வ ப்ராயஶ்சித்தம் எல்லாவிடத்திலும் செய்யப்படுகிறது. என்று 'ஆச்மரத்யர்' என்றும், 'அநுகதமானல் அயாச்ச மந்த்ரத்தால் ஹோமமாவது செய்யவும்' என்றும், 'அநாஜ்ஞாதம் முதலிய மூன்று ருக்குகளால் அநாஜ்ஞாத விஷயத்தில் ஹோமம் செய்யவும்' என்றும் ஆபஸ்தம்பர் சொல்லியிருப்பதால்' என்றுள்ளது. 'அக்னி நஷ்டமானல் வர்ஷமொன்றுக்கு மூன்று க்ருச்ரங்கள்' என்று சொல்லப்பட்டுள்ள க்ருச்ராசரணமும், அதீத காலத்திற்கனுகுணமாகச் செய்யப்படவேண்டும்.*

बोधायनस्तु – अथ यदि गृहस्थस्यौपासनं विच्छिद्येत तत्प्राणेषूत्क्रान्तेषु श्रोत्रियवचनादुद्धरेत् । श्रोत्रियागारा-द्वाऽऽहृत्याग्नि मुपसमाधाय संपरिस्तीर्याज्यं विलाप्योत्पूय

स्रुक्स्रुवौ निष्टप्य संमृज्य स्रुचि चतुर्गृहीतं गृहीत्वा सप्तते अग्न इति सप्तव्याहृतिभिश्च हुत्वा पूर्वं देवा अपरेण, प्राणापानौ इति द्वाभ्यां मात्वा वृक्षौ संबाधिष्टाम्, मात्वा वृक्षौ संबाधेथाम् इति च द्वाभ्यां अग्नेऽभ्यावर्तिन्, अग्ने अङ्गिरः (इति द्वाभ्यां एकैकं प्रतिचतुर्गृहीतं गृहीत्वा जुहोति। न ब्रह्मा न प्रणीता न चरुर्न स्विष्टकृतः) पुनरूर्जा सहरय्या इति चतस्रोऽभ्यावर्तिनीश्च हुत्वा तत ऊर्ध्वं पैतृमेधिककर्म प्रतिपद्यते इति।

**போதாயனரோவெனில் :** *க்ருஹஸ்தனின் ஔபாஸநம் விச்சின்னமானால், ப்ராணோத்க்ரமணத்திற்குப் பிறகு ச்ரோத்ரிய வசனத்தால்உத்தரணம் செய்யவும். அல்லது ச்ரோத்ரிய க்ருஹத்திலிருந்து அக்நியைக் கொண்டு வந்து உபஸமாதானம், பரிஸ்தரணம், ஆஜ்யவிலாபனம், உத்பவநம், ஸ்ருக் ஸ்ருவ ஸம்ஸ்காரம் இவைகளைச் செய்து, ஸ்ருக்கில் சதுர்க்ருஹீதாஜ்யத்தால், 'ஸப்ததே அக்னே' என்பதாலும், ஸப்த வ்யாஹ்ருதிகளாலும் ஹோமம் செய்து, 'பூர்வம்தேவா:, ப்ராணாபானௌ' என்ற இரண்டு மந்த்ரங்களாலும், 'மாத்வா வ்ருக்ஷௌ ஸம்பாதிஷ்டாம், மாத்வா வ்ருக்ஷௌ ஸம்பா தேதாம்' என்ற இரண்டு மந்த்ரங்களாலும், 'அக்னேப்யாவர்த்தின், அக்னே அங்கிர:' என்ற இரண்டு மந்த்ரங்களாலும் (தனித்தனி சதுர் க்ருஹீதங்களால் ஹோமம் செய்யவும். ப்ரம்ஹா இல்லை, ப்ரணீதா இல்லை, சரு இல்லை, ஸ்விஷ்டக்ருத் இல்லை) புநரூர்ஜா, ஸஹரய்யா' என்று நான்கு அப்யாவர்த்தினீகளாலும் ஹோமம் செய்து பிறகு பைத்ருமேதிக கர்மத்தைத் துவக்கவும்.*

आश्वलायनीयकारिकायां तु — अनाहिताग्नेः प्रेतस्य संस्कारविधिरुच्यते। स्नातः पवित्रपाणिः सन्नुपविश्य यथाविधि। प्राणानायम्य संस्कर्ता प्राचीनावीत्यनन्तरम्। प्रेतनाम तु षष्ठ्योक्त्वा विच्छिन्नौपासनस्य तु॥ करोमि सन्धानमिति होमद्रव्यं

प्रदाय च । आगूर्योल्लिख्य याम्यान्तमवोक्ष्याग्निं निधाय च । विपरीतं परिस्तीर्य दक्षिणे पात्रसादनम् । दर्भेषु दक्षिणाग्रेषु सादयेदेकशः क्रमात् । प्रोक्षणीं स्रुक् स्रुवौ चैवमाज्यस्थालीं यथाक्रमम् । उत्पूय प्रोक्षणीं प्रोक्ष्य पात्राणि च ततःपरम् । संस्कृत्य तूष्णीमाज्यं च संमृज्य स्रुक्स्रुवौ ततः । प्रसव्यं परिषिच्याथ जुहुयाज्जातवेदसि ॥ चतुर्गृहीतेनाज्येन ह्ययाश्चेत्यनया ऋचा । अतो देवा इति द्वाभ्यां मनोज्योतिर्ऋचा ततः । स्रुवेणाथ व्याहृतिभिर्जुहुयाच्च पृथक् पृथक् । ततोऽपसव्यं पर्युक्ष्य नमस्कृत्य हुताशनम् । औपासनाहुतीः सायं प्रातश्च जुहुयाद्धुतैः । प्रेतस्य गोत्रनामादि द्वितीयान्तमुदीरयेत् । पितृमेधेन विधिना तथैवौपासनाग्निना । सङ्कल्प्य संस्करिष्यामीत्यथ तं स्नापयेच्छवम् । केवलं विद्यमानाग्नौ स्नात्वा सङ्कल्पयेद्बुधः । अस्ति चेदहुतः काले तं हुत्वैवागुरं वदेत् इति ।

**ஆச்வலாயநீயர்களுக்கோவெனில் :** *சௌநகர் சொல்லிய ப்ரகாரத்தால், ''அயாச்ச'' முதலிய ஐந்து மந்த்ரங்களால் அக்னிஸித்தி.* **ஆச்வலாயநீய காரிகையிலோவெனில்:-** *ம்ருதனுடைய அனுஹிதாக்னியின் ஸம்ஸ்காரவிதி சொல்லப்படுகிறது. ஸம்ஸ்கர்த்தா ஸ்நானம் செய்து, பவித்ரபாணியாய், விதிப்படி உட்கார்ந்து, ப்ராணாயாமம் செய்து, ப்ராசீனாவீதியாய், ப்ரேதனின் நாம தேயத்தை ஷஷ்டியால் சொல்லி, விச்சிந்நௌபாஸநத்திற்கு ஸந்தாநத்தைச் செய்கிறேன், என்று ஸங்கல்ப்பித்து ஹோமத்ரவ்யதாநம் செய்து, ஸங்கல்ப்பித்து, தெற்கில் முடியும்படி உல்லேகநம் செய்து, அவோக்ஷித்து, அக்னியை வைத்து, விபரீதமாய்ப் பரிஸ்தரணம் செய்து, தெற்கில், தெற்கு நுனியாயுள்ள தர்ப்பங்களில், தனித் தனியாய்ப் பாத்ரங்களை ஸாதநம் செய்யவும். ப்ரோக்ஷணீ, ஸ்ருக், ஸ்ருவம், ஆஜ்யஸ்தாலீ இவைகளை க்ரமமாய் வைக்கவும். ப்ரோக்ஷணியை*

உத்பவநம் செய்து, பாத்ரங்களை ப்ரோக்ஷித்து, தூஷ்ணீமாய் ஆஜ்ய ஸம்ஸ்காரம் செய்து, ஸ்ருக் ஸ்ருவ ஸம்மார்ஜனம் செய்து, அப்ரதக்ஷிணமாய்ப் பரிஷேசநம் செய்து, சதுர்க்ருஹீத ஆஜ்யத்தினல் அக்னியில் ஹோமம் செய்யவும். "அயாச்ச" "அதோதேவா:" என்ற இரண்டு ருக்குகள், மநோஜ்யோதி: என்றருக்கு இவைகளால் ஹோமம் செய்து, ஸ்ருவத்தினல் வ்யாஹ்ருதிகளால் தனித்தனியே ஹோமம் செய்யவும். பிறகு அப்ரதக்ஷிணமாய்ப் பரிஷேசநம் செய்து, அக்னியை நமஸ்கரித்து, ஸாயம் ப்ராத: ஔபாஸநாஹுதிகளை ஆஜ்யத்தால் செய்யவும். ப்ரேதனின் கோத்ரம் நாமம் முதலியவைகளை த்விதீயாந்தமாய்ச் சொல்லி, பித்ரு மேதவிதியால் ஔபாஸநாக்னியால் ஸம்ஸ்கரிக்கின்றேன். என்று ஸங்கல்ப்பித்து, சவத்தை ஸ்நானம் செய்விக்கவும். அக்னி இருந்தால் கர்த்தா ஸ்நானம் செய்து ஸங்கல்ப்பிக்கவும். காலத்தில் ஹோமம் செய்யப்படாமலிருந்தால் ஹோமத்தைச் செய்து பிறகு ஸங்கல்ப்பிக்கவும்.

अत्र पत्न्यसन्निधाने प्रतिनिधिमाह त्रिकाण्डी – या तु भार्या विदूरस्था पतिता व्याधिताऽपि वा। अनिच्छुः प्रतिकूला वा तस्याः प्रतिनिधौ क्रियाः इति । दर्भादिना भार्याप्रतिनिधिं कृत्वा पूर्वोक्तक्रमेणाग्निं सन्धाय प्रेतेऽमात्या इत्यादि कुर्यात्। असन्निधाने विशेष उक्तः पितृमेधसारे – दूरभार्ये प्रेते प्रोषितभर्तृकायां वाऽतीतायां चतुर्गृहीतेनाज्येन सप्त ते अग्ने, सप्त व्याहृतयः, पूर्वं देवा अपरेण, प्राणापानौ, मात्वा वृक्षौ सम्बाधिष्टाम्, मात्वा वृक्षौ सम्बाधेथाम्, अग्नेऽभ्यावर्तिन्, अग्ने अङ्गिरः, पुनरूर्जा, सहरय्या इत्येतैः षोडशाहुतीर्जुहुयात् इति।

இங்குப் பத்னீ ஸந்நிதியிலில்லாவிடில், ப்ரதிநிதியைச் சொல்லுகிறது, த்ரிகாண்டீ:- 'எந்தப் பார்யை தூரதேசத்திலிருக்கின்ருளோ, அல்லது

பதிதையோ, வ்யாதியுள்ளவளோ, இச்சை யில்லாதவளோ, ப்ரதிகூலையோ, அவளுக்கு ப்ரதிநிதியை வைத்து க்ரியைகளைச் செய்யவும்' என்று. தர்ப்பம் முதலியதால் பார்யைக்கு ப்ரதிநிதியைச் செய்து, முன் சொல்லிய க்ரமப்படி அக்னிஸந்தாநம் செய்து, ''ப்ரேதேமாத்யா'' என்பது முதலாகியதைச் செய்யவும். அஸந்நிதி விஷயத்தில் விசேஷம் சொல்லப்பட்டுள்ளது. **பித்ருமேத ஸாரத்தில்:**- பார்யை தூரதேசத்தி லிருக்கும் போது புருஷன் இறந்தாலும், பர்த்தா தூரதேசத்திலிருக்கும் போது பார்யை இறந்தாலும், சதுர்க்ருஹீதமான ஆஜ்யத்தினல் ''ஸப்ததே அக்னே. ஏழு வ்யாஹ்ருதிகள், பூர்வம்தேவா:, ப்ராணாபாநௌ, மாத்வாவ்ருக்ஷௌ ஸம்பாதிஷ்டாம், மாத்வாவ்ருக்ஷௌ ஸம்பாதேதாம். அக்நேப்யாவர்த்தின், அக்னே அங்கிர:, புநரூர்ஜா, ஸஹரய்யா'' என்ற மந்தரங்களால் பதினாறு ஆஹுதிகளை ஹோமம் செய்யவும்.

## रजस्वलादिभर्तृमरणे

रजस्वलाद्यग्निसन्धानमाह बोधायनः – म्रियमाणस्य चेद्भार्या सूतिकर्तुमती तु वा । दुर्गां मनस्वतीं हुत्वा ततस्तन्तुमतीमृचम् । उद्बुध्यस्वत्रयस्त्रिंशद्व्याहृत्या च समस्तया । व्याहृत्या त्रिरनाज्ञातमहाव्याहृतिभिस्तथा । हुत्वा चतुर्गृहीतेन सर्पिषाऽथास्य संस्क्रिया इति । दुर्गा-जातवेदसे सुनवाम सोममित्यृक्, मनस्वती-मनो ज्योतिर्जुषतामित्यृक्, तन्तुमती-तन्तुं तन्वन्निति, उद्बुध्यस्व, त्रयस्त्रिंशत्तन्तव इति, महाव्याहृतयः - भूरग्नये च पृथिव्यै चेत्याद्याश्चतस्रः अत्र जुहुयात् । तद्यमो द्वाभ्यां वरं दत्वाऽथ संस्क्रियेति केचित् पठन्ति । तत्पक्षे तद्यमो राजा भगवान् यस्मिन्नेनमिति द्वाभ्यां च हुत्वा वरं धेनुं दत्वा संस्क्रिया कार्या ।

**ரஜஸ்வலை முதலியவரின் பர்த்தாவின் மரணத்தில்**

*ரஜஸ்வலை முதலியவரின் அக்னி ஸந்தானத்தைச் சொல்லுகிருர், போதாயநர்: இறந்தவனின் பார்யை ஸூதிகை, அல்லது ரஜஸ்வலையாய் இருந்தால், துர்கா, மநஸ்வதீ, தந்துமதீ, உத்புத்யஸ்வ, த்ரய ஸ்த்ரிம்சத், ஸமஸ்தவ்யாஹ்ருதி, வ்யாஹ்ருதிகள் மூன்று, அநாஜ்ஞாதங்கள், மஹாவ்யாஹ்ருதிகள், இவைகளை, சதுர்க்ருஹீதாஜ்யத்திஞல் ஹோமம் செய்து, பிறகு ம்ருதனுக்கு ஸம்ஸ்காரம் செய்யவும். துர்கா- ஜாதவேதஸே என்ற ருக். மநஸ்வதீ- தந்தும்தந்வந், என்பது, உத்புத்யஸ்வ, த்ரயஸ்த்ரிம்சத், மஹாவ்யாஹ்ருதிகள்- பூரக்னயேச முதலிய நான்கு மந்த்ரங்கள். இவைகளால் ஹோமம் செய்யவும். இங்கு, ''தத்யமோத்வாப்யாம் வரம் தத்வாத ஸம்ஸ்க்ரியா'' என்று சிலர் படிக்கின்றனர். அந்தப் பக்ஷத்தில் ''தத்யமோராஜா பகவான், யஸ்மிந்நேநம் என்ற இரண்டு மந்த்ரங்களாலும் ஹோமம் செய்து வரனை- பசுவைக்கொடுத்து ஸம்ஸ்காரத்தைச் செய்ய வேண்டுமென்பது பொருள்.*

ननु— बह्वल्पं वाऽपि यत् कर्म स्वगृह्ये प्रतिपादितम् । तावन्मात्रे कृते सर्वशास्त्रस्यार्थः कृतो भवेत् इति स्मरणात् स्वगृह्ये यावदुक्तं तावदेवानुष्ठेयम्, अतो बोधायनीयानामेवैतदनुष्ठानं नान्येषामिति चेत्, न । स्वगृह्यानुक्तौ गृह्यान्तरोक्तमपेक्षितमविरुद्धमनुष्ठेयमेव, सर्वशाखाप्रत्ययन्यायेन साकाङ्क्षाणामाकाङ्क्षापूरणस्य कर्तुमुचितत्वात्, सर्वश्रुत्युपसंहाराच्छ्रौतेषूक्तौ यथा विधिः । सर्वस्मृत्युपसंहारात् स्मार्तेषूक्तस्तथा विधिः इति तथैव स्मरणात् । अतः न जातु परशाखोक्तं बुधः कर्म समाचरेत् इत्यादिनिषेधः स्वकल्पसूत्रोक्ताननुष्ठानेन परसूत्रोक्तानुष्ठानविषयः ।

*''அதிகமாயினும் அல்பமாயினும் எந்தக்கர்மம் தனது க்ருஹ்யத்தில் சொல்லப்பட்டுள்ளதோ அவ்வளவு மட்டில் செய்யப்பட்டால் ஸர்வ சாஸ்த்ரார்த்தமும் செய்யப் பட்டதாகும்'' என்று ஸ்ம்ருதியிருப்பதால், தனது க்ருஹ்யத்தில் எவ்வளவு சொல்லப்பட்டுள்ளதோ அவ்வளவே அனுஷ்டிக்கத் தகுந்தது. ஆகையால் போதாயநீயர்களுக்கே இந்த அனுஷ்டாநம், மற்றவருக்கில்லை, எனில், அது இல்லை. ஸ்வக்ருஹ்யத்தில் சொல்லாவிடில், வேறு க்ருஹ்யத்தில் சொல்லப்பட்டதும், அபேக்ஷிதமும், அவிருத்தமுமாகில், அனுஷ்டிக்கத்தகுந்ததே. ஸர்வசாகாப்ரத்யந்யாயத்தால், ஸாகாங்க்ஷங்களுக்கு ஆகாங்க்ஷாபூரணம் செய்வது உசிதமானதால் ''ச்ரௌதகர்மங்களில் ஸர்வச்ருதிகளையும் உபஸம்ஹரித்து எப்படி விதி சொல்லப்பட்டுள்ளதோ, அவ்விதமே ஸர்வஸ்ம்ருதிகளையும் உபஸம்ஹரித்து ஸ்மார்த்தங்களிலும் விதி சொல்லப்பட்டுள்ளது, என்று ஸ்ம்ருதி உள்ளது. ஆகையால் ''வித்வான் ஒரு காலும் அந்யசாகையில் சொல்லப்பட்ட கர்மத்தை அனுஷ்டிக்கக் கூடாது'' என்பது முதலிய நிஷேதம், தமது கல்பஸூத்ரத்தில் சொல்லியதை அனுஷ்டிக்காமல், அன்யஸூத்ரத்திற் சொல்லியதை அனுஷ்டிக்கும் விஷயத்தைப் பற்றியது.*

यदाह कात्यायनः — स्वशाखाविधिमुत्सृज्य परशाखाश्रयं च यत्। कर्तुमिच्छति दुर्मेधा मोघं तस्य तु तत् फलम्। यन्नाम्नातं स्वशाखायां यथोक्तमविरोधि च। विद्वद्भिस्तदनुष्ठेयमग्निहोत्रादि-कर्मवत् इति । अत एवोपनिष्क्रमणमुपनीतानामुपवीतधारण मुपाकर्मणि ब्रह्मचारिणां क्षौरमुपवीतधारणं सन्ध्यावन्दनगायत्री-जपादीनि आपस्तम्बाद्यनुक्तानि बोधायनादिभिरुक्तानि सर्वे शिष्टा आचरन्ति।

**காத்யாயனர்:-** *தனது சாகையில் சொல்லிய விதியை விட்டு அந்ய சாகையிற் சொல்லியதைச் செய்ய விரும்பும்*

துர்ப்புத்தி எவனோ அவனது கர்மபலன் வீணாக ஆகும். எது தனது சாகையில் சொல்லப்படவில்லையோ, பரசாகையில் சொல்லப்பட்டுள்ளதோ, விரோதமில்லாமலுமிருக்கின்றதோ அதை வித்வான்கள் அனுஷ்டிக்கலாம், அக்னி ஹோத்ராதி கர்மங்களில் போல். ஆகையாலேயே உபநிஷ்க்ரமணம், உபநயநம் செய்யப்பட்டவருக்கு உபவீததாரணம், உபாகர்மத்தில் ப்ரம்ஹசாரிகளுக்கு க்ஷெளரம், உபவீததாரணம், ஸந்த்யாவந்தநம், காயத்ரீ ஜபம் முதலியவைகள், ஆபஸ்தம்பர் முதலியவர்களால் சொல்லப்படாவிடினும், போதாயனர் முதலியவர்களால் சொல்லப்பட்டிருப்பதால் அவைகளைச் சிஷ்டர்கள் அனுஷ்டிக்கின்றனர்.

## स्वसूत्राभावे परसूत्रेण दाहादि ।

स्वसूत्रोक्ता अपि दाहाद्येकोद्दिष्टपर्यन्ताः । पूर्वाः क्रिया अनुष्ठापकस्वसूत्रविदलाभे परसूत्रेणापि कर्तव्याः । तदाह भरद्वाजः – अलब्धात्मीयसूत्रस्य श्राद्धान्तं परसूत्रतः । कुर्यात् सपिण्डीकरणं स्वसूत्रेणैव नान्यतः इति । अङ्गिरा अपि – सूत्रान्तरेण यद्दग्धं प्रेतं तस्योत्तराः क्रियाः । स्वसूत्रेणैव कर्तव्याः सपिण्डी तु विशेषतः इति । उत्तराः - दाहाद्येकोद्दिष्टपर्यन्ताभ्यः क्रियाभ्यः परा इत्यर्थः ।

## ஸ்வஸூத்ரம் கிடைக்காவிடில், அன்யஸூத்ரத்தால் தஹநம் முதலியவை

தனது ஸூத்ரத்தில் சொல்லப்பட்டுள்ள தாஹம் முதல் ஏகோத்திஷ்டம் வரையிலுள்ளதுமான க்ரியைகளை, செய்விப்பவனான ஸ்வஸூத்ர மறிந்தவன் கிடைக்காவிடில் அன்யஸூத்ரத்தினாலும் செய்யலாம். அதைச் சொல்லுகிறார். பரத்வாஜர்:- ஸ்வஸூத்ரம் கிடைக்காதவனுக்கு ஏகோத்திஷ்டம் முடியும் வரையில் அன்யஸூத்ரத்தால் செய்யவும். ஸபிண்டீகரணத்தை ஸ்வஸூத்ரத்தாலேயே செய்யவேண்டும். அன்ய ஸூத்ரத்தால் செய்யக்கூடாது. அங்கிரஸ்ஸும் :-

*அன்யஸூத்ரத்தால் தஹிக்கப்பட்ட ப்ரேதனின் உத்தரக்ரியைகளை ஸ்வஸூத்ரத்தாலேயே செய்ய வேண்டும். ஸபிண்டீகரணமும் அவச்யம் ஸ்வஸூத்ரத்தாலேயே செய்யப்படவேண்டும். உத்தரக்ரியைகள்-தாஹம் முதல் ஏகோத்திஷ்டம் வரையுள்ள க்ரியைகளுக்கு மேற்பட்ட க்ரியைகள் என்று பொருள்.*

याजुषिकाणां स्वशाखाविषयबोधायनसूत्रसंभवे तदेव ग्राह्यम्। तथाऽऽहाङ्गिराः – स्वसूत्रेऽविद्यमाने तु परसूत्रेण वर्तते। बोधायनमतं कृत्वा स्वसूत्रफलभाग्भवेत् इति । एवं स्वस्वशाखाविषयसूत्रान्तरसम्भवे तदेव ग्राह्यम् । अन्यथा यः स्वशाखां परित्यज्येति पूर्वोक्तदोषप्रसङ्गात्।

*யஜுச்சாகிகளுக்கு ஸ்வசாகையைச் சேர்ந்த போதாயன ஸூத்ரம் கிடைக்கும் பக்ஷத்தில் அதையே க்ரஹிக்கவும். அவ்விதமே சொல்லுகிறார் - அங்கிரஸ் ஸ்வஸூத்ரமில்லாவிடில் அன்யஸூத்ரத்தால் அனுஷ்டிக்கவும். போதாயன ஸூத்ரத்தால் அனுஷ்டித்தால் ஸ்வஸூத்ரானுஷ்டான பலத்தை அடைவான். இவ்விதமே அன்ய சாகிகளும் அவரவர் சாகாவிஷயமன வேறு ஸூத்ரம் கிடைத்தால் அதையே க்ரஹிக்க வேண்டும். அன்யசாகாவிஷய ஸூத்ரத்தை க்ரஹித்தால், ''ய: ஸ்வசாகாம் பரித்யஜ்ய'' என்று முன் சொல்லிய தோஷம் நேரிடும்.*

स्वशाखाविषयसूत्रालाभे धर्मिलोपाद्वरं धर्मलोप इति न्यायाच्छाखान्तरेणापि दहनं कार्यम्। अत्र विशेषमाह भारद्वाजः – यस्मिन् सूत्रे विवाहः स्यात्तेन प्रेतस्य च क्रिया । पिण्डसंसर्जनादर्वाक् सपिण्डी तु स्वसूत्रतः इति विवाहसमये स्वसूत्रालाभे येन सूत्रेण विवाहः कृतः, तेनैव सूत्रेण स्वसूत्रलाभेऽपि सपिण्डीकरणादर्वाक् प्रेतक्रिया कार्येति

कैश्चिद्व्याख्यातम् । श्वशुरसूत्रेण दाहादिश्राद्धान्तकर्माणि कार्याणीति पितृमेधसारे व्याख्यातम्। यथोचितमत्र ग्राह्यम्।

*ஸ்வசாகா விஷயமான ஸூத்ரம் கிடைக்காவிடில் ''தர்மிலோபத்தைவிடத் தர்மலோபம் இஷ்டமானது'' என்ற ந்யாயத்தால் வேறு சாகையினுலாவது தஹநம் செய்யத் தகுந்தது. இதில் விசேஷத்தைச் சொல்லுகிறுர், பாரத்வாஜர் எந்த ஸூத்ரத்தில் விவாஹம் நடந்ததோ அந்த ஸூத்ரத்தால், ப்ரேதக்ரியையையும் செய்யவும். ஸபிண்டீகரணத்திற்கு முன் வரையில். ஸபிண்டீகரணத்தை ஸ்வஸூத்ரத்தாலேயே செய்யவேண்டும். விவாஹ காலத்தில் ஸ்வஸூத்ர மறிந்தவன் கிடைக்காததால் வேறு எந்த ஸூத்ரத்தால் விவாஹம் செய்யப்பட்டதோ அந்த ஸூத்ரத்தாலேயே, ஸ்வஸூத்ரம் கிடைத்தாலும் ஸபிண்டீகரணத்திற்கு முன்னுள்ள ப்ரேதக்ரியையைச் செய்யவேண்டுமென்று சிலரின் வ்யாக்யாநம். மாமனுரின் ஸூத்ரத்தால் தாஹம் முதல் ச்ராத்தாந்த கர்மங்களைச் செய்யவேண்டுமென்று பித்ருமேத ஸாரத்தில் வ்யாக்யாநம் செய்யப்பட்டுள்ளது. இங்கு உசிதமான பக்ஷத்தை க்ரஹிக்கவும்.*

उपात्ते तु प्रतिनिधौ मुख्यार्थो यत्र लभ्यते । तत्र मुख्यमनादृत्य गौणेनैव समापयेत् इति स्मृत्यर्थसारवचनार्थस्यात्रापि तुल्यत्वेन अन्यसूत्रेण दाहे कृते न मध्ये स्वसूत्रप्रक्रियावकाशः । यत्तु कात्यायनवचनम् – (अक्रिया) प्रक्रिया त्रिविधा प्रोक्ता विद्वद्भिः कार्यकारिभिः । अक्रिया च परोक्ता च तृतीया चायथाक्रिया। प्रधानस्याक्रियायां तु साङ्गं तत् क्रियते पुनः । तदङ्गकरणे कुर्यात् प्रायश्चित्तं न कर्म तत् इति, तत् प्रतिपदविहितव्यतिरिक्तविषयम्। यत्तु चन्द्रिकायां परसूत्रेण दाहे पुनर्दहनमुक्तम् – अनात्मीयेन शास्त्रेण यो दग्धस्तं तु शास्त्रतः इति, तत् पूर्वोक्तानेकस्मृतिविरोधाच्छिष्टाचारविरोधाच्चोपेक्ष्यम्।

கௌணத்தை க்ரஹித்து நடத்தும்பொழுது முக்யம் கிடைத்தாலும், அந்த இடத்தில் முக்யத்தை க்ரஹிக்காமல் கௌணத்தாலேயே ஸமாப்தி செய்யவும்' என்ற ஸ்ம்ருத்யர்த்த ஸாரவசனத்தின் அர்த்தம் இங்கும் ஸமாநமானதால், அன்யஸூத்ரத்தால், தஹநம் செய்தபிறகு ஸ்வஸூத்ரம் கிடைத்தாலும் நடுவில் அதற்கு அவகாசமில்லை. ஆனால், காத்யாயனர் 'கார்யத்தை அனுஷ்டிக்கும் வித்வான்கள் க்ரியையை மூன்று விதமாகச் சொல்லுகின்சறனர். அக்ரியை என்றும், பரோக்தா என்றும், அயதாக்ரியை என்றும். ப்ரதானத்தைச் செய்யாவிடில் அந்தக் கர்மத்தை மறுபடி ஸாங்கமாகச் செய்யவும். அங்கத்தைச் செய்யாவிடில் ப்ராயஸ்சித்தத்தை மட்டில் செய்யவும். அந்தக் கர்மாவைச் செய்ய வேண்டியதில்லை' என்று சொல்லியிருக்கிறாரே எனில், அது அதற்கென விதிக்கப்பட்டதைத் தவிர்த்த மற்றதைப் பற்றியதாம். ஆனால் சந்த்ரிகையில், பரஸூத்ரத்தால் தஹித்த விஷயத்தில் புநர்தஹநம் சொல்லப்பட்டுள்ளதே, ''தனது ஸூத்ரமல்லாத ஸூத்ரத்தால் தஹிக்கப் பட்டவனை ஸ்வஸூத்ரத்தால் தஹிக்கவும்'' எனில், முன்சொல்லிய அநேக ஸ்ம்ருதிகளுக்கு விருத்தமா யிருப்பதாலும், சிஷ்டாசார விரோதத்தாலும், உபேக்ஷிக்கத் தகுந்தது.

सङ्कल्पात् प्राक् शुद्धिः उपवीतादिनियमश्च ।

कर्तुरन्येषां च सन्ध्याकर्मादिषु दहनसङ्कल्पात् प्राक् स्नानाच्छुद्धिः - आरम्भात् प्राग्यदि स्नायात्तस्य शुद्धिर्भविष्यति । आरब्धे तु च संस्कारे शुद्धिस्तु दहनात् परम् इति स्मरणात् । स्नानाचमनप्रदक्षिणनमस्कारप्राणायामानुपवीती कुर्यात्, प्राणायामे नमस्कारे स्नाने चैव प्रदक्षिणे । पैतृके प्रेतकृत्येऽपि ह्युपवीतं विधीयते इति स्मरणात् ।

**ஸங்கல்பத்திற்கு முன் சுத்தி உபவீதாதி நியமம்**

கர்த்தாவுக்கும், அன்யர்களுக்கும், தஹன ஸங்கல்பத்திற்கு முன் ஸ்நானத்தால் ஸந்த்யாவந்தநாதி கர்மங்களில் சுத்தி. 'ஆரம்பத்திற்கு முன் ஸ்நாநம் செய்தால் அவனுக்குச்சுத்தி உண்டாகும். ஸம்ஸ்காரத்தை ஆரம்பித்து விட்டால் தஹநத்திற்குப் பிறகே சுத்தி' என்று ஸ்ம்ருதி வசனத்தால். ஸ்நாநம், ஆசமனம், ப்ரதக்ஷிணம், நமஸ்காரம், ப்ராணாயாமம் இவைகளை உப வீதியாகச் செய்யவும். 'பித்ர்ய கர்மத்திலும், ப்ரேத க்ருத்யத்திலும், ப்ராணாயாமம், நமஸ்காரம், ஸ்நாநம், ப்ரதக்ஷிணம் இவைகளில் உபவீதம் விதிக்கப்படுகிறது' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

प्रेतकर्मादौ शुद्ध्यर्थमाचमनप्राणायामाववश्यं कार्यौ । कर्मावसाने कर्मादौ मृतावाचमनं पुनः । कुर्यात् स्वकर्मसिध्यर्थं सर्वदा सर्वकर्मसु । ततोऽभ्यन्तर शुध्यर्थं प्राणायामान् समाचरेत् इति भारद्वाजस्मरणात् । सङ्कल्पप्रभृति दशाहहोमात् प्राचीनेषु कर्मसु कर्ता प्राचीनावीती दक्षिणामुखश्च भवेत् । तथा शुनःपुच्छः – प्रेतकृत्येषु पित्र्येषु प्राचीनावीतमिष्यते । दक्षिणाग्राश्च दर्भाः स्युः स च वै दक्षिणामुखः इति । मनुरपि – प्राचीनावीतिना सर्वमपसव्य मतन्द्रिणा । पित्र्यमानिधनात् कार्यं विधिवद्दर्भपाणिना इति । आनिधनात् - मरणमारभ्येत्यर्थः । तथा च बोधायनेन श्रुत्यर्थोऽभिहितः - प्राचीनावीतं पितृणामिति मृतानामेवेदमुक्तं भवतीति ।

ப்ரேதகர்மத்தின் ஆதியில் சுத்திக்காக ஆசமநம், ப்ராணாயாமம் இவைகளை அவச்யம் செய்யவேண்டும். ப்ரேதகர்மாவின் ஆதியிலும், முடிவிலும் ஆசமனம் செய்யவேண்டும். 'எப்பொழுதும் எல்லாக் கர்மங்களிலும் ஆத்யந்தங்களில் ஆசமநம் செய்ய வேண்டும். பிறகு ஆந்தர சுத்திக்காக ப்ராணாயாமங்களைச் செய்யவேண்டும். என்று

பாரத்வாஜ ஸ்ம்ருதியிருப்பதால். ஸங்கல்பம் முதல் தசாஹத்தில் செய்யும் ஹோமத்திற்கு முன் உள்ள கர்மங்களில் கர்த்தா ப்ராசீனவீதியாயும் தெற்கு நோக்கியவனுயுமிருக்கவேண்டும். அவ்விதமே, **சுனஃஷபுச்சர்:**- ப்ரேத க்ருத்யங்களிலும், பித்ரு க்ருத்யங்களிலும் ப்ராசீனவீதம் விதிக்கப்படுகிறது. தர்ப்பங்கள் தெற்கு நுனியுள்ளவைகளாக இருக்க வேண்டும். கர்த்தாவும் தக்ஷிணாபிமுகனுயிருக்க வேண்டும். **மநுவும்** கர்த்தா ப்ராசீனவீதியாய், தர்ப்ப பாணியாய், அப்ரதக்ஷிணமாய், கவனத்துடன், மரணம் முதற்கொண்டு ஸகல பித்ரு கர்மத்தையும் விதிப்படி செய்யவேண்டும். அவ்விதமே போதாயனரால் வேதார்த்தம் சொல்லப்பட்டது -'ப்ராசீனவீதம் பித்ருணாமிதி ம்ருதாநாமேவேதமுக்தம் பவதி, என.

बोधायनीये — प्राचीनावीतिना कार्यं प्रेतकर्म च पैतृकम्। निवीतिनो वहेयुस्ते ज्ञातिनोऽन्ये च वाहकाः इति। सङ्कल्पप्रभृति प्राचीनावीतं कार्यमिति तद्व्याख्यानेऽभिहितम्। सङ्कल्पादौ नियमः स्मृत्यर्थसारेऽभिहितः – आवाहनेऽर्घ्ये सङ्कल्पे पिण्डदाने तिलोदके। अक्ष(य्या) तासनयोः पाद्ये गोत्रं नाम च कीर्तयेत् इति। स्मृत्यन्तरे — स्नात्वा स्वशक्त्या द्रविणं दत्वा सभ्यान् प्रदक्षिणम्। परीत्य तैरनुज्ञातः कर्म सङ्कल्पयेत्ततः इति। पितृमेधसारे सङ्कल्पप्रकारोऽभिहितः– अमुकगोत्रममुकशर्माणं प्रेतं, अमुकगोत्राममुकनाम्नीं प्रेतामिति वा अमुकाग्निना पैतृमेधिकेन विधिना संस्करिष्यामीति, ब्रह्ममेधे तु ब्रह्ममेध विधिना इति।

**போதாயநீயத்தில்** :- ப்ரேதகர்ம, பித்ருகர்ம இவை ப்ராசீன வீதியால் செய்யப்பட வேண்டும். ப்ரேத கர்மத்தில் வாஹகர்கள் ஜ்ஞாதிகளாயினும் அந்யர்களாயினும் நிவீதிகளாய் வஹிக்கவேண்டும். ''ஸங்கல்பம் முதல் ப்ராசீனவீதம்

செய்யப்படவேண்டும்'' என்று அதன் வ்யாக்யாநத்தில் சொல்லப்பட்டுள்ளது. ஸங்கல்பம் முதலியதில் நியமம் சொல்லப்பட்டுள்ளது ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:- ஆவாஹநம், அர்க்யம், ஸங்கல்பம், பிண்டதானம், திலோதகம், அக்ஷய்யம், ஆஸநம், பாத்யம் இவைகளில் கோத்ரம், நாம இவைகளைச் சொல்லவேண்டும். மற்றொரு ஸ்ம்ருதியில்:- ஸ்நாநம் செய்து, யதாசக்தி தனத்தைக் கொடுத்து, ஸபையிலுள்ளவர்களை வலம் வந்து, அவர்களால் அனுஜ்ஞாதனாய்ப் பிறகு கர்மஸங்கல்பத்தைச் செய்யவேண்டும். ஸங்கல்பத்தின் ப்ரகாரம் சொல்லப் பட்டுள்ளது. பித்ருமேத ஸாரத்தில்:- இந்தக் கோத்ரமும் இந்தச் சர்மாவுமுடைய ப்ரேதனை அல்லது இந்தக் கோத்ரமும் நாமாவுமுடைய ப்ரேதையை, அக்னியினால் பைத்ருமேதிக விதியால் ஸம்ஸ்கரிக்கப் போகின்றேன் என்று. ப்ரம்ஹமேதத்திலானால் ப்ரம்ஹமேத விதியால் என்று.

ब्रह्मेधसंस्कारो मोक्षकाङ्क्षिणां श्रोत्रियाणामेव । तथा चापस्तम्बः – उत्तरं पितृमेधं व्याख्यास्यामो यं ब्रह्ममेध इत्याचक्षते अथाप्युदाहरन्ति – द्विजातीनामपवर्गार्थोऽर्थतस्तत्वदर्शिभिः । ऋषिभिस्तपसो योगाद्बेष्टितुं पुरुषोत्तमम् । होतूंश्च पितृमेधं च संसृज्य विधिरुत्तरः । होतूंश्च पितृमेधं च संसृज्य विधिरुत्तरः । विहितस्तु समासेन क्रतूनामुत्तमः क्रतुः इति । अत्र कपर्दिभाष्यम् – ब्रह्मविद्भ्यः कर्तव्य इति ब्रह्ममेध इत्याचक्षते । अथवा ब्रह्मनिष्ठानामिति केचित्, ब्रह्मविद्भिर्विधीयते इति । अथाप्युदाहरन्ति श्रुतिम् । द्विजातीनामित्यारभ्य क्रतूनामुत्तमः क्रतुरित्यन्ता श्रुतिरानीयते । द्विजातयो ब्राह्मणा एव इह । तेषामपवर्गो मोक्षः । न पुनर्जन्म, एतद्विधानं येभ्यः प्रयुज्यते । केचिदपवर्गः स्वर्ग इति वदन्ति, तदयुक्तम्, पूर्वेणैव स्वर्गसिद्धेः । कैर्दृष्टमिति सन्दिग्धे उच्यते, अर्थतस्तत्वदर्शिभिरिति ।

केनोपायेनेति चेत्, तपसो योगात्। किमर्थमेतद्विधानमिति चेत्, वेष्टितुम्। वेष्टनं - प्रवेशनम्, प्राप्तिः सायुज्यमित्यनर्थान्तरम्। किं वेष्टितुमिति चेत्, पुरुषोत्तमं - पुरुषाणामुत्तमं नारायणम्, तत्प्राप्त्यर्थम्। तत्र पिण्डितार्थ उच्यते – द्विजातीनां मोक्षार्थं वेदशास्त्रार्थतत्वज्ञैः ऋषिभिस्तपसः प्राधान्यादेतद्विधीयत इति। किं तदिति चेत्, होतॄन् पितृमेधं च संसृज्य विधीयते इति।

*ப்ரம்ஹமேத ஸம்ஸ்காரம், மோக்ஷத்தை விரும்பிய ச்ரோத்ரியர்களுக்கே. அவ்விதமே, **ஆபஸ்தம்பர்**:- மேலான பித்ருமேதத்தைச் சொல்வோம். எதை ப்ரம்ஹமேதமென்கிறூர்களோ. இங்கு ச்ருதியைச் சொல்லுகின்றனர்;-'த்விஜாதீநா + க்ரது:' என்று இங்கு கபர்திபாஷ்யம்- ப்ரம்ஹவித்துக்களுக்குச் செய்யத் தகுந்ததாகியதால் 'ப்ரம்ஹமேதம்' எனப்படுகிறது. ப்ரம்ஹநிஷ்டர்களுக்கு என்று சிலர். ப்ரம்ஹவித்துக்களால் விதிக்கப்படுகிறது என்று. இது விஷயத்தில் ச்ருதியையும் சொல்லுகிறூர்கள். 'த்விஜாதீநாம்' என்பது முதல் 'க்ரது:' என்பது முடிய உள்ள ச்ருதி உதாஹரிக்கப்படுகிறது. த்விஜாதிகள் ப்ராம்ஹணர்கள் மட்டுமே இங்கு அவர்கட்கு அபவர்கம்=மோக்ஷம், அதற்காக இந்த விதானம் எவர்கட்குச் செய்யப்படுகிறதோ அவர்கட்கு மறுபிறப்பில்லை. சிலர் அபவர்கம் ஸ்வர்க்கம் என்கின்றனர். அது யுக்தமல்ல. பித்ருமேதத்தாலேயே ஸ்வர்க்கம் ஸித்திப்பதால். எவர்களால் காணப்பட்டது என்ற ஸந்தேஹத்தில் சொல்லப்படுகிறது 'அர்த்தத: தத்வதர்சிபி:' என்று. எந்த உபாயத்தினுல் என்றுல் 'தபஸோயோகாத்' என்பது. எதற்காக இந்த விதானமெனில், 'வேஷ்டிதும்' என்பதாம். வேஷ்டநம், ப்ரவேசம், ப்ராப்தி, ஸாயுஜ்யம் இவை ஒரே பொருளுள்ள பதங்கள். எதை அடைவதற்கெனில், 'புருஷோத்தமம் = புருஷர்களுள் உத்தமனுன நாராயணனை' என்றது. அவனை அடைவதற்காம். இதில் சேர்ந்த அர்த்தம்*

சொல்லப்படுகிறது. 'ப்ராம்ஹணர்களுக்கு மோக்ஷத்திற்காக, வேத சாஸ்த்ரார்த்த தத்வமறிந்த ருஷிகளால் தபஸ்ஸின் ப்ராதான்யத்தால் இது விதிக்கப்படுகிறது' என்று. அது எதுவெனில். 'ஹோத்ருன் +விதீயதே' என்று.

भाष्यान्तरे तु — ब्रह्मशब्देन चतुर्होतार उच्यन्ते, ब्रह्म वै चतुर्होतारः । एतद्वै देवानां परमं गुह्यं ब्रह्म । यच्चतुर्होतारः इत्यादिश्रुतेः । मेधो यज्ञः । ब्रह्मसंयुक्तो मेधः, चतुर्होतृसंयुक्तो दहनकल्प इति यावत् । तत्रापूर्वमन्ते स्यादिति न्यायेन होतृपितृमेधसमावेशे होतृकाण्डोऽन्ततो भवति, स एष विधिः क्रतूनां मध्ये उत्तमः - श्रेष्ठः । क्रतुरिति गौणनिर्देशः । अश्वमेधादिवद्विशिष्टपारलौकिकफलसाधक इत्यर्थः ।

மற்றொரு பாஷ்யத்திலோவெனில் - 'ப்ரம்ஹ சப்தத்தால் சதுர்ஹோதாக்கள் சொல்லப்படுகின்றன. 'ப்ரம்ஹவை + ஹோதார:'இது முதலியச்ருதிகளால். மேதம்=யாகம். ப்ரம்ஹஸம்யுக்தமான மேதம், சதுர்ஹோதாக்களுடன் கூடிய தஹநகல்பம் என்பது பொருள் என்றுள்ளது. அதில் 'புதியதைப் பின்பு சொல்ல வேண்டும்' என்ற ந்யாயத்தால், ஹோத்ருமந்த்ரங்களையும் பித்ருமேத மந்த்ரங்களையும் சேர்க்கும் பொழுது, ஹோத்ருகாண்டம் பின்பு ஆகிறது. அவ்விதமாகிய இந்த விதி, க்ரதுக்களுள் உத்தம:= ச்ரேஷ்டமான க்ரதுவாகியது, என்று கௌணநிர்த்தேசம். அச்வமேதாதிகளைப்போல் சிறந்த பாரலௌகிகபலத்தைச் சாதிப்பது என்பது பொருள்.

पितृमेधेनापि प्रेतस्य पारलौकिसुखावाप्तिमाह आपस्तम्बः – यत्तु श्मशानमुच्यते नानाकर्मणामेषोऽन्ते पुरुषसंस्कारो विधीयते ततः पर मनन्त्यं फलं स्वर्ग्यशब्दं श्रूयते इति । श्रुतिरपि – स एष यज्ञायुधी यजमानोञ्जसा स्वर्गं लोकमेति इति । बोधायनोऽपि – मृतसंस्कारेणामुं लोकम् इति । संग्रहे – खननं दहनं त्याग इति या

त्रिविधोच्यते । शरीर संस्क्रिया साऽस्य परलोकजयावहा । विधिः श्मशानसंयुक्तो योऽन्यः सञ्चयनादिकः । कर्मोपयुक्त देहस्य प्रतिपत्त्यर्थ एव सः इति ।

*பித்ருமேதத்தினாலும் ப்ரேதனுக்குப் பாரலௌகிக ஸுக ப்ராப்தியைச் சொல்லுகிறார், **ஆபஸ்தம்பர்** :-''யத்துச்மசாந + ச்ரூயதே'' என்று. இதன் பொருள்:- ''க்ருஹஸ்தர்கள் ச்மசாநத்தை அடைந்தனர். என்பதோவெனில், அது, அக்னிஹோத்ராதி கர்மங்களுக்குப் பிறகு, பித்ருமேதமென்கிற புருஷஸம்ஸ்காரம் விதிக்கப்படுகிறது. பிசாசங்களாகி ச்மசாநத்திலிருக்கிறார்கள் என்ற பொருளல்ல. ச்மசாநகர்மத்திற்குப் பிறகு அபரிமிதமான ஸ்வர்க்கமெனும் பெரும் பலன் கேட்கப்படுகிறது'' என்று. ச்ருதியும் இந்த யஜமாநன் யஜ்ஞாயுதங்களுடன் ஸுகமாக ஸ்வர்க்கத்தை அடைகிறான். **போதாயனரும்**:- பைத்ருமேதிக ஸம்ஸ்காரத்தால் ஸ்வர்க்க லோகத்தை அடைகிறான். **ஸங்க்ரஹத்தில்** கநநம், தஹநம், த்யாகம் என்று மூன்று விதமாயுள்ள எந்தச் சரீரஸம்ஸ்காரம் விதிக்கப்படுகிறதோ அது ப்ரேதனுக்குப் பரலோகத்தை அடைவிப்பதாகும். ஸஞ்சயநம் முதலிய மற்ற க்ரியை, கர்மங்களில் உபயோகிக்கப்பட்ட தேஹத்திற்கு ப்ரதிபத்தி கர்மத்திற்காகவேயாம்.*

मनुरपि — वैदिकैः कर्मभिः पुण्यैर्निषेकाद्यैर्द्विजन्मनाम् । कार्यः शरीरसंस्कारः फलवान् प्रेत्य चेह च इति । निषेकाद्यैः - श्मशानपर्यन्तैरित्यर्थः । हारीतोऽपि– द्विविध एव संस्कारो भवति ब्राह्मो दैवश्च । गर्भाधानादिः स्मार्तो ब्राह्मः, पाकयज्ञा हविर्यज्ञाः सोमयज्ञाश्चेति दैवः । ब्राह्मसंस्कारसंस्कृतः ऋषीणां समानतां सायुज्यं गच्छति, दैवेनोत्तरेण संस्कृतो देवानां समानतां सायुज्यं गच्छति इति । एवं च संस्कारस्य मृतातिशयाधायकतया

संस्कारफलस्य संस्कर्तृगामित्वाभावात् संस्करिष्यामीति परस्मैपदप्रयोग एवात्र साधुरित्याहुः ।

**மனுவும்:-** வேத விஹிதங்களாயும், புண்யங்களாயும், நிஷேகம் முதல் ச்மசானம் வரையிலுள்ளவையுமான கர்மங்களால் த்விஜர்களுக்கு இஹலோகத்திலும் பரலோகத்திலும் பலத்தை யளிக்கக் கூடிய சரீரஸம்ஸ்காரம் செய்யப்பட வேண்டும். **ஹாரீதரும்:-** ப்ராம்ஹம், தைவம் என இரண்டு விதமாயுள்ளது ஸம்ஸ்காரம், கர்ப்பாதாநம் முதல் ஸ்ம்ருத்யுக்தமா யாகியது ப்ராம்ஹம், பாகயஜ்ஞங்கள், ஹவிர்யஜ்ஞங்கள், ஸோமயஜ்ஞங்கள். என்பவை தைவஸம்ஸ்காரம். ப்ராம்ஹஸம்ஸ்காரத்தால் ஸம்ஸ்கரிக்கப்பட்டவன் ருஷிகளின் ஸாம்யத்தையும் ஸாயுஜ்யத்தையுமடைகிறுன். தைவமெனும் உத்தரஸம்ஸ்காரத்தால் ஸம்ஸ்கரிக்கப் பட்டவன் தேவர்களின் ஸாம்யத்தையும், ஸாயுஜ்யத்தையுமடைகிறுன். இவ்விதம், ஸம்ஸ்காரம் ம்ருதனுக்கு அதிசயத்தைக் கொடுப்பதாகியதால், ஸம்ஸ்கார பலம் கர்த்தாவை அடையாததால், 'ஸம்ஸ்கரிஷ்யாமி' என்று பரஸ்மைபதத்தை ப்ரயோகிப்பதே இங்கு உசிதமாகியது என்கின்றனர்.

## प्रेतालङ्करणम्

पुत्रादयः प्रेतं संस्नाप्य वस्त्रगन्धमाल्याद्यैरलङ्कुर्युः । तथा च कात्यायनः – घृतेनाभ्यक्तमाप्लुत्य सवस्त्रं चोपवीतिनम् । चन्दनोक्षितसर्वाङ्गं सुमनोभिश्च भूषयेत् इति । प्रचेताः – स्नानं प्रेतस्य पुत्राद्यैर्वस्त्राद्यैः पूजनं ततः । प्रेतं दहेच्छुभैर्गन्धैश्चर्चितं स्रग्विभूषितम् इति । स्मृत्यन्तरेऽपि – पुण्यैस्तु गन्धमाल्याद्यैर्मधवाद्भिसमर्पितैः । यदि प्रेतमलङ्कुर्यात् स याति परमां गतिम् इति ।

**ப்ரேதாலங்கரணம்**

புத்ரன் முதலியவர்கள் ப்ரேதத்தை ஸ்நானம் செய்வித்து, வஸ்த்ரம், சந்தனம், மாலை முதலியவைகளால் அலங்கரிக்கவேண்டும். அலங்கரிக்கவேண்டும். அவ்விதமே, **காத்யாயனர்:**- ப்ரேதத்தை நெய்யினால் பூசி, ஸ்நானம் செய்வித்து, வஸ்த்ரமும், உபவீதமும் தரிக்கச் செய்து தேஹம் முழுவதிலும் சந்தனத்தைப் பூசி, பிஷ்பங்களாலும் அலங்கரிக்கவேண்டும். **ப்ரசேதஸ்:**- புரேதத்தைப் புத்ரன் முதலியவர்கள் ஸ்நாநம் செய்வித்து, வஸ்த்ரம் முதலியவைகளால் பூஜிக்கவும். பிறகு நல்ல சந்தனங்களால் பூசப்பட்டதும், புஷ்பமாலைகளால் அலங்கரிக்கப்பட்டதுமான ப்ரேதத்தைத் தஹிக்க வேண்டும். **மற்றொரு ஸ்ம்ருதியிலும்:**- விஷ்ணுபாதத்தில் ஸமர்ப்பிக்கப்பட்ட புண்யங்களான சந்தனம் மாலை முதலியவைகளால் ப்ரேதத்தை அலங்கரித்தால் அவன் சிறந்த உலகத்தை அடைகிறான்.

गौतमः — स्नापयित्वाऽलङ्कृत्य च दक्षिणाग्रान् दर्भान् संस्तीर्य तेषु यज्ञियैः काष्ठैर्दक्षिणाग्रैर्दारुचितिं चित्वा प्रेतस्य केशश्मश्रुलोमनखानि वापयित्वा स्नापयित्वा च इति । आपस्तम्बः – अथास्य दक्षिणेन विहारं परिश्रिते प्रेतस्य केशाश्मश्रुलोमनखानि वापयित्वा स्नापयित्वा ग्राम्येणालङ्कारेणालङ्कृत्य इति । बोधायनेनापि प्रेताहुत्यनन्तरं वपनमुक्तम् ।

**கௌதமர்:**- ஸ்நாநம் செய்வித்து, அலங்காரம் செய்து, தெற்கு நுனியாயுள்ள தர்ப்பங்களைப் பரப்பி, அவைகளின் மேல் தெற்கு நுனியுள்ளதும் யஜ்ஞார்ஹங்களுமான காஷ்டங்களால் சிதையைக் கல்பித்து, ப்ரேதத்திற்குக் கேசங்கள், மீசை, ரோமங்கள், நகங்கள் இவைகளை வபநம் செய்வித்து, ஸ்நாநத்தையும் செய்விக்கவும். **ஆபஸ்தம்பர்:**- 'பிறகு விஹாரத்திற்குத் தெற்கில் மறைவுள்ள இடத்தில் ப்ரேதனுக்குக் கேசச்மச்ரு

லோம நகங்களுக்கு வபநம் செய்வித்து, ஸ்நாநம் செய்வித்து, க்ராம்யமான அலங்காரத்தால் அலங்கரித்து' என்றார். போதாயநராலும் ப்ரேதாஹுதிக்குப் பிறகு வபநம் சொல்லப்பட்டது.

अत्र केचिदाहुः – आहिताग्निसंस्कारस्योपक्रमादाहिताग्नेरेव वपनम्, अनाहिताग्नेः प्रेतस्य वपनं नैव विद्यते । अस्वर्ग्या ह्याहुतिः सा स्याच्छूद्रस्पर्शनदूषिता इति शूद्रस्पृष्टस्य शवहविषो दुष्टत्वस्मरणात् इति । अपरे तु – सोऽयमेवं विहित एवानाहिताग्नेः पात्रचयनेष्टकावर्जं इत्यापस्तम्बादिभिरनाहिताग्नेः प्रेतस्य पात्रचयनेष्टकावर्जितस्य संभावितस्य कर्मजातस्यातिदेशात् शूद्रस्पृष्टशवहविषो दुष्टत्वस्मरणस्य विहितव्यतिरिक्तविषयत्वा-द्वपनानन्तरं स्नानेन तच्छुद्धेश्चानाहिताग्नेरपि वपनमावश्यकमिति वदन्ति । तथा च गोपालभाष्ये – औपासनं हि सर्वस्यानाहिताग्नेर्गृहमेधिनो भवति, दक्षिणतोऽग्नेः परिश्रिते देशे केशश्मश्रुवपनादि समानम् इति । अत्र शिष्टाचारानुसारेण यथोचितं ग्राह्यम् ।

இங்குச் சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர்: - "ஆஹிதாக்னி ஸம்ஸ்காரத்தை ஆரம்பித்து ஸூத்ரமிருப்பதால் ஆஹிதாக்னிக்கு மட்டில் வபநம். அநாஹிதாக்னியான ப்ரேதத்திற்கு வபநமில்லை. 'சூத்ரன் ஸ்பர்சித்தால் துஷ்டமாகிய ப்ரேதத்தின் ஹோமம் ஸ்வர்க்கஹேதுவாகாது' என்று சூத்ர ஸ்ப்ருஷ்டமான சவஹவிஸ் ஸுக்குத் தோஷம் சொல்லப்பட்டிருப்பதால்" என்று. மற்றும் சிலரோவெனில் 'ஸோயமேவம் +வர்ஜம்' என்று ஆபஸ்தம்பர் முதலியவர்கள் அநாஹிதாக்னியான ப்ரேதனுக்குப் பாத்ரசயனம் இஷ்டகை தவிர்த்து, செய்யக்கூடிய மற்றக் கர்மங்களையெல்லாம் அதி தேசம் செய்திருப்பதாலும், சூத்ரஸ்ப்ருஷ்ட ஹவிர்துஷ்ட மென்ற வசனம் விஹிதமான விஷயம் தவிர்த்த மற்ற விஷயத்தைப்

பற்றியதால், வபநத்திற்குப் பிறகு ஸ்நானத்தால் ப்ரேதனுக்குச் சுத்தியாவதாலும் அநாஹிதாக்னிக்கும் வபநம் ஆவச்யகம்' என்கின்றனர். அவ்விதமே கோபால பாஷ்யத்தில்:- 'அநாஹிதாக்னியான எல்லோருக்கும் ஔபாஸநம் விஹிதம், அக்னிக்குத் தென் புறத்தில் மறையுள்ள இடத்தில் கேச ச்மச்ரு வபநம் முதலியது ஸமாநம்'என்றுள்ளது. இவ்விஷயத்தில் சிஷ்டாசாரத்தை அனுஸரித்து உசிதமாகியதை க்ரஹிக்கவும்.

## प्रेतनिर्हरणप्रकारः

अहतेन वाससा मुखाच्छादनमाह कात्यायनः – मुखे वस्त्रं विधायैनं निर्हरेयुः सुतादयः इति । शाखाभेदेन शवाच्छादन-वस्त्रमाह मनुः – बह्वृचः खण्डवस्त्रेण शवं प्रच्छादयेन्नरः । अखण्डितेन वस्त्रेण यजुःशाखी शवं तथा इति । स्मृत्यन्तरे तु – पादमात्रमवच्छाद्य मूलतोऽहतवाससा । कर्ता तदेकदेशं तु कुर्याद्वासस्तथोत्तरम् इति । आपस्तम्बः – औदुम्बर्यामासन्द्यां कृष्णाजिनं दक्षिणाग्रीवमधरलोमास्तीर्य तस्मिन्नेनमुत्तानं निपात्य पत्तोदशेनाहतेन वाससा प्रोर्णोति इति । पत्तः - पादप्रदेशो, दशा - अवसानं समाप्तिदेशो यस्य वाससः तत्पत्तोदशम्, तेनेत्यर्थः । अत्र कृष्णा जिनमाहिताग्निविषयम् । अन्यस्यासन्दीमात्रमेव । औदुम्बर्यामासन्द्यां दक्षिणाशिरसमुत्तानं संवेश्योदग्दशेन वाससा प्रच्छाद्येति स्मरणात् - आचाराच्च । आसन्द्यलाभे बोधायनः - आसन्द्या तल्पेन कटेन वा संवेष्ट्य दासाः प्रवयसो वा वहेयुरिति । ते ज निवीतिनो वहेयुरिति च । तथा च स एव - अथ निवीतिकार्याणि व्यवायः, स्त्रीप्रजासंस्कारः, प्रेतोद्वहनमन्यानि मनुष्यकार्याणीति ।

**ப்ரேதநிர்ஹரண முறை:-**

புதிதான வஸ்த்ரத்தால் முகத்தை மூடுவதைச் சொல்லுகிறுர், **காத்யாயனர்**:- முகத்தை வஸ்த்ரத்தால் மறைத்து ப்ரேதனைப் புத்ரர் முதலியவர்கள் அப்புறப்படுத்த வேண்டும். சாகாபேதத்தால் வஸ்த்ரபேதத்தைச் சொல்லுகிறுர், **மனு** -ருக்வேதியாகிய மனிதன் துண்டித்த வஸ்த்ரத்தால் சவத்தை மூடவேண்டும். யஜுச்சாகியாகியவன் துண்டிக்காத வஸ்த்ரத்தால் மூடவும். **மற்றொரு ஸ்ம்ருதியில்**:- கர்த்தா, ப்ரேதத்தின் பாதங்களை மட்டும் அடியில் புது வஸ்த்ரத்தால் போர்த்தி, அந்த வஸ்த்ரத்தின் ஒரு பாகத்தை க்ரஹித்து உத்தரீயமாகச் செய்துகொள்ளவும். **ஆபஸ்தம்பர்**:-அத்திமரத்தாலாகிய ஆஸந்தியில், தெற்குத் திக்கில் கழுத்தின் பாகமுள்ளதும், அடியில் மயிருள்ள பக்கமுள்ளதுமான க்ருஷ்ணாஜிநத்தைப் பரப்பி, அதன்மேல் ப்ரேதனை மல்லாந்தவனாக வைத்து, பாதப்ரதேசத்தில் முடிவுள்ளதான புதிதான வஸ்த்ரத்தால் போர்த்தவும். இங்கு, க்ருஷ்ணாஜிநம் ஆஹிதாக்னியைப் பற்றியது. அநாஹிதாக்னிக்கு ஆஸந்தீமட்டும். "அத்திமரத்தாலாகிய ஆஸந்தியில் தெற்கு சிரஸ்ஸுள்ளவனாய், மல்லாந்தவனாய் ப்ரேதனை வைத்து வடக்கில் தலைப்புள்ள வஸ்த்ரத்தால் போர்த்தி, என்று ஸ்ம்ருதி யிருப்பதாலும், ஆசாரமிருப்பதாலும். ஆஸந்தீகிடைக்கா விடில், **போதாயனர்**:- ஆஸந்தியாலாவது, தல்பத்தா லாவது, பாயினாலாவது சுற்றி, தாஸர்களாவது, வ்ருத்தர்களாவது வஹிக்கவேண்டும். அவர்கள் நிவீதிகளாக வஹிக்கவேண்டும். அவ்விதமே, **போதாயனர்**:- இனி நிவீதியாகச் செய்ய வேண்டிய கர்மங்கள் சொல்லப்படுகின்றன. அவை மைதுனம், ஸ்திரீ ப்ரஜையின் ஸம்ஸ்காரம், ப்ரேதத்தை வஹித்தல், மற்ற மநுஷ்ய கார்யங்களுமாம்.

आश्वलायनोऽपि – अन्वञ्चोऽमात्या अधोनिवीताः प्रमुक्तशिखा ज्येष्ठप्रथमाः कनिष्ठजघन्याः प्राप्यैकं भूमिभागं

कर्तोदकेन शमीशाखया त्रिः प्रसव्यमायतनं परिमृजन् प्रोक्षत्यपेत वीत विच सर्पतात इति । स्मृत्यन्तरे – निवीतिनो वहेयुस्ते ज्ञातयोऽन्ये च वाहकाः इति । वसिष्ठः – औदुम्बर्यामथासन्द्यां वहेदूर्ध्वमुखं शवम् । न ग्रामाभिमुखं नाधो नयेयुर्याम्यशीर्षकम् । वृद्धाः प्रेतस्य परतः स्त्रियो बालाश्च पृष्ठतः । अधःकृतोत्तरीयाः स्युः प्रविमुक्तशिरोरुहाः । गच्छेयुर्बान्धवाः पश्चान्नाग्नेः प्रेतस्य चान्तरा इति ।

**ஆச்வலாயனரும்** :- பந்துக்கள் நிவீதிகளாய் அவிழ்ந்த சிகை யுள்ளவர்களாய், ஜ்யேஷ்டன் முன்னும் கநிஷ்டன் பின்னுமாகச் செல்ல வேண்டும். ஒரு ஸ்தலத்தையடைந்து கர்த்தா, அந்த ஸ்தலத்தை வன்னிக்கிளையுடன் ஜலத்தினுல் மூன்று தடவை துடைத்து, 'அபேத-' என்ற மந்த்ரத்தால் ப்ரோக்ஷிக்கவும். **ஸ்ம்ருத்யந்தரத்தில** :- ஜ்ஞாதிகளும், அவரல்லாதவரும், வாஹகர்களானுல் நிவீதிகளாக வஹிக்க வேண்டும். **வஸிஷ்டர்** :- அத்திக் கட்டையாலாகிய ஆஸந்தியில், மேல் நோக்கிய சவத்தை வஹிக்கவும். க்ராமாபிமுகமாயும், கீழ் நோக்கியதுமாய் வஹிக்கக் கூடாது. தெற்கில் சிரஸ்ஸுள்ளதாய் வஹிக்கவும். வயதிற் பெரியோர்கள் ப்ரேதத்தின் முன் செல்ல வேண்டும். ஸ்த்ரீகளும், சிறுவர்களும் பின் செல்ல வேண்டும். எல்லோரும் உத்தரீயத்தைக் கீழே தரித்தவராயும், கட்டப்படாத மயிருடையவர்களாயும் பந்துக்கள் பின் செல்ல வேண்டும். அக்னிக்கும் ப்ரேதத்திற்கும் நடுவில் போகக் கூடாது.

बोधायनविधौ तु – क्षीरं दधीत्युपक्रम्य पुरस्तादग्निं संस्कर्ता मुक्तशिखो मध्यतः शवम् इति । अग्निशवयोर्मध्ये कर्ता गच्छेदित्यर्थः । स्मृत्यन्तरे – प्रेतस्य पार्श्वयोरग्रे न गच्छेयुः कदाचन । यस्मादग्रे तु गन्तॄणामायुः क्षीणं पदे पदे इति । अग्रे तु

संभारा नेतव्याः । तथाचापस्तम्बः – अग्नीनग्निभाण्डमग्निहोत्रोच्छेषणं येन चान्येनार्थीभवति न हीनमन्वाहरेयुरथ तमाददते इति । हीनं कर्मण्यनुपयुक्तं न किञ्चिदप्यन्वाहरेयुः, किन्तु येन साधनेन कर्मण्यर्थी भवति तदेवान्वाहरेयुरित्यर्थः ।

**போதாயந விதியிலோ** - *'பால் தயிர்' என்று ஆரம்பித்து, முன்னால் அக்னி, ஸம்ஸ்கரிப்பவன் (கர்த்தா) மயிரையவிழ்த்தவனாய் சவத்தின் நடுவில்' என்றுள்ளது. அக்னிக்கும் சவத்திற்கும் நடுவில் கர்த்தா செல்ல வேண்டும் என்பது பொருள்.* **மற்றொரு ஸ்ம்ருதியில்** *:- ப்ரேதத்தின் பக்கங்களிலும், முன்னிலும் ஒருகாலும் போகக் கூடாது. முன் செல்பவர்களின் ஆயுள் ஒவ்வொரு அடியிலும் குறைந்து போகும். ஸம்பாரங்களை முன்பே கொண்டு போக வேண்டும். அவ்விதமே,* **ஆபஸ்தம்பர்** *:- அக்னிகள், அக்னி பாண்டம், அக்னி ஹோத்ரோச் சேஷணம், தவிர ஆவச்யகமாகியவைகளையும் எடுத்துச் செல்லவும். உபயோகமற்றதை எடுத்துச் செல்லக் கூடாது. உபயோகார்ஹமாயுள்ளதையே எடுத்துச் செல்லவும். பிறகு ப்ரேதத்தை எடுத்துச் செல்லவும்.*

बोधायनीये – अथाग्नयोऽथ पात्राणि दध्याज्यं दर्भा राजगवी यच्चान्यदप्येवं युक्तं इति । आश्वलायनीये – अथैतां दिशमग्नीन्नयन्ति यज्ञपात्राणि चान्वञ्चं प्रेतमयुजोऽमिथुनाः प्रवयसः पीठचक्रेण गोयुक्तेनेत्येके इति । पितृमेधसारे – अग्रेऽग्निमथ संभारांस्तिलांस्तण्डुलांश्चरुं पलाशशाखां हिरण्यशकलानाज्यं पात्राणि दर्भाश्मसिकताश्च प्रस्थाप्याथ प्रेतं हरेयुर्न ग्रामाभिमुखं प्रेतं निर्हरेयुः इति । अत्र हारीतः – न ग्रामाभिमुखं प्रेतं निर्हरेयुः कथञ्चन । निर्हारे शवदृष्ट्या तु ग्रामो नश्यति वीक्षितः इति ।

**போதாயநீயத்தில்** *:- பிறகு அக்னிகள், பிறகு பாத்ரங்கள், தயிர், நெய், தர்ப்பங்கள், ராஜகவீ*

இதுபோன்ற மற்றவையும். ஆச்வலாயநீயத்தில் :- பிறகு இந்தத் திக்கை நோக்கி அக்னிகளைக் கொண்டு செல்லவும். யஜ்ஞ பாத்ரங்களையும், பிறகு ப்ரேதத்தையும் ஒற்றைப் படையான வ்ருத்தர்கள் பீட சக்ரத்தால் கொண்டு செல்லவும். காளைகள் கட்டிய வாஹநத்தால் என்று சிலர். பித்ருமேதஸாரத்தில் :- முதலில் அக்னி, பிறகு ஸம்பாரங்கள், எள், அரிசி, சரு, பலாச்சாகை, ஹிரண்ய சகலங்கள், ஆஜ்யம், பாத்ரங்கள், தர்ப்பங்கள், கல், மணல் இவைகளை அனுப்பி, பிறகு ப்ரேதத்தை எடுத்துச் செல்லவும். க்ராமத்தை நோக்கியதாக ப்ரேதத்தை எடுத்துச் செல்லக் கூடாது. இதில் ஹாரீதர் :- ப்ரேதத்தை க்ராமத்தை நோக்கியதாகக் கடத்தக் கூடாது. அவ்விதம் செய்தால் சவத்தால் பார்க்கப்பட்ட க்ராமம் அழியும்.

मनुः — दक्षिणेन मृतं शूद्रं पुरद्वारेण निर्हरेत् । पश्चिमोत्तरपूर्वैस्तु यथासङ्ख्यं द्विजातयः इति । पुरग्रहणान्न ग्रामे नियमः । निर्हरणे शूद्रनिषेधः स्मर्यते – न विप्रं स्वेषु तिष्ठत्सु मृतं शूद्रेण हारयेत् । अस्वर्ग्या ह्याहुतिः सा स्याच्छूद्रसंस्पर्शदूषिता इति । विज्ञानेश्वरीये – यस्यानयति शूद्रोऽग्निं तृणं काष्ठं हवींषि च । प्रेतत्वं हि सदा तस्य स चाधर्मेण लिप्यते इति ।

**மனு** :- சூத்ரசவத்தை பட்டணத்தின் தெற்கு வாயில் வழியாகக் கடத்தவும். ப்ராஹ்மண சவத்தை மேற்கு வாயிலாலும், க்ஷத்ரிய சவத்தை வடக்கு வாயிலாலும், வைச்ய சவத்தைக் கிழக்கு வாயிலாலும் வெளியேற்ற வேண்டும். இங்கு 'புரம்' என்றிருப்பதால் க்ராமத்தில் இந்த நியமமில்லை. கடத்துவதிலும் சூத்ரனின் நிஷேதம் ஸ்ம்ருதியிலுள்ளது — "ப்ராஹ்மண சவத்தை, பந்துக்களிருக்கும் பொழுது சூத்ரனால் கடத்தக் கூடாது. சூத்ர ஸ்பர்சத்தால் துஷ்டமான அந்தச் சவாஹுதி, ஸ்வர்க்கத்தை அளிப்பதற்கு யோக்யமாகாது" என்று. விஜ்ஞாநேச்வரீயத்தில் - எந்த ப்ரேதத்திற்கு, சூத்ரன்

அக்னி, புல், கட்டை ஹவிஸ்ஸுகள் இவைகளைக் கொண்டு வருகிறாரோ, அவனுக்கு ப்ரேதத்வம் எப்பொழுதும் உள்ளது. அந்த ப்ரேதன் பாபத்துடனும் சேருகிறான்.

## आतुरव्यञ्जनम्

आतुरव्यञ्जनप्रकारमाह बोधायनः – अथास्य भार्याः कनिष्ठप्रथमाः प्रकीर्णकेश्यो व्रजेयुः पांसूनावपमानाः इति । स एव – तस्मिन् कालेऽस्यामात्यास्तिसृभिरङ्गुलीभिरुपहत्य पांसूनं सेष्वावपन्ते इति। अमात्याः - ज्ञातयः । आपस्तम्बश्च – यदि प्रैति प्रेतेऽमात्याः प्राचीनावीतिनः केशान् प्रकीर्य पांसूनावपन्ते इति । पांसूनामावपनस्थानमुक्तं भाष्यकारेण – स्वमूर्धस्वंसेषु वा इति ।

### துக்கமுற்றவனின் அடையாளம்

ஆதுரனின் அடையாளத்தைச் சொல்லுகிறார், **போதாயனர்** :- பிறகு, இறந்தவனின் பார்யைகள் சிறியவன் முதலாகவும், தலை மயிரை விரித்தவர்களாயும், புழுதிகளைத் தன்மேல் தூவியவர்களாயும் செல்ல வேண்டும். **போதாயனர்** :- அக்காலத்தில் ப்ரேதனின் ஜ்ஞாதிகள் மூன்று விரல்களால் புழுதியை எடுத்துத் தோள்களில் போட்டுக் கொள்ளவும். **ஆபஸ்தம்பரும்** :- இறந்தானாகில், இறந்த பிறகு, அமாத்யர்கள், (பந்துக்கள்) ப்ராசீநாவீதிகளாய் மயிரை விரித்துக் கொண்டு புழுதியைப் போட்டுக் கொள்ளவும். புழுதியைப் போட்டுக் கொள்ளுமிடம் பாஷ்யகாரரால் சொல்லப்பட்டுள்ளது. தங்கள் தலைகளிலாவது, தோள்களிலாவது என்று.

## पथिबलिविधिः

अनन्तरं कर्तव्यमाह कात्यायनः — आमपात्रेऽन्नमादाय प्रेतमग्निपुरस्सरम् । एकोऽनुगच्छंस्तस्यार्धमर्धं पर्युत्सृजेद्भुवि ।

अर्धमादहनं प्राप्त आसीनो दक्षिणामुखः । सव्यजान्वाच्य शनकैः सतिलं पिण्डदानवत् इति । पिण्डदानविधिना आदहनं श्मशानपर्यन्तं, स्वगृह्योक्तविधिनाऽन्नं प्रक्षिपेदित्यर्थः ।

### வழியில் பலிபோடும் விதி

*பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிருர் -* **காத்யாயனர்** *:- சூளையில் சுடப்படாத மண்பாத்ரத்தில் அன்னத்தை வைத்து எடுத்துக் கொண்டு அக்னியை முன்னிட்டுக் கொண்டு ஒருவனுகத் தொடர்ந்து செல்லவும். அந்த அன்னத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக ச்மசாநம் வரையில் சில இடங்களில் தெற்குமுகமாக உட்கார்ந்து முழங்காலை மடக்கி எள்ளுடன் பிண்டதாந விதிப்படி பூமியில், க்ருஹ்யத்தில் சொல்லிய விதிப்படி போட வேண்டும்.*

### शवाग्निपतनप्रायश्चित्तम् ।

अत्र शवाग्निपतने प्रायश्चित्तमुक्तं सङ्ग्रहे – ग्रामश्मशानयोर्मध्ये पतिते तु शवानले । पुनः कर्म प्रकुर्वीत प्रेताहुतिपुरस्सरम् इति । (प्रायश्चित्तपुरस्सरमिति पाठान्तरम्) तदा प्रायश्चित्तं - कृच्छ्रद्रव्यं दत्वा प्रेताहुतिपूर्वकं कर्म कुर्यात् । इदं च कृत्स्नाग्निपतने, प्रणीतार्घ्यसोमस्कन्नादौ दृष्टन्यायस्यात्रापि तुल्यत्वात् । एकदेशपतने तु तदुद्धृत्य संयोजयेत् ।

### சவாக்னி விழுந்தால் ப்ராயச்சித்தம்

*சவாக்னி விழுந்தால் ப்ராயச்சித்தம் சொல்லப்பட்டுள்ளது.* **ஸங்க்ரஹத்தில்** *:- க்ராமத்திற்கும் ச்மசாநத்திற்கும் நடுவில் சவாக்னி விழுந்துவிட்டால், ப்ரேதாஹுதி முதலாகக் கர்மத்தை மறுபடி செய்யவும். 'ப்ராயச்சித்த புரஸ்ஸரம்', என்ருெரு பாடமுண்டு. அதற்கு, க்ருச்ர த்ரவ்யதாநம் செய்து, ப்ரேதாஹுதி*

ஹோமம் முதலாக கர்மம் செய்ய வேண்டுமென்று பொருள். இவ்விதம் சொல்லியது, அக்னி முழுவதும் விழுந்த விஷயத்தில். ப்ரணீதை, அர்க்யம், ஸோமம் இவைகள் ஸ்கன்னமாவது முதலியதில் காணப்படும் ந்யாயம் இங்கும் ஸமமமாகியதால். ஸ்வல்ப பாகம் விழுந்தால் அதை எடுத்துச் சேர்த்துக்கொள்ளவும்.

## दहनदेशनिरूपणम्।

दहनदेशमाह गौतमः – आग्नेय्यां वाऽथ नैर्ऋत्यां दाहदेशं प्रकल्पयेत् । उद्वास्य कण्टकान् वृक्षान् वानस्पत्यौषधीरपि । ऊर्ध्वबाहुमितं याम्यं खातं प्राग्दक्षिणायनम् । पञ्चारत्निमितं कुर्यादधस्ताद् द्वादशाङ्गुलम् । दक्षिणाग्रान् कुशांस्तीर्य तिलान् क्षिप्त्वाऽथ याज्ञिकैः । काष्ठैरूर्ध्वमुखं दद्यान्न नग्नं तु यथाहविः इति । आग्नेय्यां नैर्ऋत्यामिति ग्रामापेक्षयाऽभिहितम् । आश्वलायनः – भूमिभागं खानयेद्दक्षिणपूर्वस्यां दिशि दक्षिणापरस्यां वा दक्षिणाप्रवणं प्राग्दक्षिणाप्रवणं वा प्रत्यग्दक्षिणाप्रवणमित्येके । यावानुद्बाहुकः पुरुषस्तावदायामं व्याममात्रं तिर्यग्वितस्त्यवागभित आकाशं श्मशानम् इति ।

### தஹந தேச நிரூபணம்

*தஹிப்பதற்குரிய தேசத்தைச் சொல்லுகிறார். **கௌதமர் :-** க்ராமத்திற்கு ஆக்னேய திக்கிலாவது, நிர்ருதி திக்கிலாவது தஹன தேசத்தைக் கல்ப்பிக்கவும். அங்குள்ள முட்கள், மரங்கள், செடிகள், கொடிகள் இவற்றையகற்றி, கையெடுப்பு அளவுள்ளதும், தெற்குத் திக்கிலுள்ளதும், அக்னி திக்கில் நீண்டதும், ஐந்து முழ ப்ரமாணமுள்ளதும், அடியில் 12- அங்குலமுள்ளதும்ஆகிய குழியைவெட்டி, அதில் தெற்கு நுனியாகத் தர்ப்பங்களைப் பரப்பி, திலங்களைப் போட்டு, யஜ்ஞார்ஹமான கட்டைகளைப் போட்டு, ப்ரேதத்தை மேல் முகமாக வைத்துத்*

தஹிக்கவும். நக்னமாய் தஹிக்கக் கூடாது. ஹவிஸ்ஸைப்போல். ஆச்வலாயனர் :- தென் கிழக்கிலாவது, தென் மேற்கிலாவது, தெற்கில் தாழ்ந்ததாக அல்லது தென்கிழக்கில் தாழ்ந்ததாகப் பூமி பாகத்தை வெட்ட வேண்டும். தென் மேற்கில் தாழ்ந்துள்ளதாக என்று சிலர். மனிதனின் கையெடுப்பு உயரமுள்ள விஸ்தார முடையதும், ஒரு மார்ப அகலமுள்ளதும், குறுக்கில் ஒரு சாணுள்ளதும், நான்கு புறங்களிலும் அவகாசமுள்ளதாயும் இருக்க வேண்டும் ச்மசாநம்.

आपस्तम्बः :- दहनदेशं जोषयते दक्षिणाप्रत्यक्प्रवण मनिरिणमसुषिरमनूषरमभङ्गुरमनुपहतमविस्रग्दार्यमनुपच्छिन्नप्रवणं यस्माद्दक्षिणाप्रतीच्य आपो निस्सृत्योदीच्य एत्य महानदीमवेत्य प्राच्यः संपद्यन्ते समं वा सुभूमिं बहुलौषधिं यस्मादारात् क्षीरिणो वृक्षाः कण्टकिनश्च इति । यत्र तृणानि नोत्पद्यन्ते तदिरिणम्, ततोऽन्यदनिरिणम् । यत्र मूषिकादिकृतसुषिरं न विद्यते तदसुषिरम्। ऊष(र)ाः = मृद्विशेषाः, ते यत्र न विद्यन्ते तदनूषरम् । शैथिल्य-रहितमभङ्गुरम् । यत् पुरुषान्तरदहन चण्डालनिवासादिभिरुपहतं न भवति तदनुपहतम् । यत्र विविधं दरणं प्रदरादिकं न विद्यते तदविस्रग्दार्यम् । एवंलक्षणं देशं दहनाय परिगृह्णीयात् । यस्माद्देशादापो दक्षिणा प्रतीच्यो निस्सरन्ति, दक्षिणाप्रत्यक्-प्रवणत्वाद्देशस्य, तास्तथा निस्सृत्य उदग्गत्वा महानदीमनुप्रविश्य तदुदकेन सह प्राग्गामिन्यो भवन्ति, तथाभूतं वा देशं गृह्णीयात् । समं वा देशं जोषयते । शोभना भूमिर्यस्य स सुभूमिः । समं वेत्यत्रापरं विशेषणं बहुलौषधिमिति । आरादिति दूरार्थमव्ययम् । यतो देशाद्दूरे क्षीरिणः - वटोदुम्बरादयो वृक्षाः कण्टकिनः - खदिरादयः । क्षीरिणः कण्टकिनश्च समीपे यस्य न सन्ति तं देशं परिगृह्णीयादित्यर्थः ।

ஆபஸ்தபம்பர் :- இனி சொல்லப்படும் லக்ஷணமுள்ளதாகிய ச்மசான தேசத்தை க்ரஹிக்கவும். தென் மேற்கில் தாழ்ந்ததும், இரிணமல்லாததும் (புல் முளைக்கக் கூடியதும்), எலி வளை முதலிய தில்லாததும், கிளர் மண்ணில்லாததும், இடி பாடில்லாததும், பிறனின் தஹநத்தாலாவது, சண்டாளாதி வாஸத்தாலாவது அசுத்தமில்லாததும், பள்ளங்களில்லாததும், ஸ்வபாவத்தாலேயே க்ரமமாய்த் தாழ்ந்ததும் ஆகிய தஹநதேசத்தைப் பரிக்ரஹிக்கவும். அல்லது, எந்த ப்ரதேசத்தில் விழுந்த ஜலங்கள் தென்மேற்கில் சென்று, பிறகு வடக்கில் சென்று மஹாநதியில் சேர்ந்து, அதனுடன் கிழக்கு நோக்கிச் செல்லுகின்றனவோ அவ்விதமான ப்ரதேசத்தை க்ரஹிக்கவும். அல்லது, ஸமமாயும், நல்ல பூமியுள்ளதும், அதிக ஓஷதிகளுள்ளதுமாகிய ப்ரதேசத்தை க்ரஹிக்கவும். எந்த ப்ரதேசத்திற்குத் தூரப்ரதேசத்தில் பாலுள்ள ஆல், அத்தி முதலிய வ்ருக்ஷங்களும், முள்ளுள்ள கருங்காலி முதலிய வ்ருக்ஷங்களுமுள்ளனவோ அந்த ப்ரதேசத்தைப் பரிக்ரஹிக்கவும்.

आश्वलायनस्तु तद्रहितदेशालाभे तेषां समूलोद्धारेण देशक्लृप्तिमाह – कण्टकिक्षीरणस्तु इत्यादिना । पितृमेधसारे – उद्धृत्यावोक्ष्य हिरण्यशकलमवधाय दर्भान् संस्तीर्य दक्षिणाग्रैर्याज्ञिकैः काष्ठैर्वंशकैर्यैस्तृणैर्वा इति ज्ञापनात्तैर्वा ब्राह्मणानीतैस्तुलसीकाष्ठयुक्तां दक्षिणाप्राचीं चितिं कुर्यात् इति । बोधायनः – दारुचितिं कुर्वन्ति दक्षिणाप्राचीमेषा हि पितॄणां प्राची दिगिति विज्ञायते, वायव्यामौपासनं पुरस्ताद्वा इति ।

ஆச்வலாயனரோவெனில் :- மரங்களில்லாத ப்ரதேசம் கிடைக்காவிடில், மரங்களை வேருடன் வெட்டி எடுத்துவிட்டு, தஹந தேசத்தைக் கல்ப்பிக்க வேண்டுமென்கிறார் 'கண்டகிக்ஷீரிணஸ்து' என்பது முதலிய ஸூத்ரத்தால். பித்ருமேதஸாரத்தில் :- தஹந

தேசத்தைக் கொத்திவிட்டு, அவோக்ஷணம் செய்து, ஸ்வர்ணத்துணுக்கைப் போட்டு, தர்ப்பங்களைப் பரப்பி, தெற்கு நுனியுள்ள (ப்ராஹ்மணர்களால் கொண்டு வரப்பட்டுள்ள) யஜ்ஞார்ஹமான காஷ்டங்களால், அல்லது த்ருணங்களால் துளஸீ காஷ்டங்களுடன் கூடியதாயும், தென் கிழக்கு நோக்கியதாயும் சிதையைக் கல்பிக்கவும். **போதாயனர் :-** காஷ்டங்களாலாகிய சிதையைத் தென்கிழக்கு நோக்கிதாய்ச் செய்யவும். இந்தத் திக்கு, பித்ருக்களுக்குக் கிழக்கென்று அறியப்படுகிறது. ஔபாஸநத்தை வாயுதிக்கில், அல்லது, கிழக்குத் திக்கில் வைக்கவும்.

## तुलसीकाष्ठप्रशंसा तन्निन्दा च ।

तुलसीकाष्ठप्रशंसा कृता प्रह्लादसंहितायाम् – शरीरं दह्यते यस्य तुलसीकाष्ठवह्निना । नरो यत् कुरुते पापं तस्मात् पापात् प्रमुच्यते । तीर्थं यदि न संप्राप्तं स्मरणं कीर्तनं हरेः । तुलसीकाष्ठ दग्धस्य नरस्य न पुनर्जनिः । यदि तत्तुलसीकाष्ठं मध्ये वाऽपि चितौ कृतम् । दाहकाले भवेन्मुक्तिः पापकोटिकृतस्तथा । तुलसीकाष्ठ-मिश्रा तु यावत् प्रज्वलिता चितिः । दह्यन्ते तस्य पापानि कल्पकोटिकृतान्यपि इति । तन्त्र प्रोक्तत्वादेतत्तान्त्रिकविषयम्, न तु वैदिकविषयम्, न दह्यात् कुणपं विप्रस्तुलसीकाष्ठवह्निना । यदि दह्याद्विमोहेन स विष्णोर्दाहको भवेत् इति विष्णुधर्मोत्तरे निषिद्धत्वादित्याहुः ।

### துளஸீகாஷ்ட ப்ரசம்ஸையும், கூடாதென்பதும்

துளஸீ காஷ்ட ப்ரசம்ஸை சொல்லப்பட்டுள்ளது **ப்ரஹ்லாத ஸம்ஹிதையில் :-** "எவனது சரீரம், துளஸீ காஷ்டத்தின் நெருப்பினுல் தஹிக்கப்படுகிறதோ, அவன் எவ்வளவு பாபம் செய்தானே அதனின்றும் விடுபடுகிருன். பகவத்பாத தீர்த்தம் கிடைக்காவிடினும்,

பகவத் ஸ்மரணம் செய்யப்படாவிடினும், பகவந்நாம கீர்த்தனம் செய்யப்படாவிடினும், துளஸீ காஷ்டங்களால் தஹிக்கப்பட்டவனுக்கு மறு பிறப்பில்லை. துளஸீ காஷ்டத்தைச் சிதையின் நடுவில் தஹந காலத்தில் போட்டாலும், கோடி பாபம் செய்தவனுக்கும் முக்தியுண்டாகும். துளஸீ காஷ்டத்துடன் கூடிய சிதையானது எப்பொழுது எரிகின்றதோ அப்பொழுதே கோடி கல்ப்பங்களில் செய்த பாபங்களும் பொசுக்கப்படுகின்றன'' என்று. இது தந்த்ரத்தில் சொல்லப்பட்டுள்ளதால் தாந்த்ரிகர்களைப் பற்றியது. வைதிகர்களைப்பற்றியதல்ல. ''ப்ராஹ்மணன், சவத்தைத் துளஸீ காஷ்டாக்னியால் தஹிக்கக் கூடாது. அறியாமையால் தஹித்தால், அவன் விஷ்ணுவைத் தஹித்தவனாவான்'' என்று விஷ்ணு தர்மோத்தரத்தில் நிஷித்தமாயிருப்பதால், என்கின்றனர்.

## दहनप्रकारः

व्याघ्रपादः - नाधोमुखं न नग्नं च दहेरन्मलदूषितम् । अयज्ञीयसमिद्भिश्च चण्डालपतिताहृतैः । कृमिकीटादिदुष्टैश्च न दहेत्तु चिरन्तनैः । वस्त्रं परित्यजेदर्धमर्धं तु परिधापयेत् इति । प्रचेताश्च – न नग्नं तु दहेद्वस्त्रं किञ्चिद्देयं परित्यजेत् इति । अत्र चन्द्रिकाकारः – अर्धं तु श्मशानवासिनो देयं परित्यजेदित्यर्थः इति । एवमेव विज्ञानेश्वरः । स्मृतिरत्ने तु व्याख्यातम् किञ्चिद्देयम् इति प्रेताच्छादनवस्त्रादुत्कृत्तं किञ्चिद्वस्त्रखण्डं म्लेच्छचण्डालादिभ्यो दद्यादित्यर्थ इति ।

## தஹந ப்ரகாரம்

**வ்யாக்ரபாதர் :-** கீழ் நோக்கியதான சவத்தைத் தஹிக்கக் கூடாது. வஸ்த்ரமில்லாததும், அழுக்குடையதுமாகிய சவத்தைத் தஹிக்கக் கூடாது. யாகத்திற்கு அர்ஹமல்லாதவையும், சண்டாளன், பதிதன் இவர்களால்

கொண்டு வரப்பட்டவையும், பூச்சி புழு முதலியதால் கெடுக்கப்பட்டவையும், வெகுநாளாகியவையுமான காஷ்டங்களால் தஹிக்கக் கூடாது. சவத்தின் வஸ்த்ரத்தின் பாதியை எறிந்துவிட்டு, பாதி வஸ்த்ரத்தைச் சவத்திற்கு கட்ட வேண்டும். ப்ரசேதஸ்ஸூம் :- 'சவத்தை வஸ்த்ரமில்லாததாய்த் தஹிக்கக் கூடாது. சவ வஸ்த்ரத்தின் ஸ்வல்ப பாகத்தை எறிய வேண்டும்', என்றார். இவ்விடத்தில், சந்த்ரிகாகாரர்: : 'பாதி வஸ்த்ரத்தை ச்மசாநத்தில் வஸிப்பவனுக்குக் கொடுக்க வேண்டியதற்காக விட வேண்டும் என்று பொருள்' என்றார். இவ்விதமே விஜ்ஞாநேச்வரரும் சொல்லியுள்ளார். ஸ்ம்ருதிரத்னத்திலோவெனில் :- இவ்விதம் வ்யாக்யாநம் செய்யப்பட்டுள்ளது. ''கிஞ்சித் தேயம் என்பதற்குச் சவத்தின் ஆச்சாதந வஸ்த்ரத்திலிருந்து கிழித்தெடுத்த சிறிய வஸ்த்ரத்துண்டை, ம்லேச்ச சண்டாளாதிகளுக்குக் கொடுக்கவும் என்று பொருள்'' என்று.

आपस्तम्बः – अथैनं चितावुपर्यध्यूहत्यथास्य प्राणायतनेषु हिरण्यशकलान् प्रत्यस्यत्याज्यबिन्दून् वा इति । गौतमोऽपि – आस्ये चक्षुषोर्नासिकयोः श्रोत्रयोश्च सप्त हिरण्यशकलानाज्य-बिन्दून् वा सप्त व्याहृतीर्मनसा ध्यायन्निरस्यति इति । कात्यायनः – दक्षिणाशिरसं चित्यामुत्तानं तं निवेशयेत् । हिरण्यशकलान्यस्य क्षिपेच्छिद्रेषु सप्तसु इति । बोधायनीये – दध्याज्यतिलतण्डूलान् प्रेतस्यास्ये तु निक्षिपेत् इति ।

ஆபஸ்தம்பர் :-பிறகு சவத்தைச் சிதையின் மேல் வைக்கவும். பிறகு சவத்தின் இந்த்ரிய ஸ்தாநங்களில் ஸ்வர்ணத் துண்டுகளையாவது, ஆஜ்ய பிந்துக்களையாவது சேர்க்க வேண்டும். கௌதமரும் : வாய், கண்கள், மூக்குகள், காதுகள் என்ற ஏழு ஸ்தானங்களிலும், ஏழு ஸ்வர்ணத் துண்டுகளையாவது, ஆஜ்ய பிந்துக்களையாவது

ஏழு வ்யாஹ்ருதிகளையும் மனதால் த்யானிப்பவனுய்ச் சேர்க்கவும். **காத்யாயனர் :-** ப்ரேதனைத் தெற்கில் தலையுள்ளவனுய்ப் சிதையில் வைக்கவும். ப்ரேதனின் ஏழு த்வாரங்களிலும் ஸ்வர்ணத் துண்டுகளை வைக்கவும். **போதாயநீயத்தில் :-** தயிர், நெய், எள், அரிசி இவைகளை ப்ரேதனின் வாயில் போட வேண்டும்.

आश्वलायनीये – सतिलं तण्डुलं चास्ये वक्षस्यग्निं निधाय च इति । पितृमेधसारे – आदित्याभिमुखः स्थित्वा ज्वलदुल्मुकेनोरसि दहेत् इति । वैखानससूत्रे – अग्निर्यजुर्भिः सेनेन्द्रस्येति द्वाभ्यामुज्ज्वलितं प्राङ्मुखस्तस्य वक्षसि निक्षिपेत् इति । स्मृत्यन्तरे – पश्चिमाभिमुखो भूत्वा गृहीत्वा त्वनलं बुधः । तत्तन्मन्त्रं समुच्चार्य शववक्षसि विन्यसेत् इति । दिवारात्रमपि समानम् ।

**ஆச்வலாயநீயத்தில் :-** எள்ளுடன் கூடிய அரிசியை வாயிலும், அக்னியை மார்பிலும் போட வேண்டும். **பித்ருமேதஸாரத்தில் :-** ஸூர்யனுக்கு எதிராக நின்று ஜ்வலிக்கு மக்னியால் மார்பில் தஹிக்கவும். **வைகாநஸ ஸூத்ரத்தில் :-** 'அக்னிர்யஜுர்பி: ஸேநேந்த்ரஸ்ய' என்ற இரண்டு அனுவாகங்களால், ஜ்வலிக்குமக்னியை, கிழக்கு முகமாயிருந்து, ப்ரேதனின் மார்பில் வைக்கவும். ஒரு **ஸ்ம்ருதியில் :-** ''மேற்கு முகனுய் இருந்து, அக்னியை எடுத்து, உரிய மந்த்ரத்தைச் சொல்லி, சவத்தின் மார்பில் வைக்கவும்'' என்று. இது பகலிலும், இரவிலும் ஸமானம்.

आपस्तम्बः – अथैनमुपोषति मैनमग्ने विदह इति पुरस्तादाहवनीयेन शृतं यदेति पश्चाद्गार्हपत्येन तूष्णीं दक्षिणतोऽन्वाहार्यपचनेन पुरस्तात्सभ्यावसत्थ्याभ्यामौपासनेन च इति । अत्र कपर्दिभाष्यम् – अथैनमुपोषति - दहति चितेः पुरस्तादाहवनीयेन मैनमग्ने विदह इति पश्चाद्गार्हपत्येन शृतं यदेति

तूष्णीं दक्षिणतोऽन्वाहार्यपचनेन इति । गोपालभाष्येऽपि – उपोषणं - दहनम्, दारुचितेरेवात्र साक्षादग्निसंयोगः कार्यः इति । स्मृतिसारसुधानिधौ – अग्निभिर्वाऽग्निना वाऽपि शववत्यां चितौ दहेत् । शवे चेद्दहनं तस्य गतिर्नेत्यब्रवीन्मनुः इति । वसिष्ठश्च – अग्निक्षेपो नाधिशवं श्रुतावाहुतिदर्शनात् । आहुत्युपरि विक्षेपात्तत्कर्म विफलं भवेत् इति ।

*ஆபஸ்தம்பர் :- பிறகு, சவத்தை, 'மைநமக்நே' என்ற மந்த்ரத்தால் கிழக்கில் ஆஹவநீயத்தாலும், 'ச்ருதம் யதா' என்பதால் மேற்கில் கார்ஹபத்யத்தாலும், மந்த்ர மில்லாமல் தெற்கில் தக்ஷிணாக்னியாலும், கிழக்கில் ஸப்யம், ஆவஸத்யம், ஔபாஸநாக்னி இவைகளாலும் தஹிக்கவும். இங்கு, கபர்தி பாஷ்யம் :- சிதைக்குக் கிழக்கில் ஆஹவநீயத்தால் 'மைநமக்னே' என்பதாலும், மேற்கில் கார்ஹபத்யத்தால் 'ச்ருதம்யதா' என்பதாலும், தெற்கில் தக்ஷிணாக்னியால் மந்த்ரமில்லாமலும் (தஹிக்கவும்). கோபால பாஷ்யத்திலும் :- பல அக்நிகளாலோ, ஒரு அக்நியினாலோ, சவம் வைக்கப் பட்டுள்ள சிதையிலேயே தஹிக்கவும். சவத்தின்மேல் தஹநம் செய்தால், ப்ரேதனுக்கு நற்கதியில்லையென்றார் மனு. வஸிஷ்டரும் : சவத்தின்மேல் அக்னியைப் போடக் கூடாது. வேதத்தில் சவத்தை ஆஹுதி த்ரவ்யமாய்ச் சொல்லியிருப்பதால். ஆஹுதி த்ரவ்யத்தின் மேல் அக்னியைப் போடுவதானல் அந்தக் கர்மம் பலமற்றதாகும்.*

शातातपः – चितौ दहनमेतेषां द्विजानां सर्वसूत्रिणाम् । तद्वशाद्दहनं लब्ध्वा मृता ब्रह्म समाप्नुयुः इति । अत्र शिष्टाचाराद्व्यवस्था । आदित्याभिमुख एव स्थित्वा दहेत्, सावित्र्यादि क्रियाः सर्वा आदित्याभिमुखश्चरेत् इति सर्वकर्म-साधारण्येनादित्याभिमुखत्वस्मृतेः । स्थितिराचारसिद्धाऽर्थसिद्धा

च । सूर्यं ते चक्षुः इत्युपस्थानं प्रेताभिमुखः कुर्यात् । अपरेण चितिं प्राङ्मुखः स्थित्वा यः एतस्य पथः इत्यादिभिर्जुहुयात् प्रेतस्यापरे स्थित्वा इति बोधायनीयादौ दर्शनात् । एवं मन्त्रवद्दग्ध्वा निरवशेष मग्निं चितौ प्रागादि क्रमेण प्रक्षिपेत् । तथा च बोधायनः – सर्वत एव सहसा प्रज्वलयेत् ब्रह्मलोकमजैषीदित्येनं जानीयादिति ।

*சாதாதபர் :- எந்த ஸூத்ரத்தை அனுஸரிப்பவராலும் ப்ராஹ்மணர்களெல்லோருக்கும் சிதையிலேயே தஹநம் செய்யப்பட வேண்டும். சிதையின் வசமாய்த் தஹநத்தை அடைந்து ப்ரேதர்கள் ப்ரஹ்மத்தை அடைவார்கள். இவ்விஷயத்தில் சிஷ்டாசாரத்தைக் கொண்டு வ்யவஸ்தையை அறியவும். ஸூர்யாபிமுகனாகவே நின்று தஹிக்கவும். 'ஸாவித்ரீ ஜபம் முதலிய கார்யங்களெல்லாவற்றையும் ஸூர்யாபிமுகனாய்ச் செய்ய வேண்டும்' என்று எல்லாக் கர்மங்களுக்கும் பொதுவாக, ஸூர்யாபிமுகத்வம் சொல்லப்பட்டிருப்பதால். நிற்பதென்பது ஆசாரத்தாலும், கார்யவசத்தாலும் ஸித்தமாகியது. 'ஸூர்யம்தே சக்ஷு:' என்பதால் உபஸ்தாநத்தை ப்ரேதாபிமுகனாய்ச் செய்யவும். சிதைக்கு மேற்கில் கிழக்கு முகமாய் நின்று 'ய ஏ தஸ்யபத:' என்பது முதலான மந்த்ரங்களால் ஹோமம் செய்யவும். 'ப்ரேதனின் மேற்கில் நின்று' என்று போதாயநீயம் முதலியதில் காணப்படுவதால். இவ்விதம் மந்த்ரத்துடன் தஹித்து, மீதியில்லாமல் அக்னியைச் சிதையில் கிழக்கு முதலாகப் போடவும். அவ்விதமே. போதாயனர் :- சிதையை எல்லாப் புறங்களிலும் கொளுத்தவும். ப்ரேதன் ப்ரஹ்ம லோகத்தை ஜயித்தான் என்று அறியவும்' என்றார்.*

## चिताग्निनाशप्रायश्चित्तम् ।

वृष्ट्यादिना चिताग्निनाशे यमः – यजमाने चितारूढे पात्रन्यासे तथा कृते । वर्षाद्यभिहते चाग्नौ ततः पृच्छन्ति याज्ञिकाः । शेषं दग्ध्वाऽर्धदग्धेन निर्मन्थ्यं तत्र कारयेत् । शेषालाभे तदा

कुर्याद्दग्धशेषस्य वा पुनः । अप्सु प्रास्यति शेषं तदाग्नेय्यस्ताः स्मृता बुधैः इति । आग्नेयत्वमपां वायोरग्निः अग्नेरापः इति श्रुत्याऽव-गम्यते । स्मृत्यर्थसारेऽपि – दह्यमाने शवे वह्निर्नष्टो वर्षाद्भिवेद्यदि । चिति काष्ठं तु निर्मन्थ्य तेन प्रेतं पुनर्दहेत् । अभावे चितिकाष्ठानां शेषं वाऽप्सु विनिक्षिपेत् इति । (प्रायश्चित्ते कृतेऽग्निनेति पाठान्तरम्) प्रायश्चित्तमनुगतप्रायश्चित्तम्, तच्च द्वादशगृहीतेन स्रुचं पूरयित्वेत्यापस्तम्बोक्तमित्याहुः ।

### சிதாக்னி நாச ப்ராயச்சித்தம்

*மழை முதலியதால் சிதாக்னி நாசமடைந்தால்,* **யமன்** *:- 'யாகம் செய்தவனின் சவத்தைச் சிதையிலேற்றிப் பாத்ரசயநமும் செய்து அக்னிதாநம் செய்த பிறகு, பாதியில் மழை முதலியதால் அக்னி அணைந்துவிட்டால் என்ன செய்வதென்று ருத்விக்குகள் கேட்டால், பாதி தஹநமாகிய பிறகு அணைந்தால், மீதியுள்ள காஷ்டத்தால் நிர்மந்த்யாக்நியை உத்பத்திசெய்து அதனால் தஹிக்கவும். சேஷமான கட்டையே கிடைக்காவிட்டால், தக்தமான ப்ரேதத்தின் சேஷத்தை ஜலத்தில் போட்டுவிடவும். அப்புகள் (ஜலங்கள்) ஆக்நேயிகள் எனப்படுவதால்' என்றார். ஜலங்களுக்கு அக்னி ஸம்பந்தம் 'வாயுவினிடமிருந்து அக்னி உண்டாயிற்று. அக்னியிடமிருந்து ஜலங்களுண்டாயின' என்ற ச்ருதியால் அறியப்படுகிறது.* **ஸ்ம்ருத்யர்த்தஸாரத்திலும்** *:- 'சவம் தஹிக்கப்படும்போது, மழையினால் அக்னி நஷ்டமானால், சிதையிலுள்ள கட்டையைக் கடைந்து அந்த அக்னியால் ப்ரேதனை மறுபடி தஹிக்கவும். காஷ்டங்களில்லாவிடில், மீதியுள்ளதை ஜலத்தில் போடவும்' என்றுள்ளது. இங்கு, 'ப்ராயச்சித்தே க்ருதேக்நிநா' என்று ஒரு பாடமுண்டு. அதில், ப்ராயச்சித்தம் - அநுகதப்ராயச்சித்தம். அது 'பன்னிரண்டு முறை க்ரஹித்த ஆஜ்யத்தினால் ஸ்ருக்கை நிரப்பி' என்று ஆபஸ்தம்பர் சொல்லியது என்கின்றனர்.*

## दहनानन्तरकृत्यनिरूपणम् ।

दहनानन्तरकृत्यमाह कात्यायनः – वस्त्रं संशोधयेदादौ ततः स्नानं समाचरेत् । सचेलस्तु पुनः स्नात्वा शुचिः प्रयतमानसः इति । ज्ञात्यादिविषयेऽपि स एव – अथानवेक्षमेत्यापः सर्व एव शवस्पृशः । स्नात्वा सचेलमाचम्य दद्युरस्योदकं स्थले इति । आश्वलायनः – अनवेक्षमाणा यत्रोदकमवहं भवति तत् प्राप्य इति । अवहं - प्रवाहरहितम्, स्थिरमिति यावत् । आपस्तम्बोऽपि – अनवेक्षमाणा अपोऽवगाहन्ते धाता पुनातु सविता पुनातु इति केशान् प्रकीर्य पांसुनोप्य इति ।

### தஹநத்திற்குப் பிறகான கார்யம்

*தஹநத்திற்குப் பிறகு செய்ய வேண்டியதைச் சொல்லுகிறூர். காத்யாயனர் :- முதலில் வஸ்த்ரத்தைச் சோதனம் செய்யவும். பிறகு ஸ்நாநம் செய்யவும். மறுபடி ஸசேல ஸ்நாநம் செய்து சுத்தனுய், சுத்த மனமுடையவனுய் ஆக வேண்டும். ஜ்ஞாதிகள் விஷயத்திலும் காத்யாயனரே :- பிறகு, திரும்பிப் பாராமல் ஜலத்திற்கு வந்து, சவத்தைத் தொட்ட எல்லோரும் ஸசேல ஸ்நாநம் செய்து, ஆசமனம் செய்து, ப்ரேதனை உத்தேசித்து ஸ்தலத்தில் உதகதானம் செய்யவும். ஆச்வலாயனர் :- திரும்பிப் பாராதவர்களாய், எவ்விடத்தில் ஜலம் ஓடாமல் ஸ்திரமாயுள்ளதோ அதையடைவர். ஆபஸ்தம்பரும் :- திரும்பிப் பாராதவர்களாய் ஜலத்தில் மூழ்க வேண்டும். 'தாதா புநாது ஸவிதா புநாது' என்று. மயிர்களை விரித்துக் கொண்டு, புழுதியைப் போட்டுக் கொள்ளவும்.*

अत्र क्रममाह बोधायनः – यवीयान् यवीयान् पूर्वं पूर्वं सङ्गाहन्ते इति । आपस्तम्बः – धून्वनेऽन्वारम्भणे सङ्गाहने संसर्पण उदकोपस्पर्शन इति सर्वत्र कनिष्ठप्रथमा अनुपूर्वा इतरे स्त्रियोऽग्रे

इति । धून्वनम् = सिग्भिरभिधवनम्, अन्वारंभणं राजगव्याः । सङ्गाहनं कर्षूणाम्, संसर्पणं शाखाद्वयमध्येन, उदकोपस्पर्शनं - धाता पुनातु सविता पुनातु इति स्नानम्, एतेषु पञ्चसु कर्मसु कनिष्ठप्रथमाः स्युः कनिष्ठः सर्वेभ्योऽवरवयाः स प्रथमो येषां ते तथोक्ताः । इतरे - तस्मादन्ये सकुल्याः, अनुपूर्वाः - तदानुपूर्व्यवन्तः स्युः । प्रथमापेक्षया वृद्धवृद्धतरवृद्धतमानुपूर्व्येण स्युरित्यर्थः । स्त्रियोऽग्र इति - मृतस्य कुल्यानां च भार्या गृह्यन्ते, मृतस्यैव भार्या इत्यपरे । तासामपि कनिष्ठप्राथम्यं वेदितव्यम्, अथास्य भार्याः कनिष्ठप्रथमाः इति बोधायनस्मरणात् ।

*இதில் கிரமத்தைச் சொல்லுகிறார். போதாயனர் :- 'துந்வநே + ஸ்த்ரியோக்ரே தூந்வநம் - வஸ்த்ரத்தின் நுனிகளால் விசிறுவது. அன்வாரம்பணம் = ராஜ கவியைத் தொடுவது. ஸங்காஹநம் = கர்ஷூக்களில் முழுகுவது. உதகோபஸ்பர்சநம் = 'தாதாபுநாது ஸவிதாபுநாது' என்ற மந்த்ரத்தால் ஸ்நாநம். இந்த ஐந்து கர்மங்களிலும், வயதால் சிறியவன் முந்தியிருக்க வேண்டும். மற்றவர்களும் வயதால் சிறியவன் முந்தி, மற்றவர் பிந்தி என்று வரிசையாயிருக்க வேண்டும். ஸ்த்ரீகள் முந்தியிருக்க வேண்டும். ஸ்த்ரீகள் என்றதால், ம்ருதனுடையவும், ஜ்ஞாதிகளுடையவும் பார்யைகள் சொல்லப்படுகின்றனர். 'ம்ருதனுடைய பார்யைகள் மட்டும்' என்று சிலர். அவர்களுக்கும், வயதால் சிறியவள் முந்தி என்ற நியமமுண்டு என்றறியவும், 'ம்ருதனின் பார்யைகள் கநிஷ்ட ப்ரதமைகளாய்' என்று போதாயன வசனம்.*

पितृमेधसारे तु :- अनुपूर्वा यथावृद्धम् इति भाष्यानुसारेण व्याख्यातम्, धून्वनादिषु सर्वत्र कनिष्ठप्रथमम्, इतरे कनिष्ठव्यतिरिक्ता यथावृद्धं कर्ता पश्चात् इति । अस्यार्थः - कनिष्ठः प्रथमम्, ज्येष्ठो वा कनिष्ठो वा कर्ता सर्वेषां पश्चात् तयोर्मध्ये

ज्येष्ठानुक्रमेण ज्ञातयः कल्प्या इति । आश्वलायनस्तु – ज्येष्ठप्रथमाः कनिष्ठजघन्या इति सर्वं तुरीयाध्व गमने तथा प्रविशेयुः कनिष्ठप्रथमा ज्येष्ठजघन्या इति ग्रामप्रवेश इति ।

பித்ருமேதஸாரத்திலோவெனில் :- *'அநுபூர்வா யதாவ்ருத்தம்' என்று பாஷ்யாநுஸாரமாய் வ்யாக்யாநம் செய்யப்பட்டுள்ளது. 'தூந்வநம் முதலிய கார்யங்கள் எல்லாவற்றிலும் சிறியவன் முந்தி, மற்றவர்கள் சிறியவனைத் தவிர்த்தவர்கள் வ்ருத்தக் கிரமமாய், கர்த்தா பிந்தி' என்று. இதன் பொருள் :- வயதில் சிறியவன் முந்தி, வயதில் பெரியவனுயினும் சிறியவனுயிலும், கர்த்தா எல்லோருக்கும் பிந்தி, அவ்விருவர்களுக்கும் நடுவில் ஜ்யேஷ்ட க்ரமமாய் ஜ்ஞாதிகளைக் கல்பிக்கவும், என்று.* ஆச்வலாயநரோவெனில் :- *'ஜ்யேஷ்டன் முந்தி, கனிஷ்டன் கடைசியில் என்பதெல்லாம் நாலிலொரு பாகமான வழி செல்வதில், கனிஷ்டன் முந்தி, ஜ்யேஷ்டன் கடைசியில் என்பது க்ராமத்திற்குள் நுழையும்போது' என்று.*

बृहद्विष्णुः — संस्कृत्य वह्नौ पितरं दृष्ट्वा ज्योतिस्ततो रविम् । स्त्रीबालान् स्वपुरः कृत्वा वृद्धो गच्छेज्जलाशयम् इति । स्मृत्यन्तरे – शवं दग्ध्वा यथान्यायं दृष्ट्वा ज्योतिर्दिशः क्रमात् । बालान् दारान् पुरस्कृत्य गच्छेत् प्रेतमनीक्षक इति । यथास्वगृह्यं यथाचारमत्र व्यवस्था । अत्र असपिण्डाश्च वस्त्रसंशोधनपूर्वकं त्रयोदश निमज्जनं कुर्युः, अस्पृश्यस्पर्शने चैव त्रयोदशनिमज्ज्य च । आचम्य प्रयतः पश्चात् स्नानं विधिवदाचरेत् इति भरद्वाजस्मरणात् । उशना – अनुगम्य मृतं प्रेतं ज्ञातीनप्यनुसृत्य च । स्नात्वा घृतं च भक्षित्वा पुनःस्नानं समाचरेत् इति ।

ப்ருஹத்விஷ்ணு: :- *"பிதாவை அக்னியில் ஸம்ஸ்கரித்து, பிறகு ஸூர்யனைத் தர்சித்து, பத்னிகளையும்,*

பாலர்களையும் முன்னிட்டுக் கொண்டு, வயதில் பெரியவன் ஜலாசயத்திற்குச் செல்ல வேண்டும்'' என்று. ஒரு ஸ்ம்ருதியில் ''சாஸ்த்ரப்படி சவத்தைத் தஹித்து, ஜ்யோதிஸ், திக்குகள் இவைகளைப் பார்த்து, க்ரமமாய் ஸ்த்ரீகள், பாலர்கள் இவர்களை முன்னிட்டுக் கொண்டு, ப்ரேதனைத் திரும்பிப் பாராமல் போக வேண்டும்''. இவ்விஷயத்தில் அவரவர் க்ருஹ்யப்படிக்கும் ஆசாரப்படிக்கும் வ்யவஸ்தை அறியத்தக்கது. இங்கு, ஜ்ஞாதியல்லாதவர்களும், வஸ்த்ர சோதநம் செய்து கொண்டு, பதின்மூன்று தடவை மூழ்க வேண்டும். ''தீண்டாதவனைத் தீண்டினால் 13 தடவை மூழ்கி, ஆசமநம் செய்து சுத்தனாகிப்பிறகு விதிப்படி ஸ்நாநம் செய்யவும்'' என்று பரத்வாஜ வசநம் உள்ளது. உசநா: - இறந்தவனைத் தொடர்ந்து சென்றாலும், ஜ்ஞாதிகளை அனுஸரித்துச் சென்றாலும், ஸ்நாநம் செய்து, ஆஜ்ய ப்ராசநம் செய்து, மறுபடி ஸ்நாநம் செய்யவும்.

स्मृत्यन्तरे – शवानुगमने क्षौरे पुनःस्नानं विधीयते । आर्द्रवस्त्रं परित्यज्य शुष्कवस्त्रेण मज्जनम् । सप्तवाताहतं वस्त्रं शुष्कवत् प्रतिपादितम् । आर्द्रं वाऽपि द्विजातीनामादृतं गौतमादिभिः । नित्यं नैमित्तिकं काम्यं त्रिविधं स्नानमुच्यते । तर्पणं त्रिविधस्यापि ह्यङ्गत्वेन प्रकीर्तितम् इति । अत्र क्वचिदपवाद-श्चन्द्रिकायामुक्तः – अजीर्णेऽभ्युदिते वान्ते त्वश्रुपाते क्षुरे भवेत् । स्नानं नैमित्तिकं प्रोक्तं देवर्षिपितृवर्जितम् इति ।

மற்றொரு ஸ்ம்ருதியில் :- சவத்தைப் பின் தொடர்ந்து செல்லுதல், க்ஷௌரம் இவைகளில் மறுபடி ஸ்நாநம் விதிக்கப்படுகிறது. ஈர வஸ்த்ரத்தை விட்டுவிட்டு, உலர்ந்த வஸ்த்ரத்துடன் முழுகுவது 'புந: ஸ்நாநமாம். உலர்ந்த வஸ்த்ரமில்லாவிடில் ஈரவஸ்த்ரத்தையே ஏழு தடவை காற்றினால் சோதித்தால் அது உலர்ந்த வஸ்த்ரம் போன்றது. இது ப்ராஹ்மணர்களுக்கு உரியதெனக் கௌதமர்

*முதலியவர்களால் ஆதரிக்கப்பட்டது. நித்யம், நைமித்திகம், காம்யம் என்று சொல்லப்பட்ட மூன்று ஸ்நாநங்களுக்கும் அங்கமாகிய தர்ப்பணம் விதிக்கப்படுகிறது. இவ்விஷயத்தில், சில விடங்களில் மறுப்புச்சொல்லப்பட்டுள்ளது. சந்த்ரிகையில் :- 'அஜீர்ணத்திற்காகிய ஸ்நாநத்திலும், அப்யுதித ஸ்நாநத்திலும், வாந்தி நிமித்த ஸ்நாநத்திலும், அழுகை நிமித்த ஸ்நாநத்திலும், க்ஷௌர நிமித்த ஸ்நாநத்திலும் செய்யும் நைமித்திக ஸ்நாநத்தில் தேவருஷி பித்ரு தர்ப்பணமில்லை' என்று.*

पुनःस्नाने तु तर्पणमुक्तं स्मृत्यर्थसारे – अस्पृश्यस्पर्शनस्नाने नाघमर्षणतर्पणे। अजीर्णेऽभ्युदिते क्षौरे पुनः स्नाने तु ते स्मृते इति। पितृमेधसारे तु – योषित्सु स्नात्वा ग्रामं प्रविष्टासु ज्ञातयोऽन्ये च त्रयोदशवारं निमज्याग्निं स्पृष्ट्वा घृतं प्राश्य पुनः स्नायुः इति। अत्र कवषः – प्रवेशनादिकं कार्यं दाहकेनैव न कचित्। अनुगन्त्रा च वोढ्रा च पुनः स्नात्वा च योषिताम्। अनुगम्य शवं बुद्ध्या स्नात्वा स्पृष्ट्वा हुताशनम्। सर्पिः प्राश्य पुनः स्नात्वा प्राणायामैर्विशुध्यति इति।

*புந: ஸ்நாநத்திலோவெனில் தர்ப்பணம் சொல்லப்பட்டுள்ளது. ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில் - தீண்டாதவர்களைத் தீண்டியதற்கான ஸ்நாநத்தில், அகமர்ஷணம் தர்ப்பணம் இவைகளில்லை. அஜீர்ணம், அப்யுதிதம், க்ஷௌரமிவைகளிலுமில்லை. புந: ஸ்நாநத்தில் அவை இரண்டுமுண்டு. பித்ருமேதஸாரத்திலோவெனில் - ஸ்த்ரீகள் ஸ்நாநம் செய்து க்ராமத்தில் நுழைந்த பிறகு, ஜ்ஞாதிகளும், மற்றவர்களும், 13 முறை மூழ்கி, அக்னியைத் தொட்டு, நெய்யைப் பருகி, மறுபடி ஸ்நாநம் செய்ய வேண்டும். இவ்விஷயத்தில் கவஷர் :- ப்ரவேசநம் முதலியதைத் தஹநம் செய்தவன் ஒரு காலும் செய்யக்*

கூடாது. அனுகமநம் செய்தவன், வஹநம் செய்தவன், ஸ்த்ரீகள் இவர்கள் புந: ஸ்நாநம் செய்து ப்ரவேசிக்கலாம். புத்தி பூர்வமாய் சவாநுகமநம் செய்தால், ஸ்நானம் செய்து, அக்னியை ஸ்பர்சித்து, நெய்யைப் பருகி, மறுபடி ஸ்நாநம் செய்து, ப்ராணாயாமங்களைச் செய்தால் சுத்தனாவான்.

कथञ्चिद्घृताद्यसम्भवे – अग्न्यभावे घृताभावे सचेलं स्नानमाचरेत् । अभिमन्त्र्य तु गायत्र्या दशकृत्वो यथाविधि । अर्धाञ्जलिमपः पीत्वा सर्वपापैः प्रमुच्यते । वर्जयेत्तदहोरात्रं जपहोमार्चनादिकम् इति स्मृत्यन्तरोक्तं द्रष्टव्यम् । अस्नात्वा ग्रामं न प्रविशेयुः, अस्नात्वा चेद्विशेद् ग्रामं श्मशानाद्बुद्धिपूर्वकम् । त्रिरात्रेणैव शुद्धिः स्यादमत्याऽह्ना विशुध्यति इति स्मरणात् ।

எவ்விதத்திலும், நெய் முதலியது கிடைக்காவிடில் — "அக்னி இல்லாவிடில், நெய் இல்லாவிடில், ஸசேல ஸ்நாநம் செய்யவும். காயத்ரியால் விதிப்படி 10 முறை அபிமந்த்ரிக்கப்பட்ட ஜலத்தை, அரை அஞ்ஜலியளவு பானம் செய்தால் ஸகல பாபங்களாலும் விடுபடுவான். அந்தத் தினம் முழுவதும், ஜபம், ஹோமம், அர்ச்சனம் முதலியதை வர்ஜிக்க வேண்டும்" என்று மற்றொரு ஸ்ம்ருதியில் சொல்லியதை அறியவும். ஸ்நாநம் செய்யாமல் க்ராமத்தினுள் ப்ரவேசிக்கக் கூடாது. 'ச்மசாநத்திலிருந்து ஸ்நாநம் செய்யாமல், க்ராமத்தில் நுழைந்தால் மூன்று நாளா சௌசம். இது புத்தி பூர்வ விஷயம். அபுத்தி பூர்வகமானல் ஒரு நாளாசௌசம்" என்று ஸ்ம்ருதி உள்ளது.

## ज्ञातिवपनविधिः

शुद्ध्यर्थं स्नानानन्तरं ज्ञातीनां वपनं विदधाति बोधायनः – सचेला दक्षिणाभिमुखाः समृत्तिका आप्लवन्ते, एतस्मिन् कालेऽस्यामात्याः केशश्मश्रूणि वापयन्ते इति । अत्र स्नानानन्तरं

वपनविधानात्, अशुद्धान् स्वयमप्येतानशुद्धस्तु यदि स्पृशेत् । विशुद्ध्यत्युपवासेन तथा कृच्छ्रेण वा पुनः इति अशुद्धस्य शूद्रादिस्पर्शे प्रायश्चित्तस्मरणाच्च न स्नानात् पूर्वं वपनं कुर्युः । आपस्तम्बः – तेषु चोदकोपस्पर्शनं तावन्तं कालमनुभाविनां च परिवापनम् इति । काश्यपः – सन्त्यज्य विधिवत् प्रेतं यज्ञेषु तु हविर्यथा । केशश्मश्र्वादिवपनं कुर्युरत्रानुभाविनः इति ।

### ஜ்ஞாதிகளின் வபநவிதி

சுத்திக்காக ஸ்நாநத்திற்குப் பிறகு, ஜ்ஞாதிகளுக்கு வபநத்தை விதிக்கின்றார் போதாயனர் : தெற்கு நோக்கியவர்களாய், ம்ருத்திகையுடன் ஸசேல ஸ்நாநம் செய்ய வேண்டும். இப்பொழுது, ப்ரேதனின் ஜ்ஞாதிகள் வபநம் செய்து கொள்ளவேண்டும். இதில், ஸ்நாநத்திற்குப் பிறகு வபநம் விதிக்கப்பட்டிருப்பதாலும், "தான் அசுத்தனாயினும், அசுத்தர்களை ஸ்பர்சித்தால், உபவாஸம், அல்லது க்ருச்ரத்தால் சுத்தனாவான்" என்று, அசுத்தனுக்குச் சூத்ரன் முதலியவரின் ஸ்பர்சத்தில் ப்ராயச்சித்தம் விதிக்கப்பட்டிருப்பதாலும், ஸ்நாநத்திற்கு முன் வபநம் செய்துகொள்ளக் கூடாது. ஆபஸ்தம்பர் - மாதா, பிதா, ஆசார்யன் இவர்கள் விஷயத்தில், ஆசௌசமுள்ள வரையில் ப்ரதிதினம் ஸ்நாநம் செய்ய வேண்டும். ம்ருதனுக்குச் சிறியவர்கள் வபநம் செய்துகொள்ளவும் வேண்டும். காச்யபர் : யாகங்களில் ஹவிஸ்ஸை அக்னியில் சேர்ப்பது போல், ப்ரேதனை விதிப்படி அக்னியில் சேர்த்து, அநுபாவிகள் இப்பொழுது வபநம் செய்துகொள்ள வேண்டும்.

स्मृतिरत्नमाधवीयादौ व्याख्यातम् – अनु पश्चाद्भवन्ति जायन्त इति पुत्राः कनिष्ठभ्रातरश्च । अथवा अनुभाविन इति पुत्रा एव निर्दिश्यन्ते - गयायां भास्करक्षेत्रे मातापित्रोर्गुरोर्मृतौ । आधानकाले सोमे च वपनं सप्तसु स्मृतम् इति स्मरणात् ।

गृह्यपरिशिष्टेऽपि – एतद्वपनं संस्कर्तृव्यतिरिक्तज्ञात्यादीनामनित्यम् इति । विज्ञानेश्वरस्तु अनुभाविशब्दार्थमाह – अनु पश्चाज्जायन्ते, शवदुःखमनुभवन्तीति वा अनुभाविनः कनिष्ठभ्रातरः, सपिण्डाश्च इति ।

ஸ்ம்ருதிரத்நம் மாதவீயம் முதலியதில் இவ்விதம் *வ்யாக்யாநம் செய்யப்பட்டுள்ளது. அநு - பிறகு, பவந்தி - பிறக்கின்றனர் என்பதால், புத்ரர்களும், தம்பிகளும் அநுபாவிகளெனப்படுகின்றனர். அல்லது அநுபாவிகளென்று புத்ரர்களே சொல்லப்படுகின்றனர். ''கயை, பாஸ்கர க்ஷேத்ரம், மாத்ரு ம்ருதி, பித்ரும்ருதி, குரு ம்ருதி, ஆதானம், ஸோமயாகம் என்ற இந்த ஏழிலும் வபநம் விதிக்கப்பட்டுள்ளது'' என்று ஸ்ம்ருதி யிருப்பதால், என்று. க்ருஹ்யபரிசிஷ்டத்திலும் - இந்த வபநம் ஸம்ஸ்கர்த்தாவைத் தவிர்த்த மற்ற ஜ்ஞாதி முதலியவருக்கு நித்யமல்ல. (விகல்பம்) விக்ஞாநேச்வரரோவெனில் :- அநுபாவி சப்தத்திற்கு, இவ்விதம் அர்த்தத்தைச் சொல்லுகிறார் - பிறகு பிறந்தவர்கள், அல்லது சவதுக்கத்தை அநுபவிக்கின்றவர் என்பதால், அநுபாவிகள் கநிஷ்ட ப்ராதாக்களும், ஸபிண்டர்களும் என்று.*

तथा च स्मृत्यन्तरे – ज्येष्ठानां तु सपिण्डानां श्वश्रूश्वशुरयोस्तथा । ज्येष्ठस्वसुश्च तद्भर्तुर्वपनं मरणे भवेत् इति । प्रथमगर्भजाता स्वसा तच्छब्देनोच्यते । तद्भर्तृमरणे वपनं भवेत्, इतरत्र नेति व्याख्यातारः । अन्यत्रापि – कनिष्ठो ज्ञातिराद्याहे केशश्मश्रूणि वापयेत् । सनखानि सरोमाणि दशमेऽहनि वापयेत् इति । सङ्ग्रहेऽपि – भ्रातरस्त्वनुजाः पुत्राः ज्ञातयश्च सपिण्डकाः । विद्यया सह जाताश्च वापयेयुः परस्परम् इति ।

ஒரு ஸ்ம்ருதியில் : மூத்தவர்களான ஜ்ஞாதிகள், மாமியார், மாமனுர், ஜ்யேஷ்டையான தமக்கை, அவளின் புருஷன் இவர்களின் மரணத்தில் வபநம் விதிக்கப்படுகிறது. இதில், தத் என்ற சப்தத்தால் ப்ரதம கர்ப்பத்தில் பிறந்த பகிநீ சொல்லப்படுகிருள். அவளின் பர்த்தாவின் மரணத்தில்தான் வபநமுண்டு. மற்ற ஜ்யேஷ்ட பகிநீபதியின் மரணத்தில் வபநமில்லை என்கின்றனர் வ்யாக்யானகாரர்கள். **மற்ெருரு ஸ்ம்ருதியிலும்** - சிறியவஞன ஜ்ஞாதி, முதல் நாளில் கேச ச்மச்ருக்களை மட்டில் வபநம் செய்துகொள்ள வேண்டும். நகரோமங்களுடன் கேச ச்மச்ரு வபநத்தைப் பத்தாவது நாளில் செய்துகொள்ள வேண்டும். **ஸங்க்ரஹத்திலும்** :- கநிஷ்ட ப்ராதாக்கள், புத்ரர்கள், ஸபிண்டரான ஜ்ஞாதிகள், வித்யையிஞல் கூடப் பிறந்தவர்கள் இவர்கள் ம்ருதியில் பரஸ்பரம் வபநம் செய்துகொள்ளவும்.

अत्र केचिदाहुः – वपनं द्विविधं दहनाङ्गं शुद्ध्यर्थं च, दहनाङ्गं दाहकस्यैव प्रथमदिने भवति, दाहदिने वपनविधानं च संस्कर्तृज्ञात्यादिविषयम् । शुद्ध्यर्थं तु सर्वसाधारणं दशमदिन एव ज्ञातीनां कर्तुश्च भवति । तथा च – नापितकर्माणि च कारयन्त एष प्रथमोऽलङ्कारः इति दशमेऽहन्येवापस्तम्बेन ज्ञातीनां वपनमुक्तमिति । अन्ये तु – यावदाशौचमुदकम् इति विष्णुस्मरणात्, क्षुरकर्मपूर्वकत्वाच्चोदकक्रियायाः, एतस्मिन् कालेऽस्यामात्याः केशश्मश्रूणि वापयन्ते इति बोधायनेन दहनकालोत्तरस्नानानन्तरमेव मृतज्ञातीनां वपनविधानात्, प्रथमदिनेऽपि सर्वज्ञातीनां क्षुरकर्मेत्याहुः । अत्र यथा स्वगृह्यं यथादेशाचारं व्यवस्था ।

இங்கு சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர் :- வபந மென்பது இரண்டு விதம். தஹநாங்கமென்றும், சுத்யர்த்தமென்றும். தஹநாங்கமென்பது தாஹகனுக்கே,

முதல் நாளில் வருவது. சுத்யர்த்தமோவெனில் எல்லோருக்கும் ஸாதாரணம். 10-து நாளிலேயே கர்த்தாவுக்கும் ஜ்ஞாதிகளுக்கும் வருகிறது. அவ்விதமே ஆபஸ்தம்பர்:- ''வபநம் செய்து கொள்ள வேண்டும். இது முதலாவதான அலங்காரம்'' என்று 10-ஆவது நாளிலேயே ஜ்ஞாதிகளுக்கு வபநத்தைச் சொல்லியுள்ளார் என்று. மற்றும் சிலரோவெனில் - ''ஆசௌசமுள்ளவரையில் உதக தாநம் செய்ய வேண்டும்'' என்று விஷ்ணு ஸ்ம்ருதியிருப்பதால், உதகதான க்ரியையை க்ஷௌரம் செய்துகொண்ட பிறகே செய்ய வேண்டியதால், 'இக்காலத்தில் ப்ரேதனின் அமாத்யர்கள் வபநம் செய்து கொள்ளவேண்டும்' என்று போதாயநரால் தஹந காலத்திற்குப் பிறகு செய்யப்படும் ஸ்நாநத்திற்கு உடனேயே ம்ருதனின் ஜ்ஞாதிகளுக்கு வபநம் விதிக்கப்பட்டிருப்பதால், முதல் நாளிலும் ஜ்ஞாதிகளெல்லோருக்கும் வபநமுண்டு என்கின்றனர். இவ்விஷயத்தில் அவரவர் க்ருஹ்யத்தையும், தேசாசாரத்தையு மனுஸரித்து வ்யவஸ்தையை அறியவும்.

चन्द्रिकायां - पौत्राभावे प्रपौत्रो वा तत्पुत्रः पुत्रिकासुतः । केशानां वपनं कृत्वा पैतृमेधिकमाचरेत् इति । एतदुदक-क्रियाद्यौर्ध्वदैहिकोपलक्षणम् । अकृत्वा वपनं मूढः प्रेतकर्म प्रवर्तते । उदकं पिण्डदानं च श्राद्धं चैव हि निष्फलम् । वपनं दहनात् पूर्वं कुर्याच्चेत्पितृघातुकः । तस्मात् सर्वप्रयत्नेन वपनं दहनात् परम् इति स्मरणात् । श्रीधरीये – रात्रावपि दाहान्तं कृत्वा चैवोदकक्रियाः । श्वोभूते वपनं कार्य मेष धर्मस्सनातनः इति ।

சந்த்ரிகையில் : பௌத்ரனில்லாவிடில் ப்ரபௌத்ரன், அல்லது அவனது புத்ரன், அல்லது புத்ரிகாபுத்ரன், வபநம் செய்து கொண்டு ப்ரேதகர்மத்தைச் செய்ய வேண்டும்' என்றுள்ளது. இது உதக க்ரியை முதலிய ஔர்த்வதைஹிக க்ரியைக்கு. உபலக்ஷணம்.

வபநமில்லாமல் ப்ரேதகர்மத்தைச் செய்ய ஆரம்பித்தால் உதகம், பிண்டதானம், ச்ராத்த மிவையெல்லாம் நிஷ்பலமாகும். வபநத்தைத் தஹநத்திற்கு முன் செய்துகொண்டால், பித்ருக்களைக் கொன்ற தோஷத்தையடைவான். எவ்விதத்தாலும் தஹநத்திற்குப் பிறகு வபநம் செய்துகொள்ள வேண்டும் என்று ஸ்ம்ருதி உள்ளது. ஸ்ரீதரீயத்தில் : ராத்ரியிலும் தஹநத்தை முடித்து உதக க்ரியை செய்து, மறுநாளில் வபநத்தைச் செய்துகொள்ள வேண்டும். இது புராதனமான தர்மம்.

गार्ग्योऽपि – शौक्रे वारे निशायां च प्रेतक्षौरं विवर्जयेत् इति। स्मृत्यन्तरेऽपि – बीजानां वापनं क्षौरं वास्तुकर्म कृषिं तथा। रात्रौ तु न प्रकुर्वीत कुर्वन् क्षिप्रं विनश्यति। वपनं नेष्यते रात्रौ श्वः कार्या वपनक्रिया इति। चन्द्रिकायाम् – दग्ध्वा रात्रौ तु पिण्डान्तं कुर्याद्वपनवर्जितम्। अदाहकानामन्येषां श्वोभूते वपनं भवेत् इति। सङ्ग्रहेऽपि – भ्राता वा भ्रातृपुत्रो वा सपिण्डः शिष्य एव वा। कनिष्ठो दहनं कुर्वन् केशश्मश्रूणि वापयेत्। रात्रावपि च दग्धानां कार्या चैवोदकक्रिया। वपनं नेष्यते रात्रौ श्वस्तदा वपनक्रिया इति।

கார்க்யரும் :- சுக்ரவாரத்திலும், ராத்ரியிலும், மரண நிமித்தமான க்ஷெளரத்தை வர்ஜிக்கவும். ஒரு ஸ்ம்ருதியில் :- விதை விதைப்பது, க்ஷெளரம், வாஸ்து கர்ம, க்ருஷி, இவைகளை இரவில்செய்யக் கூடாது. செய்பவன் சீக்ரமழிவான். ராத்ரியில் வபநம் கூடாது. மறுநாளில் செய்துகொள்ளவும். சந்த்ரிகையில் - ராத்ரியில் தஹநம் செய்தால் பிண்டதானம் வரையில் செய்யவும். வபநத்தை வர்ஜிக்கவும். தஹநம் செய்யாத மற்றவர்களுக்கும் மறுநாளில் வபநம் விதிக்கப்படுகிறது. ஸங்க்ரஹத்திலும் - ப்ராதாவாயினும், ப்ராத்ரு புத்ரனாயினும், ஸபிண்டனாயினும், சிஷ்யனாயினும், வயதில் சிறியவன் தஹநத்தைச் செய்தால் வபநம் செய்துகொள்ள வேண்டும். ராத்ரியில் தஹிக்கப்பட்டவர்களுக்கும் அப்பொழுதே

உதகதானமும் செய்யப்பட வேண்டும். ராத்ரியில் வபநம் விதிக்கப்படுவதில்லை. அவ்விஷயத்தில் மறுநாளில் வபநம் விதிக்கப்படுகிறது.

बृहस्पतिः – शुक्रवर्गा विवर्ज्याः स्युस्तस्य लग्नगृहेक्षणाः । कालहोरादि शुक्रस्य शावेऽवश्यं विवर्जयेत् इति । पद्धतौ – श्राद्धे च शावक्षौरे च शुभाः काला अशोभनाः । वर्जयेच्छौक्रजन्मानि श्राद्धे स्त्रीसुतयोरपि इति । इत्यादीनि शुक्रवारे रात्रौ च वपननिषेधपराणि वचनानि पुत्रव्यतिरिक्तसंस्कर्तृविषयाणि, ज्ञातिविषयाणि च, मातापित्रोर्गुरोश्चैव दाहकस्य विशेषतः । तदैव वपनं कार्यं रात्रावपि विधेर्बलात् इति स्मरणात् ।

**ப்ருஹஸ்பதி** - சுக்ரனின் வர்க்கம், லக்னம், க்ருஹம், பார்வை, காலம், ஹோரை முதலியவையையும் சாவத்தில் அவச்யம் தவிர்க்கவும். **பத்ததியில்** - ச்ராத்தத்திலும், சாவக்ஷெளரத்திலும், சுப காலங்கள் அசுபகாலங்களாம். சுக்ரனுடையதுகளையும், தனது, பத்னீ புத்ரர்களின் ஜன்ம நக்ஷத்ரங்களையும், ச்ராத்தத்தில் தவிர்க்கவும். இது முதலிய, சுக்ரவாரத்திலும் ராத்ரியிலும் வபநத்தை நிஷேதிப்பதில் தாத்பர்யமுள்ள வசநங்களெல்லாம், புத்ரனைத் தவிர்த்த தாஹகனைப் பற்றியதும், ஜ்ஞாதியைப் பற்றியதுமாம். ''மாதா பிதாக்கள், குரு இவர்களைத் தஹித்தவனுக்கு, ராத்ரியிலானாலும் அப்பொழுதே வபநம் செய்யப்பட வேண்டும், வசந பலத்தால்'' என்று ஸ்ம்ருதி உள்ளது.

## पुत्रस्य रात्रौ वपनविधिः ।

स्मृत्यन्तरे – शुक्रवारे च रात्रौ च शावे च दशमे दिने । रात्रिदाहे तदा कुर्यात् क्षौरं पिण्डोदकक्रियाम् । मातापित्रो रथान्येषां श्वोभूते वपनं भवेत् इति । अन्यत्रापि – रात्रौ दग्ध्वा प्रमीतानां वपनं न कदाचन । रात्रावपि च कर्तव्यं मातापित्रोर्गुरोर्मृतौ । तथा –

शुक्रवारे च रात्रौ च दर्शे संक्रमणे तथा । क्षौरं कुर्वीत पुत्रस्तु ज्ञातीनामपरेऽहनि । तथा – शौक्रे च वारे निशि वा मृतिस्स्यात् क्षौरं न कुर्यात्तनयस्तु कुर्यात् । कुर्युः सपिण्डाश्च तथा परेद्युर्यद्वा तृतीये दिवसे च सप्तमे ॥ अन्यत्रापि – शौक्रे वा निशि वा दाहे पुत्रस्यैव तु वापनम् । सपिण्डानां परेद्युर्वा तृतीये सप्तमेऽह्नि वा इति ।

**புத்ரனுக்கு ராத்ரியிலும் வபந விதி**

**ஒரு ஸ்ம்ருதியில்** - *சாவ விஷயத்தில், சுக்ரவாரமானாலும், ராத்ரியானாலும், பத்தாவது நாளிலும், ராத்ரியில் தஹநம் செய்தால் அக்காலத்திலேயும் க்ஷெளரம், பிண்டோதகதாநம் இவைகளைச் செய்யவும். இது மாதா பிதாக்களின் விஷயத்தில். மற்றவர் விஷயத்திலானால், மறுநாளில் வபநம் விதிக்கப்படுகிறது.* **வேறொரு ஸ்ம்ருதியிலும்** - *இறந்தவர்களை ராத்ரியில் தஹித்தால் தாஹகனுக்கு வபநமில்லை. மாதா பிதாக்கள், குரு இவர்களின் ம்ருதியில் ராத்ரியிலும் வபநம் விதிக்கப்படுகிறது. அவ்விதமே சுக்ரவாரத்திலும், ராத்ரியிலும், தர்சத்திலும், ஸங்க்ரமணத்திலும், புத்ரன் க்ஷெளரம் செய்துகொள்ளலாம். ஜ்ஞாதிகளுக்கு மறுநாளில் க்ஷெளரம். அவ்விதமே — சுக்ரவாரத்திலோ, ராத்ரியிலோ மரண மேற்பட்டால் க்ஷெளரம் செய்துகொள்ளக் கூடாது. புத்ரன் மட்டில் செய்துகொள்ளலாம். புத்ர வ்யதிரிக்த கர்த்தாக்களும், ஸபிண்டர்களும், மறுநாளில், அல்லது 3-வது நாளில் 7-ஆவது நாளில் வபநம் செய்து கொள்ளலாம்.* **மற்றொரு ஸ்ம்ருதியில்** *: சுக்ரவாரத்திலோ, ராத்ரியிலோ தஹநம் செய்தால் புத்ரனுக்கு மட்டில் வபநம். ஜ்ஞாதிகள் மறுநாளிலோ, 3-வது நாளிலோ, 7-வது நாளிலோ செய்துகொள்ளலாம்.*

तथा — प्रथमेऽहनि कर्तव्यं क्षुरकर्म प्रयत्नतः । तृतीये पञ्चमे वाऽपि सप्तमे वाऽऽप्रदानतः इति । आप्रदानतः - एकोद्दिष्टात्

प्रागित्यर्थः । गौतमश्च – प्रथमतृतीयपञ्चमसप्तमनवमेषूदकक्रिया इति । क्षुरकर्मपूर्वकत्वादुदकक्रियायाः अयुग्मेषु दिनेषु वपनानन्तरमुदकक्रिया कार्येत्यर्थः । अखण्डादर्शे – अनुप्तकेशो यः पूर्वं स द्वितीयतृतीययोः । पञ्चमे सप्तमे वाऽह्नि दशाहे वाऽपि वापयेत् इति ।

*அவ்விதமே :- க்ஷௌரத்தை முதல் நாளில் செய்துகொள்ள வேண்டும். அல்லது மூன்றுவது, ஐந்தாவது, ஏழாவது நாளில் செய்துகொள்ள வேண்டும். ஏகோத்திஷ்டத்திற்கு முன் செய்துகொள்ள வேண்டும். **கௌதமரும்** :- 'முதல் நாள், மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பதாவது நாட்களில் உதகதாநத்தைச் செய்ய வேண்டும்' என்றூர். உதக தானத்தை வபநம் செய்து கொண்ட பிறகு செய்யவேண்டுமாகையால், ஒற்றைப்படை நாட்களில், வபநம் செய்துகொண்ட பிறகு உதக க்ரியையைச் செய்ய வேண்டுமென்பது பொருள். **அகண்டாதர்சத்திலும்** - முதல் நாளில் வபநம் செய்து கொள்ளதாவன், 2, 3, 5, 7, 10-வது நாட்களுள் ஒரு நாளில் வபநம் செய்துகொள்ள வேண்டும்.*

एवं च पुत्रस्य शुक्रवारे रात्रावपि वपनम् । इतरेषां तु संस्कर्तॄणां पूर्वपूर्वदिनस्य दुष्टत्वे तत्रालस्यादिना असम्भवे वा द्वितीयाद्युक्तदिनेषु वपनपूर्वकमुदकदानम्, संस्कर्तृव्यतिरिक्त ज्ञातीनां दशमदिनात् पूर्वं वपनमुदकदानं च वैकल्पिकम्, सर्वेषां दशमदिने नित्यमिति विवेकः ।

*இவ்விதமிருப்பதால், தாஹகன் புத்ரனுல் அவனுக்கு சுக்ரவாரத்திலும், ராத்ரியிலும் வபநம் விஹிதம். மற்றத் தாஹகர்களுக்கு, முன் உள்ள தினம் துஷ்டமானுலும், அல்லது அந்தத் தினத்தில் ஆலஸ்யம் முதலிய காரணத்தினுல் வபநம் ஸம்பவிக்காவிடினும், 2-ஆவது நாள் முதலிய விஹித தினங்களில் வபநம் செய்து*

கொண்டு உதகதாநம் செய்யப்பட வேண்டும். தாஹகனைத் தவிர்த்த ஜ்ஞாதிகளுக்குத் தசமதினத்திற்கு முன் வபநமும் உதக தாநமும் வைகல்பிகம். எல்லோருக்கும் தசமதினத்தில் நித்யம் என்பது விளக்கம்.

रात्रौ यामद्वयानन्तरं पुत्रस्यापि वपननिषेधः

पुत्रस्य रात्रौ वपनं यामद्वयमध्य एव, न तु यामद्वयात् परम्। तदुक्तं श्रीधरीये – रात्रौ यामद्वयादर्वाक् कर्तुर्वै वपनं भवेत्। अन्येषां तु सपिण्डानां श्वोभूते वपनक्रिया इति । अत्र कर्तृग्रहणं पुत्रव्यतिरिक्तस्यापि दाहकस्य वपनप्राप्त्यर्थं, न पुत्रान्तर-व्यावृत्त्यर्थम् इति पितृमेधसारकृता व्याख्यातम्। तदयुक्तम्, शौक्रे च वारे निशि वा मृतिः स्यात् क्षौरं न कुर्यात्तनयस्तु कुर्यात् इत्यादिपूर्वोक्तवचननिचयेन तनयव्यतिरिक्तस्य संस्कर्तुर्निशि वपनस्य कण्ठरवेण निषिद्धत्वात्, रात्रावपि विधेर्बलादिति निशि पुत्रस्य वपनविधानवदितरस्य तद्विधानाभावाच्च । यामद्वयमध्ये सर्वपुत्राणां गर्भवतामपि वपनं समानम्। तदूर्ध्वं निषेधोऽपि स्मर्यते - रात्रौ यामद्वयादूर्ध्वं पुत्रोऽपि न वपेत्ततः इति।

ராத்ரியில் இரண்டு யாமங்களுக்குமேல்

புத்ரனுக்கும் வபநம் கூடாது

புத்ரனுக்கு ராத்ரியில் வபநம் இரண்டு யாமத்திற்குள்தான். 2-யாமங்களுக்குமேல் கூடாது. அவ்விதம் சொல்லப்பட்டுள்ளது, ச்ரீதரீயத்தில் : ''ராத்ரியில், 2-யாமத்திற்கு முன் கர்த்தாவுக்கு வபநம் விஹிதம். மற்ற ஸபிண்டர்களுக்கு மறு நாளில் வபநம்''. ''இங்கு 'கர்த்தா' என்று சொல்லியது, புத்ர வ்யதிரிக்தனை தாஹகனுக்கும் வபந ப்ராப்திக்காக; மற்றப் புத்ரர்களை வ்யாவ்ருத்தி செய்வதற்கல்ல'' என்று பித்ருமேத ஸாரகாரரால் வ்யாக்யாநம் செய்யப்பட்டுள்ளது. அது யுக்தமல்ல. ''சுக்ரவாரத்திலோ, ராத்ரியிலோ ம்ருதியானால்

தாஹகன் வபநம் செய்து கொள்ளக் கூடாது. புத்ரனுகில் செய்து கொள்ளலாம்'' என்பது முதலிய, முன் சொல்லப்பட்ட வெகு வசநங்களால், புத்ரனைத் தவிர்த்த ஸம்ஸ்கர்த்தாவுக்கு ராத்ரியில் வபநம் கூடாதென்று ஸ்பஷ்டமாய் நிஷேதிக்கப்பட்டிருப்பதாலும், 'ராத்ராவபி-விதேர்பலாத்' என்று ராத்ரியில் புத்ரனுக்கு வபநம் விதிக்கப்பட்டிருப்பதுபோல், மற்றவனுக்கு வபநவிதி இல்லாததும் காரணம். இரண்டு யாமங்களுக்குள், புத்ரர்களெல்லோருக்கும் கர்ப்பவான்களாகிலும் வபநம் ஸமாநம். அதற்குமேல் நிஷேதமும் ஸ்ம்ருதியிலுள்ளது — ''ராத்ரியில் இரண்டு யாமங்களுக்குமேல் புத்ரனும் வபநம் செய்துகொள்ளக் கூடாது'' என்று.

शुक्रवारे निशि वा प्रोषितपितृमृतिश्रवणे यामद्वयमध्येऽपि पुत्रोऽपि वपनमतिक्रान्तप्रेतकृतं च न कुर्यात्। तथा च वृद्धहारीतः – शुक्रवारे व्यतिक्रान्ते मातापित्रोस्तथैव च। सन्ध्यारात्र्योस्तथा क्षौरं प्रेतकार्यं च नाचरेदिति। स्मृत्यन्तरेऽपि – प्रत्यक्षमरणे पित्रोर्न पश्येत्तिथिवारभम्। परोक्षे सूक्ष्मतः पश्येन्मृतौ तु तिथिवारभम् इति।

சுக்ரவாரத்திலோ, ராத்ரியிலோ தேசாந்தரத்தில் மரித்த மாதா பித்ரு ம்ருதியைக் கேள்விப்பட்டால், 2-யாமங்களுக்கு முன்பாயிருந்தாலும், புத்ரனுகினும், வபநத்தையும், அதிக்ராந்தமான ப்ரேத க்ருத்யத்தையும் செய்யக் கூடாது. அவ்விதமே, வ்ருத்தஹாரீதர் - மாதா பிதாக்களின் அதிக்ராந்த மரணத்தின் ச்ரவண விஷயத்தில், சுக்ரவாரத்திலும், ஸந்த்யா காலத்திலும், ராத்ரியிலும், க்ஷௌரம், ப்ரேதகார்யம் இவைகளை செய்யக் கூடாது.

ज्ञातीनां सन्निधाने वपनमितरत्र विकल्पः

सन्निधाने सपिण्डमरणे वपनमितरत्र विकल्प इत्याह बोधायनः – एतस्मिन् कालेऽस्यामात्याः केशश्मश्रूणि वापयन्ते ये

सन्निधाने भवन्ति विकल्प इतरेषु वापयेरन्निवर्तयेरन् । इति । स्मृत्यन्तरे – सन्निधाने सपिण्डानां (वपनं तु विधीयते) वपनं स्याद्गुरोर्मृतौ । महागुरौ तु सर्वत्र दाहकस्यागुरावपि इति ।

**ஜ்ஞாதிகளுக்கு, நேரில் இருந்தால் வபநம்**

**பரோக்ஷத்திலானால் விகல்பம்.**

*நேரில் நேர்ந்த ஜ்ஞாதி மரணத்தில் வபநம், மற்றதில் விகல்பம் என்கிறார் போதாயனர் :- இக்காலத்தில், ப்ரேதனின் ஜ்ஞாதிகள் மயிர் மீசை இவைகளை வபநம் செய்துகொள்ள வேண்டும், நேரில் இருப்பவர்கள். நேரிலில்லாதவர்கள் விஷயத்தில் விகல்பம். வபநம் செய்து கொள்ளலாம். அல்லது வபநம் செய்து கொள்ளாமலுமிருக்கலாம்.* **மற்றொரு ஸ்ம்ருதியில்** *- நேரிலுள்ள ஜ்ஞாதிகளுக்கு வபநம் விதிக்கப்படுகிறது. குருவின் ம்ருதியிலுமப்படியே. மஹாகுருவின் ம்ருதியிலானால், ஸந்நிதி, அஸந்நிதி இரண்டிலும் வபநமுண்டு. குருவல்லாதவன் விஷயத்திலும் தாஹகனுக்கு வபநமுண்டு.*

असन्निधाने निषेधश्च स्मर्यते - सन्निधाने सपिण्डानां वपनं तु विधीयते । असन्निधाने सर्वत्र वपनं न विधीयते इति । असन्निधाने - यदा कदाचिद्दूरस्थ ज्ञातिमृतिश्रवणे वपनं न कुर्यात्, किन्तु तिलोदकमेव कुर्यादिति केचिद्व्याचक्षते । अन्ये तु, असन्निधाने निषेधवचनं ज्ञातीनां प्रथमदिनक्षौरविषयम्, दशमदिने तु क्षौरमस्त्येव, दशमदिनादूर्ध्वं श्रवणेऽपि वपनं, तर्पणं चास्त्येवेति । अपरे तु – सन्निधाने दशमदिनक्षौरे वारादिदोषो नास्ति, असन्निधाने अनिषिद्धे दिने पूर्वत्र कर्तव्यम्, न तु दुष्टे दशमदिन इत्याहुः । शिष्टाचारादिह व्यवस्था ।

நேரிலில்லாத விஷயத்தில் வபந நிஷேதமும் ஸ்ம்ருதியிலுள்ளது - "நேரிலிருந்தால் ஸபிண்டர்களுக்கு வபநம் விதிக்கப்படுகிறது. நேரில்லாவிடில் எல்லா விஷயத்திலும் வபநம் விதிக்கப்படுவதில்லை" என்று. "அஸந்நிதாநே - எப்பொழுதாவது, தூர தேசத்தில் மரித்த ஜ்ஞாதியின் மரணத்தைக் கேட்டால், வபநம் செய்துகொள்ளக் கூடாது. ஆனால் திலோதக தாநத்தை மட்டில் செய்யவேண்டும்" என்று சிலர் வ்யாக்யாநம் செய்கின்றனர். சிலரோவெனில் — "பரோக்ஷத்தில் வபந நிஷேத வசநம், ஜ்ஞாதிகளுக்கு ப்ரதமதினத்தில் விஹிதமான க்ஷௌரத்தைப் பற்றியது. 10-ஆவது தினத்திலோவெனில் க்ஷௌரம் அவச்யமுண்டு. 10-ஆவது தினத்திற்கு மேல் கேட்கப்பட்டாலும் வபநமும், தர்ப்பணமும் அவச்யமுண்டு" என்கின்றனர். மற்றும் சிலரோவெனில் — நேரில் 10ஆவது தின க்ஷௌரத்தில் வாரம் முதலியதாலாகிய தோஷமில்லை. பரோக்ஷத்தில் நிஷேதமில்லாத தினத்தில் முன்பே செய்துகொள்ள வேண்டும். தோஷமுள்ள 10ஆவது தினத்தில் கூடாது எனகின்றனர். இவ்விஷயத்தில் சிஷ்டாசாரத்தால் வ்யவஸ்தையை அறியவும்.

मातापितृविषये तु स्मृत्यन्तरं – देशान्तरे स्थितः पुत्रः श्रुत्वा पितृविपर्ययम् । कृत्वा तु वपनं तद्वा दशाहान्तं तिलोदकम् । सपिण्डीकरणश्राद्धं कुर्यादेकादशेऽहनि इति । सङ्ग्रहे – दारकर्मणि मृतौ च सूतके यागदीक्षितविधौ नृपेष्टतः । कन्यकाकटक-कुम्भधन्वगे भास्करेऽपि वपनं विधीयते । विवाहदीक्षामध्ये तु ज्ञातीनां मरणे सति । त्रिंशत्तिलोदकं कार्यं क्षुरकर्म न विद्यते इति । विवाहदीक्षामध्ये मातापितृमरणे तु वपनमस्ति । मातुर्दशाहमध्ये पितृमरणे संस्कर्तुर्वपनं न इत्युक्तं स्मृतिरत्ने –पितुर्दशाहमध्ये तु माता च निधनं गता । तत्रैव वपनं कार्यं विपरीते न कारयेत् इति ।

மாதா பித்ரு விஷயத்திலோவெனில் ஒரு ஸ்ம்ருதி - ''தூர தேசத்திலுள்ள புத்ரன், மாதா பித்ரு ம்ருதியைக் கேள்விப் பட்டால், வபநம் செய்து கொண்டு பத்துநாள் வரையில் திலோதகதாநம் செய்து, 11-ஆவது நாளில் ஸபிண்டீகரண ச்ராத்தத்தைச் செய்யவும்'' என்கிறது. ஸங்க்ரஹத்தில் - விவாஹத்திலும், ம்ருதியிலும், புத்ர ஜநநத்திலும், யாகதீக்ஷையிலும், அரசனின் இஷ்டத்திற்காகவும், கன்யா, கடக, கும்ப, தனுர் மாஸங்களிலும், வபநம் விதிக்கப்படுகிறது. விவாஹ தீக்ஷாமத்யத்தில் ஜ்ஞாதிகளின் மரணம் நேர்ந்தால் 30 திலோதக தானத்தைச் செய்யவும். க்ஷௌரம் வேண்டியதில்லை. விவாஹ தீக்ஷா மத்யத்தில் மாதா பித்ரு ம்ருதியிலோவெனில், வபநமுண்டு. மாதாவின் ம்ருதியில் 10 நாட்களுள் பிதா இறந்தால் ஸம்ஸ்கர்த்தாவுக்கு வபநமில்லை என்று சொல்லப்பட்டுள்ளது. ஸ்ம்ருதி ரத்னத்தில் 'பித்ரு ம்ருதியின் 10-நாட்களுள் மாதா இறந்தால் வபநம் செய்துகொள்ள வேண்டும். இதற்கு விபரீதமான விஷயத்தில் வபநம் கூடாது' என்று. (மாத்ரு ம்ருதியில் 10-நாட்களுள்பிதா இறந்தால் வபநமில்லை என்பதாம்).

सङ्ग्रहे – पितुर्दीक्षान्तरे सूनोर्माता यदि विपद्यते। वपनं चापि कुर्वीत मातुः कुर्यात् क्रियां ततः ॥ मातुर्दीक्षान्तरे चैव पिता मरणमाप्नुयात्। दहनादि क्रियाः कुर्याद्वपनं नैव कारयेत् इति। अत्र दीक्षान्तरे इत्युक्तत्वाद्दशाहानन्तरमपि पितृमरणे संस्कर्तुर्वपनं न, मातृमरणे तु वपनमस्तीत्युक्तं भवति। अन्यविषयेऽपि तत्रैवोक्तम् – मातापित्रोर्मृताब्दे तु यद्यन्यो हि विपद्यते। वपनं नैव कुर्वीत तस्य दाहादिकं चरेत् इति।

ஸங்க்ரஹத்தில் :- பிதாவின் ம்ருதி தீக்ஷாமத்யத்தில் மாதா இறந்தால் வபநம் செய்துகொள்ள வேண்டும். பிறகு மாதாவின் க்ரியையையும் செய்ய வேண்டும். மாத்ரு

தீக்ஷாமத்யத்தில் பிதாவுக்கு ம்ருதியானால் தஹநம் முதலிய க்ரியைகளைச் செய்ய வேண்டும். வபநத்தைச் செய்துகொள்ளவே கூடாது, என்றுள்ளது. இங்கு 'தீக்ஷாந்தரே' என்று சொல்லியிருப்பதால், 10-நாட்களுக்குப் பிறகும் பித்ரு மரணத்தில் ஸம்ஸ்கர்த்தாவுக்கு வபநமில்லை. மாத்ரு மரணத்திலோ வெனில் வபநமுண்டென்று சொல்லியதாயாகிறது. அன்யன் விஷயத்திலும் அங்கேயே (ஸங்க்ரஹத்திலேயே) சொல்லப்பட்டுள்ளது — ''மாதா பிதாக்களின் ம்ருதி வர்ஷத்தில் அன்யன் மரித்தால் வபநம் செய்துகொள்ளக் கூடாது. அவனுக்கு தஹநம் முதலியதைச் செய்ய வேண்டும்' என்று.

स्मृत्यन्तरे – पितृदीक्षान्तराले तु मात्रर्थं वपनं भवेत् । मात्रन्तरा तु पित्रर्थमन्यार्थमपि नाचरेत् इति । पितृमेधसारे – पित्रोर्मृताब्दे पितृव्यादिमरणे न वपेत् इति । यत्तु कैश्चिदुक्तम् – स्वपुत्रमरणे चैव स्वभार्यामरणे तथा । स्वयं यदि दहेत्तत्र केशश्मश्रूणि वापयेत् । इति, तद्बहुस्मृतिविरुद्धत्वाच्छिष्टाचार-विरोधाच्च उपेक्षणीयम् । यदाह वृद्धमनुः – भार्यापुत्रकनिष्ठानां शिष्याणां च यवीयसाम् । संस्कर्तुर्वपनं नैव यदि कुर्यात् कुलक्षयः इति । कात्यायनश्च – मृतावनुपनीतानां वपनं न कदाचन । मृतावपि कनिष्ठानां वपनं न विधीयते इति । अनुपनीतानां पितृव्यादीनामिति शेषः ।

ஒரு ஸ்ம்ருதியில் - பித்ரு தீக்ஷையில் நடுவில் மாத்ரு ம்ருதியானால் வபநமுண்டு. மாத்ரு தீக்ஷயின் நடுவிலோவெனில், பிதாவுக்கும் அன்யனுக்கும் ம்ருதி நேர்ந்தால் வபநமில்லை. பித்ருமேத ஸாரத்தில் - மாதா பிதாக்களின் மரண வர்ஷத்தில் பித்ருவ்யன் முதலியவரின் மரணம் நேர்ந்தால் வபநமில்லை. சிலர் :— ''தனது புத்ரனின் மரணத்திலும், தனது பார்யையின்

மரணத்திலும்தான் தாஹகனுல் வபநம் செய்துகொள்ள வேண்டும்'' என்று சொல்லியிருக்கின்றனரே எனில், அது, வெகு ஸ்ம்ருதிகளுக்கு விருத்தமாயிருப்பதாலும், சிஷ்டாசார விருத்தமாயிருப்பதாலும் உபேக்ஷிக்கத் தக்கதேயாம். ஏனெனில், வ்ருத்தமனு :- ''பார்யை, புத்ரன், கனிஷ்டன், சிஷ்யன், சிறியவர் இவர்களுக்கு ஸம்ஸ்காரம் செய்தவனுக்கு வபநமில்லை. செய்துகொண்டால் குலம் க்ஷீணமாகும்'' என்பர். காத்யாயனரும் - ''உபநயனமாகாதவரின் ம்ருதியில் ஒருகாலும் வபநமில்லை. சிறியவரின் ம்ருதியிலும் வபநமில்லை'' என்றார். இங்கு 'அனுபநீதாநாம்' என்பதில் 'பித்ருவ்யாதீநாம்' என்று சேர்க்கவும்.

तथाचोपनीतानां तेषां मृतौ वपनं स्मर्यते – यवीयसां पितृव्याणां संस्कर्तुर्वपनं भवेत् इति । पितृव्यग्रहणं मातुलश्वशुरतत्पत्नीनामप्युपलक्षणम् । एतच्च पितृव्यादीनां संस्कर्तुरेव वपनम्, संस्काराभावे तु वयोधिकपितृव्यादिमरणे वपनम्, तेषां पत्नीनां यवीयसीनामपि मरणे वपनम्, वयोधिक ज्ञातीनां याः पत्न्यस्तासां कनीयसीनामपि मरणे वपनम्, पतिवयसः स्त्रियस्स्युः पतीनामिव वापनम् । पूर्वजाऽपरजा वाऽपि क्षौरं साधारणं स्मृतम् इति वचनात्, आपस्तम्बेन च पतिवयसः स्त्रियः इति नमस्कारादौ विधानादिति केचिदाहुः ।

அவ்விதமிருப்பதால், உபநயநமாகிய அவர்களின் ம்ருதியில் வபநம் சொல்லப்படுகிறது ஒரு ஸ்ம்ருதியில் - சிறுவர்களான பித்ருவ்யர்களின் ம்ருதியிலும், ஸம்ஸ்கர்த்தாவுக்கு வபநமுண்டு என்று. பித்ருவ்ய சப்தத்தை க்ரஹித்தது, மாதுலன், மாமனர், மாமியார் இவர்களுக்கும் உபலக்ஷணமாகும். இதனுல், பித்ருவ்யாதிகளை ஸம்ஸ்கரித்தவனுக்கே வபநம். ஸம்ஸ்கரிக்காவிடிலோ, வயதால் பெரியவராகிய

பித்ருவ்யாதிகளின் மரணத்தில் வபநம். அவர்களின் பத்னிகள் சிறியவராயினும் அவர்களின்மரணத்தில் வபநம். வயதால் பெரியவர்களான ஜ்ஞாதிகளின் பத்னிகள் வயதில் சிறியவர்களானாலும் அவர்களின் மரணத்தில் வபநம் — ''ஸ்த்ரீகள் பதியின் வயதிற்குச் சமமான வயதுடையவராகின்றனர். அவர்களின் பதிகளின் ம்ருதியில்போல், அவர்களின் ம்ருதியிலும் வபநம். அவள் வயதில் பெரியவளாயினும், சிறியவளாயினும் வபநம் ஸாதாரணமெனப்பட்டுள்ளது'' என்ற வசனத்தாலும், ஆபஸ்தம்பரால் — 'ஸ்த்ரீகள் பதியின் வயதுடையவர்கள்' என்று நமஸ்காராதிகளில் விதிக்கப்பட்டிருப்பதாலும், என்று சிலர்சொல்லுகின்றனர்.

अन्ये तु – पितृव्यादिमरणे वयोधिकानां वपनं नास्ति, न्यूनवयस्क तत्पत्नीमरणेऽपि नास्ति इत्याहुः । तदुक्तं प्रयोगसारे – मातुलस्य पितृव्यस्य श्वशुरस्यावरायुषः । वपनं नैव कर्तव्य माशौचं तु विधीयते इति । बार्हस्पत्येऽपि – मातुलानां पितृव्याणां श्वशुराणां पितृष्वसुः । मातॄणामनुजातानां तथैव ज्येष्ठयोषिताम् । वपनं नैव कर्तव्यमाह पाराशरो मुनिः इति । स्मृत्यन्तरेऽपि – यवीयसां पितृव्याणां श्वशुराणां च तत् स्त्रियाम् । न कुर्यात् क्षुरकर्माणि कुर्याच्चेत् कुलनाशनम् इति । एतानि वपननिषेधवचनानि संस्कर्तृव्यतिरिक्त विषयाणि – ज्यायानपि पितुः पत्न्या यदि संस्कारमाचरेत् । क्षुरकर्म तदा कुर्यादन्यथा ह्युदकक्रियाम् । यवीयसां पितृव्याणां संस्कर्तुर्वपनं भवेत् इति विशेषस्मरणात् । यथाशिष्टाचारमत्र व्यवस्था ।

**மற்றவரோவெனில்** — பித்ருவ்யாதி மரணத்தில் வயதால் பெரியவர்க்கு வபநமில்லை. வயதால் சிறியவர்களான பித்ருவ்யாதிபத்னீ மரணத்திலும் வபநமில்லை என்கின்றனர். அது சொல்லப்பட்டுள்ளது. **ப்ரயோகஸாரத்தில் :-** வயதால் சிறியவனான மாதுலன்,

பித்ருவ்யன், மாமனூர் இவர்களின் ம்ருதியில் வபநம் செய்துகொள்ளவே கூடாது. ஆசௌசம் மட்டில் விதிக்கப்படுகிறது. **பார்ஹஸ்பத்யத்திலும் :-** மாதுலர்கள், பித்ருவ்யர்கள், மாமனூர்கள், அத்தை, மாத்ருபகிநீகள், ஜ்யேஷ்டப்ராத்ரு பத்னிகள் இவர்களின் ம்ருதியில் வபநம் செய்துகொள்ளக் கூடாதென்றூர் பராசரமுனி. **ஓர் ஸ்ம்ருதியிலும் -** வயதிற்சிறியவரான பித்ருவ்யர்கள், மாமனூர்கள், மாமியார்கள் இவர்களின் ம்ருதியில் க்ஷௌரம் செய்துகொள்ளக் கூடாது. செய்துகொண்டால் குலம் நசிக்கும். இந்த வபந நிஷேத வசநங்களெல்லாம் ஸம்ஸ்கர்த்தா அல்லாதவர்களைப் பற்றியதாம். ''வயதில் பெரியவனூயினும், பிதாவின் பத்நீக்கு ஸம்ஸ்காரம் செய்தானூனூல் க்ஷௌரம் செய்துகொள்ள வேண்டும். இல்லாவிடில் உதகதானத்தை மட்டில் செய்யவும்'' 'சிறியவர்களான பித்ருவ்யர்களை ஸம்ஸ்கரித்தவனுக்கு வபன முண்டு' என்று விசேஷ வாக்யமிருப்பதால். இவ்விஷயத்தில் சிஷ்டாசாரப்படி வ்யவஸ்தையை அறியவும்.

## गर्भिणीपतिविषये वपनविधिः ।

अन्तर्वद्विषये यमः – अन्तर्वताऽपि कर्तव्यं पित्रोर्मरण एव तु। नान्येषां वपनं कार्यं भ्रूणहत्यासमं भवेत् इति । पित्रोर्मरणे संस्कर्तृव्यतिरिक्तेन पुत्रेणान्तर्वताऽपि वपनं कार्यम् । अन्येषां मरणेऽन्तर्वता वपनं न कार्यमित्यर्थः । पित्रोर्मरण एव त्वित्युपलक्षणम्। ग(या)ज्ञायां भास्करक्षेत्रे माता पित्रोर्गुरोर्मृतौ। आधाने सोमयोगे च गर्भवानपि वापयेत् इति स्मरणात्।

### கர்ப்பிணீபதி விஷயத்தில் வபந விதி

கர்ப்பிணீ பதி விஷயத்தில் :- **யமன் :** ''கர்ப்பிணீபதியானூலும் மாதா பிதாக்களின் மரணத்தில் வபநம் செய்து கொள்ளவேண்டும். மற்றவர்களின்

ம்ருதியில் வபநம் கூடாது. செய்து கொண்டால் கர்ப்பஹத்யைக்குச் சமமாகும்'' என்றார். 'மாதா பிதாக்களின் மரணத்தில், ஸம்ஸ்கர்த்தாவல்லாத புத்ரன் கர்ப்பிணீபதியாயிருந்தாலும் வபநம் செய்துகொள்ள வேண்டும். மற்றவரின் ம்ருதியில் கர்ப்பிணீபதி வபநம் செய்துகொள்ளக் கூடாது' என்பது பொருள். 'பித்ரோர் மரண ஏவது' என்பது உபலக்ஷணமாகும் — ''கயையிலும், பாஸ்கர க்ஷேத்ரத்திலும், மாதா பிதாக்கள், குரு இவர்களின் ம்ருதியிலும், ஆதாநத்திலும், ஸோமயாகத்திலும், கர்ப்பிணீ பதியாகினும் வபநம் செய்துகொள்ள வேண்டும்'' என்று ஸ்ம்ருதி வசநம் உள்ளது.

स्मृत्यन्तरे – आधाने यज्ञदीक्षायां मातापित्रोर्गुरोर्मृतौ । गर्भवान् वपनं कुर्यान्नान्यत्रेति व्यवस्थितिः इति । गर्भवतो मातामहादीनां संस्कर्तृत्वे वपनमाहात्रिः – मातामहपितृव्याणां मातुलाग्रजयोर्मृतौ । श्वशुराचार्ययोरेषां पत्नीनां च पितृष्वसुः । मातृष्वसुर्भगिन्याश्च गर्भवानपि वापयेत् इति ।

ஓர் ஸ்ம்ருதியில் :— ஆதாநத்திலும், யஜ்ஞ தீக்ஷையிலும், மாதா, பிதா, குரு இவர்களின் ம்ருதியிலும் கர்ப்பிணீபதியும் வபநம் செய்துகொள்ள வேண்டும். மற்றவர் விஷயத்தில் கூடாது, என்பது வ்யவஸ்தை. கர்ப்பிணீபதிக்கு, மாதா மஹாதிகளின் ஸம்ஸ்கர்த்ருத்வம் ஏற்பட்டால் வபநத்தை விதிக்கின்றார் அத்ரி :— மாதாமஹன், மாதாமஹீ, பித்ருவ்யன், மாதுலன், ஜ்யேஷ்டன், மாமனார், ஆசார்யன், இவர்களின் பத்னிகள், பித்ரு பகிநீ, மாத்ருபகிநீ, பகிநீ, இவர்களுக்கு ஸம்ஸ்காரம் செய்தால், கர்ப்பிணீபதியும் வபநம் செய்துகொள்ள வேண்டும்.

गौतमः – मातामहे च तत्पत्न्यां मातुले पूर्वजे मृते । गुरुश्वशुरपत्नीषु गर्भवानपि वापयेत् । दाहको वपनं कुर्यान्नान्यत्रेति व्यवस्थितिः इति । स एव – अपुत्रस्य पितृव्यस्य ज्येष्ठस्याप्यसुतस्य

त्रिंशच्छूद्राय दातव्यास्ततः सम्प्रविशेद्गृहम्। ततः स्नानं पुनः कार्यं गृह शौचं च कारयेत् इति। वस्त्रं - निष्पीडनवस्त्रमिति व्याचक्षते।

**காத்யாயனரும் :-** திரும்பிப் பாராமல், சவஸ்பர்சம் செய்த எல்லோரும் ஜலாசயத்தை அடைந்து, ஸசேல ஸ்நாநமும் ஆசமநமும் செய்து, ஸ்தலத்தில் ப்ரேதனுக்கு உதகதாநம் செய்ய வேண்டும். கோத்ர நாமங்களைச் சொல்லிய பிறகு 'தர்ப்பயாமி' என்று சொல்லி, தெற்கு நுனியாய்த் தர்ப்பங்களைப் பரப்பி, தனித் தனியாய் ஒரு முறை ஜலதாநம் செய்யவும். **பைடீநஸியும் :-** ப்ரேதனை மனதால் த்யானித்துக் கொண்டு தெற்கு முகமாயிருந்து, மூன்று அஞ்ஜலிகளைக் கொடுக்கவேண்டும். **ப்ரசேதஸ் :-** பிறகு நதிக் கரையை அடைந்து விதிப்படி சுத்தி செய்துகொண்டு, முதலில் வஸ்த்ரத்தைச் சுத்தி செய்யவும். பிறகு ஸ்நாநம் செய்யவும். மறுபடி ஸசேல ஸ்நாநம் செய்து, சுத்தனாய், சுத்த மனமுள்ளவனாய் பாஷாணத்தை எடுத்து, அதில், ப்ராஹ்மணன் பத்து ஜலாஞ்ஜலிகளைக் கொடுக்க வேண்டும். க்ஷத்ரியன் 12- அஞ்ஜலிகளையும், வைச்யன் 15-அஞ்ஜலிகளையும், சூத்ரன் 30-அஞ்ஜலிகளையும் கொடுக்கவும். பிறகு க்ருஹத்தில் நுழையவும். மறுபடியும் ஸ்நாநம் செய்யவும். க்ருஹத்திற்குச் சுத்தியைச் செய்யவும். இங்கு வஸ்த்ரம் என்றது நிஷ்பீடன (பிழியும்) வஸ்த்ரம் என்று வ்யாக்யாநம் செய்கின்றனர்.

स्मृतिरत्ने – अपसव्ये ततः कृत्वा वस्त्रयज्ञोपवीतके। दक्षिणाभिमुखैर्विप्रैर्देयं तोयाञ्जलित्रयम् इति। वसिष्ठः – सव्योत्तराभ्यां पाणिभ्या मुदकक्रियां कुर्वीरन् इति। प्रचेताश्च – प्रेतस्य बान्धवा यथावृद्धमुदकमवतीर्य नोत्कर्षेयुरुदकान्ते प्रसिञ्चेयुरपसव्ययज्ञोपवीतवाससो दक्षिणामुखा ब्राह्मणस्य उदङ्मुखाः प्राङ्मुखाश्च राजन्यवैश्ययोः इति। ज्ञातिभिर्वपन-पूर्वकमेवोदकं देयम्। प्रदद्युर्ज्ञातयः सर्वे क्षौरं कृत्वा तिलोदकम् इति स्मरणात्।

**ஸ்ம்ருதிரத்னத்தில் :-** பிறகு, வஸ்த்ரம் உபவீதம் இவைகளை ப்ராசீநாவீதமாகச் செய்துகொண்டு, தெற்குமுகமாய் ப்ராஹ்மணர்கள் மூன்று தடவை ஜலாஞ்ஜலி தாநம் செய்ய வேண்டும். **வஸிஷ்டர் :-** இடது கை மேலாக உள்ள கைகளால் உதக தாநம் செய்யவும். **ப்ரசேதஸ்ஸும் :-** ப்ரேதனின் பந்துக்கள் வ்ருத்த க்ரமமாய் ஜலத்திலிறங்கி ஸ்நாநம் செய்து, துடைத்துக் கொள்ளாமல் ஜலக் கரையில் உபவீதத்தையும் வஸ்த்ரத்தையும் ப்ராசீநாவீதமாகத் தரித்து, தெற்கு நோக்கியவர்களாய், ப்ராஹ்மணனுக்கு ஜலாஞ்ஜலி தாநம் செய்ய வேண்டும். க்ஷத்ரியனுக்கும் வைச்யனுக்கும் முறையே வடக்கு முகமாயும், கிழக்கு முகமாயும் இருந்து ஜலாஞ்ஜலி தானம் செய்ய வேண்டும். ஜ்ஞாதிகள் வபநம் செய்து கொண்ட பிறகே உதக தாநம் செய்ய வேண்டும். ''ஜ்ஞாதிகளெல்லோரும் க்ஷௌரம் செய்துகொண்டு திலோதகத்தைக் கொடுக்க வேண்டும்'' என்று ஸ்ம்ருதி உள்ளது.

प्रचेताश्च – वपनं कृत्वा स्नात्वैकवस्त्राः प्राचीनावीतिनो दक्षिणामुखा अवटे सदर्भे जलाञ्जलिं दद्युः इति । अङ्गिराः – स तिलदर्भेष्वसावेतत्त इति जलाञ्जलीन् दद्युर्बालपुरस्सराः सपिण्डाः इति । यथावृद्धं बालपुरस्सरा इत्येतयोर्यथास्वगृह्यं यथाशिष्टाचारं व्यवस्था । एतच्चोदकदानं यावदाशौचं कार्यम् । तथा च व्यासः – प्राचीनावीतिनो नामगोत्राभ्यां दक्षिणामुखाः । जलं प्रेताय मध्याह्ने दद्युर्यावदशुद्धता इति । यावदशुद्धता - यावदाशौचमित्यर्थः ॥ विष्णुरपि – यावदाशौचं तावत् प्रेतस्य उदकं पिण्डं च दद्युः इति ।

**ப்ரசேதஸ்ஸும் :-** வபநம் செய்து கொண்டு ஸ்நாநம் செய்து, ஒரு வஸ்த்ரமுடையவர்களாய், ப்ராசீநாவீதிகளாய் தர்ப்பங்களுடன் கூடிய குழியில் ஜலாஞ்ஜலிகளைக் கொடுக்கவும். **அங்கிரஸ் :-** ஸபிண்டர்கள் சிறுவர் முந்தியவர்களாய், தர்ப்பங்களில் 'இந்த நாமதேய

முடையவனே இது உனக்கு' என்று திலத்துடன் ஜலாஞ்ஜலிகளைக் கொடுக்க வேண்டும். வ்ருத்தர்கள் முதலாக என்றும், பாலர்கள் முதலாக என்றும் உள்ள வசநங்களுக்கு, அவரவர் க்ருஹ்யப்படிக்கும், சிஷ்டாசாரப்படிக்கும் வ்யவஸ்தையை அறியவும். இவ்விதம் சொல்லப்பட்ட உதக தாநத்தை ஆசௌசம் முடியும் வரையில் செய்ய வேண்டும். அவ்விதமே, **வ்யாஸர்** :- ப்ராசீநாவீதிகளாய், தெற்கு நோக்கியவர்களாய், நாம கோத்ரங்களை உச்சரித்து, மத்யாஹ்ன காலத்தில் ப்ரேதனுக்கு ஆசௌசமுள்ள வரையில் உதக தாநம் செய்யவும். **விஷ்ணுவும்** :- ஆசௌசமுள்ள வரையில் ப்ரேதனுக்கு உதக பிண்டதானத்தைச் செய்ய வேண்டும்.

अत्र विशेषमाहापस्तम्बः – एवमहरहरञ्जलिनैकोत्तरवृद्धिरेकादशाहात् इति। कर्ता ज्ञातयश्च प्रथमदिने त्रीनञ्जलीन् दद्युः, द्वितीये चतुरः, तृतीये पञ्च, एवं दशमदिनपर्यन्तमेकोत्तरवृद्ध्या दद्युः । सम्भूय पञ्चसप्तत्यञ्जलयो भवन्ति । अञ्जलिनैकोत्तरवृद्धिः इत्यभिधानाद्वासोदके नास्त्येकोत्तरवृद्धिः । तत्तु प्रत्यहमादशाहात्त्रिरेव दद्युः । प्रचेताश्च – दिने दिनेऽञ्जलीन् पूर्णान् प्रदद्यात् प्रेतकारणात् । तावद्वृद्धिश्च कर्तव्या यावत्पिण्डः समाप्यते इति । यावद्दशमत्पिण्डः समाप्यते तावदञ्जलिवृद्धिः कार्येत्यर्थः ।

இதில் விசேஷத்தைச் சொல்லுகிறார் - **ஆபஸ்தம்பர்** :- 'இவ்விதம் ப்ரதி தினமும் அஞ்ஜலியால் உதக தாநம் செய்ய வேண்டும். ஒவ்வொரு நாளிலும் ஒரு அஞ்ஜலி அதிகமாக வேண்டும். 11-ஆவது நாள் வரையில்' என்று. கர்த்தாவும் ஜ்ஞாதிகளும் முதல் நாளில் 3-ஜலாஞ்சலிகளைக் கொடுக்கவும். 2-ஆவது நாளில் நான்கு, 3-ஆவது நாளில் ஐந்து. இவ்விதம் 10-ஆவது நாள் வரையில், ஒவ்வொன்று அதிகமாகும்படி கொடுக்கவும். சேர்ந்து 75-அஞ்ஜலிகள் ஆகின்றன. அஞ்ஜலி தாநத்தில் வ்ருத்தியைச்

சொல்லியதால் வாஸோதகத்தில் வ்ருத்தி இல்லை. வாஸோதகத்தை மட்டில் ப்ரதி தினமும் 3-தடவையே கொடுக்க வேண்டும். ப்ரசேதஸ்ஸுூம் :- 'ஒவ்வொரு தினத்திலும் பூர்ணமான ஜலாஞ்ஜலிகளை ப்ரேதனுக்காகக் கொடுக்க வேண்டும். பிண்டம் ஸமாப்தியாகும் வரையில் வ்ருத்தியையும் செய்ய வேண்டும்'. பத்தாவது பிண்டம் எப்பொழுது முடிகிறதோ அதுவரையில் ஜலாஞ்ஜலிகளுக்கு வ்ருத்தி செய்யப்பட வேண்டுமென்று பொருள்.

यत्तु प्रथमतृतीयपञ्चमसप्तमनवमेषूदकक्रिया इति गौतमस्मरणाम्, तदापद्विषयमित्युक्तं पितृमेधसारे – सङ्कटेष्वयुग्माहेषु दशाहे वा दद्युः इति । स्मृतिरत्नमाधवीयादिषु व्यवस्थान्तरं दर्शितम् । अयुग्मदिनेषु त्रींस्त्रीनञ्जलीन् दद्यात्, प्रथमतृतीयपञ्चमसप्तमनवमेषूदकक्रिया इति गौतमस्मरणात्, प्रथमेऽह्नि तृतीये च पञ्चमे सप्तमे तथा । नवमे चाम्बुनि स्नानं कृत्वा दद्यात्तिलोदकम् इति विष्णुपुराणवचनाच्च । प्रेतस्य तापोपशान्तिविशेषापेक्षया तु प्रतिदिनमप्येकोत्तरवृद्ध्या उदकदानं कार्यम् दिने दिनेऽञ्जलीन् पूर्णान् इति प्रचेतः स्मरणात् इति ।

ஆனால் 1,3,5,7,9-ஆவது தினங்களில் உதக தாநம்' என்று கௌதம ஸ்ம்ருதி உள்ளதே எனில், அது ஆபத்விஷயமென்று சொல்லப்பட்டுள்ளது. பித்ருமேதஸாரத்தில், - 'ஆபத்காலங்களில் ஒற்றைப்படை நாட்களிலாவது, பத்தாவது நாளிலாவது உதக தாநம் செய்யவும்' என்று. ஸ்ம்ருதி ரத்னம் மாதவீயம் முதலிய க்ரந்தங்களில் வேறு விதமான வ்யவஸ்தை சொல்லப்பட்டுள்ளது :- 'ஒற்றைப்படை நாட்களில் மும்மூன்று ஜலாஞ்ஜலிகளைக் கொடுக்கவும். 1,3,5,7, 9ஆவது நாட்களில் உதக தாநமென்று கௌதம ஸ்ம்ருதியிருப்பதாலும், 1, 3, 5, 7, 9ஆவது தினங்களில் ஜலத்தில் ஸ்நாநம் செய்து திலோதக தாநம் செய்யவும்

என்று விஷ்ணு புராண வசனமிருப்பதாலும், ப்ரேதனுக்குத் தாஹசாந்தியை விசேஷமாகச் செய்ய அபேக்ஷித்தால், ப்ரதி தினமும் ஏகோத்தர வ்ருத்தியாய் உதக தானம் செய்யப்பட வேண்டும். ஒவ்வொரு தினத்திலும் உதகாஞ்ஜலி தானம் செய்ய வேண்டும் என்று ப்ரசேதஸ்ஸின் ஸ்ம்ருதி உள்ளது என்று.

एकोत्तरवृद्ध्या श्राद्धमपि कर्तव्यमित्युक्तं श्रीधरीये – श्राद्धमेकोत्तरं वृद्ध्या कर्तव्यं तु दिने दिने । आऽवसानाद्बलीनां तु द्विगुणं प्रत्यहं परे इति । एकोत्तरं यथा भवति तथा वृद्ध्या बलीनामवसानपर्यन्तं श्राद्धं कर्तव्यम् । परे-अन्ये प्रत्यहं जलाञ्जलिभ्यो द्विगुणं देयं इत्याहुरिति शेषः ।

ஏகோத்தர வ்ருத்தியாய், ச்ராத்தமும் செய்யப்பட வேண்டும் என்றுள்ளது ச்ரீதரீயத்தில் :- பலிகள் முடியும் வரையில், ப்ரதி தினமும் ஒவ்வொன்று அதிகமாக ச்ராத்தமும் செய்யப்பட வேண்டும். சிலரோவெனில், ஜலாஞ்ஜலியைவிட இரண்டு மடங்காக ச்ராத்தம் செய்ய வேண்டும் என்கின்றனர்.

स्मृत्यन्तरेऽपि – एकोत्तरं यथाशक्ति भुक्तिं दद्याद्दिने दिने । दशकं वा शतं वाऽपि सहस्रं वा सहेमकम् ।। देयं विप्रस्य तत्पुत्रैर्यथालाभं यथाविधि इति । अत्र पुत्रैरिति संस्कर्तॄणामुपलक्षणम् । यस्तु संस्कर्ता स एवैकोत्तरवृद्धिश्राद्धं कुर्यात् । शक्तौ सत्यां पक्षान्तरं द्रष्टव्यम् । एतच्चैकोत्तरवृद्धिश्राद्धं पिण्डबलिप्रदानानन्तरं कर्तव्यम् । यावदाशौचं प्रत्यहमेकमेव तिलाञ्जलिं दद्यादित्याह याज्ञवल्क्यः – सप्तमाद्दशमाद्वाऽपि ज्ञातयोऽभ्युपयन्त्यपः । अपनः शोशुचदघ मनेन पितृदिङ्मुखाः । सकृत् प्रसिञ्चत्युदकं नामगोत्रेण वाग्यताः इति । ब्राह्मपुराणेऽपि – नामगोत्रे समुच्चार्य प्रेतस्तृप्यत्विति ब्रुवन् । गर्ते सकृत् प्रसिञ्चेयुस्तिलपूर्णं जलाञ्जलिम् इति ।

**மற்றொரு ஸ்ம்ருதியிலும்** :- "ப்ரதி திநமும், ஏகோத்தர வ்ருத்தி ப்ரகாரமாய் ச்ராத்தம் செய்யவும். அல்லது பத்து, நூறு, ஆயிரம் ச்ராத்தங்களை ஸ்வர்ணத்துடன் ப்ராஹ்மணனுக்கு, கிடைத்த மட்டில் விதிப்படி புத்ரர்கள் கொடுக்கலாம்". இதில் புத்ரர்கள் என்றது ஸம்ஸ்காரம் செய்தவர்களைச் சொல்வதாகும். எவன் ஸம்ஸ்காரம் செய்தவனோ அவனே ஏகோத்தர வ்ருத்தியாய் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். சக்தியிருந்தால், ப்ரகாராந்தரத்தையும் செய்யலாம். இந்த ஏகோத்தர வ்ருத்தி ச்ராத்தத்தை, பிண்டபலி ப்ரதாநத்திற்கப் பிறகு செய்ய வேண்டும். ஆசௌசமுள்ளவரையில் ப்ரதி திநமும் ஒரே திலோதகாஞ்ஜலி தாநத்தைச் சொல்லுகிறார் **யாஜ்ஞவல்க்யர்** :- ஏழாவது, அல்லது பத்தாவது தினத்திற்குள் ஜ்ஞாதிகள், (ஸபிண்ட ஸமோநோதகர்கள்) 'அபநச்சோசுசதகம் என்ற மந்த்ரத்தால் தெற்கு நோக்கியவர்களாய் ஸ்நானம் செய்ய வேண்டும். மௌனிகளாய், நாம கோத்ரங்களைச் சொல்லி ஒரு முறை ஜலாஞ்ஜலி தாநம் செய்ய வேண்டும். **ப்ராஹ்ம புராணத்திலும்** :- நாம கோத்ரங்களைச் சொல்லி, 'ப்ரேதஸ்த்ருப்யது' என்று சொல்லி, குண்டத்தில் எள்ளுடன் கூடிய ஜலாஞ்ஜலியை ஒரு தடவை விட வேண்டும்.

पक्षान्तरमप्युक्तं तत्रैव – यद्वा शताञ्जलीन् दद्यात् प्रथमेऽह्न्येकमञ्जलिम् । द्वितीये त्रीनञ्जलींश्च तृतीये पञ्च सप्त च ॥ चतुर्थे पञ्चमदिने नव दद्याच्च षष्ठके । सप्तमे चाष्टमे चापि दद्यादेकादशाञ्जलीन् । त्रयोदशाञ्जलीन् दद्यात् नवमे तु तथा दिने । दद्याच्च सप्तदशकान् दशमेऽह्न्येकविंशकान् । सप्तत्यञ्जलयः केचित् त्रीणि सप्त तु पञ्च च इति । आश्वलायनः – सकृदुन्मज्ज्यै-काञ्जलिमुत्सृज्य तस्य गोत्रनामनी गृहीत्वोत्तीर्य इति । सङ्ग्रहेऽपि – सपिण्डा ज्ञातयस्त्रिस्त्रिरेकैकोत्तरमग्निदः । समानोदास्तर्पयन्ति

नित्यमेकैकमञ्जलिम् इति । पैठीनसिः – दक्षिणामुखस्त्रीनुद-काञ्जलीन्निनयेच्छवदाहप्रभृत्येकादशेऽह्नि विरमेत् इति ।

மற்ருெரு பக்ஷமும் சொல்லப்பட்டுள்ளது அவ்விடத்திலேயே :- "அல்லது 100 ஜலாஞ்ஜலிகளைக் கொடுக்கலாம். 1-ஆவது நாளில் 1 அஞ்ஜலி, 2-ஆவது நாளில் 3, 3ஆவது நாளில் 5, 4-ஆவது நாளில் 7, 5-ஆவது நாளில் 9, 6-ஆவது நாளில் 11. 7,8-ஆவது நாட்களில் 13, 13. 9ஆவது நாளில் 17. 10-ஆவது நாளில் 21. ஆக மொத்தம் 100 அஞ்ஜலிகள் என்று. அல்லது 70 அஞ்ஜலிகள் மொத்தம் என்று சிலர். அந்தப் பக்ஷத்தில் ப்ரதி தினம் 7 அஞ்ஜலிகள். சிலர் ப்ரதி தினம் மூன்று, அல்லது ஏழு, அல்லது ஐந்து என்கின்றனர். **ஆச்வலாயனர்** :- 'ஒரு தடவை முழுகி, ப்ரேதனின் நாம கோத்ரங்களைச் சொல்லி ஒரு முறை ஜலாஞ்ஜலி தாநம் செய்து கரையேறி' என்ருர். **ஸங்க்ரஹத்திலும்** :- ஸபிண்டர்களான ஜ்ஞாதிகள் மும்மூன்று தடவை ஜலாஞ்ஜலி தாநம் செய்ய வேண்டும். ஸம்ஸ்கர்தாவானவன் ஒவ்வொரு நாளிலும் ஒவ்வொரு அஞ்ஜலி அதிகமாகவும், ஸமாநோதகர்கள் ப்ரதி தினம் ஒவ்வொரு அஞ்ஜலியாகவும் தர்ப்பணம் செய்யவும். **பைடீநஸி** :- தெற்கு நோக்கியவனுய் மூன்று ஜலாஞ்ஜலிகளை விடவேண்டும், சவதாஹ தினம் முதல். 11-ஆவது நாளில் நிறுத்த வேண்டும்.

अत्र तिलोदकसङ्ख्या यथास्वगृह्यं यथाकुलाचारं व्यवस्थापनीया । सपिण्डानां त्र्यहात्तिलोदकसमापने, प्रथमदिनाद्यष्टमदिनपर्यन्तोदकमष्टमदिने दत्वा नवमदिने दशमदिने च तत्तद्दिनोदकं दद्यात्, तथैवाष्टमदिनपर्यन्तं वासोदकं पिण्डं चाष्टमदिने कृत्वा नवमदशमयोस्तत्तद्दिनवासोदकं पिण्डं च दद्यात् । पितृमेधसारे – दशाहान्तस्त्र्यहतर्पणे, अष्टमे द्विपञ्चाशत् नवमे ह्येकादश दशमे द्वादशाञ्जलीनष्टमेऽष्टौ पिण्डान् नवमदशमयोरेकैकं दद्यात् इति । अतिक्रान्ते दशाहे ज्ञातीनां त्र्यहादुदकदाने व्यवस्था

दर्शिता तत्रैव– द्वादशाद्यदिवसे, द्वितीये त्रिंशत्, तृतीये त्रयस्त्रिंशदुदकाञ्जलीन् दद्यात्, आद्येऽह्नि कर्ता त्रीन् पिण्डान् द्वितीये चतुरः तृतीये त्रीन् द्वयोर्द्वे द्वे नवश्राद्धे तृतीयेऽह्न्येकोद्दिष्टाहे चैकैकं नवश्राद्धं दद्यात् इति ।

இங்கே திலோதகக் கணக்கில் அவரவர் தம் தமது க்ருஹ்யத்திற் சொல்லியபடியும், குலாசாரப்படியும் வ்யவஸ்தையைச் செய்து கொள்ளவும். ஸபிண்டர்கள் மூன்று நாட்களில் திலோதக ஸமாப்தி செய்யும் பக்ஷத்தில், முதல் நாள் முதற்கொண்டு எட்டாவது நாள்வரையிலுள்ள உதகங்களை 8-ஆவது நாளில் கொடுத்துவிட்டு, 9-ஆவது நாளிலும், 10-ஆவது நாளிலும் அந்தந்தத் தினத்திற் கொடுக்க வேண்டிய உதகத்தையும் கொடுக்க வேண்டும். அப்படியே 8-ஆவது நாள் வரையிலுள்ள வாஸோதகங்களையும், பிண்டங்களையும் 8-ஆவது நாளில் கொடுத்து விட்டு, 9-ஆவது, 10-ஆவது தினங்களில் அந்தந்தத் தினத்திற் கொடுக்க வேண்டிய வாஸோதகத்தையும் பிண்டத்தையும் கொடுக்கவும். பித்ருமேதஸாரத்தில் :- பத்து நாட்களுள், 3-நாட்களில் தர்ப்பணம் செய்யம் விஷயத்தில், 8-ஆவது நாளில் 52, 9-ஆவது நாளில் 11, 10-ஆவது நாளில் 12, என்று ஜலாஞ்ஜலிகளையும், 8-ஆவது நாளில் 8 பிண்டங்களையும் 9, 10-ஆவது நாட்களில் ஒவ்வொரு பிண்டத்தையும் கொடுக்கவும். பத்து நாட்கள் சென்ற பிறகு, ஜ்ஞாதிகள் 3-நாட்களில் உதக தானம் செய்யும் விஷயத்தில் வ்யவஸ்தை சொல்லப்பட்டுள்ளது. பித்ருமேத ஸாரத்திலேயே :- "முதல்நாளில் 12, 2-வது நாளில் 30, 3-ஆவது நாளில் 33 - உதகாஞ்ஜலிகளைக் கொடுக்கவும். முதல் நாளில் கர்த்தா 3-பிண்டங்களையம், 2-ஆவது நாளில் 4-பிண்டங்களையும், 3-ஆவது நாளில் 3-பிண்டங்களையும் கொடுக்கவும். 1-ஆவது 2-ஆவது நாட்களில் இரண்டு இரண்டு நவச்ராத்தங்களையும், 3-ஆவது நாளிலும், 11-ஆவ்து நாளிலும் ஒவ்வொரு நவச்ராத்தத்தையும் செய்யவும்" என்று.

श्रीधरीये – दशाहान्तः सपिण्डानां त्र्यहात्तु तिलतर्पणे । अष्टमादिद्विपञ्चाशदेकादशद्वादशाञ्जलीन् । द्वादश प्रथमेऽह्न्येव द्वितीये त्रिंशदुच्यते । त्रयस्त्रिंशत्तृतीयेऽह्नि निर्गते दशमेऽहनि इति । सङ्ग्रहेऽपि – अग्निर्वेदास्त्रयः पिण्डास्तथा वासोदकं दश । आदित्यस्त्रिंशदित्येवं त्रयस्त्रिंशत्तिलोदकम् इति । पारस्करः – प्रथमे दिवसे देयास्त्रयः पिण्डाः समाहितैः । द्वितीये चतुरो दद्यादस्थिसञ्चयनं ततः । त्रींस्तु दद्यात्तृतीयेऽह्नि वस्त्रादिक्षालनं ततः । एकोद्दिष्टं चतुर्थेऽह्नि सापिण्ड्यं च ततः परम् इति ।

*ச்ரீதரீயத்தில் :- 10-தினங்களுக்குள், ஸபிண்டர்கள் மூன்று நாட்களில் தர்ப்பணம் செய்தால், 8-வது நாள் முதல் மூன்று நாட்களில் முறையே 52,11,12 உதகாஞ்ஜலிகளைக் கொடுக்கவும். 10-நாட்களுக்குப் பிறகானால், 12,30,33, என்று கணக்கிட்டு 3-நாட்களில் கொடுக்கவும். ஸங்க்ரஹத்திலும் :- '3,4,3, பிண்டங்கள், 10 வாஸோதகங்கள், 12,30,33 திலோதங்கள்' என்றுள்ளது. பாரஸ்கரர் :- முதல்நாளில் 3-பிண்டங்களைக் கொடுக்க வேண்டும். 2-ஆவது நாளில் நான்கு பிண்டங்களைக் கொடுக்கவும். பிறகு அஸ்தி ஸஞ்சயநம். 3-ஆவது நாளில் 3-பிண்டங்களைக் கொடுக்கவும். பிறகு வஸ்த்ரம் முதலியவைக்குச் சுத்தி செய்வித்தல். 4-ஆவது நாளில் ஏகோத்திஷ்டம். அதற்குப் பிறகு ஸபிண்டீகரணம்.*

अखण्डादर्शेऽपि – असपिण्डो यदि दहेत् द्वितीये त्वस्थिसञ्चयः । तृतीये तूदकं दत्वा चतुर्थे श्राद्धमाचरेत् । एकोद्दिष्टं चतुर्थेऽह्नि मरणात्तु विधीयते । सपिण्डीकरणं यत्तु द्वादशेऽह्नि विधीयते । तत्पञ्चमदिने कुर्यादसपिण्ड इति स्थितिः इति ॥

*அகண்டாதர்சத்திலும் :- அஸபிண்டன் தஹித்தால், 2-ஆவது நாளில் அஸ்தி ஸஞ்சயநம். 3-ஆவது நாளில் உதக தாநத்தைச் செய்து, 4-ஆவது நாளில் ச்ராத்தத்தைச்*

செய்யவும். ஏகோத்திஷ்ட ச்ராத்தம் மரண தினத்தினின்றும் 4-ஆவது தினத்தில் விதிக்கப்படுகிறது. 12-ஆவது நாளில் விதிக்கப்படும் ஸபிண்டீகரணத்தை அஸபிண்டன் 5-ஆவது தினத்தில் செய்ய வேண்டும் மென்பது நிர்ணயம்.

एतच्च पक्षिण्याशौचिकर्तृकदाहे वेदितव्यम् । त्र्यहं तु योनिबन्धूनामाशौचं दहनादिषु इति तेषां संस्कर्तृत्वे त्रिरात्राशौचस्मरणात्, यावदाशौचं प्रेतस्योदकं पिण्डं च दद्यादिति विष्णुस्मरणाच्च । अत्र च उदकसङ्ख्या आदित्यस्त्रिंशदित्येव त्रयस्त्रिंशत्तिलोदकम् इत्युक्तप्रकारैव कर्तव्या । यत्तु – असपिण्डो यदि दहेद्द्वितीये त्वस्थिसञ्चयः । एकोद्दिष्टं तृतीयेऽह्नि मरणात्तु विधीयते' इति, एतत् बन्धुकर्तृकसंस्कारविषयम् । सञ्चयन-मुदकस्याप्युपलक्षणम् । तच्च द्वितीयदिने पञ्चसप्तत्यात्मकम् ।

இந்த விஷயம், பக்ஷிண்யாசௌசி கர்த்தாவாகும் விஷயத்தில் என்று அறியவும். ''யோநிபந்துக்களுக்குத் தஹநம் முதலியவைகளைச் செய்தால் 3-நாளாசௌசம்'' என்று, அவர்களுக்கு ஸம்ஸ்கர்த்ருத்வம் ஏற்பட்டால் 3-நாளா சௌசம் சொல்லப்படுவதாலும், 'ஆசௌசமுள்ள வரையில் உதக பிண்டதானங்களைச் செய்யவும்' என்று விஷ்ணு ஸ்ம்ருதியிருப்பதாலும். இவ்விஷயத்திலும் உதகக் கணக்கு, 12,30,33 என்று முன் சொல்லியபடியே செய்யப்பட வேண்டும். ஆனால் - ''அஸபிண்டன் தாஹகனானால், 2-ஆவது நாளில் அஸ்தி ஸஞ்சயநம், 3-ஆவது நாளில் ஏகோத்திஷ்டம் விதிக்கப்படுகிறது'' என்ற வசனமுள்ளதே எனில், இது பந்து கர்த்தாவாகிச் செய்த ஸம்ஸ்காரத்தைப் பற்றியதாம். இங்கு ஸஞ்சயநமென்றது உதக தாநத்திற்குமுபலக்ஷணம். அதுவும் 2-ஆவது நாளிலேயே 75, திலோதகதான ரூபம்.

मातामहादिसंस्कारे दौहित्रादीनां दशाहमाशौच मुदकक्रिया च, 'पौत्रदौहित्रयोर्लोके विशेषो नास्ति धर्मतः' इत्यादिस्मरणात् ।

असंस्कर्तॄणां समानोदकानां त्रिरात्राशौचिनां त्र्यहादेव उदकसमापनम्, तच्च स्वाशौचकाल एव कर्तव्यम्। स्वाशौचकाले अकृतोदकस्य तु समानोदकस्य पश्चादुदकदानेऽप्याशौच-मनुष्ठेयमित्याहुः। उदकसङ्ख्या च आदित्यस्त्रिंशत् इत्युक्तप्रकारेण सपिण्डवदेवेति केचित्।

*மாதாமஹன் முதலியவரின் ஸம்ஸ்காரத்தில், தௌஹித்ரன் முதலியவர்க்கு 10-நாளா சௌசமும், உதக க்ரியையுமுண்டு. 'பௌத்ரனுக்கும் தௌஹித்ரனுக்கும் தர்மத்தால் பேதமில்லை' என்பது முதலிய ஸ்ம்ருதி உள்ளது. ஸம்ஸ்காரம் செய்யாத ஸமானோதகர்களான த்ரிராத்ரா சௌசிகளுக்கு 3-நாட்களிலேயே உதக ஸமாபநம். அதையும் தனது ஆசௌச காலத்திலேயே செய்ய வேண்டும். ஸ்வாசௌச காலத்தில் உதக தாநம் செய்யாமல் பிறகு உதக தாநம் செய்தாலும் ஆசௌசமனுஷ்டிக்க வேண்டும் என்கின்றனர். உதகக் கணக்கும், '12,30,33' என்று முன் சொல்லியபடி ஸபிண்டனுக்குப் போலவே என்கின்றனர் சிலர்.*

स्मृत्यन्तरे तु – सकृत् प्रसिञ्चन्त्युदकं सप्तत्यञ्जलयः क्वचित्। यद्वा शताञ्जलीन् दद्यात् इति पक्षत्रयमाश्रित्य सोदकाना-मुदकदानमुक्तम्, त्रिरात्राशौचिनो दद्युः प्रथमेऽह्न्यञ्जलित्रयम्। द्वितीये चतुरो दद्यात् तृतीये त्र्यञ्जलींस्तथा। सप्तत्यञ्जलिपक्षे तु प्रथमे च द्वितीयके। एकैकविंशतिं दद्यात्तृतीये शेषतश्शुचिः। त्रिरात्राशौचिनो दद्युः प्रथमे त्रिंशदञ्जलीन्। चत्वारिंशद्द्वितीयेऽह्नि त्रिंशद्दद्युस्ततः शुचिः इति।

***மற்றொரு ஸ்ம்ருதியிலோவெனில் :-*** *ஒரு தடவை உதக தாநம் செய்யலாம். சிலரின் பக்ஷத்தில் 70 அஞ்ஜலிகள் சொல்லப்பட்டுள்ளன, அல்லது 100-அஞ்ஜலிகளைக் கொடுக்கலாம். என்ற மூன்று பக்ஷங்களை ஆச்ரயித்து*

ஸமாநோதகர்களுக்கு உதக தாநம் சொல்லப் பட்டுள்ளது. 'த்ரிராத்ரா செளசிகள், முதல் நாளில் 3, 2-ஆவது நாளில் 4, 3-ஆவது நாளில் 3 என்ற கணக்குப்படி உதகதாநம் செய்யலாம். 70-அஞ்ஜலி பக்ஷத்திலோவெனில் 1,2, நாட்களில் 20, 20, என்றும், 3-ஆவது நாளில் 30 என்றும் செய்யவும். பிறகு சுத்தி. 3-நாளா செளசிகள், முதல் நாளில் 30, 2-ஆவது நாளில் 40, 3-ஆவது நாளில் 30 என்று செய்யலாம், பிறகு சுத்தி, என்றுள்ளது.

समानोदकानां प्रेतनिर्हारे विशेष उक्तो भृगुणा – शावे च सूतके शुद्धिस्त्र्यहादुदकदायिनाम् । शववाहं तु कुर्युश्चेद्दशाहान्ता भवेत् क्रिया इति । स्मृत्यन्तरेऽपि – समानोदकाः कुर्वीरन् संस्कारं दशरात्रतः । दशाहान्तेन शुद्धिः स्यादित्याह भगवान् भृगुः इति । माण्डव्यः – सपिण्डो वाऽसपिण्डो वा कर्ता चेद्वपनं स्मृतम् । आशौचं दशरात्रं स्यात् पञ्चसप्ततितर्पणम् । आशौचं तु त्रिरात्रं स्यादन्यथा वपनं न हि । त्रिंशत्तिलोदकं दद्यात् समानोदकसंस्थितौ इति । असपिण्डः - समानोदकः । अन्यथा - संस्काराकरण इत्यर्थः ।

ஸமாநோதகர்களுக்கு சவ நிர்ஹரணத்தில் ஆசெளச பேதம் சொல்லப்பட்டுள்ளது ப்ருகுவினால் :- ஸமாநோதகர்களுக்கு ம்ருதியிலும் ஜநநத்திலும் 3-நாட்களுக்குப் பிறகு சுத்தி. சவத்தை வஹித்தார்களாகில் 10-நாளாசெளசம். மற்றொரு ஸ்ம்ருதியிலும் :- ஸமாநோதகர்கள் ஸம்ஸ்காரம் செய்தால் 10-நாட்களில் ப்ரேதக்ரியையைச் செய்யவும். 10 நாட்களுக்குப் பிறகு சுத்தியுண்டாகும், என்றார் பகவான் ப்ருகு. மாண்டவ்யர் :- ஸபிண்டனாகினும், ஸமாநோதகனாகினும், ஸம்ஸ்காரம் செய்தால் அவனுக்கு வபநம் விதிக்கப்படுகிறது. ஆசெளசம் 10-நாளாகும். 75-தர்ப்பணம். ஸமாநோதகன் ஸம்ஸ்காரம் செய்யாவிடில் 3-நாளா செளசம், வபநமில்லை, ஸமாநோதகனின் ம்ருதியில் 30-திலோதகங்களைக் கொடுக்கவும்.

तिलपरिमाणमुक्तं विष्णुपुराणे – तिलैः सप्ताष्टभिर्वाऽपि समवेतं जलाञ्जलिम् । भक्तिनम्रः समुद्दिश्य भुव्यस्माकं प्रदास्यति इति । अज्ञातिभिरपि क्वचिदुदकदानं कर्तव्यम् । तदाह याज्ञवल्क्यः – एवं मातामहाचार्यप्रेतानां चोदकक्रिया । कामोदकं सखिप्रत्तास्वस्रीयश्वशुरर्त्विजाम् इति ॥ प्रत्ता - परिणीता दुहितृभगिन्यादिः । अपुत्राणां मातामहादीनां सपिण्डवदुदकदानं नित्यं कार्यम् । सख्यादीनां तु कामतः, न नित्यतया, अकरणे प्रत्यवायाभावात् । स्मृत्यन्तरे – पतितस्योदकं कार्यं सपिण्डैर्बान्धवैर्बहिः इति । ग्रामाद्बहिरेकदिने कार्यम् ।

எள்ளுக்கு அளவு சொல்லப்பட்டுள்ளது விஷ்ணு புராணத்தில் :- 'ஏழு அல்லது எட்டுத்திலங்களுடன் கூடிய ஜலாஞ்ஜலியை, பக்தியால் வணங்கியவனாய் நம்மை உத்தேசித்துப் பூமியில் கொடுக்கப் போகிறான்' என்று. ஜ்ஞாதிகளல்லாதவரும் சிலர் விஷயத்தில் உதகதானத்தைச் செய்ய வேண்டும். அதைச் சொல்லுகிறார் யாஜ்ஞவல்க்யர் :- ''ஸபிண்ட ஸமானோதகர்களுக்குப் போல், இறந்த மாதாமஹன், ஆசார்யர்கள் இவர்களுக்கும் உதகதானம் செய்ய வேண்டும். மித்ரன் ப்ரத்தைகள், பகிநீபுத்ரன், மாமனார், ருத்விக்குகள் இவர்களுக்குக் காமோதகத்தைக் கொடுக்க வேண்டும்'' என்று. ப்ரத்தை - விவாஹமாகிய பெண், பகிநீ முதலியவர்கள். புத்ரனில்லாத மாதாமஹன் முதலியவர்க்கும் ஸபிண்டர்களுக்குப்போல் உதகதானத்தை அவச்யம் செய்ய வேண்டும். மித்ரன் முதலியவர்க்கோவெனில், காமத்தால் - இச்சையிருந்தால் உதகதானம் செய்யலாம். நித்யமல்ல. செய்யாவிடில் தவறல்ல. (மாதாமஹாதிகளுக்குச் செய்யாவிடில் தவறு). ஒரு ஸ்ம்ருதியில் :- ''பதிதனுக்கு ஸபிண்டர்களும் பந்துக்களும் வெளியில் உதகதானத்தைச் செய்ய வேண்டும்''. க்ராமத்திற்கு வெளியில் ஒரே தினத்தில் செய்ய வேண்டும்.

## पिण्डदानविधिः

तीरकुण्डतर्पणानन्तरकृत्यमुक्तं पितृमेधसारे – अथोदकुम्भमाहृत्य कर्ता गृहद्वारे कुण्डेऽश्मानं निधाय प्रेतमावाह्य सङ्कल्प्य सव्यज्ञान्वाच्य दक्षिणामुखस्त्रिर्वासोदकं दत्वा दीपं प्रज्वाल्य सङ्कल्प्य कुण्डसन्निधौ दर्भेषु मार्जयतां मम प्रेत इति, प्रेतेति वा सकृदपो मार्जयित्वा, कुक्कुटाण्डप्रमाणं मुष्टिप्रमाणं वा फलमूलशाकयुक्तं तिलमिश्रं पिण्डममुकगोत्रामुकशर्मन् प्रेत इमं पिण्डमुपतिष्ठेति प्रेताय पिण्डं बलिं च दत्वा, पूर्ववन्मार्जयित्वा पात्रसंक्षालनतोयेत त्रिः प्रसव्यं परिषिच्य तमप्सु विसर्जयेत्। अपि वा सङ्कटेषु तीरकुण्डतर्पणान्ते पिण्डं दद्यात्। एवमन्वहं पिण्डमेकैकं दद्या दाश्राद्धात्तीरकुण्डपाषाणे वा पिण्डं दद्यादिति केचित् इति।

### பிண்டதானவிதி

தீர குண்டத்தில் தர்ப்பணம் செய்தபிறகு செய்ய வேண்டியது சொல்லப்பட்டுள்ளது. பித்ருமேதஸாரத்தில் :- "பிறகு ஜலகும்பத்தை எடுத்துக் கொண்டு, கர்த்தா, வீட்டின் வாயிற்படியின் ஸமீபத்திலுள்ள குண்டத்தில் கல்லை வைத்து, ப்ரேதனை ஆவாஹநம் செய்து ஸங்கல்பித்து, இடது முழங்காலைக் கவிழ்த்து, தெற்கு நோக்கியவனாய் மூன்று தடவை வாஸோதகத்தைக் கொடுத்து, தீபத்தை ஏற்றி ஸங்கல்பித்து, குண்ட ஸந்நிதியில் தர்ப்பங்களில், மார்ஜயதாம் மம.......... ப்ரேத: (ஆண்) அல்லது 'ப்ரேதா' (பெண்) என்று ஒரு தடவை ஜலத்தை விட்டு, கோழிமுட்டையளவு, அல்லது முஷ்டி (பிடி) அளவுள்ளதும், பழம், கிழங்கு, சாகம், எள் இவைகளுடன் கூடியதுமான பிண்டத்தை ....... கோத்ரமுள்ள ......... சர்மாவுள்ள ப்ரேதனே ! இந்தப் பிண்டத்தைப் பெற்றுக்கொள் என்று ப்ரேதனின் பொருட்டு, பிண்டத்தையும் பலியையும் கொடுத்து, முன்போல் ஜலத்தைவிட்டு, பாத்ரத்தை அலம்பிய

ஜலத்தால் மூன்று முறை அப்ரதக்ஷிணமாய்ச் சுற்றி, பிண்டத்தை ஜலத்தில் போட வேண்டும். அல்லது, ஸங்கட காலங்களானால், நதீதீர குண்ட தர்ப்பணத்தின் முடிவில் பிண்டதானம் செய்யவும். இவ்விதம் ப்ரதி தினம் ஒவ்வொரு பிண்டத்தைக் கொடுக்கவும். ஏகோத்திஷ்டம் வரையில். தீரகுண்ட பாஷாணத்திலேயே பிண்டதானம் செய்யலாமென்று சிலர்''.

अत्र साङ्ख्यायनः – गृहद्वारे वामपार्श्वे कुण्डं तदुपर्यश्मानं निधाय कनिष्ठपूर्वाः स्त्रीप्रथमा वासोदकं पीडयेयुः इति। अत्र त्रिर्वासोदकं देयं न तिलोदकं विध्यभावात्, तथा शिष्टाचाराच्च। यद्यपि – नित्यं मृतस्य पुत्रैस्तु भार्यया च यथाविधि। दशाहान्तं द्विरावृत्त्या कर्तव्या चोदकक्रिया इत्याश्वलायनस्मृतिरस्ति, तथाऽपि शिष्टाचाराभावादुपेक्ष्यम्।

இவ்விஷயத்தில் ஸாங்க்யாயனர் :- க்ருஹத்தின் வாயிற்படியின் ஸமீபத்தில் இடது பக்கத்தில் குண்டம் செய்து அதன்மேல், பாஷாணத்தை வைத்து, சிறியவர்களையும், ஸ்த்ரீகளையும் முன்னிட்டு, மூன்று முறை வஸ்த்ர ஜலத்தைப் பிழிய வேண்டும். இங்கு மூன்று தடவை வாஸோதகம் மட்டில் கொடுக்கப்பட வேண்டும். திலோதகமில்லை. அதற்கான விதியில்லை. அவ்விதம் சிஷ்டாசாரமுமில்லை. ஆனாலும், ''ம்ருதனின் புத்ரர்களும் பார்யையும் விதிப்படி பத்து நாள் வரையில் இருமுறை உதகதானம் செய்ய வேண்டும்'' என்று ஆச்வலாயன ஸ்ம்ருதி இருக்கின்றது, அப்படியானாலும் சிஷ்டாசாரமில்லாததால் அது உபேக்ஷிக்கத்தக்கது.

अखण्डादर्शे – ततो गृहं समागम्य चरुं कुर्यात् स्वयं ततः। द्विः प्रक्षाल्य तु तद्द्रव्यं कर्तव्यं श्रवणं ततः। आदाय दक्षिणाग्रांस्तु दर्भान् संस्तीर्य विन्यसेत् इति। शङ्खः – दूर्वां प्रवालमग्निं वृषभं चालभ्य गृहद्वारे प्रेताय पिण्डं दत्वा पश्चात् प्रविशेयुः इति।

श्रीधरीये – वामपार्श्वे गृहद्वारे शिलास्तिस्रो निधाय च । तासु वस्त्राणि संपीड्य सायं प्रातर्बलिं हरेत् इति । वामपार्श्वे गृहस्याभिमुखं गतस्येति कैश्चित् व्याख्यातम् ॥

**அகண்டாதர்சத்தில் :-** பிறகு க்ருஹத்திற்கு வந்து, சருவைச் செய்யவும். தானுகவே சருத்ரவ்யத்தை இருமுறை அலம்பிப் பிறகு பாகம் செய்யவும். தர்ப்பங்களை எடுத்து, தெற்கு நுனியாய்ப் பரத்தி, பிண்டத்தை வைக்கவும். **சங்கர் :-** அறுகு, பவழம், அக்னி, காளை இவைகளை ஸ்பர்சித்து, க்ருஹத்வாரத்தில், ப்ரேதனுக்குப் பிண்டதாநம் செய்து பிறகு க்ருஹத்தினுள் நுழைய வேண்டும். **ச்ரீதரீயத்தில் :-** "க்ருஹத்வாரத்தில் இடது புறத்தில், மூன்று பாஷாணங்களை வைத்து, அவைகளில் வஸ்த்ரங்களைப் பிழிந்து, மாலையிலும், காலையிலும் பலியைக் கொடுக்கவும்". இடது புறத்தில் என்பதற்கு, வீட்டில் நுழைந்தவனுக்கு இடது புறத்தில் என்ற சிலரால் வ்யாக்யாநம் செய்யப்பட்டது.

तथा च स्मृत्यन्तरम् – द्वारस्य दक्षिणे पार्श्वे बहिः कुर्यादिथावटम् । एकमश्मानमादध्यादिष्टकां वाऽग्रजन्मनाम् इति । बहिः गृहाद्बहिः अङ्गण इति यावत् । गृहद्वारवामपार्श्वे दक्षिणपार्श्वयोर्विकल्प इत्यन्ये ॥ शिलात्रयस्थापनं बोधायनीयानां नियतम्, तेषां शिलात्रयस्थापनस्य सायं प्रातर्बलिदानस्य च विधानात् । इतरेषां, एकमश्मानमादध्यात्, शिलास्तिस्रो निधाय च इत्यनयोर्विकल्पः । अङ्गिराः – बहिः पिण्डप्रदानं स्यात् कर्षूं खात्वा विधानतः । गन्धमाल्योदकेनार्च्य दद्याद्दर्भेष्ववाङ्मुखः इति ।

**மற்றொரு ஸ்ம்ருதி :-** வாயிலின் வலதுபக்கத்தில் வெளியில் குழியைச் செய்யவும். ஒரு பாஷாணத்தையாவது, செங்கல்லையாவது அதில் வைக்கவும், ப்ராஹ்மணர்களுக்கு, வெளியில் - வீட்டின் வெளியில், அங்கணத்திலென்பது பொருள். வீட்டின்

வாயிலின் இடதுபுறம், வலதுபுறம் இவைகளுக்கு விகல்பமென்று மற்றவர் சொல்லுகின்றனர். 3-சிலேகளே வைப்பது, போதாயநீயர்களுக்கு நித்யம், அவர்களுக்கு 3-சிலேகளே வைப்பதும், மாலே காலேகளில் பலிதானமும் விதிக்கப்பட்டிருக்கிறது. மற்றவர்களுக்கு 'ஒரு சிலேயை வைக்கவும்' '3-சிலேகளே வைத்து' என்ற வசநங்களுக்கு விகல்பம். அங்கிரஸ் :- வெளியில் குண்டத்தைச் செய்து, விதிப்படி பிண்டதாநத்தைச் செய்யவும். கீழ் நோக்கியவனுய், கந்தம், புஷ்பம், ஜலம் இவைகளால் பூஜித்து, தர்ப்பங்களில் கொடுக்கவும்.

ब्रह्मपुराणेऽपि – गृहाद्बहिः शुचौ देशे गोमयेनोपलेपिते । लौकिकाग्निं प्रतिष्ठाप्य स्नात्वा पात्रेण तेजसा । मृन्मयेनापि कर्तव्यं श्रपणं पितृयज्ञवत् । अभिघार्य तमुद्वास्य पुनरप्यभिघार्य च । पाषाणं पुरतः स्थाप्य वाग्यतो दक्षिणामुखः । दक्षिणाग्रान् कुशांस्तीर्य दद्यात्तेषूदकं सकृत् । नामगोत्रे समुच्चार्य पिण्डं दद्यादमन्त्रकम् । पुनस्तत्रोदकं दद्याद्गन्धपुष्पैरथार्चयेत् । धूपदीपौ तथा दद्यादेवं दशादिनेषु च । अशक्तौ प्रथमेऽह्नि स्यात् पञ्चमे दशमेऽपि वा । त्रिरात्र शौच उत्पन्ने त्रयः पिण्डा दशैव वा । उदकं पिण्डदानं च पुनरप्युदकं नयेत् । वायसेभ्यो बलिं दद्याद्वैवस्वतवरं स्मरन् । अग्नौ जले वा निक्षिप्य स्नात्वा शश्वद्गृहं व्रजेत् इति । प्रेतपिण्डव्यतिरिक्तं बलिं वायसेभ्यो दत्वा तं प्रेतपिण्डं चरुपाकाग्नौ जले वा निक्षिप्य स्नायादित्यर्थः ।

**ப்ரஹ்மபுராணத்திலும்** :- "வீட்டிற்கு வெளியில் சுத்தப்ரதேசத்தில் சாணியால் மெழுகப்பட்ட இடத்தில், லௌகிகாக்னியை வைத்து, ஸ்நாநம் செய்து, தைஜஸபாத்ரத்திலாவது, (பித்தளே முதலியது) மண் பாத்ரத்திலாவது பித்ரு யஜ்ஞத்தில் போல் சருவை ச்ரபணம் செய்து, அபிகாரம் செய்து, சருவை வெளியில் வைத்து, மறுபடி அபிகாரம் செய்து, பாஷாணத்தை

முன்னில் வைத்து, மௌனியாய், தெற்கு நோக்கியவனாய், தெற்கு நுனியாய் தர்ப்பங்களைப் பரத்தி அவைகளின்மேல் ஒரு தடவை ஜலத்தை விட்டு, ப்ரேதனின் நாமகோத்ரங்களைச் சொல்லி மந்த்ரமில்லாமல் பிண்டத்தைக் கொடுக்கவும். மறுபடி பிண்டத்தில் உதகத்தை விட்டு, கந்தபுஷ்பங்களால் அர்ச்சிக்கவும். தூபதீபங்களையும் கொடுக்கவும். இவ்விதம் பத்துத் தினங்களிலும் செய்யவும். சக்தியில்லாவிடில் முதல் நாளில் செய்யவும். அல்லது ஐந்தாவது நாளில், அல்லது 10-ஆவது நாளில் செய்யவும். 3-நாளாசௌசியானால் 3-பிண்டங்களை, அல்லது 10-பிண்டங்களைக் கொடுக்கவும். உதகம், பிண்டதானம், மறுபடி உதகத்தைவிடவும். யமனின் வரத்தை ஸ்மரித்துக் கொண்டு பலியைக் காக்கைகளுக்குக் கொடுக்கவும். அக்னியிலாவது ஜலத்திலாவது போடவும். ஸ்நாநம் செய்து பிறகு க்ருஹத்திற்குச் செல்லவும்'' என்று. ப்ரேத பிண்டத்தை தவிர்த்த பலியை காக்கைகளுக்குக் கொடுத்து, ப்ரேத பிண்டத்தை, சருபாகம் செய்த அக்னியிலாவது ஜலத்திலாவது போட்டு ஸ்நாநம் செய்ய வேண்டுமென்று பொருள்.

वैवस्वतवरश्च उत्तररामायणे भारते चोक्तः – ये च मद्विषया नाम मानवाः क्षुधिता भृशम् । त्वयि भुक्ते तु तृप्तास्ते भविष्यन्ति सबान्धवाः इति । विष्णुः – प्रेतस्योदकनिर्वापणं कृत्वा एकं पिण्डं कुशेषु दद्युर्यावदाशौचं तावत् प्रेतस्योदकं पिण्डं च दद्युः इति । विज्ञानेश्वरीये – नवभिर्दिवसैर्दद्यान्नवपिण्डान् समाहितः । दशमं पिण्डमुत्सृज्य रात्रिशेषे शुचिर्भवेत् इति । प्रत्यहमेकैक-पिण्डाभिप्रायेण पारस्करोऽपि - ब्राह्मणे दश पिण्डास्तु क्षत्रिये द्वादश स्मृताः । वैश्ये पञ्चदश प्रोक्ताः शूद्रे त्रिंशत् प्रकीर्तिताः इति ।

யமனின் வரம் உத்தர ராமாயணத்திலும் பாரதத்திலும் சொல்லப்பட்டுள்ளது - (ஓ வாயஸமே !)

எந்த மனிதர்கள் என்னிடம் வந்தவர்களாய் மிகவும் பசியுள்ளவராயிருக்கின்றனரோ அவர்களெல்லாம், நீ புஜித்தாயாகில், பந்துக்களுடன் கூடியவராய் த்ருப்தராகின்றனர். விஷ்ணு :- ப்ரேதனுக்கு உதகதானம் செய்து, ஒரு பிண்டத்தைத் தர்ப்பங்களில் கொடுக்கவும். ஆசௌசமுள்ள வரையில் உதகதானம், பிண்ட தானம் இவைகளைச் செய்ய வேண்டும். விக்ஞாநேச்வரீயத்தில் :- 9-நாளில் 9-பிண்டங்களைக் கொடுக்கவும். பத்தாவது நாளில் 10-ஆவது பிண்டத்தைக் கொடுத்து மறுநாளில் சுத்தனுக வேண்டும். ஒவ்வொரு நாளிலும் ஒவ்வொரு பிண்டமென்றபிப்ராயத்துடன், பாரஸ்கரரும் :- ப்ராஹ்மணன் விஷயத்தில் பத்துப் பிண்டங்கள். க்ஷத்ரியன் விஷயத்தில் பன்னிரண்டு. வைச்யன் விஷயத்தில் பதினைந்து. சூத்ரன் விஷயத்தில் முப்பது பிண்டங்கள் சொல்லப்பட்டுள்ளன.

स्मृतिरत्ने –प्रेतेभ्यस्तु सवर्णेभ्यः पिण्डान् दद्युर्दशैव तु इति दशपिण्डस्मरणात् प्रत्यहमेकैकपिण्डविधानाच्च एकस्मिन्नेव काले पिण्डदानम्, सायं प्रातर्बलिं हरेत् इति वचनेन सायं बल्यर्थं द्वितीयमपि पिण्डं शिष्टा आचरन्ति इति ॥ प्रचेताः – दक्षिणाग्राश्च दर्भाः स्युः स च वै दक्षिणामुखः । द्वारदेशे प्रदातव्यो न देवायतने क्वचित् । वाग्यतः प्रयतश्चैव सन्तिष्ठेत् पिण्डसन्निधौ । ततोऽवशिष्टं पिण्डस्य नद्यां तु प्रक्षिपेच्च तत् इति । शङ्खः – भूमौ माल्यं पिण्डं पानीयमुपले वा (उदकफले वा) दद्युः इति ।

ஸ்ம்ருதிரத்னத்தில் :- 'ஸவர்ணர்களான ப்ரேதர்களுக்குப் பத்து பிண்டங்களையே கொடுக்கவும்' என்று ஸ்ம்ருதியிருப்பதாலும் ப்ரதி தினம் ஒவ்வொரு பிண்டமே விதிக்கப்பட்டிருப்பதாலும், ஒரு காலத்தில் மட்டில் பிண்டதானம். 'மாலையிலும், காலையிலும் பலியைக் கொடுக்க வேண்டும்' என்ற வசனத்தால், ஸாயம்பலிக்காக இரண்டாவது பிண்டத்தையும்

சிஷ்டர்கள் செய்கின்றனர். ப்ரசேதஸ் :- தர்ப்பங்கள் தெற்கு நுனியுள்ளவைகளாயிருக்க வேண்டும். கர்த்தாவும் தெற்கு நோக்கியவனாயிருக்க வேண்டும். வாயிற்படியின் ப்ரதேசத்தில் கொடுக்கவும். தேவதா க்ருஹத்தில் ஒருகாலம் கொடுக்கக் கூடாது. மௌனியாயும், சுத்தனாயும் பிண்ட ஸந்நிதியிலிருக்கவும். பிண்டத்தின் மீதியான அன்னத்தை நதியில் போடவேண்டும். சங்கர் :- புஷ்பம், பிண்டம், ஜலம் இவைகளைப் பூமியில் கொடுக்கவும். அல்லது பாஷாணத்தின்மேல் கொடுக்கவும்.

यत्तु – प्रेतपिण्डं बहिर्दद्यात् दर्भमन्त्रविवर्जितम् इति, तदनुपनीतविषयम्, असंस्कृतानां भूमौ पिण्डं दद्यात् संस्कृतानां कुशेषु इति प्रचेतःस्मरणात् । स्मृत्यर्थसारे – कुक्कुटाण्डप्रमाणस्तु पिण्ड इत्यभिधीयते । अङ्गुष्ठ पर्वमात्रं स्यादवदानमिति स्थितिः इति । आश्वलायनः – यत्र स्युर्बहवः पिण्डास्तत्र बिल्वफलोपमाः । यत्र चैको भवेत् पिण्डस्तत्राश्वखुरसंमितः इति । स्मृत्यन्तरे – प्रायः पित्र्येषु पिण्डाः स्युर्मानेन बदरोपमाः । सर्वत्र सुदृढा हि स्युर्वर्तुलाः श्राद्धकर्मसु । प्रेतपिण्डस्तु दैर्घ्येण द्वादशाङ्गुल उच्यते । स्थौल्येन चैकपिण्डस्य सदृशः स्याद्दृढः शुभः इति । एकपिण्डस्य सदृशः - अश्वखुरसदृश इत्यर्थः ।

ஆனால் 'ப்ரேத பிண்டத்தை வெளியில் கொடுக்கவும். தர்ப்ப மந்த்ரங்கள் இல்லாமல்' என்ற வசனமுள்ளதே எனில், அது உபநயநமாகாதவர்களைப் பற்றியது. 'உபநயந மாகாதவருக்கு பூமியில் பிண்டத்தைக் கொடுக்கவும். உபநீதர்களுக்குத் தர்ப்பங்களில் கொடுக்கவும்' என்று ப்ரசேதஸ்ஸின் ஸ்ம்ருதி உள்ளது. ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில் :- கோழிமுட்டையளவுள்ளது பிண்ட மெனப்படுகிறது. அவதானமென்பது, பெருவிரலின் கணுவளவுள்ளதாயிருக்க வேண்டுமென்பது நிர்ணயம். ஆச்வலாயனர் :- எவ்விஷயத்தில் வெகு

பிண்டங்கள் சொல்லப்பட்டுள்ளனவோ அதில் பிண்டங்கள் வில்வப் பழத்தினளவுள்ளவைகளாயிருக்க வேண்டும். எதில் ஒரு பிண்டம் சொல்லப் பட்டிருக்கிறதோ அதில் பிண்டம் குதிரையின் குளம்பளவுள்ளதாயிருக்க வேண்டும். ஒரு **ஸ்ம்ருதியில் :-** அநேகமாய், பித்ரு கார்யங்களில் பிண்டங்கள் இலந்தைக் கனியளவுள்ளவைகளாயிருக்க வேண்டும். ச்ராத்த கர்மங்களெல்லாவற்றிலும் பிண்டங்கள் த்ருடமாயும் உருண்டையாயுமிருக்க வேண்டும். ப்ரேத பிண்டமோ வெனில் நீளத்தால் 12-அங்குளமளவுள்ளதாயிருக்க வேண்டும். பருமனில் ஒரு பிண்டத்தின் அளவுள்ளதாயும், த்ருடமாயும் நன்றாகவும் இருக்க வேண்டும். ஒரு பிண்டத்தின் அளவுள்ளது என்பதற்குக் குதிரையின் குளம்பிற்குச் சமமாயுள்ளது என்பது பொருள்.

स्मृत्यन्तरे तु – कपित्थबिल्ववच्चाब्दे पिण्डं दद्याच्च पार्वणे । धात्री फलप्रमाणेन गयाश्राद्धे महालये । नालिकेरप्रमाणेन एकोद्दिष्टे सपिण्डने । अन्यश्राद्धेषु सर्वेषु कुक्कुटाण्डप्रमाणतः इति । व्यासः – द्विहायनस्य वत्सस्य विशत्यास्ये यथा सुखम् । तथा कुर्यात् प्रमाणं तु पिण्डानां व्यासभाषितम् इति । पराशरः – पिण्डं प्रदीयते साग्रदर्भेषु तु गुडेन वा । पयसा फलमूलैश्च मिश्रितं दक्षिणामुखः । प्रेताय नामगोत्राभ्यां प्रदद्यान्मुष्टिसंमितम् । तूष्णीं प्रसेचकं पुष्पं धूपं दीपं तथैव इति ।

**மற்றொரு ஸ்ம்ருதியிலோவெனில் :-** ப்ராத்யாப்திகத்திலும், பார்வண ச்ராத்தத்திலும், விளாங்கனி, பில்வப் பழம் போலுள்ள பிண்டத்தைக் கொடுக்கவும். கயா ச்ராத்தத்திலும், மஹாளயத்திலும் நெல்லிக் கனியளவுள்ளதாயும், ஏகோத்திஷ்டத்திலும், ஸபிண்டீகரணத்திலும், தேங்காயளவுள்ளதாயும், மற்ற எல்லா ச்ராத்தங்களிலும் கோழிமுட்டையளவுள்ளதாயும் பிண்டத்தைக் கொடுக்கவும். **வ்யாஸர் :-** இரண்டு

வயதுள்ள குழந்தையின் வாயில் ச்ரமமில்லாமல் நுழைவதற்கு எவ்வளவு அளவோ அவ்வளவு ப்ரமாணமுள்ளதாய்ப் பிண்டங்களைச் செய்ய வேண்டு மென்று வ்யாஸருடைய வாக்யம். பராசரர் :- நுனியுடனுள்ள தர்ப்பங்களில் வெல்லத்துடனுவது, பால், பழம், மூலம் இவைகளுடனுவது கூடியதும் முஷ்டியளவுள்ளதுமான பிண்டத்தைத் தெற்கு நோக்கியவனுய், ப்ரேதனின் பொருட்டு, நாம கோத்ரங்களைச் சொல்லிக் கொடுக்கவும். மந்த்ர மில்லாமல் மறுபடி ஜலத்தைக் கொடுக்கவும். புஷ்ப தூப தீபங்களையும் கொடுக்கவும்.

बोधायनश्च — मुष्टिप्रमाणं कुक्कुटाण्डप्रमाणं वा तिलमिश्रं पिण्डं प्रदाय गन्धपुष्पधूपदीपान् दत्वा संक्षालनेनापसव्यं परिषिच्य प्रेतपिण्डमप्सु विसर्जयेत् इति । विसर्जनप्रकारमाहापस्तम्बः — आकाशं गमयेत् पिण्डं जलस्थो दक्षिणामुखः । पितॄणां स्थानमाकाशं दक्षिणादिक्तथैव च इति । आशौचह्रासेऽपि दशपिण्डानाह शातातपः – आशौचस्यापि च ह्रासे पिण्डान् दद्याद्दशैव तु । प्रथमे त्रीन् द्वितीयेऽह्नि चतुरस्त्रीन् तृतीयके इति । उदकदानवत् पिण्डदानं न सर्वैः कार्यम्, अपि तु संस्कर्त्रैव । तथाऽह संवर्तः – पूर्वाह्णे वाऽपराह्णे वा तोयमाशौचगामिभिः । संस्कर्त्रैव बलिर्देयः स हि प्रेतस्य बान्धवः इति ।

போதாயனரும் :- முஷ்டியளவுள்ளது, அல்லது கோழிமுட்டையளவுள்ளதானதும், எள்ளுகளுடன் கூடியதுமான பிண்டத்தைக் கொடுத்து, கந்த புஷ்ப தூப தீபங்களையும் கொடுத்து, பாத்ரத்தை அலம்பிய ஜலத்தால் அப்ரதக்ஷிணமாகச் சுற்றி, ப்ரேத பிண்டத்தை ஜலத்தில் போட வேண்டும். ஜலத்தில் போடும் ப்ரகாரத்தைச் சொல்லுகிறுர் ஆபஸ்தம்பர் :- தெற்கு முகமாய் ஜலத்தில் நின்றுகொண்டு பிண்டத்தை ஆகாசத்தில் போட

வேண்டும். ஆகாசமும், தெற்குத் திக்கும் பித்ருக்களின் ஸ்தானம். ஆசௌசம் குறைந்த விஷயத்திலும், பத்துப் பிண்டங்களைச் சொல்லுகிறார் சாதாதபர் :- குறைந்த ஆசௌசவிஷயத்திலும் பத்துப் பிண்டங்களையே கொடுக்க வேண்டும். முதல் நாளில் 3, 2-ஆவது நாளில் 4, 3-ஆவது நாளில் 3, என்று கணக்குப்படி கொடுக்கவும். உதக தானத்தை எல்லோரும் செய்வது போல் பிண்டதானத்தை எல்லோரும் செய்யக் கூடாது. ஸம்ஸ்காரம் செய்தவன்தான் செய்யலாம். அவ்விதம் சொல்லுகிறார் **ஸம்வர்த்தர்** :- ஆசௌசமநுஷ்டிப்பவர்களால் முற்பகலிலோ பிற்பகலிலோ உதக தானம் செய்யப்பட வேண்டும். ஸம்ஸ்காரம் செய்தவன் மட்டுமே பிண்டதானம் செய்யலாம். ப்ரேதனுக்கு அவனல்லவோ பந்து.

## पिण्डद्रव्यादिनियमः

पिण्डद्रव्यनियममाह शुनःपुच्छः – शालिना सक्तुभिर्वाऽपि शाकेनाप्यथ निर्वपेत् । प्रथमेऽहनि यद्द्रव्यं तदेव स्याद्दशाहिकम् इति । कर्तृनियमो गृह्यपरिशिष्टेऽभिहितः । असगोत्रः सगोत्रो वा यदि स्त्री यदि वा पुमान् । प्रथमेऽहनि यः कुर्यात् स दशाहं समापयेत् इति । स्थाननियम उक्तः स्मृत्यन्तरे – एकत्र निक्षिपेत् कर्ता दश पिण्डान् समाहितः । स्थानभेदे महान् दोषः पिण्डभुङ्नरकं व्रजेत् इति । पिण्डभुक् - प्रेतः । अन्यत्रापि – द्रव्यभेदे महाहानिः कर्तृभेदे त्वनर्थता । स्थानभेदे महान् दोषस्त्रिभेदं तु न कारयेत् इति ।

### பிண்டத்ரவ்யம் முதலியவைகளின் நியமம்

பிண்ட த்ரவ்யத்தின் நியமத்தைச் சொல்லுகிறார் :- **சுநःபுச்சர்** : நெல்லினாலோ, மாவுகளாலோ, சாகத்தினாலோ பிண்டத்தைக் கொடுக்கவும். முதல் நாளில் எந்த த்ரவ்யத்தால் கொடுக்கப்பட்டதோ அதனாலேயே பத்து நாட்களிலும் கொடுக்கப்பட வேண்டும். கர்த்தாவின்

நியமம் க்ருஹ்ய பரிசிஷ்டத்தில் சொல்லப்பட்டுள்ளது. ஸகோத்ரனல்லாதவனோ, ஸகோத்ரனோ, ஸ்த்ரீயோ, புருஷனோ, முதல் நாளில் எவன் கர்த்தாவோ அவனே பத்து நாட்கள் க்ரியையைச் செய்து முடிக்க வேண்டும். பிண்டத்தை வைக்குமிடத்தின் நியமம் சொல்லப் பட்டுள்ளது **மற்றொரு ஸ்ம்ருதியில்** :- கர்த்தா கவனமுடையவனாய் 10 பிண்டங்களையும், ஒரே இடத்தில் வைக்க வேண்டும். வேறு இடத்தில் வைத்தால் தோஷம் மிகவாயுண்டாகும். ப்ரேதன் நரகத்தை அடைவான். **வேறு ஸ்ம்ருதியிலும்** - த்ரவ்யம் மாறினால் பெரிய குறை உண்டாகும். கர்த்தா மாறினால் கர்மம் பயனற்றதாகும். ஸ்தானம் மாறினால் மிகுந்த தோஷமுண்டாகும். ஆகையால் இந்த மூன்றிலும் மாறுதலைச் செய்யக் கூடாது.

## शिलादिविपर्यासे

स्मृत्यन्तरे — वस्त्रपाषाणकुम्भानां स्थाल्याः कर्तुर्विपर्यये। पूर्वदत्तोदकं कुर्यात् पुनरित्याह देवलः इति । स्मृत्यर्थसारे – उत्तरीयशिलापात्रद्रव्यकर्तृविपर्यये । पूर्वदत्ताञ्जलीन् पिण्डान् पुनरित्याह गौतमः इति । उत्तरीयं - वास उदकार्थं नववस्त्रम्, पात्रं - वास उदकादिदानाय जलाहरणार्थं नवघटः, चरुस्थाली वा । तत्रैव – आद्यदेशादन्यदेशे प्रेतपिण्डं क्षिपेद्यदि । पूर्वदत्तान् प्रेतपिण्डान् पुनरित्याह शाकलः इति ।

### பாஷாணம் முதலியவை மாறும் விஷயத்தில்

**மற்றொரு ஸ்ம்ருதியில்** :- வஸ்த்ரம், பாஷாணம், ஜலங்கொண்டு வரும் குடம், பொங்கும் பாத்ரம், கர்த்தா இவைகளுள் ஒன்று மாறினாலும், முன் கொடுக்கப்பட்ட உதகாஞ்ஜலிகளை மறுபடி கொடுக்க வேண்டுமென்றார் தேவலர். **ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்** :- உத்தரீயம், பாஷாணம், பாத்ரம், த்ரவ்யம், கர்த்தா இவைகள் ஏதாவது மாறினால், முன் கொடுக்கப்பட்ட உதகாஞ்ஜலிகளையும்

பிண்டங்களையும் மறுபடி கொடுக்க வேண்டுமென்றார் கௌதமர். உத்தரீயம் - வாஸோதக தானத்திற்கான புது வஸ்த்ரம். பாத்ரம் - வாஸோதக தாநத்திற்காக ஜலம் கொண்டுவரும் புதிய குடம், அல்லது பிண்டம் பொங்கும் பாத்ரம். ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்திலேயே :- முதலில் போட்ட இடத்தை விட மற்றொரு இடத்தில் ப்ரேத பிண்டத்தைப் போடுவானாகில் முன்கொடுக்கப்பட்ட ப்ரேத பிண்டங்களை மறுபடி கொடுக்க வேண்டுமென்றார் சாகலர்.

स्मृत्यन्तरे – आशौचमध्ये पाषाणं यदि नश्येच्छिलान्तरे । पूर्वदत्ताञ्जलीन् पिण्डान् पुनरित्याह कुण्डिनः इति । अन्यत्रापि – स्थापितं प्रेतपाषणमादशाहान्न चालयेत् । देशक्षोभे महापत्तौ स्थापितं चोद्धरेद्यदि । प्राणायामत्रयं कृत्वा संस्पृश्य व्याहृतीर्जपेत् । यदि नष्टं हृतं वाऽपि पाषाणं प्रथमाह्निकम् । पाषाणमन्यमादाय पूर्वदत्ताम्बु निक्षिपेत् इति ।

மற்றொரு ஸ்ம்ருதியில் :- ஆசௌசத்தின் நடுவில் பாஷாணம் காணாமற்போய்விட்டால், மற்றொரு சிலையில் முன் கொடுக்கப்பட்ட ஜலாஞ்ஜலிகளையும், பிண்டங்களையும், மறுபடி கொடுக்க வேண்டுமென்றார் குண்டினர். **மற்றொரு ஸ்ம்ருதியிலும்** :- வைக்கப்பட்ட பாஷாணத்தை 10-நாள் வரையிலும் அசைக்கக் கூடாது. தேச க்ஷோபத்திலாவது, பெரிய ஆபத்காலத்திலாவது, வைக்கப்பட்ட பாஷாணத்தை எடுத்தால், மூன்று ப்ராணாயாமங்களைச் செய்து, தொட்டுக் கொண்டு வ்யாஹ்ருதிகளை ஜபிக்கவும். முதல் நாளில் வைக்கப்பட்ட பாஷாணம் காணாமற்போனாலும், அன்யனால் அபஹரிக்கப்பட்டாலும், வேறு பாஷாணத்தை வைத்து முன் கொடுக்கப்பட்ட ஜலாஞ்ஜலிகளையும் கொடுக்கவும்.

सङ्ग्रहे तु – शिलाविनाशे सति वा ततोऽन्यामायातुमन्त्रेण निधाय कुण्डे । यमाय सोमं सुनुतेति मन्त्रादाज्याहुतिं लौकिक एव

वह्नौ इति । शिलाविनाशेऽन्यां शिलां आयातु देवस्सुमनाभिः इति वाक्यद्वयात्मकेन मन्त्रेण स्थापयित्वा यमाय सोमं इति मन्त्रेण लौकिकाग्नौ जुहुयादित्यर्थः । तत्रैव – शिलान्तरे स्थापिते तु दृष्टा नष्टशिला यदि । यमे इवेति मन्त्रेण तां च न्यस्याथ तर्पयेत् इति ।

ஸங்க்ரஹத்திலோவெனில் :- ''பாஷாணம் காணமற்போனால் வேறு சிலையைக் குண்டத்தில் 'ஆயாது'' என்ற மந்த்ரத்தால் வைத்து, 'யமாயஸோமம் ஸுநுத' என்ற மந்த்ரத்தினால் ஆஜ்யாஹுதியை லௌகிகாக்நியில் ஹோமம் செய்யவும்'' என்றுள்ளது. சிலை காணமற்போனால் மற்றொரு சிலையை 'ஆயாது தேவஸ்ஸுமனாபி:' என்ற இரண்டு வாக்யமுள்ள மந்த்ரத்தினால் வைத்து, 'யமாய ஸோமம் என்ற மந்த்ரத்தால் லௌகிகாக்னியில் ஹோமம் செய்ய வேண்டுமென்பது பொருள். ஸங்க்ரஹத்திலேயே :- வேறு சிலையை வைத்த பிறகு, காணமற் போன சிலை காணப்பட்டால் 'யமே இவ' என்ற மந்த்ரத்தால் அதையும் சேர்த்து வைத்துத் தர்ப்பிக்கவும்.

अगस्त्यः – राजकार्यनियुक्तानां वैश्यानां चातिपत्तिषु । पाषाणमुद्धरेन्मध्ये बलिकर्म समापयेत् इति । पारस्करः – गृहीत्वा प्रेतपाषाणं गच्छेद्देशविपर्यये । अपकृष्यापि कुर्वीत न त्वेतदवशेषयेत् । उदकं पिण्डदानं च दशाहाभ्यन्तरं तु यत् । समापयेद्दशाहे तत् सर्वं पूर्ववदाचरेत् । अस्थिसञ्चयनादूर्ध्वं विच्छिन्ने तर्पणादिके । त्र्यब्दे यदि तु पित्रोश्च पुनः संक्षिप्यते त्र्यहात् इति । स्मृत्यन्तरे – यदि नष्टो मृतो वाऽपि कर्ता ह्यन्यं समाश्रयेत् । तेनैव कारयेत् सर्वमुदकाद्यासपिण्डनम् । प्रथमेऽहनि यः कर्ता नारी वा पुरुषोऽथ वा । आदशाहं प्रकुर्वीत पिण्डदानोदकक्रियाः इति ।

அகஸ்த்யர் :- ராஜ கார்யத்தில் ஈடுபட்டவர்களுக்கும், வைச்யர்களுக்கும், ஆபத்காலத்தில் பாஷாணத்தை

எடுத்துவிடலாம். பத்து நாள் மத்தியிலும் பிண்டதானத்தை ஸமாப்தி செய்யலாம். பாரஸ்கரர் :- தேச க்ஷோப காலத்தில் ப்ரேத பாஷாணத்தை எடுத்துக் கொண்டு போகலாம். அல்லது அபகர்ஷம் செய்து முந்தியே முடித்துவிடலாம். இதை மீறிவைக்கக் கூடாது. பத்து நாளைக்குள் செய்ய வேண்டிய உதக பிண்டதாநமெதுவோ அதைப் பத்தாவது நாளில் ஸமாப்தி செய்யவும். எல்லாவற்றையும் முன்போல் செய்யவும். அஸ்தி ஸஞ்சயனத்திற்குமேல் தர்ப்பணம் முதலியது விச்சிந்நமானால் மூன்று வர்ஷத்திற்குள்ளும் மாதா பித்ரு விஷயத்திலும் மறுபடி 3-நாளில் செய்ய வேண்டும். **மற்றொரு ஸ்ம்ருதியில் :** முக்ய கர்த்தாவாகியவன் காணமல் போனாலும், இறந்தாலும், அடுத்த கர்த்தா எவன் செய்கிறானோ அவனைக் கொண்டே உதக தாநம் முதல் ஸபிண்டீகரணம் வரையில் செய்விக்க வேண்டும். புருஷனாயினும், ஸ்த்ரீயாயினும் முதல் நாளில் எவன் கர்த்தாவோ அவனே பத்துநாள் வரையில் பிண்டதான உதக க்ரியைகளைச் செய்ய வேண்டும்.

स्मृत्यर्थसारे – वायसैः सेविते पिण्डे शुना शूद्रेण दूषिते । पुनः कर्म प्रकुर्वीत ह्यावृत्तिश्च विपर्यये इति । विपर्यये - उत्तरीयादिविपर्यये । अङ्गिरास्तु – पिण्डं काकादिपक्षिभ्यो जन्तुरन्यः स्पृशेद्यदि । कृच्छ्रत्रयं चरित्वाऽथ पुनः पिण्डं च निर्वपेत् इति । जन्तुः - श्वादिः, काकादिस्पर्शने कृच्छ्राभावः, पुनः पिण्डनिर्वापणमेवेत्यर्थः । स्मृतिरत्ने – श्वचण्डालादिभिः स्पृष्टः पिण्डो यद्युपहन्यते । प्राजापत्यत्रयं कृत्वा पुनः पिण्डं समाचरेत् । मार्जारमूषकस्पर्शे पिण्डे च विदलीकृते । पुनः पिण्डः प्रदातव्यस्तेन पाकेन तत्क्षणात् इति ।

**ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில் :-** ப்ரேத பிண்டம், காக்கைகளால் பக்ஷிக்கப்பட்டாலும், நாய், சூத்ரன் இவர்களால் அசுத்தமானாலும், மறுபடி அக்கர்மாவைச்

செய்யவும். வாஸோதக வஸ்த்ரம் முதலியது நஷ்டமாஞல் மறுபடி ஆவ்ருத்தி செய்யவும். அங்கிரஸ் :- காக்கை முதலிய பக்ஷிகளைத் தவிர்த்த மற்ற நாய் முதலிய ஜந்து, பிண்டத்தை ஸ்பர்சித்தால், மூன்று க்ருச்ரங்களை அனுஷ்டித்து, மறுபடி பிண்டதானத்தைச் செய்யவும். காக்கைகள் முதலியவை தொட்டால் க்ருச்ரமில்லை. மறுபடி பிண்ட தானம் மட்டில் செய்தால் போதுமென்பது பொருள். ஸ்ம்ருதி ரத்னத்தில் :- நாய், சண்டாளன் முதலியவர்களால் தொடப்பட்டுப் பிண்டம் அசுத்தமாஞல், மூன்று ப்ராஜாபத்ய க்ருச்ரம் செய்து மறுபடி பிண்டத்தைக் கொடுக்கவும். பூனை, எலி இவைகளால் பிண்டம் தொடப்பட்டாலும், உடைந்து போஞலும், அப்பொழுதே அந்தப் பாகத்தாலேயே மறுபடி பிண்டதாநம் செய்யப்பட வேண்டும்.

गृहद्वारपार्श्वकुण्डं विदलादिभिः प्रावृत्य प्रत्यग्द्वारां दक्षिणद्वारां वा कुटिकां कृत्वा माल्याद्यैरलङ्कृत्य पृथक् पृथक् मृन्मये पात्रे प्रेतात्र स्नाहीति जलम्, पिबेदमिति क्षीरम्, कुण्डोपरि शिक्ये स्थापयेत् । तथा चाश्वलायनकारिका – आधायाश्मानमेकं तु भूषयेदथ वेष्टयेत् । तस्योपरि निधातव्यं क्षीरं नीरं च पात्रयोः । यावद्दशाहमाकाशे परि(थि)श्रमनिवृत्तये इति । पारस्करश्च – प्रेतात्र स्नाहीत्युदकं पिबेदमिति क्षीरम् इति । याज्ञवल्क्योऽपि – जलमेकाह माकाशे स्थाप्यं क्षीरं च मृन्मये इति ।

வீட்டின் வாயிலிலுள்ள குண்டத்தைக் கீற்று முதலியதால் மறைத்து, மேற்கு, அல்லது தெற்கில் வாயில் உள்ளதான குடிசையைச் செய்து, மாலை முதலியவைக ளாலங்கரித்து, தனித்தனியே, மண்பாத்ரத்தில் 'ப்ரேத ! இங்கு முழுகு' என்று ஜலத்தையும், 'இதைப் பருகு' என்று பாலையும், குணடத்திற்குமேல் உறியில் வைக்கவும். அவ்விதமே, ஆச்வலாயன காரிகை :- ஒரு பாஷாணத்தை ஸ்தாபித்து அலங்கரித்து, சுற்றிக் கட்டவும். அதற்குமேல்

இரண்டு பாத்ரங்களில், பால், ஜலம் இவைகளை வைக்கவும். பத்துநாள் வரையில் ச்ரம நிவ்ருத்திக்காக ஆகாசத்தில் வைக்கவும். **பாரஸ்கரரும் :-** 'ப்ரேத இங்கு முழுகு' என்று ஜலத்தையும், 'இதைப் பருகு' என்று பாலையும் (வைக்கவும்). **யாஜ்ஞவல்க்யரும் :-** ஆகாசத்தில், மண் பாத்ரத்தில் ஜலம் பால் இவைகளை ஒரு நாளில் வைக்கவும்.

अत्र विज्ञानेश्वरः – जलं क्षीरं च पात्रद्वये पृथक् पृथक्, आकाशे - शिक्यादौ, एकाहं स्थापनीयम्, विशेषानुपादानात् प्रथमेऽहनि कार्यम् इति । माधवीयेऽपि – प्रथमेऽहनि प्रेतमुद्दिश्य जलं क्षीरं चाकाशे शिक्यादौ पात्रद्वये स्थापनीयम् इति । अन्ये तु – प्रथमदिनमारभ्य क्षीरं जलं चैकैकाहमेवावस्थितं यथा भवति तथा प्रत्यहं नवं नवं जलं क्षीरं च स्थापनीयम्, शिष्टाचारश्चैवमिति व्याचक्षते । एवमेतस्मिन् कुण्डे आदशाहं वास उदकं एतत्समीपे दर्भास्तृते पिण्डबलिप्रदानं च कार्यम् ।

**விஜ்ஞாநேச்வரர் :-** 'ஜலத்தையும், பாலையும், இரண்டு பாத்ரங்களில் தனித் தனியாய், ஆகாசத்தில் உறி முதலியதில் ஒருநாள் முழுவதும் வைக்கவும். விசேஷம் சொல்லாததால் முதல் நாளில் செய்ய வேண்டும்' என்றார். **மாதவீயத்திலும் :** முதல் நாளில் ப்ரேதனை உத்தேசித்து, ஜலத்தையும், க்ஷீரத்தையும் ஆகாசத்தில் உறி முதலியதில் இரண்டு பாத்ரங்களில் வைக்கவும். **மற்றவரோவெனில் :-** முதல் நாள் முதற்கொண்டு க்ஷீரமும், ஜலமும் ஒவ்வொரு நாள் மட்டில் எப்படி இருக்குமோ அவ்விதம் ப்ரதி தினமும் புதிது புதிதாய் ஜலமும் க்ஷீரமும் வைக்கப்பட்ட வேண்டும். சிஷ்டாசாரமும் இவ்விதம், என்று சொல்லுகின்றனர். இவ்விதம் இந்தக் குண்டத்தில் பத்து நாள் வரையில் வாஸோதகமும், குண்டத்தின் ஸமீபத்தில் தர்ப்பங்களைப் பரப்பி பிண்ட பலி ப்ரதாநமும் செய்யப்பட வேண்டும்.

प्रेतशरीरोत्पत्तिक्रमः –

दशाहपिण्डदानेन प्रेतस्य शरीरोत्पत्तिर्भवति । यदाह ऋश्यशृङ्गः – प्रथमेऽहनि यः पिण्डः तेन मूर्धा प्रजायते । चक्षुःश्रोत्रे नासिका च द्वितीयेऽहनि जायते । भुजौ वक्षस्तथा ग्रीवा तृतीयेऽहनि जायते । नाभिस्थानं गुदं लिङ्गं चतुर्थेऽहनि जायते । ऊरू तु पञ्चमे ज्ञेयौ षष्ठे चर्म प्रजायते । सप्तमे तु सिरा सर्वा जायते नात्र संशयः । अष्टमे तु कृते पिण्डे सर्वरोमाण्यनन्तरम् । नवमे वीर्यसंपत्तिर्दशमे क्षुत्परिक्षयः । दशमेन तु पिण्डेन तृप्तिः प्रेतस्य जायते । आशौचान्ते ततः सम्यक्पिण्डदानं समाप्यते । ततः श्राद्धं प्रदातव्यं सर्ववर्णेष्वयं विधिः । एकोद्दिष्टात् पिशाचत्वं पितृत्वं पिण्डयोगतः इति ।

**ப்ரேத சரீரத்தின் உத்பத்தி க்ரமம்**

*பத்து நாட்களில் செய்யப்படும் பிண்டதானத்தால் ப்ரேதனுக்கு சரீரமுண்டாகிறது. ருச்யச்ருங்கர் :- முதல் நாளில் கொடுக்கப்படும் பிண்டத்தால் ப்ரேதனுக்குத் தலை உண்டாகிறது. 2-ஆவது நாளில் கண், காது, மூக்கு இவைகளுண்டாகின்றன. 3-ஆவது நாளில் கைகள், மார்பு, கழுத்து இவைகளுண்டாகின்றன. 4-வது நாளில் தொப்புள், குதம், லிங்கம் இவைகள் உண்டாகின்றன. 5-ஆவது நாளில் துடைகள் உண்டாகின்றன. 6-ஆவது நாளில் தோல் உண்டாகிறது. 7-ஆவது நாளில் நரம்புகளெல்லாம் உண்டாகின்றன. 8-ஆவது நாளில் ரோமங்களெல்லாம் உண்டாகின்றன. 9-ஆவது நாளில் வீர்யமுண்டாகிறது. 10-ஆவது நாளில் பசி உண்டாகிறது. 10-ஆவது (நாள்) பிண்டத்தினால் ப்ரேதனுக்குத் த்ருப்தி உண்டாகிறது. பிறகு 10-ஆவது நாளில் பிண்டதானம் ஸமாப்தியை யடைகிறது. பிறகு ச்ராத்தம் செய்ய வேண்டும். 4-வர்ணங்களிலும் இதுவே விதி. ஏகோத்திஷ்டத்தால் பிசாசத்வமும், ஸபிண்டீகரணத்தால் பித்ருத்வமும் ஏற்படுகிறது.*

## आतुराश्वासनविधिः

पिण्डोदकदानानन्तरं बान्धवैराश्वासनं कार्यम् । तथा च याज्ञवल्क्यः – कृतोदकान् समुत्तीर्णान् मृदुशाद्वलसंस्थितान् । स्नातानपवदेयुस्तानितिहासैः पुरातनैः इति । इतिहासस्तु तैनैव दर्शितः – मानुष्ये कदलीस्तम्भनिःसारे सारमार्गणम् । करोति यः स मूढो वै जलबुद्बुदसन्निभे । पञ्चधा संभृतः कायो यदि पञ्चत्वमागतः । कर्मभिः स्वशरीरोत्थैस्तत्र का परिदेवना । गन्त्री वसुमती नाशमुदधिर्दैवतानि च । फेनप्रख्यः कथं नाशं मर्त्यलोको न यास्यति इति । कात्यायनोऽपि – एवं कृतोदकान् सम्यक् सर्वान् शाद्वलसंस्थितान् । आप्लुतान् पुनराचान्तान् वदेयुस्तेऽनुशायिनः । मा शोकं कुरुतानित्ये सर्वस्मिन् प्राणधर्मिणि । धर्मं कुरुत यत्नेन यो वः सहकरिष्यति इति ।

### துக்கிதர்களைத் தேற்றும் ப்ரகாரம்

*பிண்டோதகதாநத்திற்குப் பிறகு, பந்துக்கள், ஆச்வாஸநம் (ஆறுதல்) செய்ய வேண்டும். அவ்விதமே,* **யாஜ்ஞவல்க்யர்** *:- உதக தாநம் செய்த பிறகு, வெளியேறிய வரும், மெதுவான புல்தரையிலிருப்பவரும், ஸ்நாநம் செய்தவருமான அவர்களுக்கு, பந்துக்கள், ப்ராசீனங்களான இதிஹாஸங்களால் ஆச்வாஸனம் செய்ய வேண்டும். இதிஹாஸமும் அவராலேயே காண்பிக்கபட்டுள்ளது :- வாழை மரம்போல் உள்ளில் ஸாரமற்றதும், நீர்க்குமிழிபோல் சீக்ரம் நசிப்பதுமான மநுஷ்யத் தன்மையில் ஸாரத்தைத் (ஸ்திரத் தன்மையை) தேடுகிறவனெவனோ அவன் மிக மூடன். (ஆகையால்) ஸம்ஸார ஸ்வரூபமறிந்த நீங்கள் துக்கிக்க வேண்டாம். முன் ஜன்மத்திற் செய்த கர்மங்களால் ஐந்து பூதங்களின் சேர்க்கையால் கர்ம பலத்தைப் அனுபவிப்பதற்காகச் செய்யப்பட்ட சரீரம், கர்மபலத்தின் போகமான பிறகு,*

ஐந்து பூதங்களாக ஆய்விட்டால், அது விஷயத்தில் உங்களுக்கு வருத்தமெதற்காக? பூமியும் நாசத்தை அடையப் போகிறது. ஸமுத்ரமும், தேவர்களும் நாசத்தை அடையப் போகின்றனர். நீரிலுள்ள நுரைபோல் அஸ்திரமான மனுஷ்ய சரீரம் எப்படி நாசத்தை அடையாமலிருக்கும்? **காத்யாயனரும் :-** இவ்விதம் உதக தானம் செய்து, மறுபடி ஸ்நானம் செய்து, ஆசமநம் செய்து, புல்லுள்ள ப்ரதேசத்திலுட்கார்ந்துள்ள அவர்களெல்லோரையும், பந்துக்கள் இவ்விதம் ஆச்வாஸநம் செய்ய வேண்டும். ஸ்திரமல்லாத ப்ராணிகள் எல்லாவற்றிலும் துக்கம் காட்டாதீர்கள். எந்தத் தர்மம் உங்களுக்கு உபகாரம் செய்யக் கூடியதோ அதைமுயற்சியுடன் செய்யுங்கள்.

रामायणेऽपि – सर्वे क्षयान्ता निचयाः पतनान्ताः समुच्छ्रयाः । संयोगा विप्रयोगान्ता मरणान्तं च जीवितम् । यथा फलानां पक्कानां नान्यत्र पतनाद्भयम् । एवं नरस्य जातस्य नान्यत्र मरणाद्भयम् । यथाऽगारं दृढस्थूणं जीर्णं भूत्वाऽवसीदति । तथाऽवसीदन्ति नरा जरामृत्युवशं गताः । अहोरात्राणि गच्छन्ति सर्वेषां प्राणिनामिह । आयूंषि क्षपयन्त्याशु ग्रीष्मे जलमिवांशवः । यथा काष्ठं च काष्ठं च समेयातां महार्णवे । समेत्य च व्यपेयातां कालमासाद्य कंचन । एवं भार्याश्च पुत्राश्च ज्ञातयश्च वसूनि च । समेत्य व्यवधावन्ति ध्रुवो ह्येषां विनाभवः इति ।

**ராமாயணத்திலும் :-** குவியல்களெலாம் சிதறலை முடிவிலுடையவைகளே, உயர்வுகளெலாம் வீழ்தலை முடிவிலுடையவைகளே. சேர்க்கைகளெலாம் பிரிவை முடிவிலுடையவைகளே. உயிரும் மரணத்தை முடிவிலுடையது. மரத்தில் பழுத்துள்ள பழங்களுக்கு விழுவதைத் தவிர்த்து வேறொன்றில் எவ்விதம் பயமில்லையோ, அவ்விதம், பிறந்த மனிதனுக்கு மரணத்தைவிட மற்றொருன்றில் பயமில்லை. த்ருடமான

தூண்களையுடைய வீடும் காலவசத்தல் ஜீர்ணமாகி எப்படி இடிந்து போகிறதோ, அவ்விதமே மனிதர்களும் கிழத் தன்மை, மரணம் இவைகளுக்கு வசர்களாகி அழிகின்றனர். இவ்வுலகில் சென்று கொண்டிருக்கும் நாட்கள், எல்லா ப்ராணிகளின் ஆயுஸ்ஸுகளையும், சீக்ரமாய், கோடைக் காலத்தில் ஸூர்ய கிரணங்கள் ஜலத்தைக் குறைப்பதுபோல் குறைக்கின்றன. எவ்விதம், பெரிய கடலில் வெவ்வேறு இடத்திலிருந்து வந்த இரண்டு கட்டைகள் தற்செயலாய்ச் சேருமோ, சேர்ந்து சிலகாலமிருந்து, மறுபடி பிரிந்து விடுமோ, அவ்விதமே, பார்யைகளே், புத்ரர்கள், ஜ்ஞாதிகள், பணங்கள் இவைகளெலாம் சில காலம் சேர்ந்திருந்து பிறகு பிரிந்து போகின்றன. இவைகளின் பிரிவு நிச்சயமா யுள்ளதேயல்லவா.

भारतेऽपि – जातस्य हि ध्रुवो मृत्युर्ध्रुवं जन्म मृतस्य च । तस्मादपरिहार्येऽर्थे न त्वं शोचितुमर्हसि इति । शोके दोषोऽपि याज्ञवल्क्येन दर्शितः – श्लेष्माश्रु बान्धवैर्मुक्तं प्रेतो भुङ्क्ते यतोऽवशः । अतो न रोदितव्यं हि क्रियाः कार्याः प्रयत्नतः इति ।

**பாரதத்திலும்** :- பிறந்தவனுக்கு இறப்பென்பது நிச்சயமுள்ளதே. இறந்தவனுக்குப் பிறப்பும் நிச்சயமுள்ளதே. ஆகையால் பரிஹரிக்கமுடியாத விஷயத்தில் நீ துக்கப்படக் கூடாது. துக்கப்படுவதில் தோஷமுண்டென்கிறுர் **யாஜ்ஞவல்க்யர்** :- அழுகின்ற பந்துக்களால் விடப்பட்ட கோழை, கண்ணீர் இவைகளை, பராதீனனுன ப்ரேதன் புஜிப்பான். ஆகையால் அழக் கூடாது. முயற்சியுடன் க்ரியைகளைச் செய்ய வேண்டும்.

## आतुराश्वासनानन्तरकृत्यम्

आतुराश्वासनानन्तरकृत्यं तेनैवोक्तम् – इति संश्रुत्य गच्छेयुर्गृहं बालपुरस्सराः । विदश्य निम्बपत्राणि नियता द्वारि

वेश्मनः । आचम्याग्न्यादि सलिलं गोमयं गौरसर्षपान् । प्रविशेयुः समालभ्य कृत्वाऽश्मनि पदं शनैः इति । अपरो विशेषः शङ्खेन दर्शितः – दूर्वां प्रवालमग्निं वृषभं चालभ्य गृहद्वारे प्रेताय पिण्डं दत्वा पश्चात् प्रविशेयुः इति । साङ्ख्यायनः – यस्मिन् देशे प्राणा उत्क्रान्तास्तं गोमयेनोपलिप्य दूर्वास्तण्डुलानुदकमिश्रान् प्रकीर्य स्वस्त्यस्तु च गृहाणां शेषे शिवं चास्त्विति फलं समभिमृशति इति । पैठीनसिः – गृहं गत्वा स्थिता द्वारि सर्पिरग्न्यश्मगोमयान् । प्रविशेयुर्गृहं स्पृष्ट्वा संविशेयुः कटोपरि इति ।

### ஆச்வாஸநத்திற்குப் பிறகுள்ள கார்யம்

ஆதுராச்வாஸநத்திற்குப் பிறகுள்ள கார்யத்தையும் சொல்லுகிறார் **யாஜ்ஞவல்க்யர்** :- இவ்விதம் ஆச்வாஸந வாக்யங்களைக் கேட்ட பிறகு, சிறுவர்களை முன்னிட்டுக் கொண்டு வீட்டிற்குச் செல்ல வேண்டும். வீட்டின் வாயிலில் சோகமில்லாதவர்களாய், வேப்பிலைகளைக் கடித்துவிட்டு, ஆசமநம் செய்து, அக்னி முதலியதையும், ஜலத்தையும், பசுவின் சாணத்தையும், வெள்ளைக் கடுகுகளையும் தொட்டுவிட்டு, கல்லின்மேல் காலைவைத்து, மெதுவாய் வீட்டிற்குள் நுழைய வேண்டும். வேறொரு விசேஷம் சங்கரால் சொல்லப்பட்டுள்ளது :- அறுகு, பவழம், அக்னி, காளை இவைகளை ஸ்பர்சித்துவிட்டு, வீட்டின் வாயிலில் ப்ரேதனுக்குப் பிண்டத்தைக் கொடுத்து, பிறகு வீட்டினுள் நுழைய வேண்டும். **ஸாங்க்யாயனர்** :- எந்த இடத்தில் ப்ராணன்கள் பிரிந்தனவோ அந்த இடத்தைக் கோமயத்தால் மெழுகி, அறுகுகளையும், ஜலத்துடன் கூடிய அரிசிகளையும் இறைத்து 'ஸ்வஸ்த்யஸ்து + சாஸ்து' (வீட்டிற்கு மங்களமுண்டாகட்டும். மற்றவர் விஷயத்திலும் க்ஷேமமுண்டாகட்டும்.) என்று சொல்லிப் பழத்தைத் தொடவும். **பைடீநஸி** :- வீட்டிற்குச் சென்று, வாயிலில் நின்றவர்களாய், நெய், அக்னி, கல், கோமயம்

இவைகளைத் தொட்டு, வீட்டிற்குள் நுழையவும், பாயின் மேலுட்காரவும்.

### एकोत्तरवृद्धिश्राद्ध नवश्राद्धानि ।

अथैकोत्तरवृद्धिश्राद्धं पूर्वोक्तं दद्यात् । यस्मिन् दिने यावन्त्युदकाञ्जलिदानानि, तावन्ति श्राद्धान्यामरूपेण प्रत्यहं देयानि । अथ सङ्कल्प्यामरूपेण सदक्षिणं नवश्राद्धमेकं दद्यात् । एवमेकादशाहाद्विषमेषु दिनेषु षट् नवश्राद्धानि दद्यात् । तदाहाङ्गिराः – प्रथमेऽह्नि तृतीयेऽह्नि पञ्चमे सप्तमे तथा । नवमैकादशे चैव षण्णवश्राद्धमुच्यते इति । वसिष्ठोऽपि – सप्तमेऽह्नि तृतीये च प्रथमे नवमे तथा । एकादशे पञ्चमे च नवश्राद्धानि षड्दिशेत् इति । यत्तु देवलवचनम् – तृतीये पञ्चमे वाऽपि सप्तमे नवमे तथा । अहन्येकादशे चैव नव श्राद्धानि पञ्च वै इति, तदा श्वलायनविषयम् । तथा च शिवस्वामी – नवश्राद्धानि पञ्चाहु राश्वलायनशाखिनः । आपस्तम्बाः षडित्याहुर्विभाषामैतरेयिणः इति । विभाषां - पञ्चषड्वेति विकल्पम्, ऐतरेयिणः, आहुरित्यर्थः ।

### ஏகோத்தர வ்ருத்தி ச்ராத்தங்களும், நவ ச்ராத்தங்களும்

பிறகு, ஏகோத்தர வ்ருத்தி ச்ராத்தத்தை முன் சொல்லியதைக் கொடுக்கவும். எந்தத் தினத்தில் எவ்வளவு உதகாஞ்ஜலிதாநங்கள் சொல்லப்பட்டுள்ளனவோ அவ்வளவு ச்ராத்தங்கள் ஆமரூபமாய் ஒவ்வொரு நாளிலும் கொடுக்கப்பட வேண்டும். பிறகு ஸங்கல்பம் செய்து ஆமரூபமாய் தக்ஷிணையுடன் கூடிய நவச்ராத்தமொன்றைக் கொடுக்கவும். இவ்விதம் 11-ஆவது நாள்வரையில் ஒற்றைப்படை நாட்களில் 6-நவ ச்ராத்தங்களைக் கொடுக்கவும். அதைச் சொல்லுகிறார். அங்கிரஸ் :- 1,3,5,7,9,11-ஆவது நாட்களில் நவ ச்ராத்தங்கள், மொத்தம்

6. வஸிஷ்டரும் :- 7,3,1,9,11, 5-ஆவது நாட்களில் 6-நவ ச்ராத்தங்களைக் கொடுக்கவும். ஆனால் :- "3,5,7,9,11-ஆவது நாட்களில் நவ ச்ராத்தம், மொத்தம் 5" என்று தேவலரின் வசனமுள்ளதே எனில், அது ஆச்வலாயநீயரைப் பற்றியது. அவ்விதமே, சிவஸ்வாமீ :- 'நவ ச்ராத்தங்கள் ஐந்து என்கின்றனர் ஆச்வலாயன சாகிகள். ஆபஸ்தம்பீயர்கள் 6-என்கின்றனர். ஐதரேய சாகிகள் விகல்பத்தைச் சொல்லுகின்றனர்'. ஐந்து அல்லது 6-நவ ச்ராத்தங்களைச் செய்யலாமென்கின்றனர்.

बोधायनः – मरणाद्विषमेषु दिनेष्वेकैकं नवश्राद्धं कुर्यादानवमाद्यत्र नवमं विच्छिद्येत एकादशेऽह्नि तत्कुर्यात् इति । श्रीधरीये तु – तृतीये पञ्चमे चैव नवमैकादशे तथा । यदत्र दीयते जन्तोस्तन्नवश्राद्धमुच्यते इति । भविष्यत्पुराणे – नव सप्त विशां राज्ञां नवश्राद्धान्यनुक्रमात् । आद्यन्तयोर्वर्णयोस्तु षडित्याहुर्महर्षयः इति । कालादर्शे – आद्वादशाहान्मरणाद्विषमेषु दिनेषु षट् । नवश्राद्धान्यनुतिष्ठेदेकोद्दिष्टविधानतः । केचित् पञ्चैव नवमं भवेदन्तरितं यदि । एकादशेऽह्नि तत्कुर्यादिति स्मृतिविदो विदुः । दैवादन्तरितं पूर्वमुत्तरेण सहाचरेत् इति ।

போதாயனர் :- மரண திநம் முதல் ஒற்றைப்படை நாட்களில் ஒவ்வொரு நவச்ராத்தத்தைச் செய்யவும். 9-ஆவது நாள் வரையில். ஒன்பதாவது நாளில் ச்ராத்தம் செய்யப்படாவிடில் அதை 11-ஆவது நாளில் செய்யவும். ஸ்ரீதரீயத்தில் :- 3,5,9,11-ஆவது தினங்களில், ப்ரேதனுக்குக் கொடுக்கப்படும் ச்ராத்தமெதுவோ, அது நவச்ராத்தமெனப்படுகிறது. பவிஷ்யத் புராணத்தில் :- வைச்யர்களுக்கும், க்ஷத்ரியர்களுக்கும் முறையே 9-7, நவ ச்ராத்தங்கள். ப்ராஹ்மணர்களுக்கும் சூத்ரர்களுக்கும் 6-நவ ச்ராத்தங்களென்கின்றனர் மஹர்ஷிகள். காலாதர்சத்தில் :- மரண தினம் முதல் 12-ஆவது நாள் வரையில் ஒற்றைப்படை நாட்களில் 6-நவ ச்ராத்தங்களை

ஏகோத்திஷ்ட விதியாய்ச் செய்யவும். சிலர் ஐந்துதா னென்கின்றனர். 9-ஆவது நாளில் செய்யப்படாவிடில் அதை 11-ஆவது நாளில் செய்யவுமென்று ஸ்ம்ருதியை யறிந்தவர்கள் சொல்லுகின்றனர். தைவ வசத்தால் நின்றுபோன நவச்ராத்தத்தை அடுத்த நவச்ராத்தத்துடன் சேர்த்துச் செய்ய வேண்டும்.

एवं च क्षत्रियाणां नवश्राद्धानि सप्त, वैश्यानां नव, विप्राणां शूद्राणां च षट्, तत्राप्याश्वलायनीयानां बोधायनीयानां च पञ्च, आपस्तम्बिनां षट्, ऐतरेयिणां पञ्च षड्वेति विकल्पः, इतरेषां सर्वेषां चत्वारि पञ्च षड्वेति व्यवस्था । अत्रान्तराये कण्वः – नवश्राद्धे मासिके च यद्यदन्तरितं भवेत् । तत्तदुत्तरसातन्त्र्यादनुष्ठेयं प्रचक्षते । नवश्राद्धममन्त्रं तु पिण्डोदकविवर्जितम् इति । स्मृत्यन्तरे तु – नवश्राद्धं तु यत्रोक्तं दिने स्यान्न कृतं यदि । एकादशेऽह्नि तत् कुर्यात् तत्र कालं न चिन्तयेत् इति ।

இவ்விதமிருப்பதால், க்ஷத்ரியர்களுக்கு நவச்ராத்தங்கள் 7, வைச்யர்களுக்கு 9, ப்ராஹ்மணர் களுக்கும் சூத்ரர்களுக்கும் 6. அவர்களிலும், ஆச்வலாயநீயர்களுக்கும், போதாயநீயர்களுக்கும் ஐந்து. ஆபஸ்தம்பீயர்களுக்கு 6, ஐதரேயிகளுக்கு 5 அல்லது 6 என்று விகல்பம், மற்றவரெல்லோருக்கும் 4, 5, அல்லது 6, என்று நிர்ணயம். இவைகளில் விக்னம் நேர்ந்தால், **கண்வர் :-** நவ ச்ராத்தம், மாஸிகம் இவைகளில், எதெது செய்யப்படாமல் நின்றுவிட்டதோ அதனை, அடுத்த ச்ராத்தத்துடன் ஒரே தந்த்ரமாய் அனுஷ்டிக்க வேண்டுமெனச் சொல்லுகின்றனர். நவ ச்ராத்தத்தை மந்த்ரமில்லாமலும் பிண்டம் உதக மில்லாமலும் செய்ய வேண்டும். **மற்றொரு ஸ்ம்ருதியிலோ :-** விஹிதமான தினத்தில் நவச்ராத்தம் செய்யப்படாவிடில் அதை 11-ஆவது நாளில் செய்யவும். அந்தத் தினத்தில் காலதோஷத்தைச் சிந்திக்க வேண்டாம்.

अखण्डादर्शे च – न तिथिर्न च नक्षत्रं न ग्रहो न च चन्द्रमाः । कुर्यादेव नवश्राद्धं प्राप्तमेकादशेऽहनि इति । नवश्राद्धे वर्ज्यनक्षत्राण्याह वसिष्ठः – विशाखा रोहिणी याम्य पौष्णादित्योत्तरात्रयम् । अष्टौ वर्ज्या नवश्राद्धे पुनर्मरणदा यतः इति । गर्गः – नन्दायां भार्गवदिने चतुर्दश्यां त्रिजन्मसु । यदि कुर्यान्नवश्राद्धं कुलक्षयकरं भवेत् इति । सुबोधे च – स्वत्रिजन्मसु नन्दायां चतुर्दश्यां भृगोर्दिने । यदि कुर्यान्नवश्राद्धं कर्ता यमपुरं व्रजेत् इति ।

*அகண்டாதர்சத்திலும் :- திதி, நக்ஷத்ரம், க்ரஹம், சந்த்ரன் இவர்களைப் பற்றிச் சிந்திக்க வேண்டாம். 11-ஆவது நாளில் ப்ராப்தமான நவச்ராத்தத்தைச் செய்யவே வேண்டும். நவச்ராத்தத்தில் வர்ஜிக்க வேண்டிய நக்ஷத்ரங்களைச் சொல்லுகிறார். வஸிஷ்டர் - விசாகா, ரோஹிணீ, பரணீ, ரேவதீ, புனர்வஸு, உத்தரபல்குனீ, உத்தராஷாடா, உத்தர ப்ரோஷ்டபதா என்ற எட்டு நக்ஷத்ரங்களையும் நவ ச்ராத்தத்தில் வர்ஜிக்கவும். அவைகளில் செய்தால் மறுபடி பந்துமரணமேற்படும். கர்கர் :- நந்தாதிதி (ப்ரதமா, ஷஷ்டி, ஏகாதசீ,) வெள்ளிக்கிழமை, சதுர்தசீ, ஜன்மாநுஜன்ம த்ரிஜன்ம நக்ஷத்ரங்கள், இவைகளில் நவச்ராத்தம் செய்தால் அது குலக்ஷயகரமாகும். ஸுபோதத்திலும் :- தனது த்ரிஜன்ம நக்ஷத்ரங்களிலும், நந்தா திதியிலும், சதுர்தசியிலும், சுக்ரவாரத்திலும் நவ ச்ராத்தத்தைச் செய்தால், கர்த்தா ம்ருதியை அடைவான்.*

गार्ग्यश्च – शौक्रे च बुधवारे च गुरोः सोमस्य वारयोः । एतेषु कुर्वतः श्राद्धं कर्तुर्मरणमादिशेत् । जन्मर्क्षत्रिपदर्क्षेषु नन्दायां भृगुवासरे । धात्रपौष्णभयोः श्राद्धं न कर्तव्यं कुलक्षयात् । प्रत्यरं वध नक्षत्रं कर्तुस्तु विपदं तथा । चन्द्राष्टमं च शंसन्ति जन्मादीनि विवर्जयेत् इत्यादि सर्वं मातापितृव्यतिरिक्तविषयम्, कालाति-

क्रमविषयं वा, परोक्षे सूक्ष्मतः पश्येत् प्रत्यक्षे तु न किञ्चन। वैधे कर्मणि तु प्राप्ते कालदोषं न चिन्तयेत् इति स्मरणात्। अत्रायं क्रमः – दाहान्ते स्नात्वा केशानुप्त्वा आप्लुत्य गृहं समेत्य नग्नप्रच्छादनं दत्वा निमज्ज्य उदकं तीरकुण्डे प्रदाय उदकुम्भमाहृत्य गृहद्वारकुण्डे वा स उदकपिण्डबलीन् प्रदाय स्नात्वा गृहं समेत्य निम्बपत्रं विदश्य अश्मादि स्पृष्ट्वा एकोत्तरवृद्धिश्राद्धं नवश्राद्धं च दद्यादिति।

**கார்க்யரும் :-** சுக்ரவாரம், புதவாரம், குருவாரம், ஸோமவாரம் இவைகளில் நவ ச்ராத்தம் செய்தால் கர்த்தாவுக்கு மரணமேற்படும். ஜன்ம நக்ஷத்ரம், த்ரிபத நக்ஷத்ரம், நந்தா, சுக்ரவாரம், ரோஹிணீ, ரேவதீ இவைகளில் நவச்ராத்தம் கூடாது, செய்வது குலக்ஷயகரமாம்; ப்ரத்யரம், வதம், விபத், சந்த்ராஷ்டமம் இவைகளை ச்லாகிக்கின்றனர்; ஜன்மானுஜன்ம த்ரிஜன்மங்களை வர்ஜிக்கவும் என்பது முதலிய வசநங்களெலாம் மாதா பித்ருக்களைத் தவிர்த்து மற்றவர் விஷயத்தைப் பற்றியவை. அல்லது கால மதிக்ரமித்துச் செய்யும் விஷயத்தைப் பற்றியவை. "பரோக்ஷ ம்ருதி விஷயத்தில் ஸூக்ஷ்மமாய்க் கவனிக்க வேண்டும். ப்ரத்யக்ஷ விஷயத்தில் ஒன்றையும் கவனிக்க வேண்டியதில்லை. விதி விஹிதமான கர்மம் ப்ராப்தமானால் காலதோஷத்தைச் சிந்திக்க வேண்டாம்" என்று ஸ்ம்ருதியிருப்பதால். இங்கே, செய்ய வேண்டிய க்ரமமிது :- "தஹநம் முடிந்த பிறகு ஸ்நாநம் செய்து, வபநம் செய்து கொண்டு, ஸ்நாநம் செய்து, க்ருஹத்திற்கு வந்து, நக்ன ப்ரச்சாதந ச்ராத்தத்தைக் கொடுத்து, ஸ்நாநம் செய்து, நதீதீர குண்டத்தில் உதக தாநம் செய்து, ஜல கும்பத்தை எடுத்துக் கொண்டு, க்ருஹ த்வாரகுண்டத்தில் வாஸோதக பிண்ட பலிப்ரதானம் செய்து, ஸ்நாநம் செய்து, வீட்டிற்கு வந்து, வேப்பிலையைக் கடித்து, கல் முதலியதைத் தொட்டு ஏகோத்தர வ்ருத்தி ச்ராத்தம் நவ ச்ராத்தம் இவைகளைக் கொடுக்க வேண்டும்" என்று.

आशौचिनियमः –

आशौचिनां नियमो मनुना दर्शितः – अक्षारलवणान्नाः स्युर्निमज्जेयुश्च तेऽन्वहम् । मांसाशनं च नाश्नीयुः शयीरंश्च पृथक् क्षितौ इति । मार्कण्डेयः – क्रीतलब्धाशनाश्चैव भवेयुः सुसमाहिताः । न चैव मासंमश्नीयुर्व्रजेयुश्च न योषितम् इति । गौतमोऽपि – अधः शय्यासना ब्रह्मचारिणः सर्वे समासीरन्मांसं न भक्षयेयुराप्रदानान्नवमे वाससां त्यागोऽन्त्ये त्वन्त्यानाम् इति । माधवीये व्याख्यातम् – प्रदानमिहैकोद्दिष्टश्राद्धं, वाससां त्यागस्तु प्रक्षालनार्थं रजकार्पणम्, अन्त्यं - दशममहः, तत्र अन्त्यानां - अत्यन्तपरित्याज्यानां वाससां त्यागः इति ।

**ஆசௌசிகளின் நியமம்**

*86. ஆசௌசிகளின் நியமம்* **மனுவால்** *சொல்லப்பட்டுள்ளது :- ''ஆசௌசிகள் உப்பு உறைப்பில்லாமல் புஜிப்பவராயிருக்க வேண்டும். ப்ரதி தினம் நதி முதலியதில் முழுக வேண்டும். மாம்ஸத்தைப் புஜிக்கக் கூடாது. பூமியில் தனிமையாய்ப் படுக்க வேண்டும்'' என்று. (க்ஷாரலவணம் - க்ருத்ரிமலவணம், (என்று முள்ளது) (செயற்கை உப்பு).* **மார்க்கண்டேயர்** *:- ஆசௌசிகள், விலை கொடுத்து வாங்கப்பட்ட, அல்லது பிறரால் கொடுக்கப்பட்டுக் கிடைத்த அன்னத்தைப் புஜிப்பவர்களாயும், மிகவும் நியமமுள்ளவர்களாயும் இருக்க வேண்டும். மாம்ஸத்தைப் புஜிக்கக் கூடாது. ஸ்த்ரீயைச் சேரக் கூடாது.* **கௌதமரும்** *: 'ஆசௌசிகளெல்லோரும் பூமியிலேயே படுக்க வேண்டும். உட்கார வேண்டும். ப்ரஹ்மசர்யமுடையவராயிருக்க வேண்டும். ஏகோத்திஷ்டம் வரையில். 9-ஆவது நாளில் வஸ்த்ரங்களை த்யஜிக்கவும். 10-ஆவது நாளில் அந்த்ய வஸ்த்ரங்களுக்கு த்யாகம் என்றார்.* **மாதவீயத்தில்** *இதற்கு வ்யாக்யாநம் -*

'ஆப்ரதாநாத் - என்ற பதத்தில் ப்ரதாநமென்பது ஏகோத்திஷ்ட ச்ராத்தம். 9-ஆவது நாளில் வஸ்த்ர த்யாகமென்பது, சுத்தி செய்வதற்காக வண்ணானிடம் கொடுப்பது என்பது. 10ஆவது நாளில் அந்த்யவஸ்த்ரங்களை விடுவதென்பது மிகவும் ஜீர்ணமான வஸ்த்ரங்களைத் தள்ளுவதென்பதாம்' என்று.

तथा च बृहस्पतिः – नवमे वाससां त्यागो नखरोम्णां तथाऽन्तिमे इति । देवलोऽपि – दशमेऽहनि सम्प्राप्ते स्नातुं ग्रामाद्बहिर्व्रजत् । तत्र त्याज्यानि वासांसि केशश्मश्रुनखानि च इति । याज्ञवल्क्यः – क्रीतलब्धाशना भूमौ स्वपेयुस्ते पृथक् पृथक् । पिण्डयज्ञावृता देयं प्रेतायान्नं दिनत्रयम् इति । मरीचिः – प्रथमेऽह्नि तृतीये च सप्तमे नवमे तथा । ज्ञातिभिः सह भोक्तव्यमेतत् प्रेतेषु दुर्लभम् इति ।

பிருஹஸ்பதி :- 9-ஆவது நாளில் வஸ்த்ரங்களைத் தள்ளவும். கடைசி தினத்தில் நகங்களையும் ரோமங்களையும் நீக்கவும். தேவலரும் :- 10-ஆவது நாள் வந்தவுடன் ஸ்நாநத்திற்கு க்ராமத்திற்கு வெளியில் செல்லவும். அவ்விடத்தில் வஸ்த்ரங்கள், கேசங்கள், மீசை, நகங்கள் இவைகளையும் விலக்கவும். யாஜ்ஞவல்க்யர் :- ஆசௌசிகள், விலைக்கு வாங்கிய அல்லது யாசிக்காமல் கிடைத்த அன்னத்தைப் புஜிக்க வேண்டும். பூமியில் தனித் தனியாய்ப் படுக்க வேண்டும். மூன்று நாட்களிலும், ப்ராசீநாவீதமாய் ப்ரேதனுக்கு அன்னத்தைக் கொடுக்கவும். மரீசி :- 1,3,7,9,-ஆவது நாட்களில் ஜ்ஞாதிகளோடு சேர்ந்து புஜிக்கவும். இது ஆசௌசங்களில் அரிதாகும்.

विष्णुपुराणे – दिवा च भक्तं भोक्तव्यममांसं मनुजर्षभ । दिनानि दश चेच्छातः कर्तव्यं ज्ञातिभोजनम् । प्रेतस्तृप्तिं तथा याति बन्धुवर्गेण भुञ्जता इति । अङ्गिराः – नाश्नीयुस्तद्दि(ने)वा सर्व औरसाद्याः सपिण्डकाः । दशरात्रं भवन्त्येते लवणक्षार वर्जिताः ॥

तैलतांबूलहीनाश्च ह्येकभुक्ता जितेन्द्रियाः इति । वसिष्ठश्च – गृहात् प्रव्रजित्वा अघप्रस्तरे त्र्यहमनश्नन्त आसीरन् क्रीतेनोत्पन्नेन वा वर्तेरन् इति । अघप्रस्तरः - आशौचिनां शयनासनार्थं कृतस्तृणमयः कटः । उत्पन्नं - अयाचितलब्धम् । आश्वलायनेऽपि – नैतस्यां रात्र्यामन्नं पचेरन् क्रीतेनोपलब्धेन वा वर्तेरन् त्रिरात्रमक्षारलवणाशिनः स्युर्द्वादशरात्रं वा महागुरुषु इति ।

**விஷ்ணு புராணத்தில்** *:- பகலில் மாம்ஸமில்லாத அன்னத்தைப் புஜிக்க வேண்டும். 10-நாட்களிலும் இஷ்டப்படி ஜ்ஞாதிகளைப் புஜிப்பிக்க வேண்டும். அப்படிப் பந்துக்கள் புஜிப்பதால் ப்ரேதன் த்ருப்தியை அடைகிறுன்.* **அங்கிரஸ்** *:- புத்ரன் முதலிய ஜ்ஞாதிகளெல்லோரும், ம்ருதி தினத்தில் போஜநம் செய்யக் கூடாது. இவர்கள், பத்து நாட்களிலும் உப்பு, உறைப்பு, தைலம், தாம்பூலம் இவைகளைத் தள்ள வேண்டும். ஒரு வேளை புஜிப்பவர்களாயும், ப்ரஹ்மசர்ய முள்ளவர்களாயும் இருக்க வேண்டும்.* **வஸிஷ்டரும்** *:- வீட்டினின்றும் வெளியில்வந்து, அகப்ரஸ்தரத்தில் மூன்று நாள் வரையில் புஜிக்காதவர்களாய் உட்கார்ந்திருக்க வேண்டும். விலைக்கு வாங்கியதையாவது, யாசிக்காமல் கிடைத்ததையாவது புஜிக்க வேண்டும். அகப்ரஸ்தரம் - ஆசௌசிகள் படுப்பதற்கும் உட்காருவதற்கும் புல்லால் செய்யப்பட்ட பாய் என்பதாம்.* **ஆச்வலாயநரும்** *:- ம்ருதி தினத்தின் ராத்ரியிலும் சமைக்கக் கூடாது. விலைக்கு வாங்கியதையாவது, யாசிக்காமல் கிடைத்ததையாவது புஜிக்கவும். மூன்று நாட்களிலும், உப்பு, உறைப்பு இல்லாமல் புஜிக்க வேண்டும். மஹா குருக்கள் விஷயத்தில் 12-நாள் வரையில் நியமத்துடனிருக்கலாம்.*

आपस्तम्बः – अनशनानध्ययनाधःशय्योदकोपस्पर्शनान्याकालिकान्यनूचानेषु च द्व्यहं त्र्यहं षडहं द्वादशाहं वा(महा)गुरुष्वनशनवर्जं संवत्सरं मातरि पितर्याचार्य इत्येके

अनशनानध्ययनवर्जं, यावज्जीवं प्रेतपत्न्युदकोपस्पर्शनमेक-भुक्तमधः शय्यां ब्रह्मचर्यं क्षारलवणमधुमांसवर्जनं च इति । बोधायनश्च – संवत्सरं मातरि पितर्याचार्ये इति त्रिरात्रमक्षार लवणान्नभोजनमधः शयनं ब्रह्मचर्यं त्र्यहं षडहं द्वादशाहं वा संवत्सरं गुरुष्वेवमघोदकमितरेषु त्रिरात्रं यावज्जीवं प्रेतपत्नीति ।

ஆபஸ்தம்பர் :- உபவாஸம், அநத்யயநம் (வேதாத்யயநம் செய்யாமலிருத்தல்), பூமியில் படுத்தல், ஸ்நாநம் செய்தல் இவைகளை ஆகாலிகமாய் (மரணமடைந்த காலம் முதல் மறுநாள் அந்தக் காலம் வரையில்) அனுஷ்டிக்கவும். 7-தலைமுறைக்குட்பட்ட ஸாங்க வேதாத்யயநம் செய்தவர் விஷயத்திலும் 2-3, 6-12 நாள் வரையில் அனுஷ்டிக்கலாம். குருக்கள் விஷயத்தில் ஒரு வர்ஷம் வரையில் மாதா, பிதா, ஆசார்யன் இவர்கள் விஷயத்தில் உபவாஸம், அநத்யயநம் தவிர்த்து மற்ற நியமங்களை ஒரு வர்ஷம் அனுஷ்டிக்கவுமென்கின்றனர் சிலர். இறந்தவனின் பத்னீ (விதவை) உயிருள்ளவரையில் ஸ்நாநம், ஒருவேளை புஜித்தல், பூமியில் படுத்தல், ப்ரஹ்மசர்யம், உப்பு, உறைப்பு, தேன், மாம்ஸம் இவைகளை வர்ஜித்தல் என்ற நியமங்களை அனுஷ்டிக்க வேண்டும். போதாயனரும் :- மாதா, பிதா, ஆசார்யன் என்ற இவர்கள் விஷயத்தில் ஒரு வர்ஷம் வரையில். மூன்றுநாள் உப்பு, உறைப்பு இல்லாத அன்னத்தைப் புஜித்தல், பூமியில் படுத்தல், ப்ரஹ்மசர்யம் இவைகளை, அனுஷ்டிக்கவும். 3-நாள், 6-நாள், 12-நாட்களாவது அனுஷ்டிக்கவும். குருக்கள் விஷயத்தில் ஒரு வர்ஷம் வரையில். இவ்விதம் தர்ப்பணமும். மற்றவர் விஷயத்தில் மூன்று நாள். ம்ருதனின் பத்னீ உயிருள்ளவரையில் நியமங்களை அனுஷ்டிக்கவும்.

## अस्थिसञ्चयनक्रमः

अथास्थिसञ्चयनम् । तत्र पारस्करः – चतुर्थेऽहनि विप्रस्य षष्ठे वै क्षत्रियस्य तु । अष्टमे दशमे चास्थिसञ्चयः शूद्रवैश्ययोः इति ।

श्रीधरीये तु – चतुर्थे पञ्चमे चैव नवमैकादशे तथा। अस्थिसञ्चयनं कार्यं वर्णानामनुपूर्वशः इति। स्मृत्यन्तरेऽपि – चतुर्थे पञ्चमे चैव सप्तमे नवमे तथा। अस्थिसञ्चयनं कार्यमित्येवं विष्णुरब्रवीत् इति। सङ्ग्रहेऽपि – चतुर्थे सञ्चयः कार्यो ब्राह्मणस्याथ पञ्चमे। राज्ञो वैश्यस्य सप्ताहे शूद्रस्य नवमे दिने इति।

### அஸ்தி ஸஞ்சயந க்ரமம்

*இனி அஸ்தி ஸஞ்சயநம் சொல்லப்படுகிறது. அதில், பாரஸ்கரர் :- பிராம்ஹணனுக்கு 4வது நாளிலும், க்ஷத்ரியனுக்கு 6-வது நாளிலும், சூத்ரனுக்கு 8-ஆவது நாளிலும், வைச்யனுக்கு 10-ஆவது நாளிலும் அஸ்தி ஸஞ்சயநம் செய்யப்பட வேண்டும். ச்ரீதரீயத்தில் :- 4,5,9,11-ஆவது தினங்களில் க்ரமமாய் நான்கு வர்ணத்தார்களுக்கும் அஸ்தி ஸஞ்சயநம் செய்யப்பட வேண்டும் என்றுள்ளது. ஒரு ஸ்ம்ருதியில் : 4,5,7, 9-ஆவது தினங்களில் அஸ்தி ஸஞ்சயநம் செய்ய வேண்டுமென்றார் விஷ்ணு. ஸங்க்ரஹத்திலும் :- 4-ஆவது தினத்தில், ப்ராஹ்மணனுக்கும் 5-ஆவது தினத்தில் க்ஷத்ரியனுக்கும், 7-ஆவது தினத்தில் வைச்யனுக்கும், 9-ஆவது தினத்தில் சூத்ரனுக்கும் அஸ்தி ஸஞ்சயநம்.*

विष्णुरपि – चतुर्थे दिवसेऽस्थिसञ्चयनं कुर्युस्तेषां गङ्गांभसि प्रक्षेपः इति। स्मृतिरत्नेऽपि – एकाहमुपवासः स्यादश्नीयुर्लब्धमेव वा। गत्वाऽरण्ये चतुर्थेऽह्नि पूर्वाह्णे त्वस्थिसञ्चयः इति। स्मृत्यन्तरे – दिवैव तर्पणं कुर्यान्नापराह्णेऽस्थिसञ्चयः। न रात्रौ न च सन्ध्यायां तस्मात् पूर्वाह्ण एव सः इति। सङ्ग्रहे – चतुर्थेऽहनि विप्राणा मस्थिसञ्चयनं मतम्। पूर्वाह्णः शुभदः प्रोक्तो मध्याह्नो मध्यमः स्मृतः। अपराह्णं च रात्रिं च वर्जयेदस्थिसञ्चये इति। अन्यत्रापि – वर्णाशौचं त्रिधा कृत्वा प्रथमे सञ्चयः स्मृतः। द्वितीयभागे विप्राणां सञ्चयो मध्यमः स्मृतः। तृतीयभागे हीनं स्यादस्थिसञ्चयनं तथा

इति। श्रीधरीये – अस्थिसञ्चयनं कार्यं पूर्वाह्णे तु शुभावहम्। मध्याह्ने मध्यमं प्रोक्त मपराह्णे विनाशनम् इति।

**விஷ்ணுவும்** :- 4-வது நாளில் அஸ்தி ஸஞ்சயநம் செய்யவும். அஸ்திகளை கங்காஜலத்தில் போட வேண்டும். **ஸ்ம்ருதி ரத்னத்திலும்** :- ஒருநாள் முழுவது முபவாஸமிருக்கவும். யாசிக்காமல் கிடைத்ததையாவது சாப்பிடவும். 4-ஆவது நாளில் காட்டிற்குச் சென்று பகலின் முன் பாகத்தில் அஸ்தி ஸஞ்சயனத்தைச் செய்ய வேண்டும். **மற்றொரு ஸ்ம்ருதியில்** :- தர்ப்பணத்தைப் பகலிலேயே செய்ய வேண்டும். அபராஹ்ணத்தில் அஸ்தி ஸஞ்சயநம் கூடாது, ராத்ரியிலும் கூடாது, ஸந்த்யையிலும் கூடாது. ஆகையால் முற்பகலிலேயே அது செய்யப்பட வேண்டும். **ஸங்க்ரஹத்தில்** :- 4-ஆவது நாளில் ப்ராஹ்மணர்களுக்கு அஸ்தி ஸஞ்சயநம் விதிக்கப்பட்டது. முற்பகல் சுபகரமெனப்பட்டது. மத்யாஹ்னம் மத்யமமெனப் பட்டது. பிற்பகலையும், ராத்ரியையும் ஸஞ்சயநத்தில் விலக்கவும். **மற்றொரு ஸ்ம்ருதியிலும்** :- வர்ணங்களுக்குச் சொல்லப்பட்ட ஆசௌச காலத்தை மூன்று பாகமாக்கி, முதல் பாகத்தில் ஸஞ்சயநம் விதிக்கப்பட்டுள்ளது. 2-ஆவது பாகத்தில் ப்ராஹ்மணர்களுக்குச் செய்வது மத்யமம். 3-ஆவது பாகத்தில் செய்வது அதமமாகும். **ச்ரீதரீயத்தில்** :- அஸ்தி ஸஞ்சயநம் பூர்வாஹ்ணத்தில் செய்யப்பட வேண்டும். அது சுபகரமாகும். மத்யாஹ்னத்தில் மத்யமமாகும். அபராஹ்ணத்தில் நாசகரமாகும்.

विष्णुपुराणे – चतुर्थेऽहनि कर्तव्यं भस्मास्थिचयनं नृप इति। आपस्तम्बः – अपरेद्युस्तृतीयस्यां पञ्चम्यां सप्तम्यां वाऽस्थीनि सञ्चिन्वन्ति इति। अपरेद्युः - परस्मिन् दिवस इत्यर्थः। तृतीयस्यामित्यादि चानन्तरोक्तद्वितीयदिवसापेक्षया वेदितव्यम्, नत्वाद्यदिवसापेक्षया। अत एव भाष्यकारेण तृतीयस्यामित्यादिषु

व्युष्टायामित्यध्याहारः कृतः । तथा बोधायनः – संचयनमेकस्यां व्युष्टायां तिसृषु वा पञ्चसु वा सप्तसु वा इति ।

**விஷ்ணு புராணத்தில் :-** *ஓ அரசனே! ஸஞ்சயநத்தை 4-ஆவது நாளில் செய்ய வேண்டும்.* **ஆபஸ்தம்பர் :-** *"மறுநாளில், அல்லது மூன்ருவது நாளில், ஐந்தாவது நாளில், ஏழாவது நாளில் ஸஞ்சயநம் செய்ய வேண்டும்". 'அபரேத்யு:' என்ற பதத்திற்கு மறுநாளில் என்று பொருள். மூன்ருவது நாளில் என்பது முதலியவைக்கு, முன் சொல்லப்பட்ட 2-ஆவது நாளிலிருந்து என்று அறியவும். முதல் நாளிலிருந்து என்பது இல்லை. ஆகையாலேயே பாஷ்யகாரர் 'த்ருதீயஸ்யாம்' என்பவைகளில் 'வ்யுஷ்டாயாம்' என்று சேர்த்துள்ளார். அதாவது 3-ஆவது ராத்ரி விடிந்தபிறகு, அதாவது 4-ஆவது நாளில் என்பது பொருள். இதுபோலவே பஞ்சம்யாம், ஸப்தம்யாம் என்பவைகளிலுமென்றறியவும்.* **போதாயனர் :-** *முதல் ராத்ரி விடிந்த பிறகு, அல்லது 3,5,7 ராத்ரிகள் சென்ற பிறகு ஸஞ்சயநம் செய்யப்பட வேண்டும்.*

एवं बहुस्मृतिविहितत्वात् ब्राह्मणस्य चतुर्थेऽहन्येव अस्थिसंचयो युक्तः । कथञ्चित्तदसंभवे कात्यायनः – अपरेद्युस्तृतीये वा चतुर्थे पञ्चमेऽपि वा । अस्थिसंचयनं कुर्याद्दिने तद्गोत्रजैः सह इति । आश्वलायनः – चतुर्थे पञ्चमे वाऽस्थिसंचयः सप्तमेऽह्नि वा इति । सङ्ग्रहे – अस्थिसंचयनं युग्मे दिने प्राङ्नवमाद्भवेत् । केचिद्विषम एवात्र व्युष्टे तत्रेत्यनुक्तितः इति ।

*இவ்விதம் அநேக ஸ்ம்ருதிகளால் விதிக்கப்பட்டிருப்பதால் 4-ஆவது நாளிலேயே ஸஞ்சயநம் செய்வது யுக்தம். எவ்விதத்தாலும் அன்று செய்யமுடியாவிடில்,* **காத்யாயனர் :-** *மறுநாளில், அல்லது 3,4,5 ஆவது நாளில் ஜ்ஞாதிகளுடன் ஸஞ்சயநத்தைச் செய்யவும்.* **ஆச்வலாயனர் :** *4, அல்லது 5,7-ஆவது தினத்தில் ஸஞ்சயநம் செய்யப்பட வேண்டும்.*

ஸங்க்ரஹத்தில் :- இரட்டைப்படை நாளில் 9-ஆவது நாளுக்குள் செய்யப்பட வேண்டும். சிலர் ஒற்றைப்படை நாளில்தானென்கின்றனர். ஸூத்ரத்தில் 'வ்யுஷ்டாயாம்' என்று சொல்லாததால்.

व्यासः – बुधसोमौ शुभौ ज्ञेयौ मध्यमौ गुरुभार्गवौ। अर्कारिमन्दा निन्द्याः स्युः प्रशस्तं विषमेऽहनि। द्वितीयश्च चतुर्थश्च शुभदौ युग्मवासरौ। प्रशस्ततिथिवाराणां नक्षत्राणामसम्भवे। अस्थिसञ्चयनं कार्यं द्विजवाक्यानुशासनात्। यस्मिन् कस्मिन् दिने वाऽपि नैवाशौचं विलङ्घयेत्। आशौचादूर्ध्वभावी चेत् पुनर्दहनमाचरेत् इति। स्मृत्यन्तरेऽपि – अस्थिसंचयनं कर्म दशाहादूर्ध्वभावि चेत्। अस्थीनि पुनराहृत्य दाहयेद्याज्ञिकैः पुनः। पिण्डोदकं नवश्राद्धं पुनः कुर्याद्यथाविधि इति।

வ்யாஸர் :- புதவாரம், ஸோமவாரம் இவை சுபகரங்களென்றறியவும். குருவாரமும், ப்ருகுவாரமும் மத்யமங்கள். ரவிவாரம், மங்களவாரம், சனிவாரம் இவைகள் அதமங்கள். ஒற்றைப்படை நாளில் செய்வது ச்லாக்யம். 2-ஆவது, 4 ஆவது நாட்கள் சுபகரங்கள். ச்லாக்யமான திதி, வாரம், நக்ஷத்ரம் இவைகள் கிடைக்காவிடில், ப்ராஹ்மணர்களின் அனுஜ்ஞையினால் ஸஞ்சயநத்தைச் செய்யவும். எந்தத் தினத்திலாவது செய்யவும். ஆசௌசத்தைத் தாண்டக் கூடாது. ஆசௌச காலத்திற்கு மேலானால் மறுபடி தஹநத்தைச் செய்ய வேண்டும். மற்றொரு ஸ்ம்ருதியிலும் :- அஸ்தி ஸஞ்சயநம் 10-நாளைக்கு மேல் செய்ய நேர்ந்தால் அஸ்திகள் எடுத்து யாகார்ஹ காஷ்டங்களால் புநர்தஹநம் செய்யவும். உதக பிண்ட நவச்ராத்தங்களை விதிப்படி மறுபடி செய்யவும்.

एतत् पुनर्दाहविधानं द्वादशाहसपिण्डीकरणाभिप्रायम्। द्वादशाहव्यतिरिक्तकालान्तरसापिण्ड्ये तु दशाहादूर्ध्वमपि सपिण्डीकरणात् प्राक् शुभदिने संचयः कार्यः, सपिण्डीकरणात्

पूर्वमस्थिसंचयनं भवेत् इति स्मरणात् । तथा चाश्वलायनः – संचयनमूर्ध्वं दशम्याः कृष्णपक्षस्यायुजास्वेकनक्षत्रे इति । बोधायनोऽपि – एकस्यां व्युष्टायां तिसृषु पञ्चसु सप्तसु नवसु वैकादशसु वा युग्मा रात्रीरर्धमासान् मासानृतून् संवत्सरं वा संपाद्यास्थि सञ्चिनुयुः इति ।

*இவ்விதம் புநர்தஹநத்தை விதித்தது, 12-ஆவது நாளில் ஸபிண்டீகரணம் செய்யும் விஷயத்தைப் பற்றியது. 12-ஆவது நாளைத் தவிர்த்த வேறு காலத்தில் ஸாபிண்ட்யம் செய்யும் விஷயத்திலோவெனில், 10-ஆவது தினத்திற்குப் பிறகும், ஸபிண்டீகரணத்திற்கு முன் சுபதிநத்தில் ஸஞ்சயநத்தைச் செய்யவும், ''ஸபிண்டீகரணத்திற்கு முன் அஸ்தி ஸஞ்சயநம் செய்யப்பட வேண்டும்'' என்று ஸ்ம்ருதியிருப்பதால். ஆச்வலாயனர் :- 10-ஆவது நாளுக்குமேல், க்ருஷ்ண பக்ஷத்தின் ஒற்றைப்படைத் திதியில் ஏக நக்ஷத்ரத்தில் ஸஞ்சயநம். பூரம், உத்திரம், பூராடம், உத்திராடம், பூரட்டாதி, உத்திரட்டாதி, இவைகளைத் தவிர்த்த நக்ஷத்ரங்கள் ஏகநக்ஷத்ரங்களெனப்படுகின்றன. போதாயனரும் :- முதல் ராத்ரி விடிந்த பிறகு, 3,5,7,9, 11-ஆவது ராத்ரி விடிந்த பிறகாவது, இரட்டைப்படை நாட்கள் 15-நாட்கள், மாதம், ருது, வர்ஷம் இவைகளுக்குப்பிறகாவது அஸ்தி ஸஞ்சயநம் செய்யவும்.*

गृह्यपरिशिष्टे – अस्थिसंचयनं संवत्सरान्ते चेत् सापिण्ड्यमूर्ध्वं दशम्या युग्मासु तिथिष्वपि वा द्वादशाहे सापिण्ड्यं चेदन्तर्दशाहे चतुर्थषष्ठाष्टमदशमाहेष्वेकनक्षत्रे इति । अत्र दाहादिदिनसङ्ख्यानमाहिताग्नेः, अन्येषां मरणादि दाहादि वा । तथा ब्राह्मपुराणे – अनाहिताग्नेर्मरणादाहिताग्नेस्तु दाहतः । अस्थिसंचयनं कुर्यात् स्वशाखोक्तविधानतः इति । तथा अनग्निमत उत्क्रान्तेः साग्नेः संस्कारकर्मणः । शुद्धिः सञ्चयनं दाहान्मृताहस्तु यथातिथि इति ।

**க்ருஹ்ய பரிசிஷ்டத்தில்** *:- வர்ஷாந்தத்தில் ஸாபிண்ட்யம் செய்வதானால் 10-ஆவது நாளுக்குமேல் இரட்டைப்படைத் திதிகளில் ஸஞ்சயநத்தைச் செய்யவும். 12-ஆவது நாளில் ஸாபிண்ட்யம் செய்வதானால் 10-நாட்களுள் 4,6,8,10-ஆவது நாட்களுள் ஏக நக்ஷத்ரத்தில் ஸஞ்சயநத்தைச் செய்யவும். இவ்விஷயத்தில், தஹநதிநம் முதல் கணக்கு ஆஹிதாக்நி விஷயத்தில் மற்றவர்களுக்கு மரண திநம் முதல், அல்லது தஹந திநம் முதல். அவ்விதம்* **ப்ராஹ்ம புராணத்தில்** *:- அநாஹிதாக்னிக்கு மரண திநம் முதல் கணக்கு, ஆஹிதாக்னிக்கோவெனில் தஹந திநம் முதல் கணக்கு. அஸ்தி ஸஞ்சயநத்தை அவரவர் சாகையில் சொல்லிய விதிப்படி செய்யவும். அவ்விதமே, அநாஹிதாக்னிக்கு மரணம் முதலாகவும், ஆஹிதாக்னிக்கு ஸம்ஸ்கார திநம் முதலாகவும் கணக்கிட்டு ஆசௌச நிவ்ருத்தி. தஹநதிநம் முதல் கணக்கிட்டு ஸஞ்சயநம். ச்ராத்த திநமோவெனில் மரித்த திதியே.*

स्मृत्यन्तरे – अनग्नेर्मरणात् साग्नेराशौचं दाहतः परम्। तयोः संचयनं दाहात् मृताहस्तु तिथिः स्मृता इति । अस्थिदाहे प्रतिकृतिदाहे वा सद्यः सञ्चयः कार्यः, चतुर्थेऽहनि विप्राणा मस्थिसञ्चयनं भवेत्। अस्थ्नां प्रतिकृतेर्दाहे सद्यः सञ्चय इष्यते। यदा पलाशवल्काद्यैः कृत्वा प्रतिकृतिं दहेत् । भस्मास्थिवत् सञ्चिनुयात् सद्यो मन्त्रान् जपेत्तु वा' इति स्मरणात्। विष्णुः :- पलाशशरीरं दग्ध्वा समूह्याम्भसि निक्षिपेत् इति। सद्य एव मन्त्रजपं कृत्वा भस्मोद्धृत्याम्भसि क्षिपेत् इत्यर्थः।

**மற்றொரு ஸ்ம்ருதியில்** *:- அநாஹிதாக்னி விஷயத்தில் மரண திநம் முதற்கொண்டும், ஆஹிதாக்னி விஷயத்தில் தஹந திநம் முதற்கொண்டும் ஆசௌச திநக் கணக்கு. அவ்விருவருக்கும் தஹந திநம் முதற்கொண்டே கணக்கிட்டு ஸஞ்சயநம். மரண திதியே ச்ராத்த திதியெனப்பட்டது. அஸ்தி தஹநம் செய்தாலும், ப்ரதி*

க்ருதி தஹநம் செய்தாலும், உடனேயே ஸஞ்சயநம் செய்யப்பட வேண்டும். "4-ஆவது நாளில் ப்ராஹ்மணர்களுக்கு அஸ்தி ஸஞ்சயநம் விஹிதம். அஸ்தி தாஹத்திலும், ப்ரதி க்ருதி தாஹத்திலும் அன்றே ஸஞ்சயநம் விதிக்கப்படுகிறது. பலாசவல்க்கம் (புரசம்பட்டை) முதலியவைகளால்ப்ரதிக்ருதி செய்து தஹநம் செய்தால், சாம்பலை அஸ்தியைப் போல் பாவித்து ஸஞ்சயநம் செய்யவும் அல்லது ஸஞ்சயந மந்த்ரங்களை ஜபிக்கவும்" என்று ஸ்ம்ருதியிருப்பதால், விஷ்ணு:- "பலாசபர்ண ப்ரதிக்ருதி தாஹம் செய்தால், அந்தச் சாம்பலைச் சேர்த்தெடுத்து ஜலத்தில் போடவும்." உடனேயே மந்த்ரஜபம் செய்து சாம்பலை எடுத்து ஜலத்தில் போடவேண்டுமென்பது பொருள்.

पुनः संस्कारविषयविशेषे संचयननिषेध उक्तः स्मृत्यन्तरे – अतीतेऽब्दे तु संस्कारे एकाहात् पिण्डमर्पयेत् । श्राद्धं दद्याद्द्वितीयेऽह्नि तृतीयेऽह्नि सपिण्डनम् । नास्थिसञ्चयनं कुर्यान्न च चर्माधिरोहणम् । पुत्रादिना तु कर्तव्यं पुनः संस्कारकर्मणि इति । अत्रादिशब्देन दौहित्रादयो गृह्यन्ते ॥ तद्व्यतिरिक्तसंस्कर्तृविषये अब्दात् परतः पुनः संस्कारे सति संचयनमन्त्रजपोऽपि न कार्य इति गम्यते । स्मृत्यन्तरे – त्रिवर्षादि दहेदेनमेकर्चा व्रतबन्धनात् । पञ्चमाद्यस्थिचयनं श्राद्धं कुर्याच्चतुर्दिने इति । पञ्चमाब्दात् पूर्वं नास्थिसंचयनमित्यर्थः ।

புநஸ்ஸம்ஸ்காரத்திலும் ஒரு விஷயத்தில் ஸஞ்சயந நிஷேதம் சொல்லப்பட்டுள்ளது. ஒரு ஸ்ம்ருதியில்:- "ஒரு வர்ஷம் அதிக்ரமித்த பிறகு ஸம்ஸ்காரம் செய்தால் முதல் நாளில் பிண்டதாநம் செய்யவும். 2.ஆவது நாளில் ஏகோத்திஷ்டத்தைச் செய்யவும். 3-ஆவது நாளில் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். அஸ்தி ஸஞ்சயநமில்லை. சர்மாதிரோஹணமுமில்லை. ஆனால், புத்ரன் முதலிய கர்த்தா செய்யவேண்டும் புநஸ் ஸம்ஸ்காரத்தில்" என்று.

இதில் உள்ள ஆதி சப்தத்தால் தௌஹித்ரன் முதலியவர்கள் சொல்லப்படுகின்றனர். அவர்களைத் தவிர்த்த ஸம்ஸ்கர்த்தாவின் விஷயத்தில் ஒரு வர்ஷத்திற்குப் பிறகு புநஸ்ஸம்ஸ்கார விஷயத்தில், ஸஞ்சயந மந்த்ரஜபங்கூடச் செய்யப்பட வேண்டியதில்லை என்று அறியப்படுகிறது. (சர்மாதிரோஹணமென்பது, 10-ஆவது நாளில் சாந்திஹோமகாலத்தில் தோலின் மேல் உட்காருவது). **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** ப்ரேதனை, 3-ஆவது வயது முதல் உபநயநம் வரையில், ஏகர்ச்ச விதியால் தஹிக்கவும். 5-ஆவது வயது முதல் அஸ்தி ஸஞ்சயநத்தைச் செய்யவும். 4-ஆவது நாளில் ச்ராத்தத்தைச் செய்யவும். 5-ஆவது வயதிற்குமுன் அஸ்தி ஸஞ்சயநமில்லையென்பது பொருள்.

गर्गः – अन्तर्दशाहे सम्प्राप्ते दर्शे पिण्डान् समापयेत् । अस्थिसंचयनं चैव दर्शात् पूर्वं समाचरेत् । प्रथमेऽह्नि द्वितीयेऽह्नि यदि दर्शस्तदैव हि । अस्थिसंचयनं कुर्यादित्येषा वैष्णवी स्मृतिः इति । दर्शग्रहणं सङ्क्रान्तेरप्युपलक्षणम् । अत्र श्वादिदूषणे स्मृत्यन्तरम् – श्वसूकरसृगालाद्यैर्ग्रामसूकरकुक्कुटैः । शवास्थिभस्मदेहानां स्पर्शनं चेत् प्रमादतः । गव्यैः प्रक्षाल्य कृच्छ्राणां त्रितयं च समाचरेत् इति । अन्यत्र तु – श्वभिर्गर्दभचण्डालैः शवास्थि स्पृश्यते यदि । पञ्चपञ्चचतुः पञ्चकृच्छ्राणां त्रितयं चरेत् इति । पञ्च पञ्चेति पञ्चविंशतिः, चतुः पञ्चेति विंशतिः, पञ्चविंशतिं विंशतिं त्रीन् प्राजापत्यादिकृच्छ्रान् श्वादिस्पर्शे यथाक्रममाचरेदित्यर्थः । अन्याशौचिस्पर्शे कृच्छ्रत्रयम्, 'अस्थ्नामाशौचिनां स्पर्शे कृच्छ्राणां त्रितयं चरेत् इति स्मरणात् ।

**கர்கர்:-** பத்து நாட்களுள் தர்சம் வந்தால் பிண்டங்களை ஸமாப்தி செய்யவேண்டும். ஸஞ்சயநத்தையும் தர்சத்திற்கு முன்பே செய்யவேண்டும். முதல் நாளிலோ, 2 ஆவது நாளிலோ தர்சம் வந்தால், அப்பொழுதே அஸ்தி ஸஞ்சயநத்தைச் செய்யவேண்டும், என்பது விஷ்ணு

ஸ்ம்ருதி. தர்சமென்றது ஸங்க்ரமணத்திற்கு முபலக்ஷணம். இதில், நாய் முதலியதால் அசுத்தி ஏற்படும் விஷயத்தில், ஒரு ஸ்ம்ருதி:- "நாய், பன்றி, நரி முதலியவைகளாலும், ஊர்ப்பன்றி, கோழி இவைகளாலும், சவம், அஸ்தி, சாம்பல், தேஹம் இவைகளுக்குக் கவனமில்லாததால் ஸ்பர்சமேற்பட்டால், பஞ்சகவ்யங்களால் அலம்பி, 3 க்ருச்ரங்களையுமனுஷ்டிக்கவும். மற்றொரு ஸ்ம்ருதியில்:- நாய், கழுதை, சண்டாளன் இவர்களால் சவாஸ்தி ஸ்பர்ச்சிக்கப்பட்டால், முறையே 25, 20, 3 க்ருச்ரங்களை அனுஷ்டிக்கவும். வேறு ஆசௌசமுள்ளவன் ஸ்பர்சித்தால் 3-க்ருச்ரங்களை அனுஷ்டிக்கவும். 'ஆசௌசிகள் அஸ்திகளை ஸ்பர்சித்தால் 3-க்ருச்ரங்களைச் செய்யவும்' என்று ஸ்ம்ருதி உள்ளது.

## अस्थिनिक्षेपप्रकारः

खननप्रकारमाह बोधायनः – पुरुषसंमितं गजसंमितं वा गर्तं खात्वा तस्मिन्नस्थिकुम्भमवधाय पुनरभ्यर्च्य मृत्तिकादिभिः प्रच्छादयेत्तद्यावद्वसति तावत् स्वर्गे महीयते इति । कात्यायनः – शमीपलाशशाखाभ्यामुद्धृत्यास्थीनि भस्मतः । आज्येनाभ्यज्य गव्येन सेचयेद्गन्धवारिणा । मृत्पात्रसंपुटे कृत्वा वस्त्रेण परिवेष्ट्य वा । देशे तु कुशदर्भाढ्ये निखनेद्दक्षिणामुखः इति । वैखानसे – चिताया दक्षिणे पार्श्वे जानुदघ्नं खात्वा गर्ते कुम्भं निदध्यात् इति । स्मृत्यन्तरे च – प्रेतस्यास्थीनि संचित्य कुम्भे तानि निधाय च । घृतेन गन्धतोयैश्च सिक्त्वा कुम्भं निधापयेत् इति ।

### அஸ்தி நிக்ஷேப ப்ரகாரம்

அஸ்தியை வைப்பதற்காகக் குழியைக்கெல்லும் ப்ரகாரத்தைச் சொல்லுகிறார். போதாயனர்:- மனிதனளவுள்ளதாய், அல்லது யானை அளவுள்ளதாய், குழியைப் பறித்து, அதில் அஸ்திகளுள்ள குடத்தை வைத்து, மறுபடி பூஜித்து, மண் முதலியவைகளால்

மறைக்க வேண்டும். அது எவ்வளவு காலம் வரையில் குழியில் இருக்கின்றதோ அவ்வளவு காலம் வரையில், ம்ருதன் ஸ்வர்க்கத்தில் சிறப்பை அடைகிருன். **காத்யாயனர்:-** வன்னி, புரசு, இவைகளின் கிளைகளால் சாம்பலினின்றும் அஸ்திகளை எடுத்து, பசுவின் நெய் தடவி, வாஸனையுள்ள ஜலத்தால் நனைக்கவும். மண்பாத்ரத்திற்குள் வைத்து மூடி, அல்லது வஸ்த்ரத்தில் வைத்துச்சுற்றி குசங்களும், தர்ப்பங்களும் நிறைந்த இடத்தில் தெற்கு நோக்கியவனுய்ப் புதைக்க வேண்டும். **வைகாநஸத்தில்:-** ப்ரேதனின் அஸ்திகளை எடுத்து அவைகளைக் குடத்தில் வைத்து, நெய்யாலும், வாஸனையுள்ள ஜலங்களாலும் நனைத்துக் குழியில் வைக்க வேண்டும்.

ब्राह्मे – अस्थीन्यादाय कुम्भे तु स्थाप्य गर्ते विनिक्षिपेत् । आविकाजिनवस्त्रैर्वा क्षौमैः कौशेयपट्टकैः । कुशरज्वा दृढं बध्वा गङ्गाम्भसि विनिक्षिपेत् । अघमर्षणसूक्तं च यावन्मज्जति तज्जपेत् । यावदस्थि मनुष्याणां गङ्गातोयेषु तिष्ठति । तावद्वर्षसहस्राणि स्वर्गलोके महीयते इति । पाद्मे च – अस्थ्नां कृत्वाऽथ संशुद्धिं केशवाद्यैश्च नामभिः । पञ्चगव्येषु निक्षिप्य गन्धाद्यैः सम्प्रपूजयेत् । द्विजानुज्ञामवाप्यैव गङ्गायां सुसमाहितः । सङ्कल्प्य प्रयतस्तस्य चोच्चरन् गोत्रनामनी । अघमर्षणसूक्तेन धमर्यैव नमोऽस्त्विति । विसर्जयेत्ततोऽस्थीनि यावदस्थीनि तज्जपेत् इति ।

**ப்ராம்ஹத்தில்:-** அஸ்திகளை எடுத்து, குடத்தில் வைத்து, குழியில் வைக்கவேண்டும். அல்லது கம்பளி, மான்தோல், வஸ்த்ரம், நார்மடி, பட்டு இவைகளுள் ஒன்றில் வைத்து, குசக்கயிற்றிஞல் நன்ருய்க்கட்டி, கங்காஜலத்தில் போடவும். அது முழுகும் வரையில் அகமர்ஷண ஸூக்தத்தை ஜபிக்கவும். மனுஷ்யனின் அஸ்தி எவ்வளவு காலம் வரையில் கங்காஜலத்திலிருக்கின்றதோ அவ்வளவு பல்லாயிரம் வர்ஷங்கள் வரையில் ப்ரேதன் ஸ்வர்க்கலோகத்தில்

சிறப்புறுகிறுன். **பாத்மத்திலும்:-** பிறகு, அஸ்திகளுக்குச் சுத்தியைச் செய்து, கேசவாதி நாமங்களால், பஞ்சகவ்யங்களில் போட்டு, சந்தநம் முதலியவைகளால் நன்கு பூஜிக்கவும். ப்ராம்ஹணர்களின் அனுஜ்ஞையை அடைந்து கவனமுடையவனுய், சுத்தனுய், ஸங்கல்பம் செய்து, ப்ரேதனின் கோத்ரநாமங்களைச் சொல்லி, அகமர்ஷண ஸூக்தத்துடன், 'தர்மாயநமோஸ்து' என்று சொல்லி, கங்கையில் அஸ்திகளை விடவேண்டும். அஸ்திகள் முழுகும் வரையில் முன்சொல்லியதை ஜபிக்கவும்.

ब्रह्मपुराणे – अस्थीनि मातापितृमातुलादेर्दशाश्वमेधे तु नरो नभस्ये । कृष्णाष्टम्यां पञ्चगव्यैर्निषिच्य हिरण्य मध्वाज्यतिलैर्विकीर्य ॥ पुण्ये तु मृत्पिण्डपुटे निधाय नमोऽस्तु धर्माय इति ब्रुवंश्च । क्षिपेज्जले पितृतीर्थेन भक्त्या स्नात्वाऽथ सूर्यं प्रयतः प्रपश्येत् । यथाशक्त्या दक्षिणां चाथ दत्वा पितॄन् सर्वान् ब्रह्मलोकं नयेत् सः इति । मात्स्ये – गृहीत्वाऽस्थीनि गङ्गायां निक्षिपेद्भुवि वा क्षिपेत् । तीर्थान्तरे कुरुक्षेत्रे देशे वा सकुशे शुचौ इति । योगयाज्ञवल्क्यः - गङ्गायां यमुनायां वा कावेर्यां वा शुतुद्रुतौ । सरस्वत्यां विशेषेण ह्यस्थीनि विसृजेत् सुतः इति ।

**ப்ரம்ஹ புராணத்தில்:-** மனிதன், மாதா, பிதா, மாதுலன் முதலியவர்களின் அஸ்திகளை, தசாச்வமேத கட்டத்தில், பாத்ரபதமாஸத்தில், க்ருஷ்ண பக்ஷாஷ்டமியில் பஞ்சகவ்யங்களால் நனைத்து, பொன், தேன், நெய், எள் இவைகளை அஸ்திகளின் மேல்போட்டு, சுத்தமான மண்பாத்ரத்தில் வைத்து, 'நமோஸ்து தர்மாய' என்று சொல்லி, பக்தியுடன் பித்ருதீர்த்தத்தால் ஜலத்தில் சேர்க்க வேண்டும். பிறகு, முழுகி, சுத்தனுய் ஸூர்யனைப் பார்க்கவும். யதாசக்தி தக்ஷிணையைக் கொடுத்தால், பித்ருக்களெல்லோரையும் ப்ரம்ஹலோகத்தை அடையச் செய்வான். **மாத்ஸ்யத்தில்:-** அஸ்திகளை க்ரஹித்துக்

கங்கையில் போடவும். அல்லது பூமியில் வைக்கவும். வேறு புண்ய க்ஷேத்ரத்திலாவது, குருக்ஷேத்ரத்திலாவது, குசங்களுடன் கூடிய சுத்த ப்ரதேசத்திலாவது வைக்கவும். **யோகயாஜ்ஞவல்க்யர்:-** கங்கையிலாவது, யமுனையிலாவது, காவேரியிலாவது, சுதுத்ருதியிலாவது, ஸரஸ்வதியிலாவது அஸ்திகளைப் புத்ரன் விட வேண்டும்.

ब्रह्मकैवर्ते – कावेरीतीरवासी च तत्र दग्धो मृतोऽपि वा। कृताम्बुः सञ्चितास्थिर्वा धूतपाप्मा दिवं व्रजेत् इति। शाण्डिल्यः – द्वारवत्यां सेतुबन्धे गोदावर्यां च पुष्करे। अस्थीनि विसृजेद्यस्य स मृतो मुक्तिमाप्नुयात् इति।

**ப்ரம்ஹகைவர்த்தத்தில்:-** காவேரீ தீரத்தில் வஸித்தவனும், அதில் தஹிக்கப்பட்டவனும், அதில் இறந்தவனும், காவேரியில் தர்ப்பணம் செய்யப் பட்டவனும், அதில் ஸஞ்சயநம் செய்யப்பட்டவனும், பாபங்களைத் தொலைத்து ஸ்வர்க்கத்தை அடைவான். **சாண்டில்யர்:-** த்வாரவதியிலாவது, ஸேதுவிலாவது, கோதாவரியிலாவது, புஷ்கரத்திலாவது, எவனுடைய அஸ்திகளை விடுகின்றுனோ அந்த ப்ரேதன் மோக்ஷத்தை அடைவான்.

सङ्ग्रहे – स्त्रिया अनाहिताग्नेश्च कुम्भान्तस्थोऽस्थिसंचयः। निवापान्तो हविर्यज्ञयाजिनः सोमयाजिनः। पुनर्दाहावधिर्लोष्ट-चितिरग्निचितः पुनः। निवापो न पुनर्दाहे लोष्टचित्यां न चोभयम्। केचिन्निवापमिच्छन्ति ह्युभयत्राविरोधतः इति। अयमर्थः – अनाहिताग्नेराहिताग्न्यनाहिताग्निपत्नीनां च पलाशमूले वा कुम्भं निधाय इत्येवमन्तमेव कर्तव्यम्, कर्ष्वादि तु तदङ्गत्वात् क्रियत एव। हविर्यज्ञयाजिनो निवपनान्तम्, सोमयाजिनः पुनर्दहनान्तं कर्तव्यम्, महाग्निचितः काठकाग्निचितश्च लोष्टचयनान्तमिति।

ஸங்க்ரஹத்தில்:- ஸ்த்ரீக்கும், அநாஹிதாக்னிக்கும், குடத்தைப் பூமியில் புதைப்பது வரையுள்ளது ஸஞ்சயநம். ஹவிர்யஜ்ஞயாஜிக்கு நிவபநம் வரையிலுள்ளது. ஸோமயாகம் செய்தவனுக்குப் புநர்தஹநம் வரையுள்ளது. சயநம் செய்தவனுக்கு லோஷ்டசிதி வரையிலுள்ளது. புநர்தஹநம் செய்யும் விஷயத்தில் நிவபநம் கிடையாது. லோஷ்டசிதி செய்யும் விஷயத்தில் நிவபநம் புநர்தாஹம் என்ற இரண்டுமில்லை. சிலர் இரண்டு விஷயங்களிலும் நிவபநம் செய்யலாம். விரோதமில்லாததால் என்கின்றனர். இதில் இவ்விதம் அர்த்தம்:- ''அநாஹிதாக்னிக்கும், ஆஹிதாக்னி, அநாஹிதாக்னி இவர்களின் பத்நிகளுக்கும் 'பலாச வ்ருக்ஷத்தின் அடியிலாவது அஸ்திகும்பத்தை வைத்து' என்று சொல்லப்பட்டுள்ளவை வரையில் தான் செய்யவேண்டும். 'கர்ஷூ' முதலியதை அதற்கு அங்கமாகியதால் செய்யவேண்டும். ஹவிர்யஜ்ஞயாஜிக்கு நிவபநம் வரையில் செய்யவேண்டும் ஸோமயாகம் செய்தவனுக்குப் புநர்தஹநம் வரையில் செய்யவேண்டும். மஹாக்னி சயநம் செய்தவனுக்கும், காடகாக்னிசயநம் செய்தவனுக்கும் லோஷ்டசயநம் வரையில் செய்யவேண்டும்'' என்று.

## अस्थिसञ्चयने वारादिदोषः ।

अस्थिसंचयने वारनक्षत्रनिषेधो यमेन दर्शितः - भौमार्कमन्दवारेषु तिथियुग्मेषु वर्जयेत् । वर्जयेदेकपादृक्षे द्विपादृक्षेऽस्थिसंचयम् । प्रदातृजन्मनक्षत्रे त्रिपादृक्षे विशेषतः इति । स्मृतिरत्ने – नन्दायां भार्गवेऽर्के च चतुर्दश्यां त्रिजन्मसु । बार्हस्पत्ये तथाऽऽश्लेषे पुष्ये हस्ते तथैव च । नास्थिसंचयनं कुर्यात् कुलक्षयकरं हि तत् । फल्गुनी द्वयमाषाढद्वयं प्रोष्ठपदद्वयम् । षड्भ्योऽन्यत्र तु नक्षत्रे ह्यस्थिसंचयनं भवेत् इति ।

**அஸ்திஸஞ்சயநத்தில் வாராதிதோஷம்**

*அஸ்திசஞ்சயநத்தில், வாரம், நக்ஷத்ரம் இவைகளின் நிஷேதம்,* **யமனுல்** *சொல்லப்பட்டுள்ளது:- அங்காரகன், ஸூர்யன், சனி இவர்களின் வாரங்களிலும், இரட்டைப் படைத் திதிகளிலும், ஒரு பாத நக்ஷத்ரம், 2-பாத நக்ஷத்ரம், கர்த்தாவின் ஜன்மநக்ஷத்ரம், 3-பாத நக்ஷத்ரம் இவைகளிலும் ஸஞ்சயநத்தை தவிர்க்கவும்.* **ஸ்ம்ருதிரத்னத்தில்:-** *நந்தாதிதியிலும், சுக்ரவாரத்திலும், பானுவாரத்திலும், சதுர்தசியிலும், ஜன்மாநுஜன்ம த்ரிஜன்மங்களிலும், குருவாரத்திலும், ஆச்லேஷம், புஷ்யம், ஹஸ்தம் இவைகளிலும் ஸஞ்சயநம் செய்யக்கூடாது. செய்தால், அது குலக்ஷயகரமாகும். பூரம், உத்திரம், பூராடம், உத்திராடம், பூரட்டாதி, உத்திரட்டாதி என்ற 6-நக்ஷத்ரங்களைத் தவிர்த்த நக்ஷத்ரத்தில் ஸஞ்சயநம் செய்யப்படவேண்டும்.*

गार्ग्यः – भद्रे त्रिपदनक्षत्रे भृग्वङ्गारबृहस्पतौ । दहनं मरणं चास्थिचयनं त्रिगुणं भवेत् इति । स्मृत्यन्तरेऽपि – गुरुशुक्रारशन्यर्के नन्दायां च त्रिजन्मसु । उत्तराहस्तचित्रासु पुष्ये नैवास्थिसंचयः इति । श्रीधरीये – अस्थिसंचयनं कार्यं जन्मत्रयविवर्जितम् । पूर्णायां च विशेषेण नन्दायां च विवर्जयेत् इति । प्रतिपत् षष्ठ्येकादश्यो नन्दाः । आत्रेये – कालेऽल्पदोषे कुर्वीत त्याज्यं दोषाधिकेऽशुभम् इति । श्रीधरीयेऽपि – दिवसा गुणदोषाभ्यां संपृक्ता हि परस्परम् । केवलं गुणयोगो हि देवानामपि दुर्लभः इति ।

**கார்க்யர்:-** *பத்ரதிதியிலும், 3-பாதநக்ஷத்ரத்திலும், சுக்ரவாரம், அங்காரகவாரம், குருவாரம் இவைகளிலும் மரணமானுலும், தஹநமானுலும், ஸஞ்சயநமானுலும், அது 3-மடங்காகும். (கூடாதென்பது பொருள்) ஓர்* **ஸ்ம்ருதியிலும்:-** *குரு, சுக்ரன், செவ்வாய், சனி, ரவி*

இவர்களின் வாரத்திலும், நந்தாதிதியிலும், த்ரிஜன்ம நக்ஷத்ரங்களிலும், 3-உத்திரங்கள், ஹஸ்தம், சித்ரை, புஷ்யம் இவைகளிலும் ஸஞ்சயநம் கூடாது. ச்ரீதரீயத்தில்:- த்ரிஜன்மங்களில் ஸஞ்சயநம் கூடாது. பூர்ண திதிகளிலும் (பஞ்சமீ, தசமீ, பூர்ணிமா, தர்சம்) நந்தாதிதியிலும் ஸஞ்சயநம் கூடாது. ப்ரதமா, ஷஷ்டீ, ஏகாதசீ இவை நந்தைகள். ஆத்ரேயத்தில்:- ஸ்வல்ப தோஷமுள்ள காலத்தில் செய்யவும். அதிக தோஷமுள்ள காலத்தில் அசுபத்தைச் செய்யக்கூடாது. ச்ரீதரீயத்திலும்:- தினங்களெல்லாம் குணங்களுடனும் தோஷங்களுடனும் பரஸ்பரம் சேர்ந்தேயுள்ளன. குணங்கள் மட்டில் சேர்ந்துள்ளது தேவர்களுக்கும் கிடைப்பதரிது.

हारीतः – कुर्वीत सर्वकर्माणि ब्राह्मणानामनुज्ञया । ब्राह्मणैरभ्यनुज्ञानाद्दोषो नश्यत्यसंशयम् इति । गार्ग्यः – शुक्रादिशुभवाराश्च नन्दा चैव चतुर्दशी । उत्तरात्रयरोहिण्यः पूर्णचन्द्रा च जन्म च । एतेष्वपि च कर्तव्यं मातापित्रोर्विशेषतः । अन्येषां नाति दोषः स्यात् प्रत्यक्षमरणे नृणाम् इति । स्मृत्यन्तरे च – जन्मत्रयं संचयने श्राद्धे च दहने गुरोः । नैव दोषावहं प्रोक्त मन्येषामपि सर्वदा इति । प्रत्यक्षेऽपि पितृमातृव्यतिरिक्तविषये शौक्रं वर्ज्यमेव, शौक्रं पित्रोर्न दोषाय इति पित्रोरेवावर्जनीयत्वस्मरणात्, सर्वदा शुक्रवारस्तु वर्जनीयः प्रयत्नतः इति स्मरणाच्च ।

ஹாரீதர்:- கர்மங்களெல்லாவற்றையும், ப்ராம்ஹணர்களின் அனுஜ்ஞையினால் செய்யவும். ப்ராம்ஹணர்களால் அனுஜ்ஞை செய்யப்பட்டால் தோஷம் விலகிவிடும். ஸம்சயமில்லை. கார்க்யர்:- சுக்ரவாரம் முதலிய சுபவாரங்கள், நந்தாதிதி, சதுர்தசீ, 3-உத்தரநக்ஷத்ரங்கள், ரோஹிணீ, பூர்ணிமா, ஜன்ம நக்ஷத்ரம் என்ற இவைகளிலும் மாதா பிதாக்களுக்குச் செய்யலாம். அன்யர் விஷயத்திலும், ப்ரத்யக்ஷ மரணத்தில் அதிக தோஷமில்லை. ஒரு ஸ்ம்ருதியில்:- த்ரிஜன்ம

நக்ஷத்ரங்கள், குருவின் ஸஞ்சயநம், ச்ராத்தம், தஹநம் இவைகளில் தோஷத்தைச் செய்வதாயாகாது என்று சொல்லப்பட்டுள்ளது. இதரர்களுக்குமப்படியே. எப்பொழுதும் ப்ரத்யக்ஷ விஷயத்திலும், மாதா பித்ருக்களைத் தவிர்த்தவர்களின் விஷயத்தில் சுக்ரவாரம் தவிர்க்கத் தகுந்ததே. 'சுக்ரவாரம் மாதா பித்ரு விஷயத்தில் தோஷாவஹமல்ல' என்று, மாதா பித்ரு விஷயத்தில் மட்டில் வர்ஜிக்கவேண்டாமென்றும் 'எப்பொழுதும் சுக்ரவாரத்தை அவச்யம் வர்ஜிக்க வேண்டும்' என்றும் ஸ்ம்ருதி உள்ளது.

## शवाग्न्यनुगतौ प्रायश्चित्तम् ।

श्मशानाग्न्यनुगतौ प्रायश्चित्तमाह सङ्ग्रहकारः – नष्टे शवाग्नौ तद्भस्म संस्पृश्यारणिमन्थनम् । लौकिकाग्न्याहृतिः स्मार्ते सर्वचित्तं द्वयोः समम् इति । आहिताग्नेर्मथिताग्निः, अनाहिताग्ने लौकिकाग्निः, उभयत्र सर्वप्रायश्चित्तं सममित्यर्थः । अत्र विशेषमाह बोधायनः – अथ यद्युपनयनाग्निः विवाहाग्निः जातकर्माग्निः श्मशानाग्निराचतुर्थादादशाहादास्थिसंञ्चयनादनुगतः स्यात् अपहता असुराः इति प्रोक्ष्य क्षिप्रं भस्मसमारोपणम्, 'अयं ते योनिर्ऋत्वियः' इति समिधि समारोप्य, लौकिकाग्निमाहृत्य समिधमादधाति आजुह्वानः, उद्बुध्यस्वाग्ने, इति द्वाभ्यां संपरिस्तीर्य प्रायश्चित्तं जुहोति अयाश्चाग्ने पञ्चहोत्रा ब्राह्मण एकहोता मनस्वती मिन्दाहुतिर्महाव्याहृति र्व्याहृतयश्च प्रायश्चित्तं जुहुयात् इति ।

**சவாக்னி அணைந்தால் ப்ராயச்சித்தம்:-** ச்மசாநாக்னி அணைந்து போனால் ப்ராயச்சித்தத்தைச் சொல்லுகிறார். ஸங்க்ரஹகாரர்:- ''சவாக்னி நஷ்டமானால் அந்தப் பஸ்மத்தைத் தொட்டு அரணியைக் கடையவும். ஸ்மார்த்தாக்னி விஷயத்தில் லௌகிகாக்னியைக்

கொண்டுவரவும். ஸர்வப்ராயச்சித்தம் இரண்டிலும் ஸமானம்.'' ஆஹிதாக்னிக்கு மதிதாக்னி (கடைந்தெடுத்தது) அநாஹிதாக்னிக்கு லௌகிகாக்னி, இரண்டிலும் ஸர்வப்ராயச்சித்தம் ஸமாநமென்பது பொருள். இதில் விசேஷத்தைச் சொல்லுகிருர், போதாயனர்:- ''உபநயநாக்னி, விவாஹாக்னி, இவைகள் 4-நாட்களுக்குள்ளும், ஜாதகர்மாக்னி, 10-நாட்களுக்குள்ளும், ச்மசாநாக்னி ஸஞ்சயநத்திற்குள்ளும் அநுகதமாஞல், 'அபஹதா:' என்ற மந்த்ரத்தால் ப்ரோக்ஷித்து, உடனே பஸ்மத்தை 'அயம்தே' என்ற மந்த்ரத்தால் ஸமித்தில் ஸமாரோபணம் செய்து, லௌகிகாக்னியைக் கொண்டுவந்து, அதில் ஸமித்தை 'ஆஜுஹ்வாந:, உத்புத்யஸ்வ' என்ற மந்த்ரங்களால் வைத்து, பரிஸ்தரணம் செய்து, ப்ராயச்சித்த ஹோமம் செய்யவும், அயாச்ச முதலிய மந்த்ரங்களால்'' என்று.

सूत्रमिदं व्याख्यातं पितृमेधसारकृता – यदि श्मशानाग्निरनुगतः स्यात्ततः सङ्कल्प्य, अपहता असुराः इति तद्भस्म प्रोक्ष्य, अयं ते योनिर् ऋत्वियः इति समिधि समारोप्य लौकिकाग्निमाहृत्य प्रतिष्ठाप्य, आजुह्वानः, उद्बुध्यस्वाग्ने इति द्वाभ्यां तां समिधमाधाय परिस्तीर्य आज्यं दर्वीं च संस्कृत्य परिषिच्य, अयाश्च अग्निर्होता इति द्वाभ्यां, ब्राह्मण एकहोता इत्यनुवाकेन च प्रतिवाक्यचतुष्टयं मनो ज्योतिर्जुषतां, यन्म आत्मनः, इति द्वाभ्याम्, 'भूरग्नये च इति चतुर्भिः व्याहृतिभिश्च हुत्वा, अग्निं परिषिच्य ततः कर्म प्रतिपद्यते इति ।

இந்த ஸூத்ரத்திற்கு இவ்விதம் வ்யாக்யானம் செய்துள்ளார் பித்ருமேத ஸாரகாரர்:- ச்மசாநாக்னி அனுகதமாஞல், பிறகு ஸங்கல்பம் செய்து, 'அபஹதா:' என்ற மந்த்ரத்தால் அந்தச் சாம்பலே ப்ரோக்ஷித்து, 'அயம்தே' என்ற மந்த்ரத்தால் ஸமித்தில் ஸமாரோபணம் செய்து, லௌகிகாக்னியைக் கொண்டு வந்து ப்ரதிஷ்டை

செய்து, 'ஆஜுஹ்வாந:, உத்புத்யஸ்வ' என்ற 2-மந்த்ரங்களால் அந்த ஸமித்தை அக்னியில் வைத்து, பரிஸ்தரணம் செய்து, ஆஜ்யம், தர்விகள் இவைகளுக்கு ஸம்ஸ்காரம் செய்து, பரிசேஷநம் செய்து, 'அயாச்ச, அக்நிர்ஹோதா' என்ற 2-மந்த்ரங்களாலும், 'ப்ராம்ஹண ஏகஹோதா' என்ற அனுவாகத்தால் 4-வாக்யங்களுக்கொரு தடவையாகவும், 'மநோஜ்யோதிர்ஜுஷதாம்' யன்ம ஆத்மந:' என்ற 2-மந்த்ரங்களாலும், 'பூரக்னயேச' என்ற 4.மந்த்ரங்களாலும், வ்யாஹ்ருதிகளாலும் ஹோமம் செய்து, அக்னியைப் பரிஷேசநம் செய்து, பிறகு கர்மத்தை ஆரம்பிக்கவும்'' என்று.

कारिका च – उपायनाग्नौ च विवाहवह्नौ शाखानले सूतक पावके च । शान्तेऽपहत्यापहतेति मन्त्राच्छन्नो देव्याऽद्भिरवोक्ष्य भस्म । तद्भस्म चारोप्य समिध्ययन्त आजुह्व उद्बुध्य ऋचोर्द्वयेन । लौक्यानले तां समिधं निधाय परिस्तराज्योत्पवनादि कृत्वा । अयाश्च पञ्चहोता च ब्राह्मण एकहोता दश । मनस्वती च मिन्दा च महाव्याहृतयस्तथा इति ।

**காரிகையும்:-** உபநயநாக்னி, விவாஹாக்னி, ச்மசாநாக்னி, ஜாதகர்மாக்னி இவைகள் அணைந்துபோனால், 'அபஹதா:' என்பதால் துடைத்து, 'சன்னோதேவீ:'' என்பதால் சாம்பலை ப்ரோக்ஷித்து, அந்தச் சாம்பலை 'அயந்தே' என்று ஸமித்தின் மேல் வைத்து, 'ஆஜுஹ்வாந:, உத்புத்யஸ்வ' என்ற 2-ருக்குகளால் அந்த ஸமித்தை லௌகிகாக்னியில் வைத்து, பரிஸ்தரணம், ஆஜ்யோத்பவநம் முதலியதைச் செய்து, அயாச்ச, பஞ்சஹோதா, ப்ராம்ஹண ஏகஹோதா என்ற பத்து மந்த்ரங்கள், மநஸ்வதீ, மிந்தா, மஹாவ்யாஹ்ருதிகள் இவைகளால் ஹோமம் செய்யவும்.

यद्यस्थि प्रवाहहृतं प्रतिकृतिदाहो वा तत्रास्थ्यभावात् कथं संचय इत्यपेक्षायामुक्तं सङ्ग्रहे - अस्थिसञ्चयनात्पूर्वं प्रवाहेण हृतं

यदि । अस्थिप्रतिकृतीकृत्य तद्देशान्मृदमाहरेत् । अस्थिवत् संचये द्विद्वान् लोष्टं वा भस्म वा ततः । प्रमाणमस्थिवत् कृत्वा तन्मन्त्रं तु जपेद्बुधः इति । स्मृत्यन्तरे – जलप्रवाहे कूले वा तीरे वाऽथ सरिद्भते । जलौघे वाऽस्थिनाशे तु तन्मन्त्रं तु जपेद्बुधः इति ।

அஸ்தியானது ப்ரவாஹத்தினுல் அபஹரிக்கப்பட்ட விஷயத்திலும், ப்ரதிக்ருதிதாஹவிஷயத்திலும், அஸ்தி இல்லாததால் எப்படி ஸஞ்சயநம் செய்வது என்ருல், அவ்விஷயத்தில் சொல்லப்பட்டுள்ளது **ஸங்க்ரஹத்தில்:-** ஸஞ்சயநத்திற்கு முன்பே, ப்ரவாஹத்தால் அஸ்தி அபஹரிக்கப்பட்டால், தஹநதேசத்திலிருக்கும் மண்ணை அஸ்திக்குப் பதிலாகக் கொண்டுவரவும். அதை அஸ்தியைப் போல் பாவித்து ஸஞ்சயநம் செய்யவும். அல்லது அந்த இடத்திலுள்ள மண்கட்டியையாவது சாம்பலையாவது அஸ்தியாய்ப் பாவித்து ஸஞ்சயநம் செய்யவும். மந்த்ரங்களை ஜபிக்கவும். **ஒரு ஸ்ம்ருதியில்:-** நதியின் ப்ரவாஹத்திலோ, கரையிலோ, தடத்திலோ, ஜலப்ரவாஹத்தால் அஸ்தி அபஹரிக்கப்பட்டால், ஸஞ்சயந மந்த்ரங்களை ஜபிக்கவேண்டும்.

विज्ञानेश्वरीये – अस्थिसंचयनं यागो देवानां परिकीर्तितः । प्रेतीभूतं तथोद्दिश्य यः शुचिर्न करोति चेत् । देवतानां तु यजनं तं शपन्त्यथ देवताः इति । देवताश्चात्र श्मशानवासिनस्तत्र पूर्वं दग्धाः, श्मशानवासिनो देवाः शवानां परिकीर्तिताः इत्यङ्गिरः स्मृतेः । अतस्तान्देवानचिरमृतं प्रेतं चोद्दिश्य अपूपादिभिः पूजा कार्येत्युक्तं भवति । प्रेतीभूतमित्युक्तेः सपिण्डीकरणात् प्रागेव संचयः कार्य इति सिद्धम् ।

**விஜ்ஞாநேச்வரீயத்தில்:-** அஸ்தி ஸஞ்சயநமென்பது தேவர்களின் யாகமென்று சொல்லப்பட்டுள்ளது. ப்ரேதனை உத்தேசித்து எவன் சுத்தனுய் தேவயஜநத்தைச் செய்யவில்லையோ அவனைத் தேவர்கள் சபிக்கின்றனர்.

தேவதைகளென்பவர் ச்மசாநத்தில் முன்பு தஹிகப்பட்டவர்கள், 'ச்மசாநத்தில் வஸிக்கும் ப்ரேதர்கள் சவங்களுக்குத் தேவர்களெனப்படுகின்றனர்'' என்று அங்கிரஸ்ஸின் ஸ்ம்ருதியிருப்பதால். ஆகையால் அந்தத் தேவர்களையும், ஸமீபகாலத்திலிறந்த ப்ரேதனையும் உத்தேசித்து, அபூபம் முதலியவைகளால் பூஜையைச் செய்ய வேண்டுமென்று சொல்லியதாயாகிறது. 'ப்ரேதீபூதம்' என்று சொல்லியிருப்பதால், ஸபிண்டீ கரணத்திற்கு முன்பே ஸஞ்சயநம் செய்யப்பட வேண்டுமென்பது ஸித்தித்தது.

## प्रभूतबलिः ।

दशमेऽह्नि प्रेतस्य महती क्षुद्भवति, तन्निवृत्तिः प्रभूतबलिना भवति, स च दशमदिनपिण्डोदकदानात् पूर्वं कार्यः, तिलोदके च पिण्डे च प्रदत्ते दशमेऽहनि । अश्मनोत्थापनं कृत्वा ततः प्रेतं विसर्जयेत् इति पिण्डदानानन्तरमेवाश्मोत्थापन-स्मरणात्, 'दशमे क्षुत्परिक्षयः', 'दशमेन तु पिण्डेन तृप्तिः प्रेतस्य जायते' इति स्मरणात्, भुक्तभोजनवत् तृप्तस्य प्रेतस्य बलिप्रदानायोगादित्याहुः ।

### ப்ரபூத பலி:-

பத்தாவது நாளில் ப்ரேதனுக்குப் பெரிதான பசி உண்டாகிறது. அதற்கு நிவ்ருத்தி ப்ரபூதபலியினாலாகிறது. அதை 10-வது தினத்திய பிண்டோதக தாநத்திற்கு முன் செய்ய வேண்டும். ''10-வது நாளில் திலோதகமும் பிண்டப்ரதானமும் செய்த பிறகு, பாஷாணோத்தாபநம் செய்து, பிறகு ப்ரேத விஸர்ஜநம் செய்யவும்'' என்று பிண்டதாநத்திற்கு அடுத்தே பாஷாணோத்தாபநம் விதிக்கப்பட்டிருப்பதால், 10-ஆவது நாளில் பசியின் தணிவு, '10-ஆவது பிண்டத்தால் ப்ரேதனுக்கு த்ருப்தி உண்டாகிறது' என்று ஸ்ம்ருதியிருப்பதால்,

புஜித்தவனுக்குப் போஜனம் கொடுப்பது போல் த்ருப்தனான ப்ரேதனுக்குப் பலியைக் கொடுப்பதென்பது பொருந்தாதாகையால் என்கின்றனர்.

अखण्डादर्शे तु – अत्रोदकपिण्डबलिप्रदानात् प्रेततृप्तिः प्रेततृप्त्या सन्ततिवृद्धिर्भवति इति । प्रत्यहं यत्पिण्डोदकदानं, दशाहे यच्च प्रभूतबलिप्रदानम्, ताभ्यां प्रेतस्य तृप्तिर्भवतीत्यर्थः । एवं च प्रभूतबलिप्रदानेनापि प्रेतस्य तृप्तेः पिण्डोदकदानप्रभूतबलिदानयोः पौर्वापर्ये अनियम इति केचित् । यत्तु कैश्चिदुच्यते – मन्दारगुरुवारेषु दशाहे समुपस्थिते । बलिं प्रभूतं दद्याच्चेत् कुलक्षयकरं भवेत् इति, तन्माता पितृव्यतिरिक्तविषयमित्यके ।

அகண்டாதர்சத்திலோவெனில்:- ''தசமதினத்தில் உதகபிண்டபலி ப்ரதானத்தால் ப்ரேதனுக்கு த்ருப்தி உண்டாகிறது. ப்ரேதனின் த்ருப்தியால் ஸந்ததி வ்ருத்தியையடைகிறது'' என்றுள்ளது. ப்ரதி தினம் செய்யப்படும் பிண்டோதக தானத்தாலும், 10-ஆவது திநத்தில் செய்யப்படும் ப்ரபூதபலி ப்ரதானத்தாலும், ப்ரேதனுக்கு த்ருப்தி உண்டாகின்றது என்பது பொருள். இவ்விதமிருப்பதால், ப்ரபூதபலிப்ரதானத்தாலும் ப்ரேதனுக்கு த்ருப்தியுண்டாவதால், பிண்டோதகதாநம், ப்ரபூதபலிதானம் இவைகளைச் செய்வதில் முன் பின் என்ற நியமமில்லை என்கின்றனர் சிலர். ஆனால் சிலர்:- ''சனி, செவ்வாய், வியாழன் இந்த வாரங்களில் 10-ஆவது தினம் வந்தால்,அன்று ப்ரபூதபலியைக் கொடுத்தால், அது குலக்ஷயகரமாகும்'' என்கின்றனரே எனில், அது மாதா பித்ருக்களைத் தவிர்த்த மற்றவரைப்பற்றியது என்றுசிலர்.

पितृमेधसारे विशेषः – नात्र वारादिदोषचिन्ता, बलेः क्षुन्निवृत्त्यर्थत्वात्, दशाह एव तद्भावात् तत्पूर्वं प्रभूतबलिप्रदानस्य निरर्थकत्वात् पिण्डोदकदानवददोषात् स्मृतिष्वनिषेधाच्च दशाह एव बलिर्देयः । प्रेतस्य क्षुन्निवृत्त्या कुलमभिवर्द्धते । अतः

प्रत्यक्षविषये शुक्रादिवारेऽपि पिण्डोदकदानवत् सर्वेषां दशाहे प्रभूत बलिर्देय एव, 'वैधे कर्मणि तु प्राप्ते कालदोषं न चिन्तयेत् इति वसिष्ठस्मरणात् इति ।

பித்ருமேதஸாரத்தில் விசேஷம் சொல்லப் பட்டுள்ளது:- "'இவ்விஷயத்தில் வாரம் முதலியதின் தோஷத்தைச் சிந்திக்க வேண்டாம். ப்ரபூதபலி, பசியின் நிவ்ருத்திக்காகக் 'கொடுக்கப் படுவதால், 10-ஆவது தினத்திலேயே பசி உண்டாவதால், அதற்கு முன் ப்ரபூதபலியைக் கொடுப்பது பயனற்றதாகுமாதலால், பிண்டோதகப்ரதாநத்திற்குப் போல் தோஷமில்லாததால், ஸ்ம்ருதிகளில் நிஷேதிக்கப்படாததாலும், 10-ஆவது நாளிலேயே ப்ரபூதபலி கொடுக்கப்படவேண்டும். ப்ரேதனுக்குப் பசி நிவ்ருத்தி ஆவதால் குலம் வ்ருத்தியடைகிறது. ஆகையால் ப்ரத்யக்ஷ விஷயத்தில், சுக்ரவாரம் முதலியதிலும் பிண்டோதகங்களைக் கொடுப்பதுபோல், எல்லோருக்கும் 10-ஆவது நாளில் ப்ரபூதபலியைக் கொடுக்கவேண்டும். 'விஹிதமான கர்மம் வந்து விட்டால் காலதோஷத்தைப் பற்றிச் சிந்திக்கக் கூடாது' என்று வஸிஷ்ட ஸ்ம்ருதியிருக்கிறது.

यत्तु कालदीपेऽभिहितम् – आरवारे च सौरे च गुरुवारे च भार्गवे । पाषाणस्थापनोत्थानं संचयश्च कुलक्षयः इति, तत् मातापितृव्यतिरिक्तविषयम्, अतिक्रान्तौर्ध्वदैहिकविषयं च, पाषाणस्थापनेऽश्रेष्ठा मन्दभौमार्कवासराः । उत्थापने सशौक्रीया मातापित्रोर्गुरोः शुभाः । परोक्षे सूक्ष्मतः पश्येत् प्रत्यक्षे न विचारयेत् इति स्मरणात् ।

ஆனால், காலதீபத்தில்:- 'செவ்வாய், ஞாயிறு, வியாழன், வெள்ளி இந்த வாரங்களில், பாஷாணத்தின் ஸ்தாபனமும், உத்தாபனமும், அஸ்திஸஞ்சயநமும் செய்தால் குலம் க்ஷயத்தையடையும்' என்று

சொல்லப்பட்டுள்ளதேயெனில், அது மாதா பித்ருவ்யதிரிக்த விஷயம், அதிக்ராந்த ப்ரேத க்ருத்ய விஷயமுமாகும். 'பாஷாண ஸ்தாபநத்தில் சனி, செவ்வாய், ஞாயிறு, வெள்ளி இந்த வாரங்கள் ச்லாக்யங்களல்ல. உத்தாபநத்திலுமப்படியே, மாதா, பிதா, குரு இவர்கள் விஷயத்தில் நன்ருய்க் கவனிக்க வேண்டும். ப்ரத்யக்ஷ மரண விஷயத்தில் விசாரிக்க வேண்டியதில்லை' என்று ஸ்ம்ருதியிருப்பதால்.

अन्तर्दशाहे दर्शादिसंभवे विधिः ।

यदा दशाहमध्ये दर्शापातः, तदा दर्श एवोत्तर तन्त्रं पिण्डोदकदानादिरूपं समापयेत् । तदाह ऋश्यशृङ्गः – आशौचमन्तरा दर्शो यदि स्यात् सर्ववर्णिनः । समाप्तिं प्रेततन्त्रस्य कुर्यादित्याह गौतमः इति । पैठीनसिरपि – आद्यैन्दादेव कर्तव्या प्रेतपिण्डोदकक्रिया । द्विरैन्दवे तु कुर्वाणः पुनः शावं समश्नुते इति ।

**பத்து நாட்களுள் தர்சம் முதலியது நேர்ந்தால்**

*எப்பொழுது, 10-நாட்களுள் தர்சம் (அமாவாஸ்யை) வருகிறதோ அப்பொழுது, தர்சத்திலேயே, பிண்டோதகதாநம் முதலிய மேற்கார்யத்தை முடிக்கவேண்டும். அதைச் சொல்லுகிருர் ருச்யச்ருங்கர்:- ஆசௌச காலத்தின் நடுவில் தர்சம் நேர்ந்தால் நான்கு வர்ணத்தாரும், ப்ரேதகார்யத்தின் ஸமாப்தியைச் செய்யவேண்டும் என்ருர் கௌதமர். பைடீநஸியும்:- ப்ரேதனைக் குறித்துச் செய்யும் பிண்டோதகதாநத்தை ஒரு சந்த்ரனுள்ள காலத்திலேயே செய்யவேண்டும். இரண்டு சந்த்ரனுள்ள காலத்தில் செய்பவன் மறுபடி சவக்ரியையை அடைவான்.*

भविष्यत्पुराणेऽपि – प्रवृत्ताशौचतन्त्रस्तु यदि दर्शं प्रपद्यते । समाप्य चोदकं पिण्डं स्नानमात्रं समाचरेत् इति । एतत् सूर्यसङ्क्रान्तेरप्युपलक्षणम् । तथा श्रीधरीये – त्यजेत् सङ्क्रमणं

भानोर्मध्यतः प्रेतकार्यतः । नोचेत्तत्कर्तृनाशः स्याद्दर्शश्चेत्तत्कुलक्षयः इति । स्मृतिरत्ने – दर्शः सङ्क्रमणं वाऽपि दशाहान्तर्यदा भवेत् । तावदेवोत्तरं तन्त्रं समाप्यमिति निश्चयः इति ।

**பவிஷ்யத் புராணத்திலும்:-** *ஆசௌச கார்யத்தைச் (பிண்டோதகதாநத்தை) செய்ய ஆரம்பித்தவன் நடுவில் தர்சத்தை அடைந்தால், உதகபிண்டதாநங்களை ஸமாப்தி செய்து, ஸ்நாநத்தை மட்டில் செய்யவேண்டும். இது, ஸூர்ய ஸங்க்ரமணத்திற்கு முபலக்ஷணம். அவ்விதம்* **ச்ரீதரீயத்தில்:-** *"ப்ரேத கார்யத்தின் நடுவில் ஸங்க்ரமணம் நேர்ந்தால், அதை தவிர்க்கவும். தவிர்க்காவிடில் கர்த்தாவுக்கு நாச மேற்படும். தர்சத்தை தவிர்க்காவிடில் குலத்திற்கு க்ஷய மேற்படும்.* **ஸம்ருதிரத்னத்தில்:-** *10-நாட்களுள், தர்சமாவது, ஸங்க்ரமணமாவது நேர்ந்தால், அப்பொழுதே, மேல் உள்ள கார்யத்தை முடிக்க வேண்டுமென்பது நிர்ணயம்.*

स्मृत्यन्तरेऽपि – दशाहमध्ये दर्शश्चेत् तत्र सर्वं समापयेत् । द्विचन्द्रदर्शने दोषो महानित्यवधार्यताम् । चन्द्रद्वये यदाऽज्ञानात् प्रेतकर्म समाचरेत् । नोपतिष्ठति तत् सर्वं दातुः कुलविनाशनम् इति । अन्यत्रापि – चन्द्रद्वये बलिर्नैव देयः प्रेतस्य तृप्तये । यदि दद्याद् द्विचन्द्रे तु दातुः कुलविनाशनम् इति । पद्धतौ च – अन्तर्दशाहे सम्प्राप्ते दर्शे पिण्डान् समापयेत् । अस्थिसंचयनं तत्र दर्शात् पूर्वं विधीयते इति । स्मृत्यन्तरेऽपि – अथोर्ध्वं कृष्णपक्षस्य दशम्याः संस्थिते सति । तदानीं संचयेदस्थि न चतुर्थेऽह्नि संचयः । त्रयोदशीकलामात्रतिथौ यस्य मृतिर्भवेत् । नातिक्रम्य सिनीवालीं कुर्यात् पिण्डोदकक्रियाम् इति ।

**ஒரு ஸ்ம்ருதியிலும்:-** *10-நாட்களுள் தர்சம் நேர்ந்தால் அதிலேயே எல்லாவற்றையும் முடிக்க வேண்டும். 2-சந்த்ரனுடைய காலத்தில் செய்தால் பெரிதான*

தோஷமுண்டென்று அறியவும். 2-சந்த்ரனுடைய காலத்தில், அறியாமையால், ப்ரேதகர்மத்தைச் செய்தால், அது முழுவதும் ப்ரேதனை அடையாது. கர்த்தாவுக்குக் குலம் நசிக்கும். மற்றொரு ஸ்ம்ருதியிலும்:- 2-சந்த்ரனுள்ள காலத்தில் பிண்ட தாநம் கூடாது. செய்தால் கர்த்தாவின் குலம் நசிக்கும். பத்ததியிலும்:- 10-நாட்களுள் தர்சம் வந்தால் அதிலேயே பிண்டதாந ஸமாப்தியைச் செய்யவும். அவ்விஷயத்தில், அஸ்தி ஸஞ்சயநத்தைச் தர்சத்திற்கு முந்தியே செய்யவேண்டும். மற்றோர் ஸ்ம்ருதியிலும்:- க்ருஷ்ணபக்ஷத்தில் தசமிக்குமேல் ம்ருதியானால், அப்பொழுதே அஸ்தி ஸஞ்சயநம் செய்யவேண்டும். 4-ஆவது நாளில் ஸஞ்சயநமென்பதில்லை. த்ரயோதசீ ஒரு கலை உள்ள திதியில் எவனுக்கு ம்ருதி ஏற்படுகிறதோ அவனுக்கு அமாவாஸ்யைத் தாண்டி பிண்டோதகதாநத்தைச் செய்யக்கூடாது.

चतुर्दशीयुक्तामावास्यादिने चतुर्दशीसमयमरणेऽपि अमायां दाहसंचयोदकादि समापनीयम्। तदुक्तम् - चतुर्दशीक्षणमृतस्तत्र दर्शो भवेद्यदि। पिण्डोदकं दशाहान्तं तस्मिन्नेव दिने क्षिपेत् इति। तथा स्मृत्यन्तरे – उदयं याति चादित्ये पर्वमिश्रां चतुर्दशीम्। संप्राप्य संस्थिते विप्रे कृष्णपक्षस्य तं दहेत्। अमायां वा मृतिर्यस्य तस्यां संस्कारकल्पना। तस्यां संचयनं कुर्याच्छेषं चैव यथा यथम् इति। स्मृतिरत्ने – चतुर्दशीमृतः कश्चित् ततः प्राप्नोत्यमातिथिः। पिण्डोदकं दशाहान्तं तस्मिन्ने वाहनि क्षिपेत् इति।

சதுர்த்தசியுடன் கூடிய அமாதினத்தில், சதுர்த்தசீ உள்ள ஸமயத்தில் மரணமானாலும், அமையில் தஹநம், ஸஞ்சயநம், உதகதாநம் முதலியதை முடிக்கவேண்டும். அவ்விதம் சொல்லப்பட்டுள்ளது- 'சதுர்த்தசீ காலத்தில் ஒருவன் இறந்தால், அன்றே தர்சம் வந்தால், 10-நாள் வரையில் கொடுக்கவேண்டிய பிண்டோதகங்களை அன்றைய தினத்திலேயே கொடுத்து முடிக்க வேண்டும்'

தோஷாவஹமாகாது. விஷ்ணுநித்ராகாலத்தில் கூடாதென்றது, கன்யாமாஸம், கடகமாஸம் இவைகளைத் தவிர்த்த காலத்தைப் பற்றியது. 'கன்யா ராசியிலும், கடகராசியிலும் ஸூர்யனிருக்கும்பொழுது புனஸ் ஸம்ஸ்காரம் விதிக்கப்படுகிறது' என்று தனியாய் (ஸ்பஷ்டமாய்) அந்த மாஸங்களில் அதீத ப்ரேதகார்யத்தை விதித்திருப்பதால் இது.

सर्वोऽपि निषेधस्त्रिपक्षादूर्ध्वविषयः । अत एव सङ्ग्रहकारः — अर्वाक्त्रिपक्षात् प्रेतस्य पुनर्दहनकर्मसु । न कालनियमो ज्ञेयो न मौढ्यं गुरुशुक्रयोः इति । ततश्च त्रिपक्षादर्वाक्पुनर्दहनकर्म मृतिश्रवणदिने कार्यमिति सिद्धम् । यत्तु स्मृत्यन्तरवचनम् — प्रेतस्य वत्सरादर्वाग्यदा संस्कारमिच्छति । न कालनियमो ज्ञेयो न मौढ्यं गुरुशुक्रयोः इति, अत्र संस्कारशब्दः सपिण्डीकरणपरः, न तु पुनः संस्कारवाचीति व्याख्यातारः ।

இவ்விதம் சொல்லப்பட்ட நிஷேதமெலாம், 3-பக்ஷங்களுக்கு மேற்பட்டுச் செய்யப்படும் க்ரியையைப் பற்றியது. ஆகையால், ஸங்க்ரஹகாரர்:- 'த்ரிபக்ஷத்திற்குள், ப்ரேதனுக்குப் புநர்தஹநம் முதலிய கர்மங்களில், காலநியமமில்லை, குரு சுக்ர மௌட்யமும் கவனிக்கப்பட வேண்டியதில்லை' என்றார். அவ்வித மிருப்பதால், த்ரிபக்ஷத்திற்குள், புநர்தஹந கர்மத்தை, மரணத்தைக் கேட்ட தினத்தில் செய்யலாமென்பது ஸித்தமாகியது. ஆனால்:- "ப்ரேதனுக்கு ஒரு வர்ஷத்திற்குள் ஸம்ஸ்காரம் செய்ய விரும்பினால், காலநியமமில்லை, குரு சுக்ர மௌட்யமுமில்லை" என்ற ஸ்ம்ருதிவசனமுள்ளதே யெனில், இந்த வசநத்திலுள்ள ஸம்ஸ்காரமென்ற பதம் ஸபிண்டீகரணத்தைச் சொல்லுகிறது. புநஸ் ஸம்ஸ்காரத்தைச் சொல்லுகிறதல்ல, என்ற வ்யாக்யானகாரர்கள் சொல்லுகின்றனர்.

स्मृतिसङ्ग्रहे — पुनर्दाहे दिनं शोध्यमाशौचात् परतो बुधैः। नन्दां त्रयोदशीं शुक्रशनिवारौ विवर्जयेत्। पातान्त्यपरिघान् योगान् विष्टिं चैव विवर्जयेदिति। पुनः संस्कारादौ विहितकालातिक्रमे प्रायश्चित्तमुक्तं स्मृत्यन्तरे— संस्काराणां तु सर्वेषां कालो यद्यतिपद्यते। प्राजापत्यं चरेन्मासे ततोऽप्येवं प्रकल्पयेत् इति। मासद्वये प्राजापत्यद्वयम्, एवं मासत्रयादौ कल्प्यम्, मासाभ्यन्तरेऽपि प्राजापत्यं कर्तव्यम्। तथा स्मृत्यर्थसारे — निमित्तश्राद्धे हीने संस्कारकालातिक्रमे च प्राजापत्यं कुर्यात् इति।

ஸ்ம்ருதி ஸங்க்ரஹத்தில்:- ஆசௌசத்திற்குப் பிறகு புநஸ் ஸம்ஸ்காரம் செய்வதானால், தினத்தைக் கவனிக்க வேண்டும் அறிந்தவர்கள்; நந்தா, த்ரயோதசீ, சுக்ரவாரம், சனிவாரம் இவைகளை வர்ஜிக்கவும். வ்யதீபாதம், வைத்ருதி, பரிகம், விஷ்டி, (பத்ராகரணம்) இவைகளை வர்ஜிக்கவும். புநஸ் ஸம்ஸ்காரம் முதலியதில், விஹித்த காலத்தை அதிக்ரமித்ததற்கு ப்ராயச்சித்தம் சொல்லப்பட்டுள்ளது. ஒரு ஸ்ம்ருதியில்:- ஸம்ஸ்காரங்களெல்லாவற்றிற்கும், காலம் அதிக்ராந்தமானால், ஒரு மாதமானால், ஒரு ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை அனுஷ்டிக்கவும். பிறகும், ஒவ்வொரு மாதத்திற்கு ஒவ்வொரு க்ருச்ரம் என்று சேர்த்துக் கொள்ளவும். 2-மாதமானால் 2-க்ருச்ரம். 3-மாதமானால் 3-க்ருச்ரம் என்று கல்பிக்கவும். ஒரு மாதத்திற்குள் செய்தாலும் ஒரு க்ருச்ரம் செய்யப்பட வேண்டும். அவ்விதம் ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:- நிமித்த ச்ராத்தம் (ஏகோத்திஷ்டம்) தவறினாலும், ஸம்ஸ்காரகாலம் அதிக்ராந்தமானாலும் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தைச் செய்ய வேண்டும்.

## दशाहमध्ये ज्ञातिमरणे संस्कर्तुर्विशेषः

दशाहमध्ये ज्ञातिमरणे संस्कर्तुर्विशेषमाह नारदः— अन्तर्दशाहे चेत् कर्तुः पुनः प्रेतस्य संस्कृतिः। तस्माच्छुद्धिः

पूर्वशेषादेकादिष्टं यथोदितम् इति। अन्तर्दशाहे चेत् कर्तुरिति स्मरणात् त्र्यहाद्याशौचमध्ये दशाहाशौचिदाहे पूर्वेण न समाप्तिरित्यवगम्यते। हारीतोऽपि — दाहकार्यद्वयं स्याच्चेत् कर्तुरैक्यविशेषतः। तोयं पिण्डं समाप्येत पूर्वेणैव द्वितीयकम् इति। स्मृत्यन्तरेऽपि — अनिर्दशाहे तत्कर्तुः पुनः प्रेतस्य कर्मणि। पूर्वेणैव समाप्तिः स्यादेकोद्दिष्टं यथोदितम् इति। तत्तदेकादशदिने एकोद्दिष्टमित्यर्थः। अन्यत्रापि — कर्ता दशाहे प्रेतस्य शवदाहं चरेत् पुनः। पूर्वेण शुद्धिः स्यादेव पित्रोरन्यत्र तद्भवेत् इति।

### 10-நாட்களுள், ஜ்ஞாதி மரணத்தில், ஸம்ஸ்கர்த்தாவுக்கு விசேஷம்

*10-நாட்களுள், ஜ்ஞாதி மரணம் நேர்ந்தால், ஸம்ஸ்காரம் செய்தவனுக்கு விசேஷத்தைச் சொல்லுகிறார்.* **நாரதர்:-** *''10-நாட்களுள், கர்த்தா, மற்றொரு ப்ரேதனுக்கு ஸம்ஸ்காரத்தைச் செய்தால், முன் ஆசௌசத்தின் மீதியுள்ள தினங்களாலேயே சுத்தி. ஏகோத்திஷ்டம் மட்டில் 11-ஆவது தினத்தில்'' என்று, '10-நாட்களுள்' என்றிருப்பதால், த்ரிராத்ராசௌசம் முதலிய ஆசௌசத்தின் மத்தியில், தசராத்ராசௌசியைத் தஹித்தால் பூர்வாசௌசத்துடன் ஆசௌச ஸமாப்தி இல்லை என்று அறியப்படுகிறது.* **ஹாரீதரும்:-** *கர்த்தா ஒருவனாயிருந்து 2-தாஹ கார்யங்களைச் செய்தால், உதகபிண்ட ஸமாப்தியை முந்தியதோடு பிந்தியதையும் முடித்துவிட வேண்டும்.* **மற்றொரு ஸ்ம்ருதியிலும்:-** *10-நாட்களுள், தாஹகர்த்தாவுக்கு மறுபடி ப்ரேதஸம்ஸ்காரம் செய்ய நேர்ந்தால், முந்தியதோடு பிந்தியதையும் ஸமாப்தி செய்ய வேண்டும். ஏகோத்திஷ்டத்தை மட்டில் அததன் 11-ஆவது நாளில் செய்ய வேண்டும்.* **மற்றொரு ஸ்ம்ருதியிலும்:-** *10-நாட்களுள், கர்த்தா மறுபடி ப்ரேத தஹநம் செய்தால், முந்திய ஆசௌசத்துடனேயே பிந்திய ஆசௌசத்திற்கும்*

சுத்தி, மாதாபித்ரு விஷயத்தைத் தவிர்த்த விஷயத்தில்.

तथा चाङ्गिराः — दाहकस्त्वादशाहात्तु शवदाहं चरेद्यदि । पूर्वेणैव विशुद्धिः स्यात् पित्रोस्तद्दिवसाद्भवेत् इति । सङ्ग्रहेपि — पित्रन्यानन्तरानेकान् दग्ध्वा पूर्वाघतः शुचिः । पितरौ चेद्दहेत्तत्र दशाहाच्छुद्धिरग्निदे इति । दक्षः — मृताशौचनिमित्ते द्वे दहनं मरणं तथा । ज्ञातीनां मरणादेव दहनाद्दाहकस्य तु ॥ अन्यं दग्ध्वा दशाहान्तः शुद्धिः पूर्वाघशेषतः इति ।

அங்கிரஸ்:- தஹநம் செய்தவன், 10-நாட்களுள் மறுபடி சவதஹநம் செய்தால், முந்தியதுடன் பிந்திய ஆசௌசத்திற்கும் சுத்தி. மாதாபிதாக்களின் விஷயத்தில், அவர்களின் 10-நாட்களால் சுத்தி. ஸங்க்ரஹத்திலும்:- மாதாபிதாக்களைத் தவிர்த்த ஜ்ஞாதிகளை அநேகர்களைத் தஹித்தால், முந்திய ஆசௌசத்தாலேயே சுத்தி. அந்த ஆசௌசமத்தியில் மாதாபிதாக்களைத் தஹித்தால், அது முதல் 10-நாட்களால் சுத்தி, தாஹகன் விஷயத்தில் தக்ஷர்:- மரணாசௌசத்திற்குக் காரணங்கள் இரண்டு, தஹநம் மரணம் என்று. ஜ்ஞாதிகளுக்கு மரணத்தாலேயே ஆசௌசம், தாஹகனுக்குத் தஹநத்தால் ஆசௌசம். பத்து நாள் ஆசௌசத்தின் நடுவில் மற்றொருவனைத் தஹித்தால் முந்திய ஆசௌசத்தாலேயே சுத்தி.

संवर्तः — पूर्वकर्ता दशाहे तु पितरौ चेद्दहेत् पुनः । पूर्वेण शुद्धिर्नैव स्यात् पित्रोस्तद्दिवसाद्भवेत् इति । एवं च ज्ञात्यघमध्ये ज्ञातिदाहे कृते सति दाहकस्य दाहादिदशाहे उदकपिण्ड-समाप्तिर्दाहादिदशाहमाशौचं च । दाहकव्यतिरिक्तसपिण्डानां पूर्वाघशेषेणैव शुद्धिरुदकसमाप्तिश्च ।

ஸம்வர்த்தர்:- முதலில் தஹநம் செய்தவன் 10-நாட்களுள், மாதாபிதாக்களைத் தஹித்தால், முந்திய ஆசௌசத்தால் சுத்தி இல்லை. மாதாபிதாக்களின் மரணம்

*முதல் 10-நாட்களால் சுத்தி. இவ்விதம் இருப்பதால், ஜ்ஞாத்யாசௌச மத்யத்தில், மற்றொரு ஜ்ஞாதியைத் தஹித்தால், தாஹகனுக்குத் தஹநதினம் முதல் 10-நாட்களால் உதகபிண்ட ஸமாப்தியும், 10-நாள் ஆசௌசமும். தாஹகனைத் தவிர்த்த ஜ்ஞாதிகளுக்கு முந்திய ஆசௌசத்துடனேயே சுத்தி, உதகதாந ஸமாப்தியும்.*

दाहकस्य पुनः ज्ञात्यन्तरदाहे पूर्वदाहादि दशाहशेषेण शुद्धिः । दशमदिने तदन्त्ययामे वा दाहे इति तु अहःशेषे द्वाभ्यां प्रभाते तिसृभिः इति स्मरणात् पूर्वदशाहानन्तरं द्वित्रिदिनाशौचस्य सत्वेन तदाशौचान्ते उदकादिसमाप्तिः, आशौचान्ते पुनः सम्यक्पिण्डदानं समाप्यते इति मरीचिस्मरणात् । एकोद्दिष्टं तत्तदेकादशाहे, एकोद्दिष्टमशुद्धोऽपि इति स्मरणात् । सपिण्डीकरणं तु त्रिपक्षे कार्यम् ।

*தாஹகன் மறுபடி மற்றொரு ஜ்ஞாதியைத் தஹித்தால், முந்திய தஹநம் முதல் 10-நாட்களாலேயே சுத்தி. 10-ஆவது நாளிலாவது, 10-ஆவது தினத்தில் கடைசியாமத்திலாவது தஹித்தால், 'அஹச்சேஷே + திஸ்ருபி:' என்ற ஸ்ம்ருதி யிருப்பதால், முந்திய ஆசௌசத்தின் 10-ஆவது தினத்திற்குப் பிறகு 2,3, தினங்கள் ஆசௌச மிருப்பதால், அந்த ஆசௌசத்தின் முடிவில் உதகதாநம் முதலியதற்கு ஸமாப்தி. 'ஆசௌசத்தின் முடிவில் மறுபடி பிண்டதானத்தை முடிக்கவும்' என்று மரீசி ஸ்ம்ருதி இருப்பதால். ஏகோத்திஷ்டம் அந்தந்த ம்ருதியின் 11-ஆவது நாளில்' 'அசுத்தனுயினும் 11-ஆவது நாளில் ஏகோத்திஷ்டத்தைச் செய்யவும்' என்று ஸ்ம்ருதியிருப்பதால். ஸபிண்டீ கரணத்தையோ வெனில் த்ரிபக்ஷத்தில் செய்ய வேண்டும்.*

दशाहात् पूर्वं मृतौ दाहकस्य सपिण्डस्य द्वादशदिने आशौचाभावेऽप्याद्य श्राद्धपर्यन्तस्यैककर्मत्वात् पश्चान्मृतैकोद्दिष्टात्

पूर्वं पूर्वमृतस्य द्वादशाहे सापिण्ड्यं न कार्यम्। पित्रोस्तु दाहे दाहकस्यान्येषामपि पुत्राणां पितृमरणादि दशाहेनैव शुद्धिरुदकादिसमाप्तिश्च, न पूर्वदाहदशाहशेषेणेति। दीपिकायां तु — जनकस्य जनन्याश्च भार्याया भर्तुरेव च। पुत्रस्य दुहितुश्चैव जनने मरणेऽपि च। स्वकालेनैव शुद्धिः स्याच्छेषन्यायो न विद्यते इति। ज्ञात्यघमध्ये पुत्रजनने पित्रोर्दशाहत एव शुद्धिः। भार्यादिमरणे तत्प्रतियोगिनामपि स्वकालत एव शुद्धिः, न पूर्वाशौच शेषेणेत्यर्थः।

*10-நாட்களுள் ம்ருதியாகி, தாஹகனுன ஸபிண்டகனுக்கு, 12-ஆவது நாளில் ஆசௌச மில்லாவிடினும், ஏகோத்திஷ்டம் வரையில் உள்ளதெலாம் ஒரு கர்மமானதால், பிறகு இறந்தவனின் ஏகோத்திஷ்டத்திற்கு முன்பு, முதலில் இறந்தவனின் 12-ஆவது தினத்தில் ஸாபிண்ட்யத்தைச் செய்யக் கூடாது. மாதா பிதாக்களின் தஹநத்திலோவெனில், தாஹகனுக்கும், மற்றப் புத்ரர்களுக்கும், மாதா பித்ரு மரண தினம் முதல் 10-நாட்களாலேயே சுத்தி, உதக ஸமாபநமும். முந்திய தஹநத்தின் 10-நாட்களின் மீதியாலல்ல. தீபிகையிலோவெனில்:- ஜ்ஞாதியின் ஆசௌசமத்யத்தில் பிள்ளை அல்லது பெண் பிறந்தால் மாதா பிதாக்களுக்குப் பத்து நாட்களாலேயே சுத்தி. பார்யை, பர்த்தா இவர்களின் மரணத்திலும், ப்ரதியோகிகளுக்குப் பத்து நாட்களாலேயே சுத்தி, முந்திய ஆசௌசத்தின் மீதி நாட்களால் சுத்தியில்லை என்பது பொருள்.*

## अन्तर्दशाहे मातापितृमरणयोः सन्निपाते विशेषः

अन्तर्दशाहे मातापितृमरणयोरन्त्यदिनात् पूर्वमन्त्यदिने वा मिथः सन्निपाते विशेषमाह शङ्खः—मातर्यग्रे प्रमीतायामशुद्धौ म्रियते पिता। पितुः शेषेण शुद्धिः स्यात् मातुः कुर्यात्तु पक्षिणीम् इति। मात्राशौचमध्ये पितृमरणे सति पितृदशाहेन शुद्धिः।

पित्राशौचमध्ये मात्राशौचसन्निपाते तु पूर्वाशौचानन्तरं मात्राशौचं पक्षिणीमात्रमुदकादिकं च कुर्यादित्यर्थः । तथा च स्मृत्यन्तरे — मात्राशौचस्य मध्ये तु पिता च म्रियते यदि । पितुर्मरणमारभ्य पुत्राणां दशरात्रकम् । पित्राशौचस्य मध्ये तु यदि माता प्रमीयते । दशाहात् पैतृकादूर्ध्वं मात्रघं पक्षिणी भवेत् इति ।

**10-நாட்களுக்குள் மாதா பித்ரு மரணங்கள் நேர்ந்தால்**

*மாதா பித்ரு மரணங்களுக்கு, கடைசி தினத்திற்கு முன்பாவது, கடைசி தினத்திலாவது சேர்க்கை ஏற்பட்டால், விசேஷத்தைச் சொல்லுகிறுர், சங்கர்:- முன்பு மாதா இறந்து அந்த ஆசௌசத்தில் பிதா இறந்தால், பிதாவின் மரணாசௌசத்திற்குப் பிறகு சுத்தி. பிதா இறந்து அந்த ஆசௌசமத்யத்தில் மாதா இறந்தால், பிதா இறந்த ஆசௌசத்திற்குப் பிறகு மாதாவின் ஆசௌசத்தைப் பக்ஷிணீ காலம் வரை மட்டில் அநுஷ்டிக்கவும். உதகதாநம் முதலியதையும் செய்யவும், என்பது பொருள். அவ்விதமே, ஒரு ஸ்ம்ருதியிலும்:- மாதாவின் ஆசௌசத்தின் மத்தியில் பிதாவும் இறந்தால், பிதாவின் மரணம் முதல் புத்ரர்களுக்குப் பத்து நாள் ஆசௌசம். பிதாவின் ஆசௌசத்தின் மத்தியில் மாதா இறந்தால், பிதாவின் 10-நாள் ஆசௌசத்திற்குப் பிறகு மாதாவின் ஆசௌசம் பக்ஷிணீ காலம் வரையில்.*

मातर्यग्रे प्रमीतायां तदाशौचमध्ये यदि पिता म्रियेत तदा पितृमरणदिनमारभ्य दशाहत एव उदक दानादिप्रेतकृत्यं पितुर्निर्वर्त्य पितुर्मरणाद्येकादशदिने आद्यश्राद्धं कुर्यात् । पित्राशौच-मध्ये मातृमरणाद्येकादशदिने मातुराद्यश्राद्धमशुद्धोऽपि कुर्यादेका-दशेऽहनि । कर्तुस्तात्कालिकी शुद्धिरशुद्धः पुनरेव सः इति शङ्खस्मरणात् ।

*மாதா முன்பு இறந்து அந்த ஆசௌசத்தின் நடுவில் பிதா இறந்தால், அப்பொழுது, பிதாவின் மரண தினம் முதற்கொண்டு, 10-நாட்களிலேயே உதகதாநம் முதலிய ப்ரேதகார்யத்தைப் பிதாவுக்கு முடித்து, பிதாவின் மரணதினம் முதல் 11-ஆவது தினத்தில் ஏகோத்திஷ்ட ச்ராத்தத்தைச் செய்யவும். பிதாவின் ஆசௌசத்தின் மத்யத்தில், மாதா இறந்த 11-ஆவது தினத்தில் மாதாவின் ஏகோத்திஷ்ட ச்ராத்தத்தை அசுத்தனாய் இருந்தாலும் செய்யவும். 'அசுத்தனாய் இருந்தாலும் 11-ஆவது தினத்தில் ஆத்ய ச்ராத்தத்தைச் செய்யவும். கர்த்தாவுக்கு அக்காலத்தில் மட்டில் சுத்தி உண்டாகிறது. பிறகு அவன் அசுத்தனே' என்று சங்கஸ்ம்ருதியால்.*

पितर्यग्रे मृते सति तदाशौचमध्ये यदि माता म्रियेत तदा जनकस्य मृतेर्मध्ये जननीमरणं यदि । पित्राशौचे समाप्तिः स्यान्मात्राशौचं तु पक्षिणी इति पित्राशौचान्त्यदिन एव मातुरपि पिण्डोदकसमाप्तिस्मरणात्, पित्राशौचमध्ये मातुरपि दशाहकृत्यं परिसमाप्य पितुरेकादशदिने आद्यश्राद्धं निर्वर्त्य पित्राशौचानन्तरमपि मातुः पक्षिण्याशौच मनुष्ठाय मातृमरणाद्येकादशदिने तस्या आद्यश्राद्धं कुर्यात् ।

*பிதா முன்பு இறந்து, அந்த ஆசௌச மத்யத்தில் மாதா இறந்தால், அப்பொழுது, "பிதாவின் மரணத்தின் மத்தியில் மாதாவுக்கு மரணமானால், பிதாவின் ஆசௌசத்தில் ஸமாப்தியைச் செய்யவும், பிறகு மாதாவின் ஆசௌசம் பக்ஷிணீ காலமாத்ரம்" என்று பிதாவின் ஆசௌசத்தின் முடிவு தினத்திலேயே பிண்டோதகங்களின் ஸமாப்தி சொல்லப்படுவதால், பித்ராசௌசத்தின் நடுவிலேயே மாதாவினுடையவும், 10-நாள் க்ரியையை முடித்து, பிதாவின் 11-ஆவது நாளில் ஆத்ய ச்ராத்தத்தை முடித்து, பித்ராசௌசத்திற்குப் பிறகும், மாதாவுக்குப்*

பக்ஷிண்யாசௌசத்தை அனுஷ்டித்து, மாத்ரு மரணம் முதல் 11-ஆவது தினத்தில் மாதாவுக்கு ஆத்ய ச்ராத்தத்தைச் செய்யவும்.

न तु आशौचान्ते ततः सम्यक्पिण्डदानं समाप्यते । ततः श्राद्धं प्रदातव्यं सर्ववर्णेष्वयं विधिः इति मरीचि स्मरणात्, अथाशौचापगमे एकोद्दिष्टं इति विष्णुस्मरणाच्च, मातुः पक्षिण्याशौचानन्तरदिने एकोद्दिष्टं कर्तव्यमिति चेन्न, एकोद्दिष्टं यथोदितम् इति स्मरणात् । तथा माधवीयकालादर्शटीकादौ — ततः आशौचानन्तरमेकादशेऽह्नि ब्राह्मण एकोद्दिष्ट श्राद्धं कुर्यात् इति मरीच्यादिवचनार्थोऽभिहितः । तथा च पैठीनसिः — एकादशेऽह्नि यच्छ्राद्धं तत् सामान्यमुदाहृतम् । चतुर्णामपि वर्णानां सूतकं तु पृथक्पृथक् इति ।

''ஆசௌசத்தின் முடிவில் பிண்ட தானம் முடிக்கப்பட வேண்டும். பிறகு ச்ராத்தம் (ஏகோத்திஷ்டம்) செய்யப்பட வேண்டும், எல்லா வர்ணங்களுக்கும் இது விதி'' என்று மரீசி ஸ்ம்ருதியாலும், 'ஆசௌசம் முடிந்த பிறகு ஏகோத்திஷ்டம்' என்று விஷ்ணு ஸ்ம்ருதியாலும், மாதாவின் பக்ஷிண்யாசௌச தினத்திற்கு மறுநாளில் ஏகோத்திஷ்டத்தைச் செய்யவேண்டு'மெனில், அது அவ்விதமல்ல. 'ஏகோத்திஷ்டம் சொல்லியபடி' என்று ஸ்ம்ருதியிருப்பதால்; அவ்விதம் மாதவீயம், காலாதர்சடீகை முதலியவைகளில் ''பிறகு ஆசௌசம் முடிந்தவுடன் 11-ஆவது நாளில் ப்ராம்ஹணன் ஏகோத்திஷ்ட ச்ராத்தத்தைச் செய்யவேண்டும்'' என்று மரீசி முதலியவரின் வசநங்களுக்கு அர்த்தம் சொல்லப்பட்டுள்ளது. அவ்விதம், பைடீநஸி:- 11-ஆவது தினத்தில் செய்யப்படும் ச்ராத்தம் எதுவோ, அது எல்லோருக்கும் 4-வர்ணங்களுக்கும் என்று சொல்லப் பட்டுள்ளது. ஆசௌசம் மட்டில் வர்ணங்களுக்குத் தனித் தனியேயாம்.

याज्ञवल्क्यश्च — मृतेऽहनि तु कर्तव्यं प्रतिमासं तु वत्सरम्। प्रति संवत्सरं चैवमाद्यमेकादशेऽहनि इति। अतः पितृमृतिदशाहमध्ये मातृमरणे पितृदशाहानन्तरं पक्षिण्याशौचमनुष्ठाय मातृमरणाद्येकादशाहे मातुरेकोद्दिष्टमिति निर्णयः।

**யாஜ்ஞவல்க்யரும்:-** *'ஒரு வர்ஷம் வரையில் ப்ரதி மாஸமும் ம்ருததிதியில் ச்ராத்தம் செய்யப்பட வேண்டும். ப்ரதி வர்ஷமும் இவ்விதம் ம்ருத திதியில் ச்ராத்தம் செய்யப்பட வேண்டும். ஆத்ய ச்ராத்தத்தை 11-ஆவது நாளில் செய்யவேண்டும்' என்றார். ஆகையால் பித்ரு மரணத்தில் 10-நாட்களுள் மாதா இறந்தால், பிதாவின் 10-நாட்களுக்குப் பிறகு பக்ஷிண்யாசௌசம் அனுஷ்டித்து, மாத்ரு மரணம் முதல் 11-ஆவது நாளில் மாதாவுக்கு ஏகோத்திஷ்டம் செய்யப்பட வேண்டும் என்பது நிர்ணயமாம்.*

पूर्वमृतयोः पित्रोस्त्रिपक्षे सपिण्डीकरणविधिः।

सपिण्डीकरणं तु पूर्वमृतयोर्द्वयोरपि त्रिपक्षे कार्यम्। तथा च द्वादशाहे सापिण्ड्यं निषेधति लोकाक्षिः— पितर्युपरते पुत्रो मातुः श्राद्धं निवर्तयेत्। मातर्यपि च वृत्तायां पितुः श्राद्धं निवर्तयेत् इति। मात्राशौचमध्ये पितरि मृते मतुः श्राद्धं - सपिण्डीकरणं द्वादशाहे न कुर्यात्, पितुस्तु तद्द्वादशाहे कुर्यात्, मातुर्दशाहमध्ये तु पिता यस्य प्रमीयते। पैतृकं तु यथाकालं पितुः सर्वं समापयेत्। ततो मातुस्त्रिपक्षादौ शेषं कर्म समाचरेत् इति स्मरणात्। तथा च पितृदशाहमध्ये मातृमृतौ पितुः सापिण्ड्यं निवर्तयेत्, द्वादशाहे न कुर्यात्, किं तु त्रिपक्ष एव। मातुस्तु सापिण्ड्यं पक्षिण्याशौचापगमे द्वादशाहे कुर्यादित्यर्थः। देवलोऽपि — एकाग्रमरणे पित्रोरन्यस्यान्यदिने मृतौ। सपिण्डनं त्रिपक्षे स्यादनुयानमृतिं विना इति। पित्रोरेकस्य अग्रमृतौ अन्यस्यान्यदिने मृतौ पूर्वमृतस्य

पूर्वमृताया वा सापिण्ड्यं त्रिपक्षे कुर्यात् । अनुयानमृतिं विना - अनुमरणं विनेत्यर्थः ।

**மாதா பிதாக்களுள் முந்தி இறந்தவர்க்கு த்ரிபக்ஷத்தில் ஸபிண்டீகரண விதி**

*ஸபிண்டீகரணமோவெனில் முதலில் இறந்த இருவருக்கும், த்ரிபக்ஷத்தில் செய்யப்பட வேண்டும். அவ்விதமே, 12-ஆவது நாளில் ஸபிண்டீகரணத்தை நிஷேதிக்கின்றார் லோகாக்ஷி:- மாதாவின் ஆசௌச மத்தியில் பிதா இறந்தால், மாதாவின் ச்ராத்தத்தை = ஸபிண்டீகரணத்தை, 12-ஆவது நாளில் செய்யக் கூடாது. பிதாவுக்கு ஸபிண்டீகரணத்தைப் பிதாவின் 12-ஆவது நாளில் செய்யலாம். "மாதா இறந்த 10-நாட்களுள் பிதா இறந்தால் பிதாவின் க்ரியை எல்லாவற்றையும் விஹித காலத்தில் முடிக்கவும். மாதாவின் மீதியுள்ள க்ரியையை த்ரிபக்ஷத்தில் செய்யவும்", என்று ஸ்ம்ருதி இருப்பதால். அவ்விதமே, பிதா இறந்த 10-நாட்களுள் மாதா இறந்தால், பிதாவின் ஸாபிண்ட்யத்தை, 12-ஆவது நாளில் செய்யக்கூடாது. ஆனால் த்ரிபக்ஷத்திலேயே செய்யவேண்டும். மாதாவின் ஸாபிண்ட்யத்தையோவெனில், பக்ஷிண்யாசௌசத்திற்குப் பிறகு, 12-ஆவது நாளில் செய்ய வேண்டும் என்பது பொருள். தேவலரும்:- மாதா பிதாக்களுள் ஒருவருக்கு முதலில் ம்ருதி ஏற்பட்டு மற்றொரு நாளில் மற்றவருக்கு ம்ருதி ஏற்பட்டால் முன் இறந்தவருக்கு (பிதாவுக்கு ஆயினும், மாதாவுக்கு ஆயினும்) ஸாபிண்ட்யத்தை த்ரிபக்ஷத்தில் செய்ய வேண்டும். அனுமரண விஷயத்தைத் தவிர்த்து இந்த விதி.*

अनुमरणे सापिण्ड्यकालः ।

अनुमरणे तु पतिमरणदिनादुत्तरदिनमरणे तद्द्वादशाहे सहैव सापिण्ड्यं कुर्यात् । तथा च कालादर्शे — पित्रोः सञ्जातमरणे

मातुरन्यत्र वा दिने। अनुयानमृतौ श्राद्धं यथा कलं समाचरेत् इति। दिनान्तरे मातुरनुमरणे द्वादशाहे सापिण्ड्यं कुर्यादित्यर्थः। पितृमेधसारेऽपि — सङ्घातानुमृत्योरन्यत्र न पित्रोस्तन्त्रतः कुर्यान्नान्यैः सह वा, पित्राशौचे माता, मात्राशौचे पिता वा संस्थितः, यन्मृतिः पूर्वं स्यात् तत्सापिण्ड्यं त्रिपक्ष एवेति देवलः इति। तथैव एकाग्रमरणे पित्रोः इति देवलवचनं तेन व्याख्यातम् — पित्रोरन्यतरदशाहमध्येऽन्यतर मृतौ पूर्वमृतस्य पूर्वमृताया वा सपिण्डनं त्रिपक्ष एव भवति, अनुमरणे तु पितुर्द्वादशाहे सहैवेत्यर्थः इति।

**அனுமரணத்தில் ஸாபிண்ட்ய காலம்.**

*அனுமரணத்திலோவெனில், பதி இறந்த தினத்திற்கு மறு தினத்தில் மரணமானுல், பதியின் 12-ஆவது நாளில், சேர்த்தே ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். அவ்விதமே,* **காலாதர்சத்தில்:-** *மாதா பிதாக்களின் ஸங்காத மரணத்திலும், அல்லது மறு நாளில் மாதாவின் மரணத்திலும், அனுமரண விஷயத்தில், ஸபிண்டீகரணத்தை, 12-ஆவது நாளில் செய்யவும். மறுநாளில் மாதா அனுமரணம் செய்தாலும், 12-ஆவது நாளில் ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும் என்பது பொருள்.* **பித்ருமேத ஸாரத்திலும்:-** *''ஸங்காத மரணம், அனுமரணம் இவைகளைத் தவிர்த்த விஷயத்தில், மாதா பிதாக்களுக்கு, தந்த்ரமாய் (சேர்த்து)ச் செய்யக்கூடாது. பிதாவின் ஆசௌசத்தில் மாதா இறந்தாலும், மாதாவின் ஆசௌசத்தில் பிதா இறந்தாலும், முன்பு இறந்தவருக்கு ஸாபிண்ட்யம் த்ரிபக்ஷத்தில் தான் செய்யப்பட வேண்டும் என்கிருர் தேவலர்'' என்று உள்ளது. அவ்விதமே, ''ஏகாக்ரமரணே பித்ரோ:'' என்ற தேவல வசநம், பித்ருமேதஸாரகாரரால், வ்யாக்யானம்*

செய்யப்பட்டுள்ளது. "மாதா பிதாக்களுள் ஒருவர் இறந்த 10-நாட்களுள் மற்றொருவர் இறந்தால் முன்பு இறந்தவனுக்காவது, முன்பு இறந்தவளுக்காவது ஸாபிண்ட்யம் த்ரிபக்ஷத்திலேயே விதிக்கப்படுகிறது' அனுமரணத்திலோவெனில், பிதாவின் 12-ஆவது நாளில் சேர்த்தே விதிக்கப்படுகிறது என்று பொருள்" என்று.

## दम्पत्योः सहमृतौ क्रमः

यदि दम्पत्योः सहमृतिः स्यात् प्राग्दहनाद्वा अन्यतरमृतिः स्यात् तदा सहैव दाहादिक्रियाः कुर्यात् । यदाह हारीतः — दम्पत्योः सहमृतौ तु सह दाहादिकाः क्रियाः । प्राग्दाहादन्यनाशे च तदूर्ध्वं तु पुनः क्रियाः इति । त्रिकाण्डी च — मृते भर्तरि दाहात् प्राक् तत्पत्नी च मृता यदि । पत्न्यां वा प्राक् प्रमीतायां दाहादर्वाक्पतिर्मृतः । तत्र तन्त्रेण दाहः स्यात्तन्मन्त्रे द्वित्वमूहयेत् इति । पुलस्त्यः — दुर्मृतः सुमृतो वाऽपि पिताऽग्रे यद्यसंस्कृतः । कालान्तरे मृता माता तस्या दाहादिकाः क्रियाः । पत्या सहैकचित्यां तु दहेदौपासनादुभौ इति ।

### தம்பதிகள் சேர்ந்து மரித்தால், அதன் க்ரமம்

தம்பதிகளுக்குச் சேர்ந்தே மரணமானாலும், ஒருவரின் தஹநத்திற்கு முன் மற்றொருவருக்கு மரணமானாலும், அப்பொழுது சேர்ந்தே தஹநம் முதலிய க்ரியைகளைச் செய்யவும். அதைச் சொல்லுகிறார் ஹாரீதர்:- தம்பதிகளுக்கு ஒரே ஸமயத்தில் ம்ருதியானாலும், தஹநத்திற்கு முன் மற்றொருவருக்கு மரணமானாலும், தாஹம் முதலிய க்ரியைகளைச் சேர்த்தே செய்யவும். அதற்குப் பிறகானால் தனியாய் க்ரியைகளைச் செய்யவும். **த்ரிகாண்டியும்:-** பர்த்தா இறந்த பிறகு தஹநத்திற்குள் பத்நி இறந்தாலும், பத்நீ இறந்த பிறகு தஹநத்திற்குள் பதி இறந்தாலும், இருவருக்கும் சேர்த்தே க்ரியைகளைச்

செய்யவும். மந்த்ரத்தில் த்விவசநத்தை ஊஹிக்க வேண்டும். **புலஸ்த்யர்:-** பிதா முதலில் துர்ம்ருதனாய் இறந்தாலும், ஸாதாரணமாய் இறந்தாலும், ஸம்ஸ்காரம் செய்யப்படாமலிருந்து, காலாந்தரத்தில் மாதா இறந்தால், அவளுக்குத் தஹநம் முதலிய க்ரியைகளைச் சேர்த்துச் செய்யவும். பதியுடனேயே ஒரே சிதியில் ஔபாஸநாக்னியால் இருவரையும் தஹிக்கவும்.

स्मृत्यन्तरे च — दम्पत्योः सह मृत्यौ तु पितृमेधक्रिया सह। कुण्डमेकं पृथक्पिण्डजलाञ्जलिशिला मताः इति । सङ्ग्रहेऽपि — एककाले मृतौ पित्रोः पितृमेधक्रिया सह। उदकं पिण्डदानं च श्राद्धं कुर्यात् पृथक् पृथक् । सपिण्डीकरणं चैव सहैव पृथगेव वा । एकगर्ते जलं दद्यात् श्राद्धं चैकदिने द्वयोः । तन्त्रेण श्रपणं कुर्यात् श्राद्धं कुर्यात् पृथक् पृथक् । तत्र द्वयोर्निमित्तौ द्वौ ब्राह्मणावितरैः सह इति । स्मृत्यन्तरेऽपि — दम्पत्योः सहसंस्कारो मृतावनुमृतावपि । उदकादिसपिण्ड्यन्तप्रेतकार्याणि यान्यपि । कुर्यात् समानतन्त्रेण सांवत्सरिकमेव च इति । सांवत्सरिकस्य समानतन्त्रत्वस्मरण-मापद्विषयम्, तदग्रे वक्ष्यते।

**மற்றோர் ஸ்ம்ருதியிலும்:-** தம்பதிகள் சேர்ந்து மரித்தால் ப்ரேத க்ரியை சேர்த்துச் செய்யப்பட வேண்டும். குண்டமொன்று. பிண்டம், திலோதகம், பாஷாணம் இவைகள் தனி என்று விதிக்கப்பட்டுள்ளன. **ஸங்க்ரஹத்திலும்:-** ஒரே காலத்தில் மாதா பிதாக்கள் இறந்தால் ப்ரேத க்ரியை சேர்த்தே செய்யப்பட வேண்டும். உதகம், பிண்டதாநம், ஏகோத்திஷ்டம் இவைகள் தனித் தனியே. ஸபிண்டீகரணத்தைச் சேர்த்தாவது, தனியாக வாவது செய்யவும். ஒரே குண்டத்தில் திலோதகதாநம், இருவருக்கும் ஏகோத்திஷ்டம் ஒரே தினத்தில். சர்மாதிரோஹணத்தையும், சாந்திஹோமத்தையும் சேர்த்துச் செய்யவும். பாகத்தைச் சேர்த்தே செய்யவும்.

ச்ராத்தத்தைத் தனித் தனியாய் செய்யவும். அதில் நிமித்த ப்ராம்ஹணர்கள் இருவர் மற்ற ப்ராம்ஹணர்களுடன் கூட. **மற்றோர் ஸ்ம்ருதியிலும்:-** தம்பதிகளுக்குச் சேர்ந்து மரணமானல் சேர்த்தே ஸம்ஸ்காரம் செய்யப்பட வேண்டும், அனுமரணத்திலுமிப்படியே, உதகதானம் முதல் ஸபிண்டீகரணம் முடியும் வரையிலுள்ள ப்ரேத கார்யங்களெல்லாவற்றையும் சேர்த்தே செய்யவும். ஸாம்வத்ஸரிக ச்ராத்தத்தையும் சேர்த்துச் செய்யவும். ச்ராத்தத்தைச் சேர்த்துச் செய்யச் சொல்லியது ஆபத்விஷயத்தில். அது மேல் சொல்லப்படப் போகிறது.

अन्यत्रापि — प्रदक्षिणमुपस्थानं चरुकार्यं चितिस्तथा । सञ्चयस्तर्पणं गर्तः सपिण्डीकरणं सह इति । सङ्ग्रहे च — पित्रा सहैव मातुश्च मात्रा सह पितुस्तथा । सापिण्ड्यं तनयैः कार्यं निमित्तार्थं पृथग्भवेत् इति । तथा — समानपिण्डयोगानां सपिण्डीकरणं सह । तन्त्रेण पितृवर्गः स्यान्निमित्तं प्रतिपूरुषम् इति ।

**மற்றொரு ஸ்ம்ருதியிலும்:-** ப்ரதக்ஷிணம், உபஸ்தானம், சருகார்யம், சிதி, ஸஞ்சயனம், தர்ப்பணம், குண்டம், ஸபிண்டீகரணம் இவைகள் சேர்த்தே செய்யப்படவேண்டும். **ஸங்க்ரஹத்திலும்:-** பிதாவுடன் மாதாவுக்கும், மாதாவுடன் பிதாவுக்கும் சேர்த்தே ஸபிண்டீகரணத்தைப் புத்ரர்கள் செய்ய வேண்டும். நிமித்த ப்ராம்ஹணர்கள் தனி. அவ்விதமே - "பிண்டஸம்ஸர்கம் ஸமானமாய் உள்ளவர்களுக்கு ஸபிண்டீகரணம் சேர்த்தே செய்யப்பட வேண்டும். பித்ரு வர்க்கம் ஒன்றே. நிமித்தங்கள் தனி."

बहुस्मृतिसम्मतत्वात् सपिण्डीकरणमपि सहैव कर्तव्यम्, ततः 'पृथगेव वे'त्येतदनादरणीयम् । निमित्तोद्देशेन क्रियमाणं प्रेतैकप्रयोजनं निमित्तभोजनं पृथग्भवति । एतच्चोपलक्षणम् । क्षुत्तृष्णानिवर्तकं जलाञ्जलि - पिण्डप्रदान - सोदकुम्भश्राद्ध

नवश्राद्धैकोत्तरवृद्धिश्राद्ध षोडशश्राद्ध पिण्डप्रदान दक्षिणादिकं च पृथक्कर्तव्यम्। तत्रोपकारकचितिकुण्डशान्तिहोम पाक वैश्वदेव पितृ विष्णुवरणादिकं पृथङ्न कर्तव्यम्।

இவ்விதம் வெகு ஸ்ம்ருதிகளுக்கு ஸம்மதமாய் இருப்பதால் ஸபிண்டீகரணமும் சேர்த்தே செய்யப்பட வேண்டும். ஆகையால் 'தனியாகவும் செய்யலாம் என்பது ஆதரிக்கத் தக்கதல்ல. நிமித்தோத்தேசமாய் செய்யப்படுவதான, ப்ரேதனை மட்டில் சேரக் கூடிய நிமித்தபோஜநம் தனியாகவே ஆகவேண்டும். இது உபலக்ஷணம் ஆகும். பசி தாஹங்களை நிவர்த்திக்கும் ஜலாஞ்ஜலி, பிண்ட ப்ரதாநம், ஸோதகும்பச்ராத்தம், நவச்ராத்தம், ஏகோத்தர வ்ருத்தி ச்ராத்தம், ஷோடச ச்ராத்தம், வ்ருஷபோத்ஸர்ஜனம் முதலியதும், ப்ரேத த்ருப்திகரமான ப்ரேதஹோமம், அர்க்யம், போஜநம், பிண்டப்ரதாநம், தக்ஷிணை முதலியதும் தனியே செய்யப்பட வேண்டும். அதில் உபகாரமாய் உள்ள சிதி, குண்டம், சாந்தி ஹோமம், பாகம், விச்வதேவ பித்ரு விஷ்ணுவரணம் முதலியது தனியாய் செய்யப்பட வேண்டியதில்லை.

तथा चाङ्गिराः — दम्पत्योः सह मृत्यौ तु सह स्याद्दहनक्रिया । पृथक्पिण्डोदकादीनि यथाविधि समाचरेत् । चरुकुण्डचिताशान्तिसञ्चयांस्तन्त्रतश्चरेत् । अग्निं श्रपणहोमौ च ह्युपस्थानं च तन्त्रतः इति । पितृमेधसारेऽपि — हिरण्यशकल नग्नप्रच्छादन वासस्तिलोदक पिण्डैकोत्तरवृद्धि नवश्राद्ध सोदकुम्भ वृषोत्सर्ग षोडश श्राद्धानीति पृथक्पृथग्भवन्ति, चरुकार्यं चितिः कुण्डमस्थिसञ्चयनं शान्तिहोमश्च तन्त्रम्, एकोद्दिष्टसपिण्डीकरणादिषु निमित्तवरणहोमौ पृथग्भवतः, पाकहोमवैश्वदेवादि तन्त्रम् इति । यमः — अस्थिसञ्चयना-दर्वाग्भर्तुः पत्नी मृता यदि।

तस्मिन्नेवानले दह्याद्यदि चाग्निर्न शाम्यति । उदकादिसपिण्डान्तं तयोः कार्यं सहैव तु । शान्तेऽग्नौ पुनरेवास्याः पृथक्चित्यादि कारयेत् इति ।

**அங்கிரஸ்:-** தம்பதிகள் சேர்ந்து மரித்தால் தஹநகார்யம் சேர்த்தே செய்யப்பட வேண்டும். பிண்டோதகதாநம் முதலியவைகளைத் தனியாகவே விதிப்படி செய்ய வேண்டும். சரு, குண்டம், சிதை, சாந்திஹோமம், ஸஞ்சயநம் இவைகளைச் சேர்த்துச் செய்ய வேண்டும். அக்னி, பாகம், ஹோமம், உபஸ்தானம் இவைகளையும் சேர்த்துச் செய்யவும். **பித்ருமேத ஸாரத்திலும்:-** ஹிரண்யசகலம், நக்னப்ரச்சாதநம், வாஸோதகம், திலோதகம், பிண்டம், ஏகோத்தர வ்ருத்தி ச்ராத்தம், நவச்ராத்தம், ஸோதகும்ப ச்ராத்தம், வ்ருஷபோத்ஸர்ஜநம், ஷோடச ச்ராத்தம், இவைகளைத் தனியே செய்ய வேண்டும். சரு, சிதி, குண்டம், அஸ்தி ஸஞ்சயநம், சாந்திஹோமம், இவைகளைச் சேர்த்தே செய்யவேண்டும். ஏகோத்திஷ்டம் ஸபிண்டீகரணம் முதலியவைகளில் நிமித்த வரணம் ஹோமம் இவைகள் தனியே. பாகம், ஹோமம், விச்வே தேவர்கள் இவைகள் ஒன்றே. **யமன்:-** பர்த்தாவின் அஸ்தி ஸஞ்சயநத்திற்கு முன் பத்னீ இறந்தால், அந்த அக்னியிலேயே தஹிக்க வேண்டும், அக்னி அணையாவிடில். உதகதாநம் முதல் ஸபிண்டீகரணம் முடிய, இருவருக்கும் சேர்த்தே செய்ய வேண்டும். அக்னி அணைந்து போனால், பத்னிக்குத் தனியாய்ச் சிதை முதலியதைச் செய்யவும்.

पितामहपितामह्योर्मरणेऽपि सह संस्कारादिकमाह संवर्तः— पितामहो यस्य मृतश्चिरकालमसंस्कृतः । पितामही च प्रमीता तयोर्दाहादिकं सह इति । हिरण्यशकलनिधानादिकं सर्वं पितुः पूर्वं कृत्वा प्राङ्मृताया अपि मातुः पश्चात् कुर्यात् । तथा च कार्ष्णाजिनिः — पित्रोः श्राद्धे समं प्राप्ते नवे पर्युषितेऽपि वा । पितुः

पूर्वं सुतः कुर्यादन्यत्रासत्तियोगतः इति । अत्र श्राद्धग्रहणं दाहाद्युपलक्षणम्, तत्पूर्वकत्वात् श्राद्धस्य । अन्यत्रासत्तियोगतः - पितृभ्यामन्यत्र ज्ञात्यादिषु आसत्तियोगतः प्रत्यासत्तिक्रमात् कुर्यादित्यर्थः ।

பிதாமஹன், பிதாமஹீ இவர்களுக்கும் சேர்ந்து மரணமானுல் சேர்ந்தே ஸம்ஸ்காரம் முதலியதைச் சொல்லுகிருர், ஸம்வர்த்தர்:- ஒருவனுக்குப் பிதாமஹன் இறந்து வெகுநாள் ஸம்ஸ்காரம் செய்யப்படாமலிருந்து, பிதாமஹியும் இறந்தால் அவ்விருவருக்கும் தஹநம் முதலியதைச் சேர்த்துச் செய்யவும். தங்கத் துணுக்குகளைப் போடுவது முதலிய கார்யங்கள் எல்லாவற்றையும் பிதாவுக்கு முதலில் செய்து, முன்பு இறந்தவளாயினும் மாதாவுக்குப் பிறகு செய்யவும். அவ்விதமே, கார்ஷ்ணு ஜநி: மாதா பிதாக்களின் ச்ராத்தங்கள் ஒரே ஸமயத்தில் ப்ராப்தங்களானுல், அன்று செய்ய வேண்டியதாயினும், அதிக்ராந்த காலமாயினும், புத்ரன் பிதாவுக்கு முன்பு செய்ய வேண்டும். (மாதாவுக்கு, பிறகு செய்யவேண்டும்). மற்றவர் விஷயத்தில், ஸம்பந்தத்தின் ஸாமீப்யத்தை அனுஸரித்துச் செய்யவும். இவ்விஷயத்தில். ச்ராத்தம் என்றது தஹநம் முதலியதையும் சொல்லும். ச்ராத்தம் அதை முன்னிட்டு இருப்பதால், அன்யத்ராஸத்தியோகத: = மாதா பித்ருக்களைத் தவிர்த்த ஜ்ஞாதி முதலியவர்களின் விஷயத்தில் ஸம்பந்த ஸாமீப்யம் உள்ளவருக்கு முந்திச் செய்யவும்.

पितृव्यतिरिक्तानां सङ्घातमरणे दाहादिक्रमः ।

अत्र ऋश्यशृङ्गश्च — भवेद्यदि सपिण्डानां युगपन्मरणं तदा । सम्बन्धासत्तिमालोच्य तत्क्रमाच्छ्राद्धमाचरेत् इति । स्मृतिरत्नेऽपि — सकृन्म्रियन्ते बहवः कर्ता चैकस्तथाऽपि च । अन्तरङ्गक्रमेणैषामुदकादि समाचरेत्, इति ।

**மாதா பிதாக்களைத் தவிர்த்த மற்றவர்களின் ஸங்காத மரண விஷயத்தில் தஹநம் முதலியதின் க்ரமம்.**

இவ்விஷயத்தில், ருச்யச்ருங்கரும்:- ஸபிண்டர்களுக்கு ஒரே காலத்தில் மரணம் ஏற்பட்டால், ஸம்பந்தத்தின் ஸாமீப்யத்தை ஆலோசித்து அந்த க்ரமமாய் ச்ராத்தத்தைச் (க்ரியையை) செய்யவும். **ஸ்ம்ருதிரத்னத்திலும்** - ஸபிண்டர்களுக்கு ஒரே காலத்தில் மரணமானால், கர்த்தா ஒருவனேயானாலும் ஸம்பந்தத்தின் ஸாமீப்யத்தைக் கவனித்து அந்தக் க்ரமமாய் இவர்களுக்கு உதகதானம் முதலியதைச் செய்யவும்.

कालादर्शे —— पत्नीभ्रातृसुतादीनां सपिण्डानां यदि क्रमात्। सङ्घातमरणं तत्र तत्क्रमात् श्राद्धमाचरेत्। युगपन्मरणं तत्र सम्बन्धासत्तियोगतः इति। आदिशब्देन पौत्र भ्रातृपुत्रस्नुषास्वसॄणां ग्रहणम्। पत्न्यादीनां मध्ये बहूनां द्वयोर्वा एकस्मिन् दिने सङ्घातमरणं यदि स्यात् तत्र तत्क्रमात् मरणक्रमात् दाहादिकं कुर्यात्, कृत्वा पूर्वमृतस्यादौ द्वितीयस्य ततः पुनः। तृतीयस्य ततः कुर्यात् सन्निपाते त्वयं क्रमः इति ऋश्यशृङ्गस्मरणात्।

காலாதர்சத்தில்:- பத்நீ, ப்ராதா, புத்ரன் முதலிய ஸபிண்டர்களுக்கு வரிசையாய் ஸங்காத மரணமானால், அப்பொழுது மரண க்ரமமாய் க்ரியையைச் செய்யவும். க்ரமமில்லாமல் ஒரே ஸமயத்தில் மரணமானால் ஸம்பந்தத்தின் ஸாமீப்ய க்ரமத்தை அனுஸரித்துச் செய்யவும். மூலத்திலுள்ள 'ஆதி' பதத்தால் பௌத்ரன், ப்ராதா, புத்ரன், ஸ்நுஷா, (நாட்டுப்பெண்) பகிநீ இவர்களும் சொல்லப்படுகின்றனர். பத்நீ முதலியவர்களுள் அநேகர்களுக்கோ இருவர்க்கோ ஒரே தினத்தில் ஸங்காத மரணமானால், அதில், மரணக்ரமத்தால் தஹநம் முதலியதைச் செய்யவும். ''முதலில் இறந்தவனுக்கு முன்பு செய்து, 2-ஆவதாய் இறந்தவனுக்குப் பிறகு செய்து, பிறகு 3-ஆவதாய்

*இறந்தவனுக்குச் செய்யவும். ஸங்காத மரணத்தில் இது முறை'' என்று ருச்யச்ருங்க ஸ்ம்ருதி உள்ளது.*

पत्न्यादीनां सपिण्डानां युगपन्मरणं यदि स्यात्तत्र सम्बन्धस्य आसत्तियोगतः - आसत्तिवशात्, क्रमेण श्राद्धं कुयात्। पत्नीपति- लक्षणसम्बन्धस्याऽऽसन्नत्वात् पत्न्याः प्रथमं कुर्यात्, अनन्तर- मुभयप्रतियोगिकसम्बन्धभाजः पुत्रस्य, अनन्तरं पितृव्यवहित- सम्बन्धभाजः पौत्रस्य, तदनन्तरं भ्रातुः । अत्र पौत्रभ्रात्रोः पितृव्यवधानं समानम्, तथाऽपि पौत्रस्य स्वशरीरावयवान्वयस्य विद्यमानत्वात् भ्रातृतोऽपि प्रत्यासत्तिः, ततो भ्रातृपुत्रस्य, ततः पुत्रद्वारकसम्बन्धभाजः स्नुषायाः तदनु गोत्रान्तरप्रवेशेन व्यवहितसम्बन्धभाजः स्वसुः ।

*பத்நீ முதலியவர்களான ஸபிண்டர்களுக்கு ஒரே ஸமயத்தில் மரணமானல், அப்பொழுது, ஸம்பந்தத்தின் ஸாமீப்யத்தை அனுஸரித்து அந்த க்ரமமாய் க்ரியையைச் செய்யவும். பத்நீபதி லக்ஷணமான ஸம்பந்தம் ஸமீபமானதால் பத்நிக்கு முதலில் செய்யவும். பிறகு இருவர்களின் ஸம்பந்தமுடைய புத்ரனுக்கு, பிறகு பிதாவினுல் விலகிய ஸம்பந்தமுடைய பௌத்ரனுக்கு, பிறகு ப்ராதாவுக்கு. இவ்விடத்தில் பௌத்ரனுக்கும் ப்ராதாவுக்கும் பிதாவால் வ்யவதாநம் ஸமானமே. ஆனுலும், பௌத்ரனுக்குத் தனது சரீராவயவ ஸம்பந்தம் இருப்பதால், ப்ராதாவை விட ஸாமீப்யம். பிறகு ப்ராத்ரு புத்ரனுக்கு. பிறகு புத்ரன் வழியால் ஸம்பந்தம் அடைந்துள்ள ஸ்நுஷைக்கு. பிறகு, வேறு கோத்ரத்தை அடைந்ததால் விலகிய ஸம்பந்தமுடைய பகினிக்கு.*

एवं च एकस्मिन् दिने क्रमेण एतेषां सङ्घातमरणे मृतिक्रमेण दाहादिकाः क्रियाः पृथक्कुर्यात् युगपन्मरणे तु सम्बन्धक्रमेणा दाहादिकं पृथक्कुर्यादिति कालादर्शटीकायां व्याख्यातम्। स्मृतिरत्ने

मरणानुक्रमपरिज्ञाने मृतिक्रमेण, तदपरिज्ञाने सम्बन्धासत्तिक्रमेण व्यवस्था दर्शिता ।

இவ்விதம் இருப்பதால், ஒரே தினத்தில் இவர்களுக்கு க்ரமமாய் ஸங்காத மரணமானால், மரண க்ரமமாய், தஹநம் முதலிய க்ரியைகளைத் தனியாய்ச் செய்யவும். ஒரே ஸமயத்தில் மரணமானால் முன் சொல்லிய ஸம்பந்த க்ரமப்படி தஹநம் முதலியதை, தனியாய்ச் செய்ய வேண்டும் என்று காலா தர்சடீகையில் வ்யாக்யாநம் செய்யப்பட்டுள்ளது. ஸ்ம்ருதிரத்னத்தில், மரண க்ரமம் தெரியும் விஷயத்தில் மரண க்ரமத்தாலும், அது தெரியாவிடில் ஸம்பந்த ஸாமீப்ய க்ரமத்தாலும் நிர்ணயம் சொல்லப்பட்டுள்ளது.

तथा च तत्रैव— अन्तरङ्गक्रमेणैषामुदकादि समाचरेत् । मरणं क्रमशो दृष्ट्वा मरणानुक्रमेण तु । समानमिदमुद्दिष्टमन्येषामग्रजं विना । अन्येषामग्रजस्यापि समवायेऽग्रजः प्रभुः । अग्रजस्यापि पित्रोश्च सम्पाते पितरौ प्रभू इति । मृतिक्रमापरिज्ञाने सम्बन्धासत्त्यपरिज्ञाने च वयोऽधिकसपिण्डादेर्दाहादिक्रियाः प्रथमतः कार्याः, यद्येककाले पुरतः संस्कार्यास्तु वयोऽधिकाः । बहुत्वे ह्येवमेव स्यादुदकं च दिने दिने इति स्मरणात् । अनेन पुरतः संस्कारविधानात् मातापितृव्यतिरिक्तानां सर्वेषां दाहादिकृत्यं सपिण्डीकरणादिकं च सर्वं पृथक् पृथगेवेत्युक्तं भवति ।

ஸ்ம்ருதி ரத்னத்தில்- 'இவர்களுக்கு அந்தரங்க க்ரமமாய் (ஸம்பந்த ஸாமீப்ய க்ரமமாய்) உதகம் முதலியதைச் செய்யவும். மரணம் க்ரமமாய்ப் பார்க்கப்பட்டிருந்தால், மரண க்ரமமாய்ச் செய்யவும். இது மற்றவர்க்கும் ஸமான மாகியதே, ஜ்யேஷ்ட ப்ராதாவைத் தவிர்த்து. அன்யர்களுக்கும், ஜ்யேஷ்ட ப்ராதாவுக்கும் மரணம் சேர்ந்தால், ஜ்யேஷ்ட ப்ராதாவே முந்தியவன்.

அக்ரஜனுக்கும் மாதா பிதாக்களுக்கும் மரணம் சேர்ந்தால், மாதா பிதாக்கள் முந்தியவர்கள்' என்றுள்ளது. மரண க்ரமமும் அறியப்படாமல், ஸம்பந்த ஸாமீப்யமும் அறியப்படாத விஷயத்தில் வயதால் பெரியவர்களான ஜ்ஞாதிகள் முதலியவர்களுக்குத் தஹநம் முதலிய க்ரியைகளை முதலில் செய்யவும். "ஒரே காலத்தில் அநேகர்களுக்கு ஸம்ஸ்காரம் செய்வதானால் வயது அதிகமானவர்களை முதலில் ஸம்ஸ்கரிக்கவும். அநேகர்கள் விஷயத்தில் இவ்விதமே செய்யவும். ப்ரதி தினம் உதக தாநத்தையும் இவ்விதமே செய்யவும்" என்று ஸ்ம்ருதியிருப்பதால். இதனால், முந்தி ஸம்ஸ்காரம் விதிக்கப்படுவதால், மாதாபிதாக்களைத் தவிர்த்த மற்றவர்கள் எல்லோருக்கும், தஹநம் முதலிய க்ருத்யமும், ஸபிண்டீகரணம் முதலியதும் தனித்தனியே என்று சொல்லியதாய் ஆகிறது.

तथा च देवलः —— पित्रोरुपरतौ पुत्रः श्राद्धं कुर्याद्द्वयोरपि । अनुवृत्तौ च नान्येषां सङ्घातमरणेऽपि च इति । पित्रोर्मरणे अनुमरणविये सङ्घातमरणे च दाहादिकं सहैव कुर्यात् । अन्येषां सङ्घातमरणे सह न कुर्यादित्यर्थः । अन्ये तु ज्ञात्यादि-सङ्घातमृतिविषये सहैव दाहादिक्रियां वदन्तः स्मृत्यन्तरमुदाहरन्ति - मृतानामेकवंश्याना मेको यदि च दाहकः । एकस्मिन् दिवसे कुर्यादेकचित्यां समाहितः इति ।

தேவலர்:- மாதா பிதாக்களின் மரணத்தில் புத்ரன் இருவருக்கும் க்ரியையைச் செய்யவும். அநுமரணத்திலும், ஸங்காத மரணத்திலும், செய்யவும். மற்றவர்க்குக் கூடாது. மாதா பிதாக்களின் மரணத்தில், அனுமரண விஷயத்திலும், ஸங்காதமரண விஷயத்திலும் தஹநம் முதலியதைச் சேர்த்தே செய்யவேண்டும். மற்றவர்களின் ஸங்காத மரணத்தில் சேர்த்துச் செய்யக் கூடாது என்பது பொருள்.

மற்றவர்களோவெனில், ஜ்ஞாதி முதலியவர்களின் ஸங்காத மரண விஷயத்தில் சேர்த்தே தஹநக்ரியை முதலியதைச் செய்ய வேண்டும் என்கிறவராய், மற்றொரு ஸ்ம்ருதியைச் சொல்லுகின்றனர்:- "ஒரு வம்சத்தில் பிறந்த பலர் ஒரே காலத்தில் இறந்தால், தஹந கர்த்தா ஒருவனேயாகில் ஒரே நாளில் ஒரே சிதையைச் செய்யவும்" என்று.

अन्यच्च — एककाले गतासूनां बहूना मथवा द्वयोः । एककुण्डे शिलाभेदे तेषां पिण्डं पृथक् पृथक् । सपिण्डीकरणं तेषां सहैव पृथगेव वा। निमित्तार्थं पृथक्कुर्यादन्यत् सर्वं सहक्रिया इति । सहसापिण्ड्यमेकोद्देश्यत्वविषयम् — समानपिण्डयोगानां सपिण्डीकरणं सह । निमित्तपिण्डमेकैकं दत्वा तैः संसृजेत् क्रमात् इति स्मरणात् ।

மற்றொன்றும்:- "ஒரே ஸமயத்தில் இறந்த பலருக்கோ அல்லது இருவர்க்கோ, ஒரே குண்டத்தில் சிலைகளை மட்டில் தனியாய் வைத்து, அவர்களுக்குப் பிண்ட தாநத்தைத் தனித் தனியே செய்யவும். அவர்களுக்கு ஸபிண்டீகரணத்தைச் சேர்த்தும் செய்யலாம், தனியாகவும் செய்யலாம். நிமித்தங்கள் தனித்தனி. மற்றது எல்லாம் சேர்த்துச் செய்யப்படலாம். சேர்த்து ஸாபிண்ட்யம் என்றது உத்தேச்யர்கள் ஒருவராய் இருக்கும் விஷயம். "பிண்டஸம்யோகம் ஸமானமாயுள்ளவர்களுக்கு ஸபிண்டீகரணத்தைச் சேர்த்துச் செய்யவும். நிமித்த பிண்டம் ஒவ்வொன்றையும் கொடுத்து, அவைகளை, பித்ரு பிண்டங்களுடன் க்ரமப்படி சேர்க்கவும்" என்று ஸ்ம்ருதியிருப்பதால்.

पितृमेधसारे — यद्यनेकेषामेकदिने मृतिः स्यात् पत्नी पुत्र पौत्र भ्रातृ तत्पुत्र स्नुषा स्वसॄणां सङ्ख्यातक्रमात् दाहादिक्रियाः पृथक् पृथक् कुर्यात्, अन्येषां मृतिक्रमात् इति । तत्रैव -

पत्न्यादीनामन्येषां च सङ्घातमरणे पत्न्यादि पूर्वमन्येषामुभयेषामपि पितृपूर्वं पित्रोर्मृताब्दे पत्न्यादिसापिण्ड्यं त्रिपक्षे इति ।

**பித்ருமேதஸாரத்தில்:-** *அநேகர்களுக்கு ஒரே தினத்தில் ம்ருதியானால், பத்நீ, புத்ரன், பௌத்ரன், ப்ராதா, ப்ராத்ரு புத்ரன், ஸ்நுஷா, பகிநீ இவர்களுக்கு, சொல்லிய க்ரமப்படி தஹநம் முதலிய க்ரியைகளைத் தனித்தனியாய்ச் செய்யவும். மற்றவர்களுக்கு மரண க்ரமப்படி செய்யவும்.* **பித்ருமேதஸாரத்திலேயே:-** *'பத்னீ முதலியவர்களுக்கும், மற்றவர்களுக்கும் ஸங்காத மரண விஷயத்தில், பத்னீ முதலியவர்களுக்கு முன்பு செய்து பிறகு மற்றவர்க்குச் செய்யவும். இவ்விருவர்களுக்கும் மாதா பிதாக்களுக்கும் ஸங்காத மரண விஷயத்தில் மாதா பிதாக்களுக்கு முந்திச் செய்து பிறகு மற்றவர்க்கு. மாதா பிதாக்களின் ம்ருதி வர்ஷத்தில், பத்நீ முதலியவர்களின் ஸாபிண்ட்யம் த்ரிபக்ஷத்தில்' என்று உள்ளது.*

लोकाक्षिः — पित्रोर्द्वादशाह एव सापिण्ड्य मन्येषामेकोद्दिष्टान्तं कृत्वा तत्तद्वत्सरान्ते मासिकैः सह सापिण्ड्यं कुर्यादिति भृगुः इति । पत्न्यादीनां तद्व्यतिरिक्तानां च मृतौ पूर्वोक्तन्यायेन पत्न्यादीनां पूर्वं कृत्वा तद्व्यतिरिक्तानां पश्चात् मृतिक्रमेण कुर्यात् । पित्रोः पत्न्यादीनां तद्व्यतिरिक्तानां च सङ्घातमरणे पितृपूर्वं पत्न्यादीनां कुर्यात्, पितृपूर्वं सुतः कुर्यादन्यत्रासत्तियोगतः इति स्मरणात् ।

**லோகாக்ஷி:-** *மாதா பிதாக்களுக்கு 12-ஆவது நாளிலேயே ஸாபிண்ட்யம். மற்றவர்களுக்கு ஏகோத்திஷ்டம் முடியச் செய்து அவரவரின் வர்ஷாந்தத்தில், மாஸிகங்களுடன் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும், என்றார் ப்ருகு, பத்நீ முதலியவர்களுக்கும், மற்றவர்களுக்கும் ம்ருதி விஷயத்தில், முன் சொல்லிய ந்யாயத்தால், பத்நீ முதலியவர்களுக்கு முன்பு செய்து,*

*பிறகு, மற்றவர்களுக்கு மரண க்ரமமாய்ச் செய்யவும். மாதா பிதாக்களுக்கும், பத்நீ முதலியவர்களுக்கும், மற்றவர்களுக்கும் ஸங்காத மரணமானால், மாதா பிதாக்களுக்கு முதலில் செய்து, பத்னீ முதலியவர்களுக்குப் பிறகு செய்யவும். 'மாதா பிதாக்களுக்கு முந்திச் செய்ய வேண்டும், மற்றவர்களுக்கு ஸம்பந்த ஸாமீப்யத்தை அனுஸரித்துச் செய்யவும்' என்று ஸ்ம்ருதி உள்ளது.*

लोकाक्षिः — पत्नी पुत्रस्नुषा पौत्र भ्रातृतत्पुत्रका अपि । पितरौ च यदैकस्मिन् म्रियेरन् वासरे तदा ।। आद्यमेकादशे कुर्यात् त्रिपक्षे तु सपिण्डनम् इति ।। अत्र व्यवस्थामाह वृद्धहारीतः — सङ्घातमरणे पित्रोर्द्वादशाहे सपिण्डनम् । कुर्यात् पुत्रस्तदन्येषां त्रिपक्षे कारयेद्बुधः इति । अन्येषां - पत्न्यादीनामित्यर्थः । तेषामेव मातापितृमृतिवत्सरमध्ये त्रिपक्षादौ सापिण्ड्यं विदधाति ऋश्यशृङ्गः— पत्न्याः पुत्रस्य तत्पुत्रभ्रात्रोस्तत्तनयस्य च। स्नुषास्वस्रोश्च पित्रोश्च सङ्घातमरणं यदि । अर्वागब्दान्मातृपितृपूर्वं साापिण्ड्यमाचरेत् इति ।

**லோகாக்ஷி:**- *பத்நி, புத்ரன், ஸ்நுஷா, பௌத்ரன், ப்ராதா, ப்ராத்ரு புத்ரன் இவர்களும், மாதா பிதாக்களும் ஒரே தினத்தில் மரித்தால் 11-ஆவது நாளில் ஆத்ய ச்ராத்தத்தைச் செய்யவும். த்ரி பக்ஷத்தில் ஸபிண்டீகரணத்தைச் செய்யவும். இவ்விஷயத்தில் வ்யவஸ்தையைச் சொல்லுகிறார், ஹாரீதர்:- ஸங்காத மரண விஷயத்தில், புத்ரன் மாதா பிதாக்களுக்கு 12-ஆவது நாளில் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். மற்றவர்க்கு த்ரிபக்ஷத்தில் செய்யவும். மற்றவர்களுக்கு = பத்நீ முதலியவர்களுக்கு, என்பது பொருள். அவர்களுக்கு மட்டில் மாதா பிதாக்களின் மரண வர்ஷத்தில் த்ரிபக்ஷாதி காலத்தில் ஸாபிண்ட்யத்தை விதிக்கின்றார் ருச்யச்ருங்கர்:- பத்நீ, புத்ரன், பௌத்ரன், ப்ராதா, ப்ராத்ரு புத்ரன், ஸ்நுஷா,*

பகிநீ, மாதாபிதாக்கள் இவர்களுக்கு ஸங்காத மரணமானால், வர்ஷத்திற்குள், மாதா பிதாக்களுக்கு ஸாபிண்ட்யத்தை முன்பு செய்து, மற்றவர்க்குப் பின்பு செய்யவும்.

भृगुरपि — माता भ्राता च तत्पुत्रः पत्नी पुत्रः स्नुषा स्वसा। एषां मृतौ चरेत् श्राद्धमन्येषां न पुनः पितुः इति। पितृमृताब्दे एषामेव श्राद्धं सपिण्डीकरणं कुर्यात् नान्येषामित्यर्थः। ऋश्यशृङ्गोक्तपत्न्यादिसप्तव्यतिरिक्तानां पित्रोर्मृताब्दे पितृभ्यां सहैकदिने वा मृतानां दाहाद्येकोद्दिष्टान्तं तत्तत्काले मृतिक्रमात् कृत्वा तत्तद्वत्सरान्तिमदिने मासिकैः सह सपिण्डनं कुर्यात्।

ப்ருகுவும்:- மாதா, ப்ராதா, ப்ராத்ரு புத்ரன், பத்நீ, புத்ரன், ஸ்நுஷா, பகிநீ இவர்களின் ம்ருதியில் ஸபிண்டீகரணத்தை, பிதாவின் மரண வர்ஷத்தில் செய்யலாம். இவர்களுக்கு மட்டில் செய்யலாம். மற்றவர்களுக்குச் செய்யக்கூடாது என்பது பொருள். ருச்யச்ருங்கரால் சொல்லப்பட்ட பத்நீ முதலிய ஏழு பேர்களைத் தவிர்த்த மற்றவர்களுக்கு, மாதா பிதாக்களின் மரண வர்ஷத்தில், மாதா பிதாக்களுடன் கூடவாவது, ஒரே தினத்திலாவது இறந்தவர்களாயினும், தஹநம் முதல் ஏகோத்திஷ்டம் முடியும் வரையில் அந்தந்தக் காலத்தில் மரண க்ரமமாய்ச் செய்து அவரவர்களின் வர்ஷ முடிவு தினத்தில் மாஸிகங்களுடன் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும்.

अत्र भृगुः — पित्रोर्मृताब्दे श्राद्धान्तं कृत्वाऽन्येषां यथा विधि। मासिकैः सह सापिण्ड्यं वत्सरान्ते समाचरेदिति। वत्सरान्त इति नियमात् ततोऽर्वाक् न मासिकानुष्ठानम्। कालादर्शे — पत्न्यादीनां च पित्रोश्च सङ्घातमरणं यदि। अर्वाक् संवत्सरात् पित्रोः पूर्वं सापिण्ड्यमाचरेत्। सङ्घातमरणेऽन्येषां पित्रोश्च दहनादिकम्। कृत्वा संवत्सरान्ते तु कुर्वीत सहपिण्डनम् इति।

ப்ருகு:- ''மாதா பிதாக்களின் மரண வர்ஷத்தில், மற்றவர்களுக்கு ஏகோத்திஷ்டம் வரையில் விதிப்படி செய்து, வர்ஷ முடிவில் மாஸிகங்களுடன் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும்.'' இதில் 'வர்ஷ முடிவில்' என்ற நியமம் இருப்பதால், அதற்கு முன் மாஸிகங்களுக்கு அனுஷ்டானம் இல்லை. காலாதர்சத்தில்:- பத்நீ முதலியவர்களுக்கும், மாதா பிதாக்களுக்கும் ஸங்காத மரணமாகில், மாதா பிதாக்களின் வர்ஷத்திற்குள் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். அன்யர்களுக்கு மாதா பிதாக்களின் வர்ஷத்திற்குள் ஸங்காத மரணமாகில் தஹநம் முதலியதைச் செய்து, வர்ஷ முடிவில் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும்.

तथा देवलः — महागुरुनिपाते तु प्रेतकार्यं यथाविधि । कुर्यात् संवत्सरादर्वाक् नैकोद्दिष्टं न पार्वणम् इति । पित्रोर्मृतौ संवत्सरादर्वाक् पत्न्यादिव्यतिरिक्तानां प्रेतकार्यं दाहाद्येकोद्दिष्टान्ताः पूर्वक्रिया यथाविधि कुर्यात्, एकोद्दिष्टं मासिकानि पार्वणं सपिण्डीकरणं च कुर्यादित्यर्थः । एतदेवाभिप्रेत्य स्मृत्यन्तरम् — पितरौ प्रमीतौ यस्य देहस्तस्याशुचिर्भवेत् । न दैवं नापि पित्र्यं च यावत् पूर्णो न वत्सरः इति ।

தேவலர்:- ''மஹாகுருவின் மரணத்திலோவெனில், விதிப்படி ப்ரேத கார்யத்தைச் செய்து ஏகோத்திஷ்டத்தைச் செய்யவும். வர்ஷத்திற்குள் ஸபிண்டீகரணத்தைச் செய்யக் கூடாது.'' மாதா பிதாக்களின் மரண வர்ஷத்திற்குள், பத்னீ முதலியவர்களைத் தவிர்த்த மற்றவர்களுக்கு ப்ரேத கார்யத்தை = தஹநம் முதல் ஏகோத்திஷ்டம் முடியும் வரையுள்ள பூர்வக்ரியைகளை, விதிப்படி செய்யவும். ஏகோத்திஷ்டத்தையும் - மாஸிகங்களையும், பார்வணத்தையும் - ஸபிண்டீகரணத்தையும், செய்யக் கூடாது என்பது பொருள். இந்த அபிப்ராயத்தாலேயே, மற்றொரு ஸ்ம்ருதி:- மாதா பிதாக்கள் இறந்தால் புத்ரனின்

*தேஹம் அசுத்தம் ஆகின்றது. ஆகையால் வர்ஷம் முடியும் வரையில் தேவ கார்யங்களையும், பித்ரு கார்யங்களையும் அவன் செய்யக் கூடாது.*

लोकाक्षिरपि — अन्येषां प्रेतकार्याणि महागुरुनिपातने । कुर्यात् संवत्सरादर्वाक् श्राद्धमेकं तु वर्जयेत् इति । श्राद्धं - मासिकं सपिण्डीकरणं च ।

**லோகாக்ஷியும்:-** *மஹாகுருவின் ம்ருதியில் ஒரு வர்ஷத்திற்குள், அன்யர்களுக்கு ப்ரேத கார்யங்களைச் செய்யவும். ச்ராத்தத்தை மட்டில் வர்ஜிக்க வேண்டும். ச்ராத்தம் - மாஸிகமும் ஸபிண்டீகரணமும்.*

ननु — पत्नी चैव सुतो भ्राता स्नुषा चैव विपद्यते । तत्र श्राद्धानि कुर्वीत न पित्रोर्मृतयोरपि इति जाबालिस्मरणात् पत्न्यादीनामपि सापिण्ड्यनिषेध इति चेन्न, द्वादशाहे तन्निषेधपरत्वात्, संवत्सरादर्वाक् निषेधपरत्वे, त्रिपक्षे तु सपिण्डनम् इति लोकाक्ष्यादिवचनविरोधापत्तिः । अतः पत्न्यादीनां पित्रोर्मृताब्दे सपिण्डनानन्तरमरणे तत्तद्द्वादशाहे सपिण्डीकरणं, पत्न्यादीनां पित्रोश्च सङ्घातमरणे पत्न्यादीनां त्रिपक्षे, पित्रोस्तु द्वादशाहे, अन्येषां पित्रोर्मृताब्दे मरणे तत्तद्वत्सरान्ते मासिकानि सपिण्डीकरणं चेति निर्णयः ।

*'பத்நீ, புத்ரன், ப்ராதா, நாட்டுப்பெண் இவர்களின் ம்ருதியில், அவர்களுக்கு, மாதா பிதாக்களின் மரணத்திலும் ச்ராத்தங்களைச் செய்யக் கூடாது' என்று ஜாபால ஸ்ம்ருதி இருப்பதால், பத்நீ முதலியவர்க்கும் ஸாபிண்ட்ய நிஷேதமிருக்கின்றதே' எனில், அது இல்லை. 12-ஆவது நாளில் செய்யக் கூடாது என்பதில் தாத்பர்யம் ஆனதால். ஒரு வர்ஷத்திற்கு உள்ளும் நிஷேதத்தைச் சொல்லுகிறது என்றால் 'த்ரிபக்ஷத்தில் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும்'*

என்ற லோகாக்ஷி முதலியவரின் வசநத்திற்கு விரோதம் நேரும். ஆகையால், பத்நீ முதலியவர்க்கு, மாதா பிதாக்களின் ம்ருதி வர்ஷத்தில் ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு மரணம் ஆனால், அந்தந்த ம்ருதியின் 12-ஆவது நாளில் ஸபிண்டீகரணம். பத்நீ முதலியவர்க்கும், மாதா பிதாக்களுக்கும் ஸங்காத மரணம் ஆனால், பத்நீ முதலியவர்களுக்கு த்ரிபக்ஷத்தில் ஸபிண்டீகரணம். மாதா பிதாக்களுக்கு 12-ஆவது நாளில் ஸாபிண்ட்யம். மற்றவர்களுக்கு மாதா பிதாக்களின் மரண வர்ஷத்தில் மரணம் ஆனால், அந்தந்த வர்ஷத்தின் முடிவில் மாஸிகங்களையும், ஸபிண்டீகரணத்தையும் செய்ய வேண்டும் என்பது நிர்ணயம். (ஸங்காத மரணம் சேர்ந்து மரணம்)

## सहगमनविधिः

अथानुमरणविषये विष्णुः — भर्तरि प्रेते ब्रह्मचर्यं तदन्वारोहणं वा इति । स्मृत्यन्तरे च — साध्वीनामेव नारीणा मग्निप्रपतनादृते । नान्यो धर्मोऽस्ति विज्ञेयो मृते भर्तरि कर्हिचित् इति । हारीतोऽपि — मातृतः पितृतश्चैव यत्र चैषा प्रदीयते । कुलत्रयं पुनात्येषा भर्तारं याऽनुगच्छति इति ।

### ஸஹகமநத்தில் விதி

இனி அனுமரண விஷயத்தில், (பதியுடன் பத்நீ மரித்தால்) விஷ்ணு:- பர்த்தா மரித்த பிறகு, பத்நீ ப்ரம்ஹசர்யத்தை அனுஷ்டிக்கலாம், அல்லது அவனுடன் சேர்ந்து மரிக்கலாம். ஒரு ஸ்ம்ருதியிலும்:- பதிவ்ரதைகளான ஸ்த்ரீகளுக்கு, பர்த்தா இறந்த பிறகு, அக்னியில் விழுவதைத் தவிர்த்து, வேறு தர்மம் எங்கும் சொல்லப்படவில்லை. ஹாரீதரும்:- பர்த்தாவை அனுஸரித்து மரிப்பவள் மாதாவின் குலம், பிதாவின் குலம், பர்த்தாவின் குலம் என்ற 3-குலங்களையும் சுத்தமாகச் செய்கிறாள்.

स्मृत्यन्तरे — सार्तवा सूतिका वाऽपि भर्त्राऽनुमरणोत्सुका। सद्यः शुद्धिमवाप्नोति भर्तुः पापापहारिणी इति । अन्यच्च — बालापत्या तु या नारी सूतिका वा रजस्वला । सर्वासामपि च स्त्रीणामेष साधारणो विधिः इति ।

மற்றோர் ஸ்ம்ருதியில்:- *பர்த்தாவுடன் சேர்ந்து மரிப்பதில் ஆவலுடையவள், ரஜஸ்வலையாயினும், ஸூதிகாசௌசம் உடையவளாயினும், அக்காலத்தில் சுத்தையாய் ஆகிறாள், பர்த்தாவின் பாபத்தைப் போக்குகிறவளாயும் ஆகிறாள்.* மற்றொரு வசநமும்:- *இளங்குழந்தையை உடையவளாயினும், ஸூதிகையாயினும், ரஜஸ்வலையாயினும் சுத்தையாகிறாள். எல்லா ஸ்த்ரீகளுக்கும் இது பொதுவாகிய விதி.*

यत्त्वौर्ववचनम् — बालापत्याश्च गर्भिण्यो ह्यदृष्टर्तव एव च । रजस्वला राजसुते नारोहन्ति चितां शुभे इति । यदपि — बालापत्या तु या नारी भर्त्रा सह न सा व्रजेत् । रजस्वला न गच्छेत्तु गन्त्रीं रक्षेत्तु गर्भिणीमिति अत्र पितृमेधसारकृता व्यवस्थापितम् — षोडशिग्रहणाग्रहणवद्विधिनिषेधदर्शनात् यद्यपि तुल्यविकल्पः प्राप्नोति, तथाऽपि भर्त्राऽनुमरणोत्सुकेति वचनात् पुत्रक्षेत्रधन-धान्यादिमनस्काया वा पातिव्रत्यधर्महीनाया वा संसारदुःख-बन्धुवियोगाद्युपाधितो विषण्णाया वा प्रतिषेधो द्रष्टव्यः इति ।

ஆனால், ஔர்வரின் வசநம்:- *'இளங்குழந்தையை உடையவர்களும், கர்ப்பிணிகளும், ருதுதர்சனம் ஆகாத பெண்களும், ரஜஸ்வலைகளும் பர்த்தாவின் சிதையில் ஏறி அனுமரணம் செய்யக் கூடாது. ஏ ! ராஜகுமாரி !'* என்றும், மற்றொரு வசநம்:- *'இளங்குழந்தையை உடையவள் பர்த்தாவோடு மரிக்கக் கூடாது. ரஜஸ்வலையும் மரிக்கக்கூடாது. கர்ப்பிணீ போவதாய் இருந்தாலும் அவளைக் காப்பாற்ற வேண்டும்'* என்றும் உள்ளதே எனில்,

இவ்விஷயத்தில் பித்ருமேதஸாரகாரரால் இவ்விதம் வ்யவஸ்தை செய்யப்பட்டுள்ளது. ''ஷோடசிக்ரஹணா க்ரஹணங்களுக்குப் போல் விதி, நிஷேதம் இரண்டும் காணப்படுவதால் இவ்விஷயத்தில் துல்ய விகல்ப்பம் ப்ராப்தம் ஆகின்றது. ஆனாலும், 'பர்த்தாவுடன் அனுமரணத்தில் ஆவலுடையவள்' என்று வசந மிருப்பதால், பிள்ளை, நிலம், பணம், தான்யம் முதலியவைகளில் மனமுடையவளுக்காவது, பாதிவ்ரத்ய தர்மம் இல்லாதவளுக்காவது, குடும்ப துக்கம், பந்து வியோகம் முதலிய உபாதியால் வருந்தியவளுக்காவது நிஷேதம் என்று அறியவும்' என்று.

अन्ये तु — भर्त्राऽनुमरणोत्सुका नमस्कृत्य चितारूढं भर्तारं तु प्रसन्नधीः । आरुह्य पत्नी निधनं गता चेदेकां चितिं निर्मलधीः स्वभर्त्रा इत्यादिवचनेषूपात्तैः मरणोत्सुका प्रसन्नधीः निर्मलधीः इत्यादि पदैर्देहादिवियोगकलङ्करहिताया एव अनुमरणाधिकार प्रतिपादनात्, बालापत्या रजस्वला इत्यादिविशेषणो-पादानवैयर्थ्य-प्रसङ्गाच्च पितृमेधसारोक्तं न युक्तम्, निषेधवचनं तु भिन्नचित्यारोहणविषयम्, तच्च क्षत्रियादिविषयम् । तथा च क्षत्रियादिस्त्रीणां रजस्वलादीनामनुमरणे निषेधः, रजस्वला राजसुते इति राजसुतां प्रत्येव तन्निषेधादित्याहुः ।

மற்றவரோவெனில்:- 'நமஸ்க்ருத்ய+ ப்ரஸன்னதீ:-' சிதையில் வைக்கப்பட்ட பர்த்தாவை நமஸ்கரித்து கலங்கமற்ற மனம் உடையவளாய் என்றும், 'ஆருஹ்ய + பர்த்ரா' 'களங்கமற்ற மனம் உடையவளாய் பத்நீ, பர்த்தாவுடன் ஒரே சிதையிலேறி மரணம் அடைந்தால்' என்பதும் முதலிய வசநங்களில் சொல்லப்பட்டுள்ள, மரணோத்ஸுகா, ப்ரஸந்நதீ:, நிர்மலதீ:, என்பது முதலிய பதங்களால், தேஹம் முதலியதை விட்டுப் பிரிவதில் களங்கமற்றவளுக்கே அனுமரணத்தில் அதிகாரம்

சொல்லப்படுவதால், 'இளங்குழந்தையை உடையவர்களும், ரஜஸ்வலைகளும்' என்பது முதலிய விசேஷணங்களைச் சொல்லியதற்கு வையர்த்யம் (பயனின்மை) வரக்கூடுமாவதாலும், பித்ருமேதஸாரகாரர் சொல்லியது யுக்த மல்ல. நிஷேதவசநமோ வெனில் தனியான சிதையில் ஏறுவதைப் பற்றியது. அதுவும் க்ஷத்ரியாதி ஸ்த்ரிகளைப் பற்றியது. அவ்விதம் ஆகியதால், க்ஷத்ரியாதி ஸ்த்ரீகள் ரஜஸ்வலை முதலியவராய் இருந்தால் அவர்களுக்கு அநுமரண நிஷேதம், 'ரஜஸ்வலா ராஜஸுதே' என்று ராஜகன்யையைப் பற்றியே அநுகமனம் நிஷேதிக்கப்பட்டு இருப்பதால்' என்கின்றனர்.

अपरे तु बालापत्यारजस्वलादेः सामान्येन विधानात् प्रतिषेधाच्च रजस्वलायास्तुल्यविकल्पः, भिन्नचित्यारोहणविषयत्वे प्रमाणाभावात्, रजस्वला राजसुते इति राजसुतासम्बोधनमात्रेण विशेषाप्रतीतेरित्याहुः । गर्भिण्यास्तु निषेध एव । ततश्च गर्भिणीं विना बालापत्या सूतिका रजस्वला अदृष्टार्तवाश्च ब्राह्मण्यः एकचित्यारोहणं कुर्युः । सूतिका रजस्वला च तत्तदुक्तशुद्धिप्रकारेण शुद्धा कुर्यात् ।

**மற்றவரோவெனில்:-** "இளங்குழந்தை யுடையவள், ரஜஸ்வலை முதலியவர்க்கு, ஸாதாரணமாய் விதியும் ப்ரதிஷேதமும் இருப்பதால், ரஜஸ்வலைக்கு ஸமவிகல்பம், தனியான சிதையில் ஏறுவதற்கு நிஷேதம் என்கிற விஷயத்தில் ப்ரமாணம் இல்லாததால், 'ரஜஸ்வலா ராஜஸுதே' என்று ஸம்போதனத்தால் மாத்திரம் எந்த விஷயத்தைப் பற்றியது என்பது தோன்றுததால்" என்கின்றனர். கர்ப்பிணிக்கோவெனில் நிஷேதமே. ஆகையால் கர்ப்பிணியைத் தவிர்த்து, இளங்குழந்தை யுடையவள், ஸூதிகை, ரஜஸ்வலை, ரஜோ தர்சனமாகாதவர்கள் ஆகிய ப்ராம்ஹண ஸ்த்ரீகள் ஒரே சிதையில் ஏறி மரிக்கலாம். ஸூதிகையும், ரஜஸ்வலையும்,

அவரவர்க்குச் சொல்லப்பட்டுள்ள சுத்தி ப்ரகாரத்தைச் செய்து கொண்டு சுத்தையாய் அனுமரணம் செய்யலாம்.

यत्तु चन्द्रिकायाम् — भर्तारमनुगच्छन्त्या रज उत्पद्यते यदि । तैलद्रोण्यां विनिक्षिप्य लवणे वा पतिं मृतम् । त्रिरात्राद्दहनं कुर्युर्बान्धवास्तु तया सह । श्राद्धं चैकदिने कुर्यात् द्वयोरपि हि निर्णयः इति । बान्धवा इत्यभिधानादपत्यहीनसंस्कर्त्री-विषयमित्येके । अपरे तु — भर्तारमनुगच्छन्ती पत्नी चेत् सार्तवा यदि । तैलद्रोण्यां विनिक्षिप्य लवणे वा मृतं पतिम् । चतुर्थेऽहनि संस्कुर्यात् पुत्रादिस्तं सहैतया । शवः पर्युषितस्तस्य प्रायश्चित्तं तदा भवेत् । अस्मिन् पक्षेऽप्यघं भर्तुर्दशाहेनापि गच्छति इति । पुत्रवत्त्वेऽपि चतुर्थेऽहनि पित्रोः संस्कार विधानात् समविकल्प इत्याहुः ।

ஆனல், சந்த்ரிகையில்:- 'பர்த்தாவை அனுகமநம் செய்பவளுக்கு ரஜஸ் காணப்பட்டால், ம்ருதனான அவளின் பதியை, எண்ணெய்க் கடாஹத்திலாவது உப்பிலாவது போட்டு வைத்து, மூன்று நாட்களுக்குப் பிறகு அவளுடன் சேர்த்து, பந்துக்கள் ஸம்ஸ்கரிக்க வேண்டும். இருவருக்கும் ஒரே தினத்தில் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும் என்பது நிர்ணயம்' என்று உள்ளதே எனில், இதில், 'பாந்தவா:' என்று இருப்பதால் புத்ரன் இல்லாதவளைப் பற்றியது இது என்கின்றனர் சிலர். மற்றவரோவெனில்:- பர்த்தாவுடன் அனுகமநம் செய்கிற பத்நீ ரஜஸ்வலையாய் இருந்தால், பதியை எண்ணெய்ப் பானையிலாவது உப்பிலாவது வைத்து, 4-ஆவது நாளில் பத்னியுடன் சேர்த்து, புத்ரன் முதலியவன் ஸம்ஸ்கரிக்கவும். சவம் பர்யுஷிதம் ஆகிறது. அதற்கு ப்ராயச்சித்தம் அப்பொழுது செய்யப்பட வேண்டும். இந்தப் பக்ஷத்திலும், பர்த்தாவினுடைய ஆசௌசத்துடன் பத்னியின் ஆசௌசம் நிவ்ருத்திக்கின்றது. புத்ரன்

இருந்தாலும், 4-ஆவது நாளில், ஸம்ஸ்காரத்தை விதிப்பதால் ஸமவிகல்பம் என்கின்றனர்.

स्मृत्यन्तरे — मृतं पतिमनुव्रज्य पत्नी चेत्ज्वलनं गता । न तत्र पक्षिणी कार्या पैतृकादेव शुद्ध्यति । सार्तवा सूतिका चैव भर्त्राऽनुमरणोत्सुका । पूर्ववस्त्रं परित्यज्य शवकर्माणि कारयेत् । सपत्न्योरनुगच्छन्त्योरेका यदि रजस्वला । चतुर्थेऽह्नि सहैवाभ्यां तस्य दाहो विधीयते । एकचित्यां समारूढा यदि भार्या दिनान्तरे । भर्तुर्मृताहे कर्तव्यमभिन्नं मनुरब्रवीत् इति । वसिष्ठः — दह्यमानं तु भर्तारं या नारी त्वनुगच्छति । मरणादि भवेच्छ्राद्धं दहनादि तयोर्न तु । भर्त्रा सहैव शुद्धिः स्यात् श्राद्धं चैकदिने भवेत् इति ।

=மற்றோர் ஸ்ம்ருதியில்:- இறந்த பதியைப் பின் தொடர்ந்து, பத்நீ அக்னியில் பரவேசித்தால், அவ்விஷயத்தில், பக்ஷிண்யாசௌசம் அதிகமாய் அனுஷ்டிக்க வேண்டியது இல்லை. பித்ராசௌசத்தாலேயே சுத்தனாகிறான். ரஜஸ்வலேயும், ஸூதிகையும், அனு மரணத்தில் விருப்பம் உள்ளவளானால், முன் உடுத்தியுள்ள வஸ்த்ரத்தை விட்டு விட்டு, வேறு வஸ்த்ரம் தரிக்கச் செய்து சவ கர்மங்களைச் செய்யவும். அனுகமநம் செய்ய விருப்பமுள்ள இரண்டு பார்யைகளுள் ஒருத்தி ரஜஸ்வலேயாய் இருந்தால், நாலாவது நாளில் இருவருடன் சேர்த்து அவனுக்கு ஸம்ஸ்காரத்தைச் செய்யவும். பார்யை மறுநாளில் பதியின் சிதையில் ஏறி மரித்தால் பர்த்தாவின் மரண தினத்திலேயே அவளுக்கும் சேர்த்துச் செய்ய வேண்டும் என்றார் மனு. வஸிஷ்டர்:- எந்த ஸ்த்ரீ, தஹிக்கப்படும் தன் பர்த்தாவை அனுஸரித்து மரிக்கின்றாளோ, அவளுக்கும் பதிக்கும் மரணம் முதலாகவே ச்ராத்தம். தஹநம் முதலில்லை. பர்த்தாவின் ஆசௌசத்துடனேயே சுத்தி. இருவர்க்கும் ச்ராத்தமும் ஒரே தினத்தில் செய்யப்பட வேண்டும்.

यत्तु — या तु ब्राह्मणजातीया मृतं पतिमनुव्रजेत् । सा स्वर्गमात्मघातेन नात्मानं न पतिं नयेत् इति, यदपि — मृतानुगमनं नास्ति ब्राह्मण्या अनुशासनात् इत्यादि, तत्सर्वमपि ब्राह्मण्या अनुगमननिषेध प्रतिपादकवचनं पृथक्चित्यारोहण-विषयम् पृथक्चितिं समारुह्य न विप्रा गन्तुमर्हति इति विशेषस्मरणात् ।

*ஆனால், ''ப்ராம்ஹண ஜாதீயையான எந்த ஸ்த்ரீ, இறந்த பதியுடன் மரிக்கின்றாளோ, அவள் தன்னைக் கொன்ற தோஷத்தால், தன்னையும், பதியையும் ஸ்வர்க்கத்தை அடைவிக்கமாட்டாள்' என்றும், 'ப்ராம்ஹண ஸ்த்ரீக்கு இறந்த பதியைத் தொடர்ந்து மரிப்பது என்பது இல்லை, சாஸ்த்ர விதியால்' என்றும் வசநங்கள் இருக்கின்றனவே எனில், அவ்விதம் ப்ராம்ஹணிக்கு அனுகமந நிஷேதம் சொல்லும் வசநங்கள் எல்லாம், தனியான சிதையில் ஏறுவதைப் பற்றியவைகள், 'தனிச் சிதையில் ஏறி ப்ராம்ஹண ஸ்த்ரீ போகக் கூடாது' என்று விசேஷிக்கும் ஸ்ம்ருதியிருப்பதால்.*

तथा च हारीतः — भर्त्रा सहानुमरण माचण्डालं विधीयते । पृथक् चितिर्वा राज्यादेर्न विप्रायाः पृथक् चितिः इति । क्षत्रियादीनां च पृथक् चित्यारोहणं देशान्तरमरणविषयम्, सन्निधौ त्वेकचित्याराहणमेव । देशान्तरमृते पत्यै साध्वी तत्पादुकाद्वयम् । निधायोरसि सश्रद्धा प्रविशेत् जातवेदसम् इति स्मरणात् । इदं च मुमुक्षुविषये त्याज्यमेव । तथा च श्रुतिः - तस्माद्व्ययो न प्रागायुषः स्वः कामी प्रेयात् इति । अस्यार्थो विज्ञानेश्वरेणाभिहितः — स्वर्गफलोद्देशेनायुषः प्रागायुर्व्ययो न कर्तव्यो मोक्षार्थिना इति । अतः मोक्षमनिच्छन्त्याः स्वर्गार्थिन्या अनुगमनं युक्तमितरकाम्यानुष्ठानवदिति । सर्वमेतत् स्त्रीधर्मनिरूपणे सविस्तरमधस्तान्निरूपितम् ।

ஹாரீதர்:- பர்த்தாவுடன் சேர்ந்து அனுமரணம் என்பது சண்டாளர் வரையில் விதிக்கப்படுகிறது. தனிச் சிதையில் ஏறி ப்ராம்ஹண ஸ்த்ரீ போகக் கூடாது. க்ஷத்ரிய ஸ்த்ரீ முதலியவர்களுக்கும் தனிச் சிதையில் ஏறுவது என்பது தேசாந்தர மரணத்தைப் பற்றியது. நேரில் இருந்தால் ஒரே சிதையில் தான் அனுமரணம். 'பர்த்தா தேசாந்தரத்தில் மரித்தால், பதிவ்ரதையாகியவள் பர்த்தாவின் பாதுகைகள் இரண்டையும் மார்பில் வைத்துக் கொண்டு, ச்ரத்தை உடையவளாய் அக்னியில் ப்ரவேசிக்கவும்' என்று ஸ்ம்ருதி இருப்பதால். இதுவும் மோக்ஷத்தை விரும்பியவள் விஷயத்தில் விடத் தகுந்ததே. அவ்விதமே வேதம்:- 'ஆகையால் ஸ்வர்க்க பலத்தை உத்தேசித்து, ஆயுளுக்கு முன், ஆயுளைச் செலவு செய்யக்கூடாது' என்றது. விக்ஞானேச்வரரும் மோக்ஷத்தை விரும்புகிறவன் என்றார். ஆகையால், மோக்ஷத்தை விரும்பாமல் ஸ்வர்க்கத்தை விரும்புகிறவளுக்கு அநுகமநம் யுக்தமே ஆகும், மற்றக் காம்யங்களை அனுஷ்டிப்பது போல் அன்று. இவை எல்லாம் விஸ்தாரமாய், முன் ஸ்த்ரீ தர்ம நிரூபணத்தில் நிரூபிக்கப்பட்டது.

## एकचित्यारोहणक्रमः ।

एकचित्यारोहणप्रकारस्तु हेमाद्रावुक्तः — अथानुमरणे पत्नी स्नात्वा भर्त्रा सहैव तु । पथस्तुरीयमासाद्य सिग्वातैरुपवीज्य च । नमस्कृत्य चितारूढं भर्तारं तु प्रसन्नधीः । प्रदक्षिणं परीत्याथ भर्तुर्दक्षिण माविशेत् । इयं नारीति मन्त्रेण शाययेन्मातरं सुतः । ऊहेन वा दहेदूर्ध्वमास्नानात्पतिना समम् । यद्वा पत्नी तु संकल्प्य प्रयोगे त्वखिले कृते । दह्यमाने पतौ मन्त्रान् जपेदध्वर्युणा सह । पावकं प्रविशेत्तत्र भर्तुश्चोर्ध्वं पृथग्विधिः । उभयोः सह सङ्कल्पः कुण्डमेकं पृथक् शिला । वासस्तिलोदकं पिण्डो नग्नप्रच्छादनं नवम् ।

षोडशं च वृषोत्सर्गः सोदकुम्भं पृथक् पृथक् । सहचर्माधिरोहश्च सपिण्डीकरणं तथा । निमित्तहोमवरणे श्राद्धमेकोत्तरं पृथक् । वैश्वदेवं च पाकश्च होमोऽन्नाद्यैः सहेष्यते इति ।

**ஒரே சிதையில் ஏறுவதின் க்ரமம்.**

ஒரே சிதையில் ஏறுவதின் க்ரமம் சொல்லப்பட்டுள்ளது ஹேமாத்ரியில்:- அனுமரண விஷயத்தில், பத்நீ ஸ்நாநம் செய்து, பர்த்தாவுடன் கூடவே சென்று, மார்க்கத்தின் நாலில் ஒரு பாகம் சென்று, வஸ்த்ரத்தின் நுனியின் காற்றுகளால் வீசி, சிதையில் ஏறிய பர்த்தாவை நமஸ்கரித்து, கலங்காத மனம் உடையவளாய் ப்ரதக்ஷிணம் செய்து, பிறகு பர்த்தாவின் வலது பக்கத்தில் உட்கார வேண்டும். புத்ரன், மாதாவை 'இயம்நாரீ' என்ற மந்த்ரத்தால் படுக்கச் செய்யவேண்டும். மந்த்ரத்தை ஊகித்தாவது இருவரையும் தஹிக்கவும். இதற்கு மேல் ஸ்நாநம் வரையில் பதியோடு சேர்த்தே செய்யவும். அல்லது, பத்னீ ஸங்கல்பம் செய்து, ப்ரயோகங்கள் எல்லாம் செய்யப்பட்ட பிறகு, பதி தஹிக்கப்படும் போது, அத்வர்யுவுடன் சேர்ந்து மந்த்ரங்களை ஜபிக்கவும். பிறகு அக்னியில் ப்ரவேசிக்கவும். இதற்கு மேல் தனி விதி. இருவருக்கும் சேர்த்தே ஸங்கல்பம், குண்டமொன்றே. சிலைகள் தனித்தனி, வாஸோதகம், திலோதகம், பிண்டம், நக்னப்ரச்சாதனம், நவச்ராத்தம், ஷோடசச்ராத்தம், வ்ருஷபோத்ஸர்ஜநம், ஸோதகும்ப ச்ராத்தம் இவைகள் தனித்தனி. தோலில் உட்காருவது, ஸபிண்டீகரணம் இவை ஒன்று. நிமித்த ஹோமவரணங்கள், ஏகோத்தரவ்ருத்தி ச்ராத்தம் இவை தனி. விச்வேதேவவரணம், பாகம், ஹோமம், அன்னம் முதலியவை இவையெலாம் சேர்ந்தே விதிக்கப்படுகிறது.

स्मृत्यन्तरे च — आरुह्य पत्नी निधनं गता चेदेकां चितिं निर्मलधीः स्वभर्त्रा । दशाहहोमं श्रपणं च तन्त्रात् पिण्डोदकादीन्

पृथगेव कुर्यात् इति । पितृमेधसारे — स्नात्वा शक्तितो दत्वा ब्राह्मणैरभ्यनुज्ञाता प्रीता पथस्तुरीयमासाद्य सिग्वातैरुपवीज्य चितिगतं भर्तारं प्रदक्षिणीकृत्य प्रणम्य चितिमारुह्य पत्युर्दक्षिणपार्श्वे शयीत । अत्र कर्ता पत्नीमुपनिपातयति इयं नारी इति । समानमत ऊर्ध्वम् । सद्यः पापानि निर्धूय दम्पती विहरतः इति ।

**மற்றோர் ஸ்ம்ருதியிலும்:-** *பத்நீ நிர்மலசித்தம் உடையவளாய், ஒரே சிதையில் ஏறி மரணமடைந்தால் பத்து நாள் ஹோமம், சருச்ரபணம் இவைகளைச் சேர்த்தும், பிண்டோதகம் முதலியவைகளைத் தனியாகவுமே செய்யவேண்டும்.* **பித்ருமேதஸாரத்தில்:-** *ஸ்நாநம் செய்து, யதாசக்தி தானம் செய்து, ப்ராம்ஹணனுக்ஞையைப் பெற்று, ஸந்துஷ்டையாய், வழியின் நான்கில் ஒரு பாகம் சென்று, வஸ்த்ரத்தின் நுனியால் காற்றை வீசி, சிதையிலுள்ள பர்த்தாவை ப்ரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்து, சிதையிலேறி, பதியின் வலதுபக்கத்தில் படுக்கவும். இங்கே, கர்த்தா பத்நியை 'இயம்நாரீ' என்ற மந்த்ரத்தால் படுக்கச் செய்யவும். இனிமேல் ப்ரயோகம் ஸமாநம். உடனே பாபங்களைத் தொலைத்து, தம்பதிகள் (ஸ்வர்கத்தில்) க்ரீடிக்கின்றனர்.*

स्मृतिरत्ने — अनुयाने मृतौ पित्रो रेकशय्या चितिस्तथा । प्रत्येकमञ्जलिर्भेदो नग्नप्रच्छादनादिकम् । एकमेवाग्नि दानं स्यादेकाश्मनि तिलाञ्जलिः इति । एकस्यां शिलायां तिलोदकमित्यर्थः । तिलाञ्जल्यर्था शिला द्वयोरेकेति यावत् । कुण्डमेकं पृथक्छिला इत्यनेनास्य विकल्पः । तत्रैव — अस्थिसञ्चयनं चैकं नवश्राद्धं पृथक् पृथक् । वृषोत्सर्जनभेदश्च मासिकानां पृथक् क्रिया। सपिण्डीकरणं चैकं सुतः सर्वं समाचरेत् इति ।

**ஸ்ம்ருதிரத்னத்தில்:-** அனுமரண விஷயத்தில் மாதாபிதாக்களுக்குப் படுக்கையும், சிதையும் ஒன்றே, திலோதகம் தனித்தனி. நக்னப்ரச்சாதநம் முதலியதும் அக்னிதாநமும் ஒன்றே. ஒரே பாஷாணத்தில் திலோதகதானம். திலோதகதானத்திற்காகிய சிலே, இருவருக்கும் ஒன்றே என்பதாம். 'குண்டமொன்று, சிலே தனி' என்ற வசனத்துடன் இதற்கு விகல்பம். **ஸ்ம்ருதிரத்தினத்திலேயே:-** அஸ்தி ஸஞ்சயநமொன்றே, நவ ச்ராத்தம் தனித்தனி. வ்ருஷபோத்ஸர்ஜநம் தனி. மாஸிகங்கள் தனி. ஸபிண்டீகரணம் ஒன்றே. இவ்விதம் புத்ரன் எல்லாவற்றையும் செய்யவேண்டும்.

स्मृत्यन्तरे — सहैव भर्त्रा मरणं स्त्रियाश्चेत् सहैव कुर्यात् पितृमेधकृत्यम्। पिण्डोदकादीन् पृथगेव कुर्यात् पिण्डस्य संयोजनमत्र भर्त्रा। मृते भर्तरि या पूर्वं परेऽहन्यनुगच्छति। तस्याः पतिदिने श्राद्धं कालभेदं न कारयेत्। अग्निकार्ये न भेदोऽस्ति ह्यस्थिसंचयने तथा। एकगर्ते जलं दद्यात् पिण्डांश्चैकौदने द्वयोः। एकोद्दिष्टं पृथक् कुर्यात् सपिण्डीकरणं सह। तत्र द्वयोर्निमित्तौ द्वौ ब्राह्मणैरितरैः सह इति।

**மற்றொரு ஸ்ம்ருதியில்:-** பர்த்தாவுடன் சேர்ந்து பத்னிக்கு மரணமானல், அபரக்ரியையை சேர்த்தே செய்யவும். பிண்டோதகதாநம் முதலியதைத் தனியே செய்யவும். இதில், பிண்டஸம்யோஜநத்தைப் பர்த்தாவுடன் செய்யவும். பர்த்தா முதல் நாளில் இறந்து, மறுநாளில் பத்னீ அனுகமனம் செய்தால், அவளுக்குப் பதியின் திதியிலேயே ச்ராத்தம். காலபேதம் செய்யக்கூடாது. அக்னி கார்யத்தில் பேதமில்லை. அஸ்தி ஸஞ்சயநத்திலும் அப்படியே. ஒரே குண்டத்தில் உதகதாநம். ஒரே அன்னத்தில் இருந்து இருவருக்கும் பிண்டதாநம். ஏகோத்திஷ்டத்தைத் தனியாய்ச் செய்யவும். ஸபிண்டீகரணத்தைச் சேர்த்துச் செய்யவும். அதில் மற்ற ப்ராம்ஹணர்களுடன் நிமித்த ப்ராம்ஹணர்கள் இரண்டு.

देवलः — परेद्युरनुयाने तु मरणाहक्रमेण तु । दहनादिसपिण्ड्यन्तं श्राद्धं कुर्याद्यथाविधि इति । क्रियाकल्पकारिकायाम् — पतिव्रता त्वन्यदिनेऽनुगच्छेद्या स्त्री पतिं चित्यधिरोहणेन । दशाहतो भर्तुरघस्य शुद्धिः श्राद्धद्वयं स्यात् पृथगेककाले इति । स्मृत्यन्तरे — मृते भर्तरि पूर्वेद्युः परेद्युरनुगच्छति । तस्याः पतिदिने श्राद्धं मृताहस्तु यथातिथि । अस्थिसञ्चयनं चैकं नवश्राद्धं पृथक्पृथक् । वृषोत्सर्जनभेदश्च मासिकानां पृथक्क्रिया । उपस्थानं तदेव स्यत् परं तस्याः पृथक्क्रिया । पृथक्छ्राद्धं तयोः कुर्याद्गोदानं च पृथक् पृथक् । सपिण्डीकरणे प्राप्ते सर्वं तद्दिवसे चरेत् । बहुपत्नीकपक्षे तु मन्त्रावृत्तिः पुनः पुनः । विभज्य पिण्डं दद्यात्तु गार्ग्यस्य वचनं तथा इति ।

**தேவலர்:-** *மறுநாளில் அநுமரணம் செய்த விஷயத்தில், மரண தினம் முதலாக, தஹநம் முதல் ஸபிண்டீகரணம் வரையில் உள்ள ச்ராத்தத்தை விதிப்படி செய்யவும்.* **க்ரியாகல்பகாரிகையில்:-** *பதிவ்ரதா ஸ்த்ரீ, மறுநாளில் பதியின் சிதையில் ஏறி அனுகமனம் செய்தால், பதியின் 10-நாட்களாலேயே ஆசௌச நிவ்ருத்தி. ஒரே காலத்தில் க்ரியைகள் இரண்டும் தனித்தனியாய்ச் செய்யப்பட வேண்டும்.* **மற்றோர் ஸ்ம்ருதியில்:-** *முதல் நாளில் பர்த்தா இறந்து, மறுநாளில் பத்னீ அனுகமனம் செய்தால், பதியின் தினத்திலேயே அவளுக்கும் ச்ராத்தம். ப்ரதிஸாம்வத்ஸரிக ச்ராத்தம் மட்டில் இறந்த திதிப்படி. அஸ்திசஞ்சயநம் ஒன்று. நவ ச்ராத்தம் தனித்தனி. வ்ருஷோத்ஸர்ஜநம் தனி. மாஸிகங்கள் தனி. உபஸ்தானம் ஒன்றே. மற்றவை அவளுக்குத் தனி. ஏகோத்திஷ்டம் தனி. கோதானத்தையும் தனித்தனி செய்யவும். ஸபிண்டீகரணத்தைப் பதியின் தினத்திலேயே செய்யவும். அநேகம் பத்னிகள் அனுமரணம் செய்த*

விஷயத்தில் அடிக்கடி மந்த்ராவ்ருத்தியைச் செய்யவும். பிண்டத்தைப் பிரித்து (தனித்தனியாக)க் கொடுக்கவும். கார்க்யருடைய வசநம் அவ்விதம் உள்ளது.

अन्यत्रापि — दिनान्तरे या तु सहैव भर्तुः कुर्यान्मृताहे सति कर्म कार्यम्। हिरण्यशल्काः पृथगेव कार्याः पात्राणि देहद्वयभाञ्जि कुर्यात् इति । अन्यत्रापि — अन्येद्युरप्यनुगतौ शुद्धिः पतिदशाहतः। सहास्थिसञ्चितिश्चैव काले श्राद्धद्वयं भवेत्। पृथक् पिण्डोदकादि स्यात् पत्या पिण्डस्य योजनम्। तं च पिण्डं त्रिधा कृत्वा पितृपिण्डेषु योजयेत् इति। वसिष्ठः — अनुयाने तु पत्या च सपिण्डीकरणं सह। अन्तर्धाय तृणं मध्ये भर्तृश्वशुरयोरपि। स्त्रीपिण्डं भर्तृपिण्डेन संयोज्य च पुनः सुतः। पितामहादिभिः सार्धं पितृपिण्डं तु योजयेत् इति।

**மற்றொரு ஸ்ம்ருதியிலும்** :- மறுநாளில் அநுமரணம் செய்த பத்னிக்கும் பர்த்தாவின் ம்ருத தினத்தை அநுஸரித்தே க்ரியையைச் செய்யவும். ஹிரண்ய சகலங்களைத் தனியாய்ப் போடவும். யக்ஞ பாத்ரங்களை 2-தேஹங்களிலும் சேர்க்கவும். மற்றொரு ஸ்ம்ருதியிலும்:- மறுநாளில் அநுகமநம் செய்த விஷயத்திலும், பதியின் 10-நாட்களாலேயே சுத்தி. அஸ்தி ஸஞ்சயநம் சேர்த்தே. ஏகோத்திஷ்டம் இரண்டு. பிண்டோதகதானம் முதலியது தனியே. பதி பிண்டத்துடன் ஸம்யோஜனம். அந்தப் பிண்டத்தை மூன்று பாகங்களாக்கிப் பித்ராதி பிண்டங்களுடன் சேர்க்கவும். **வஸிஷ்டர்** :- அனுகமன விஷயத்தில், ஸபிண்டீகரணம் சேர்த்தே செய்யப்படவேண்டும். பர்த்ருபிண்டம், ச்வசுரபிண்டம் இவைகளுக்கு நடுவில் புல்லைப் போட்டு, மாத்ரு பிண்டத்தைப் பித்ரு பிண்டத்துடன் சேர்த்து, மறுபடி பித்ரு பிண்டத்தைப் பிதாமஹாதி பிண்டங்களுடன் சேர்க்கவேண்டும்.

यमः — पत्या चैक्येन कर्तव्यं सपिण्डीकरणं स्त्रियाः । सा मृतापि हि तेनैक्यं गता मन्त्राहुतिव्रतैः इति । शातातपः — या मृता सुभगा नाथं सा तेन सहपिण्डताम् । अर्हति स्वर्गवासेऽपि यावदाभूतसम्प्लवम् । यत्तु सुमन्तुवचनम् — चित्यारोहणकाले तु षोडशानि पृथक् पृथक् । सपिण्डीकरणं तस्याः नैव भर्तुः कृते सति इति, तत् स्त्रियाः पृथक् सपिण्डीकरणनिषेधपरम् ।

யமன்:- பதியுடன் சேர்த்தே பத்னிக்கு ஸபிண்டீகரணம் செய்யப்பட வேண்டும். அவள் இறந்த பிறகும், மந்த்ரம், ஆஹுதி, வ்ரதம் இவைகளால், பர்த்தாவோடு ஐக்யத்தை அடைந்து விட்டாளல்லவா. சாதாதபர்:- எந்தப் பாக்யவதீ பர்த்தாவுடன் அனுகமநம் செய்தாளோ, அவள் பர்த்தாவோடு பிண்ட ஸம்யோகத்திற்கு உரியவளாகிருள். ப்ரளயகாலம் வரையில் ஸ்வர்க்க வாஸத்திற்கும் உரியவளாகிருள். ஆனால், ஸுமந்துவசனம்:- "அனுமரண விஷயத்தில், ஷோடச ச்ராத்தங்கள் தனித்தனியே பர்த்தாவுக்கு ஸபிண்டீகரணம் செய்த பிறகு, அவளுக்கு ஸபிண்டீகரணம் இல்லை" என்று உள்ளதே எனில், அது, அவளுக்குத் தனியாய் ஸபிண்டீகரணம் கூடாது என்பதில் தாத்பர்யம் உள்ளதாகும்.

देवलः — तद्दिने वा परदिने भर्तारमनुगच्छति । नवश्राद्धं षोडशं च सपिण्डीकरणं तथा । यथाकाले तु कर्तव्यं प्रतिसंवत्सरं तथा इति । यथाकाले - भर्तुर्विहितकाले स्त्रिया अपि कर्तव्यमित्यर्थः । यत्तु गौतमवचनम् — एकचित्यां समारूढौ दम्पती निधनं गतौ । मासिकानि नवश्राद्धं सपिण्डीकरणं पृथक् इति, यदपि व्याघ्र वचनम्, पतिव्रता तु या नारी भर्तारमनुगच्छति । पिण्डदानादिकं श्राद्धं सपिण्डीकरणं पृथक्, इति, एतादृश वचनं निमित्तभेदप्रतिपादनपरम् । अन्यथा सपिण्डीकरणं चैकम् तत्र

द्वयोर्निमित्तौ द्वौ ब्राह्मणैरितरैः सह, सपिण्डीकरणं सह इत्यादिपूर्वोक्त बहुस्मृतिविरोधप्रसङ्गात्।

**தேவலர்:-** இறந்த தினத்திலோ மறுதினத்திலோ அனுமரணம் செய்தவளுக்கு நவ ச்ராத்தம், ஷோடச ச்ராத்தம், ஸபிண்டீகரணம், இவைகளை அந்தந்தக் காலத்தில் செய்ய வேண்டும், ஸாம்வத்ஸரிக ச்ராத்தத்தையும் செய்ய வேண்டும். யதாகாலே = பர்த்தாவுக்கு விஹிதமான காலத்தில், ஸ்த்ரீக்கும் செய்யப்பட வேண்டும் என்பது பொருள். ஆனால், **கௌதமவசனம்:-** "தம்பதிகள் ஒரே சிதையில் தஹிக்கப்பட்டால், அவர்களுக்கு, மாஸிகங்கள், நவ ச்ராத்தம், ஸபிண்டீகரணம் இவை தனி" என்றும், **வ்யாக்ரவசனம்:-** "பதிவ்ரதையான எவள் அனுகமனம் செய்தவளோ, அவளுக்கு, பிண்டதானம் முதலியதும், ஏகோத்திஷ்டமும், ஸபிண்டீகரணமும் தனி" என்றும் உள்ளதே எனில், இது போன்ற வசநம் நிமித்தவரணம் தனி என்பதைச் சொல்வதில் தாத்பர்யம் உள்ளதாகும். அவ்விதம் இல்லை எனில், 'ஸபிண்டீகரணம் ஒன்று', 'அதில் நிமித்த ப்ராம்ஹணர்கள் இருவர்', 'ஸபிண்டீகரணம் சேர்த்தே' என்பது முதலிய, முன் சொல்லப்பட்டுள்ள அநேக ஸ்ம்ருதிகளுடன் விரோதம் ப்ரஸக்தமாகும்.

दुर्मरणाद्युपाधिवशेन काष्ठवदमन्त्रकदाहे नानुमृतिः कार्या, दह्यमानममन्त्रेण नानुरोहेत् पतिव्रता इति स्मरणात्। तथा च कल्पकारिकायाम् — पत्युर्वेदाग्निसंस्कारे पत्न्या अनुगमो मतः। अन्यथा त्वात्मघातः स्यादिति वेदविदो विदुः इति। चितिभ्रष्टायाः प्रायश्चित्तमुक्तं स्मृत्यन्तरे — चितिभ्रष्टा यदा नारी मोहाच्चलति वा तदा। प्राजापत्यं भवेत् कृच्छ्रं शुद्धा भवति नान्यथा इति।

துர்மரணம் முதலிய உபாதிவசத்தால் கட்டையைப் போல் மந்த்ரம் இல்லாமல் தஹிக்கும் விஷயத்தில் அனுமரணம் கூடாது. 'மந்த்ரம் இல்லாமல் தஹிக்கப்படும் பர்த்தாவுடன் பதிவ்ரதையான ஸ்த்ரீ அனுமரணம் செய்யக்கூடாது' என்று ஸ்ம்ருதி இருப்பதால். அவ்விதமே, கல்பகாரிகையில்:- பதிக்கு மந்த்ரத்துடன் அக்னி ஸம்ஸ்காரம் செய்யப்படும் விஷயத்தில், பத்னிக்கு அனுகமனம் விதிக்கப்படுகிறது. மற்ற விஷயத்தில், ஆத்ம ஹத்யாதோஷம் ஏற்படும் என்று வேதம் அறிந்தவர்கள் சொல்கின்றனர். சிதையிலிருந்து நழுவியவளுக்கு ப்ராயச்சித்தம் சொல்லப்பட்டுள்ளது. ஒரு ஸ்ம்ருதியில்:- எந்த ஸ்த்ரீ சிதையிலிருந்து நழுவுகிருளோ, அல்லது அறியாமையால் நகருகின்ருளோ, அவளுக்கு ப்ராஜாபத்ய க்ருச்ரம் விதிக்கப்படுகிறது. செய்யாவிடில் அவள் சுத்தையாவது இல்லை.

## गर्भिणीसंस्कारः

अत्र बोधायनः — अथ गर्भिण्याः । अन्तर्वत्नी म्रियेत श्मशानं नीत्वा दहनदेशं जोषयेत् सम्यक्चितामपरेण सव्येन प्रेतस्योदरं विलिखेत् हिरण्यगर्भः समवर्तताग्र इति । अनुलेखनदृष्टं कुमारमनुमन्त्रयते जीवतु मम पुत्रो दीर्घायुत्वाय वर्चसे इति । अथ बालं स्नापयेयुर्हिरण्यमन्तर्धाय जीवन्तं ग्राममानयन्ति । यस्ते स्तनश्शशयः इति स्तनं प्रदाय, तस्मिन्नुदरे आज्यानि जुहोति शतायुधाय शतवीर्याय इति पञ्चभिः प्रयासाय स्वाहाऽऽयासाय स्वाहा इत्यनुवाकेन, प्राणाय स्वाहा व्यानाय स्वाहेत्यनुवाकेन, पूष्णे स्वाहा पूष्णे शरसे स्वाहा इत्यनुवाकेन, सूच्या जठरमव्रणं कुर्यात्, प्रेतां चितिमारोप्य विधिना दाहयेत्, अष्टकाधेनुं नीलधेनुं भूमिधेनुमिति च दद्यात् इति ।

கர்ப்பிணியின் ஸம்ஸ்காரம் கர்ப்பிணியின் ஸம்ஸ்கார விஷயத்தில் போதாயனர்:- இனி கர்ப்பிணீ விஷயத்தில் சொல்லப்படுகிறது. கர்ப்பிணீ மரித்தால், அவளை ச்மசானத்திற் சேர்த்து, தஹநஸ்தலத்தைக் கல்பித்து, சிதைக்கு மேற்கில், ப்ரேதத்தின் வயிற்றை இடது பாகத்தில் கீறவும். 'ஹிரண்யகர்ப்ப:' என்ற மந்த்ரத்தால், கீறியதால் காணப்பட்ட சிசுவை 'ஜீவதுமமபுத்ரோ தீர்க்காயுத்வாய வர்ச்சஸே' என்ற மந்த்ரத்தால் அனுமந்த்ரணம் செய்யவும். பிறகு சிசுவுக்கு ஸ்நாநம் செய்விக்கவும், ஸ்வர்ணத்தை நடுவில் வைத்து. சிசு ஜீவித்திருந்தால் க்ராமத்திற்குக் கொண்டு வரவும். 'யஸ்தேஸ்தனச்சசய:' என்ற மந்த்ரத்தால் ஸ்தனத்தைக் கொடுக்கவும். ப்ரேதத்தின் வயிற்றில் ஆஜ்யாஹுதிகளைச் செய்யவும். 'சதாயுதாய' என்பது முதல் ஐந்து மந்த்ரங்களாலும், 'ப்ரயாஸாயஸ்வாஹா' என்ற அனுவாகத்தாலும், 'ப்ராணாயஸ்வாஹா' என்ற அனுவாகத்தாலும், 'பூஷ்ணேஸ்வாஹா' என்ற அனுவாகத்தாலும். ஊசியினால் வயிற்றைத் தைக்கவும். ப்ரேதத்தைச் சிதையில் ஏற்றி விதிப்படி தஹிக்கவும். அஷ்டகாதேனு, நீலதேனு, பூமிதேனு இவைகளைத் தானம் செய்யவும்.

सङ्ग्रहे — षण्मासादूर्ध्वमासूतेर्म्रियते यदि गर्भिणी । चितेः पश्चान्निधायैनां सव्योदरमथोल्लिखेत् । हिरण्यगर्भमन्त्रेण समुल्लिख्य तमुद्धरेत् । मृतश्चेदुद्धृतो गर्भो घृताक्तं निखनेत् भुवि । जीवेच्चेत् जीवतु मम पुत्र इत्यनुमन्त्रयेत् । अन्तर्धाय हिरण्यं तमभिषिच्य जलैः शिशुम् । ग्रामं गत्वा शिशोर्दद्याद्यस्ते स्तन इति स्तनम् । सुरक्षितं कुमारं तं कृत्वा गत्वा शवान्तिकम् । शतायुधायेत्याज्यानि जुहुया दुदरे ततः । प्रयासायेति हुत्वा च प्राणायेत्यनुवाकतः । पूष्णेस्वाहेति हुत्वा च सन्धायोदरमव्रणम् । चितिमारोप्य तां प्रेतां शेषं पूर्ववदाचरेत्इति ।

**ஸங்க்ரஹத்தில்:-** ஆறு மாதத்திற்கு மேல், ப்ரஸவத்திற்குள் கர்ப்பிணீ மரித்தால், சிதைக்கு மேற்புறத்தில் ப்ரேதத்தை வைத்து, வயிற்றின் இடது பாகத்தைக் கீறவும், 'ஹிரண்யகர்ப்ப:' என்ற மந்த்ரத்தால் சிசுவை வெளியில் எடுக்கவும். எடுக்கப்பட்ட சிசு ம்ருதமாய் இருந்தால், நெய்யைத் தடவி, பூமியில் புதைக்கவும். சிசு பிழைத்து இருந்தால் 'ஜீவது மம புத்ர:' என்று அனுமந்த்ரிக்கவும். ஸுவர்ணத்தை நடுவில் வைத்துச் சிசுவுக்கு ஸ்நானம் செய்வித்து, க்ராமத்திற்கு எடுத்துச் சென்று, 'யஸ்தேஸ்தந:' என்ற மந்த்ரத்தால் ஸ்தனத்தைப் பானம் செய்வித்து, சிசுவை ரக்ஷிதமாகச் செய்து, சவத்தினிடம் வந்து, 'சதாயுதாய' என்பது முதலிய மந்த்ரங்களால் வயிற்றில் ஆஜ்யாஹுதிகளைச் செய்து, 'ப்ரயாஸாய ஸ்வாஹா, ப்ராஞாயஸ்வாஹா, பூஷ்ணேஸ்வாஹா' என்ற அனுவாகங்களாலும் ஹோமம் செய்து, வயிற்றைத் தைத்து, ப்ரேதத்தைச் சிதையில் ஏற்றி, மற்றவைகளை முன் போல் செய்யவும்.

शौनकः — गर्भिणीमरणे प्राप्ते गोमूत्रेण जलैः सह । आपोहिष्ठाभिरब्लिङ्गैः प्रोक्ष्य भर्ता समाहितः । प्रेतं श्मशाने नीत्वाऽस्योल्लिख्य सव्योदरे ततः । पुत्रमादाय जीवन् स्यात् स्तनं दत्वा सुताय तु । यस्ते स्तन इत्येकया ग्रामं नीत्वा निधाय च । उदरं चाव्रणं कुर्यात् पृषदाज्येन पूर्य च । मृद्भस्मकुशगोमूत्रैरापो-हिष्ठादिभिस्त्रिभिः । स्नात्वाऽऽच्छाद्यैव वासांसि पितृमेधेन दाहयेत् । मृतो यदि तु पुत्रः स्याद्व्याहृत्या निखनेत्ततः सति ।

**சௌனகர்:-** கர்ப்பிணிக்கு மரணம் நேர்ந்தால், கோமூத்ரத்துடன் சேர்ந்த ஜலங்களால் 'ஆபோஹிஷ்ட' முதலிய மந்த்ரங்களால் ப்ரோக்ஷித்து, பர்த்தா, சவத்தை ச்மசாநத்திற் சேர்த்து, சவத்தின் இடது வயிற்றைக் கீறி, சிசுவை எடுத்து ஜீவித்து இருந்தால் 'யஸ்தே' என்ற மந்த்ரத்தால் ஸ்தனத்தைப் பருகச் செய்து, க்ராமத்திற்குச்

சென்று ரக்ஷிதமாய்ச் செய்து, தயிர், நெய் இவைகளால் சவத்தின் வயிற்றை நிரப்பி, வயிற்றைத் தைத்து, ம்ருத்திகை, பஸ்மம், குசம், கோமூத்ரம் இவைகளால் 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று மந்த்ரங்களால் ஸ்நாநம் செய்வித்து, வஸ்த்ரங்களால் மூடி, பித்ருமேத விதியாய்த் தஹிக்கவும். சிசு மரித்திருந்தால், வ்யாஹ்ருதிகளால் புதைத்துவிடவும்.

चन्द्रिकायाम् — मृता चेद्गर्भिणी नारी तस्याः संस्कार उच्यते । बोधायन भरद्वाज शौनकाद्यैर्यथोदितः । सङ्कल्प्य पितृमेधं तु कृत्वा दारचितेः क्रियाम् । पश्चाद्दारुचितेः प्रेतां दक्षिणे वाऽथ गर्भिणीम् । निधाय चाथ तन्त्राणि कृत्वा दर्व्यादिमार्जनम् । हिरण्यगर्भमन्त्रेण विलिखेदसिनोदरम् । आगर्भदर्शनाद्वामे मृतस्स्याच्चरणे क्षिपेत् । दृष्ट्वा जीवतु मम पुत्र इति जीवन्तमभि मन्त्रयेत् । अन्तर्धाय हिरण्यं तमभिषिच्य जलैः पुनः । नीत्वा ग्रामं शिशोर्दद्याद्यस्ते स्तन इति स्तनम् ।। सुरक्षितं कुमारं तं कृत्वा गत्वा शवान्तिकम् । शतायुधाय स्योनान्तैः पञ्चभिश्चोदरे घृतम् । यजुर्भिस्तु प्रयासाय स्वाहेति द्वादशाहुतीः । प्राणायेत्यादिभिः पञ्च चक्षुषेत्यादि पञ्चभिः इति ।

சந்த்ரிகையில்:- கர்ப்பிணியான ஸ்த்ரீ இறந்துவிட்டால் அவளுக்கு ஸம்ஸ்காரம் சொல்லப்படுகிறது. போதாயநர், பரத்வாஜர், சௌனகர் முதலியவர்கள் சொல்லியபடி. பித்ருமேதத்தை ஸங்கல்பித்து, தாருசிதையைச் செய்து, சிதைக்கு மேற்புறத்தில் அல்லது தெற்கில் கர்ப்பிணியை வைத்து, தர்வீஸம்மார்ஜநம் வரையில் தந்த்ரங்களைச் செய்து, 'ஹிரண்யகர்ப்ப:' என்ற மந்த்ரத்தால் சவத்தின் இடது வயிற்றை, கத்தியினால் கீறவும், கர்ப்பம் தெரியும் வரையில். சிசு இறந்தால் கால் ப்ரதேசத்தில் புதைக்கவும்.

பிழைத்து இருந்தால் 'ஜீவது மம புத்ர:' என்று அபி மந்த்ரிக்கவும். ஸ்வர்ணத்தை வைத்து ஜலத்தால் ஸ்நாநம் செய்வித்து, க்ராமத்திற்கு எடுத்துச்சென்று, 'யஸ்தேஸ்தந:' என்று ஸ்தநத்தைப் பருகச் செய்து, சிசுவை ரக்ஷிதமாய்ச் செய்து, சவத்தினிடம் சென்று, 'சதாயுதாய' முதல் 'ஸ்யோந:' என்பது வரையுள்ள ஐந்து ருக்குகளாலும், 'ப்ரயாஸாய ஸ்வாஹா' என்ற யஜுஸ்ஸுகளால் 12-ஆஹுதிகளையும், 'ப்ராணாய' என்பது முதலியதால் ஐந்து, 'சக்ஷுஷேஸ்வாஹா' என்பது முதலியதால் ஐந்து இவைகளால் ஹோமம் செய்வது என்றுள்ளது.

## दशाहानन्तरकृत्यम्

तत्र संवर्तः — आशौचे निर्गते कुर्याद्गृहमार्जनलेपने । वाससा जलमाप्लुत्य शुद्ध्येत् पुण्याहवाचनैः इति । आप्लुतिश्च एकादशाहे सङ्गवे कार्या । अघान्ते सङ्गवे स्नायात् इति वसिष्ठस्मरणात् । वसिष्ठः — आशौचान्ते तु कर्तव्यं ब्राह्मणैरभिषेचनम् । ऋग्भिर्यजुर्भिश्छन्दोभिरब्लिङ्गैः पावमानिकैः । आशिषश्च गृहीत्वाऽथ श्राद्धकर्म समाचरेत् इति । व्यासः — संपूज्य गन्धपुष्पाद्यै ब्राह्मणान् स्वस्ति वाचयेत् । धर्मकर्मणि सङ्कल्पे सङ्ग्रामेऽद्भुतदर्शने । यज्ञार्थेऽपि प्रतिष्ठादौ सर्वसंस्कारकर्मसु । शुद्धिकामस्तुष्टिकामः श्रेयस्कामश्च नित्यशः इति ।

### 10-நாட்களுக்கு மேற்பட்ட க்ருத்யம்.

அது விஷயத்தில், ஸம்வர்த்தர்:- "ஆசௌசம் சென்ற பிறகு, வீட்டை மெழுகிப் பெருக்க வேண்டும். ஸசேல ஸ்நாநம் செய்து புண்யாஹவாசனத்தால் சுத்தனுகிறுன்". ஸ்நாநத்தை 11-ஆவது நாளில் ஸங்கவ காலத்தில் செய்ய வேண்டும். 'ஆசௌசத்தின் முடிவில் ஸங்கவ காலத்தில் முழுக வேண்டும்' என்று வஸிஷ்ட ஸ்ம்ருதி இருப்பதால். வஸிஷ்டர்:- ஆசௌசத்தின் முடிவில், ப்ராம்ஹணர்கள்,

ருக், யஜுஸ், ஸாம இந்த மந்த்ரங்களாலும், ஆபோஹிஷ்டாதி மந்த்ரங்களாலும், பவமான மந்த்ரங்களாலும் ஸ்நானம் செய்விக்க வேண்டும். பிறகு கர்த்தா, ப்ராம்ஹணர்களின் ஆசீர்வாதங்களைப் பெற்று ச்ராத்தத்தைச் செய்யவும். வ்யாஸர்:- 'தர்ம கர்மத்திலும், ஸங்கல்பத்திலும், யுத்தத்திலும் ஆச்சர்யமான நிமித்தங்களைக் கண்டாலும், யாக கார்யத்திலும், ப்ரதிஷ்டை முதலியதிலும், எல்லா ஸம்ஸ்கார கார்யங்களிலும், சுத்தி, துஷ்டி, மங்களம் இவைகளை விரும்பியவனும், எப்பொழுதும், ப்ராம்ஹணர்களைக் கந்த புஷ்பங்கள் முதலியவைகளால் பூஜித்து ஸ்வஸ்தி வாசனம் செய்விக்க வேண்டும்' என்றார்.

## वृषोत्सर्गविधिः

अथ वृषोत्सर्गः । चन्द्रिकायाम् – उत्सृजेद्वृषभं नीलं लोहितं कृष्णमेव वा । मृतो न पश्येन्नरकं गोघाती ब्रह्महाऽपि वा। पुत्रो वा भ्रातृपुत्रो वा मृतस्यैकादशेऽहनि । उत्सृजेद्वृषभं नीलं यथावर्णमसम्भवे । प्रेतत्वात् प्रविमुच्यन्ते महापातकिनो नराः इति । व्यासः — एकादशेऽह्नि सम्प्राप्ते प्रेतस्य स्वर्गसाधनम् । वृषमेकं समुत्सृज्य श्राद्धे विप्रांस्तु भोजयेत् इति ।

### வ்ருஷோத்ஸர்ஜன விதி.

இனி வ்ருஷபோத்ஸர்ஜனம் சொல்லப்படுகிறது. சந்த்ரிகையில்:- நீலம், அல்லது சிவப்பு, கறுப்பு நிறமுள்ள வ்ருஷபத்தை விட வேண்டும். இறந்தவன் கோவதம், ப்ராம்ஹண வதம் செய்தவனாகிலும் நரகத்தைப் பார்க்கமாட்டான். இறந்தவனின் புத்ரனாவது, ப்ராத்ரு புத்ரனாவது, 11-ஆவது நாளில் நீல வர்ணமுள்ள, வ்ருஷபத்தை, கிடைக்காவிடில் எந்த வர்ணமுள்ளது ஆயினும் விட வேண்டும். இறந்தவர்கள் மஹாபாதகிக ளாயினும், ப்ரேதத் தன்மையினின்றும் விடுபடுகின்றனர்.

வ்யாஸர்:- 11-ஆவது நாள் வந்தவுடன், இறந்தவனுக்கு ஸ்வர்க்கத்தை அடைவிப்பதான ஒரு வ்ருஷபத்தை விட்டு, பிறகு ச்ராத்தத்தில் ப்ராம்ஹணர்களைப் புஜிக்கச் செய்யவும்.

काश्यपः — नीलं वाऽप्यथ वा कृष्णं मृतस्यैकादशेऽहनि। वृषं पापविशुद्ध्यर्थं रुद्राणामनुशासनात्। होमकर्मसमायुक्तं रुद्रप्रीतिकरं स्मृतम्। एकादशेऽह्नि सम्प्राप्ते यस्य नोत्सृज्यते वृषः। प्रेतत्वान्न विमुच्येत दत्तैः श्राद्धशतैरपि। विप्रो वा क्षत्रियो वाऽपि वैश्यः शूद्रोऽपि वा तथा। वृषहीनो मृतो याति रौरवं तमसा वृतम्। सप्तजन्मकृतं पापं यद्बाल्ये यच्च वार्धके। तत्क्षणादेव नश्येत्तु वृषोत्सर्गे पितुः कृते। पितॄनुद्दिश्य रुद्राय होमकर्मसमन्वितम्। उत्सर्गमात्रे रुद्रस्य लोकं यात्यत्र मानवः इति। स्मृतिरत्ने — एकादशेऽह्नि सम्प्राप्ते स्नात्वा पुण्याहवाचनम्। कृत्वा चरेद्वृषोत्सर्गं कुर्यात् श्राद्धं ततः परम्। शूलं चक्रमथान्यद्वा लाञ्छनं कारयेत् ततः। यस्य देवस्य यो भक्तस्तस्य चिह्नं समालिखेत् इति।

காச்யபர்:- 11-ஆவது நாளில் ம்ருதனின் பாபத்தைப் போக்குவதற்காக, நீலம் அல்லது க்ருஷ்ணமான வ்ருஷபத்தை, ருத்ரர்களின் ஆக்ஞையால் விடவேண்டும். ஹோமத்துடன் செய்யப்படும் இக்கர்மமானது ருத்ரர்களுக்கு ப்ரீதிகரம் எனப்பட்டுள்ளது. 11-ஆவது நாளில் எவனுக்கு வ்ருஷபம் விடப்படுவதில்லையோ அவன் ப்ரேதத் தன்மையினின்றும் விடுபடுவதில்லை, பல ச்ராத்தங்கள் செய்யப்பட்டாலும், ப்ராம்ஹணன், க்ஷத்ரியன், வைச்யன், சூத்ரன் யாராயினும், வ்ருஷபோத்ஸர்ஜனம் செய்யப்படாவிடில் இறந்தவன், இருள் சூழ்ந்த ரௌரவ நரகத்தை அடைவான். பிதாவுக்கு வ்ருஷபோத்ஸர்கம் செய்யப்பட்டால் அவனது சென்ற ஏழு ஜன்மங்களில் செய்யப்பட்ட பாபமும், பால்யத்திலும் வார்த்தகத்திலும் செய்யப்பட்ட பாபமும் அப்பொழுதே

நசிக்கும். பித்ருக்களைக் குறித்து, ருத்ரோத்தேச்யமாய் ஹோமத்துடன் சேர்ந்து உத்ஸர்ஜனம் செய்ததாலேயே மனிதன் ருத்ர லோகத்தை அடைகிருன். ஸ்ம்ருதி ரத்னத்தில்:- 11-ஆவது நாள் வந்தவுடன், ஸ்நானம், புண்யாஹவாசனம் இவைகளைச் செய்து, வ்ருஷபோத்ஸர்ஜனத்தைச் செய்யவும். பிறகு ஏகோத்திஷ்ட ச்ராத்தத்தைச் செய்யவும். சூலம், சக்ரம், அல்லது வேறு குறியைச் செய்யவும். எந்தத் தேவனிடத்தில் பக்தியுள்ளவஞே அந்தத் தேவனின் அடையாளத்தை எழுதவும்.

हेमाद्रौ -स्वेष्टदेवताचिह्नं पश्चिमदक्षिणपादमूले तप्तेनायसेन विलिखेत् इति । बोधायनः — अथ वृषोत्सर्जनम्, तच्च द्विविधं काम्यं नैमित्तिकमिति, नैमित्तिकमेकादशेऽह्नि, काम्यं कार्तिक्यां वैशाख्यां ग्रहणे सङ्क्रमे वेति । स्मृत्यर्थसारे — सपिण्डीकरणात् प्रागेवोक्तकाले नैमित्तिकवृषोत्सर्गः तत्र न मासादिदोषः इति । स्मृत्यन्तरेऽपि — एकादशेऽह्नि षण्मासे त्रिपक्षेऽब्दे तथैव च । वृषोत्सर्गं तु कुर्वीत परस्तादुक्तकालिकः इति ।

ஹேமாத்ரியில்:- தனக்கு இஷ்டமான தேவதையின் அடையாளத்தை, பின் புறத்து வலது காலில், காய்ந்த இரும்பிஞல் எழுதவும். போதாயனர்:- இதில் வ்ருஷபோத்ஸர்ஜனம் சொல்லப்படுகிறது. அது காம்யமென்றும் நைமித்திகம் என்றும் இருவிதம் ஆகும். நைமித்திகம் என்பது, 11-ஆவது நாளில் செய்யப்படுவது. காம்யம் என்பது, கார்த்திக வைசாக பூர்ணிமைகளிலாவது, க்ரஹணத்திலாவது, ஸங்க்ரமணத்திலாவது செய்யப் படுவது ஆகும். ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:- ஸபிண்டீகரணத்திற்கு முன்பே, சொல்லிய காலத்தில் நைமித்திக வ்ருஷபோத்ஸர்ஜனத்தைச் செய்ய வேண்டும். அதில் மாஸம் முதலியதில் தோஷம் இல்லை. மற்ருெரு

**ஸ்ம்ருதியிலும்:-** *11-ஆவது நாளில், 6-ஆவது மாஸத்தில், த்ரிபக்ஷத்தில், வர்ஷ முடிவிலாவது வ்ருஷபோத் ஸர்ஜனத்தைச் செய்யவும். பிறகு செய்வதானல் விதிக்கப்பட்ட காலத்தில் செய்யவும்.*

कालस्तु पद्धतावुक्तः — पूर्वभागेऽथवा मध्ये दिनस्य वृषमुत्सृजेत् । कार्तिक्यां पौर्णमास्यां वा वैशाख्यां वाऽपि वा वृषम् । उत्सृजेल्लक्षणैर्युक्तं देवर्षिपितृतृप्तये इति । आश्वलायनपरिशिष्टे — अथ वृषोत्सर्गः कार्तिक्यां पौर्णमास्यां वैशाख्यां वा जीववत्सायाः पयस्विन्याः पुत्रं द्विहायनमेकहायनं वा नीलं बभ्रुं पिङ्गलं वा इति । स्मृत्यन्तरेऽपि — उत्सृजेद्वृषभं नीलं पौर्णमास्यां तु वत्सकम् । कार्तिक्यामाश्वयुज्यां वा वैशाख्यां प्रातरेव तु । एकादशाहादन्यत्र प्रोक्तकालेषु यत्नतः । वृषोत्सर्गे तदा शुक्रबाल्यं मौढ्यं न दोषकृत् इति । तथा — प्रेतस्य वत्सरादर्वाग्यदा संस्कारमिच्छति । न कालनियमो ज्ञेयो न मौढ्यं गुरुशुक्रयोः इति ।

*காலமோவெனில் பத்ததியில் சொல்லப்பட்டுள்ளது - பகலின் முன் பாகத்திலாவது, நடுப் பாகத்திலாவது வ்ருஷபத்தை விடவும். கார்த்திக பூர்ணிமையிலாவது, வைசாக பூர்ணிமையிலாவது, லக்ஷணங்களுடன் கூடிய வ்ருஷபத்தை தேவருஷி பித்ருக்களின் த்ருப்திக்காக விடவேண்டும்.* **ஆச்வலாயன பரிசிஷ்டத்தில்:-** *இனி வ்ருஷோத் ஸர்கம் சொல்லப்படுகிறது. கார்த்திக பூர்ணிமையில் அல்லது வைசாக பூர்ணிமையில் செய்யவும். பிழைத்துள்ள கன்றையுடையதும், பாலுள்ளதுமான பசுவின் கன்றை, 2-வர்ஷமாகியது அல்லது ஒரு வர்ஷமாகியதை, நீல வர்ணம் அல்லது பப்ரு வர்ணம், பிங்கள வர்ணம் உள்ளதை விடவும்.* **மற்ருரு ஸ்ம்ருதியிலும்:-** *''வைசாகம், கார்த்திகம், ஆச்வயுஜம் இந்த மாஸங்களின் பூர்ணிமையில், ப்ராத:காலத்தில், நீலமான கன்றான வ்ருஷபத்தை விடவும். 11-ஆவது நாள்*

தவிர்த்த காலத்திலானுல் விஹிதமான காலத்தில் கவனித்து விட வேண்டும். 11-ஆவது நாளில் செய்தால் சுக்ரனின் பால்யம் மௌட்யம் இவை தோஷகரங்களல்ல'' என்று உள்ளது. அவ்விதம் - ''இறந்தவனுக்கு ஒரு வர்ஷத்திற்குள் எப்பொழுது ஸம்ஸ்காரத்தைச் செய்ய விரும்புகிருனே, அப்பொழுது கால நியமத்தைக் கவனிக்க வேண்டாம். குரு சுக்ரர்களின் மௌட்யமும் கவனிக்கப்பட வேண்டாம்'' என்றும் வசநம் உள்ளது.

यत्तु — पतिपुत्रवती नारी म्रियते चोभयाग्रतः । वृषं नैवोत्सृजेत् पुत्रो यावत्स्वपितृजीवनम् इति तत् केवलवृषोत्सर्जननिषेधपरम् । अत एव जाबालिः - पतिव्रता सुशीला च पुत्रिणी सुभगा मृता । नोत्सृजेद्वृषमेकं तु सहगामृत्सृजेद्वृषम् । पुत्रादन्यो यदा तस्याः श्राद्धकर्ता भवेद्यदि । तदैव वृषमुत्सृज्य पश्चात् श्राद्धं समाचरेत् इति । अत एव स्मृत्यन्तरम् — या नारी भर्तृसुतयोरग्रे तु प्रमितिं गता । तस्या अपि वृषोत्सर्गः कर्तव्यस्तु यथाविधि । अपुत्रा तु यदा नारी म्रियते भर्तुरग्रतः । वृषोत्सर्गो न कर्तव्य एका गौर्दीयते तदा इति ।

ஆனல், ''பதியும் புத்ரனுமுள்ள ஸ்த்ரீ, இருவரின் எதிரில் மரித்தால், புத்ரன் தன் பிதா ஜீவித்திருக்கும் வரையில் வ்ருஷபோத்ஸர்ஜனத்தைச் செய்யவே கூடாது'' என்ற வசனம் உள்ளதே எனில், அது வ்ருஷபத்தை மட்டில் விடுவதை நிஷேதிப்பதில் தாத்பர்யம் உள்ளது. ஆகையாலேயே, ஜாபாலி:- ''பதிவ்ரதையும், நல்லொழுக்கம் உள்ளவளும், புத்ரவதியுமான ஸுவாஸிநீ மரித்தால், வ்ருஷபத்தை மட்டில் தனியாய் விடக்கூடாது. பசுவையும் சேர்த்து விடவேண்டும். புத்ரனைத் தவிர்த்த மற்றவர்கள் கர்த்தாவானுல், அவன் வ்ருஷபத்தை மட்டில் விட்டு, பிறகு ச்ராத்தத்தைச் (ஏகோத்திஷ்டத்தை) செய்யவும்'' என்ருர். மற்றொரு ஸ்ம்ருதியும்:- ''எந்த ஸ்த்ரீ

பர்த்தா, புத்ரன் இவர்களின் முன்னிலையில் ம்ருதியை அடைந்தாளோ, அவளுக்கும் வ்ருஷபோத்ஸர்ஜனம் விதிப்படி செய்யப்பட வேண்டும். புத்ரன் இல்லாத ஸ்த்ரீ, பர்த்தாவின் எதிரில் மரித்தால், அவளுக்கு வ்ருஷபோத்ஸர்ஜனம் செய்யப்பட வேண்டாம். ஒரு பசுவைத் தானம் செய்ய வேண்டும்'' என்கிறது.

अन्यत्रापि — पतिपुत्रवती नारी मृता चेज्जीवभर्तृका । पातिव्रत्येन तल्लोकं वृषहीना न गच्छति । जीवभर्त्र्यास्तु कर्तव्यं सङ्कल्पश्राद्धमेव हि । पार्वणं च वृषोत्सर्गं कुर्यादायुःक्षयो भवेत् इति । जीवभर्त्र्या अपुत्राया इति शेषः । लोकाक्षिः — न स्त्रियाश्च वृषोत्सर्गं भर्ता कुर्यात् कदाचन । वृषं रुद्रान् वसूंस्त्यक्त्वा सपिण्डीकरणावधि इति । वृषं रुद्रार्थब्राह्मणभोजनं वस्वर्थब्राह्मण भोजनं च त्यक्त्वा अन्यत् सर्वं सपिण्डीकरणावधि कुर्यात् इत्यर्थः ।

**ஓர் ஸ்ம்ருதியிலும்:-** பதியையும் புத்ரனையும் உடைய ஸ்த்ரீ, பர்த்தா ஜீவித்திருக்கும் போது இறந்தால், அவளுக்கு வ்ருஷபோத்ஸர்ஜநம் செய்யப்படாவிடில், பாதிவ்ரத்யத்தால் பதிலோகத்தை அடையமாட்டாள். ஜீவபர்த்ருகையாயிறந்தவளுக்கு ஸங்கல்ப ச்ராத்தமே செய்யப்படவேண்டும். பார்வண ச்ராத்தத்தையும், வ்ருஷபோத்ஸர்ஜநத்தையும் செய்யக் கூடாது. செய்தால் ஆயுஸ்ஸுக்குக் குறைவு ஏற்படும். மூலத்தில் உள்ள 'ஜீவபர்த்ருகைக்கு' என்ற பதத்துடன் 'புத்ரனில்லாத' என்று சேர்க்கவும். **லோகாக்ஷி:-** பர்த்தா பத்னிக்குச் செய்தால் வ்ருஷபோத்ஸர்ஜநத்தை ஒரு காலும் செய்யக் கூடாது. வ்ருஷபோத்ஸர்ஜனம், ருத்ர ப்ரீதிக்காக ப்ராம்ஹண போஜனம், வஸுப்ரீதிக்காக ப்ராம்ஹண போஜனம் இவைகளைத் தவிர்த்து, மற்றது எல்லாவற்றையும் ஸபிண்டீகரணம் முடியும் வரையில் செய்ய வேண்டும்.

अनुमृतिविषये — पितुरूर्ध्वविधिं सम्यक्कृत्वा मातुश्च पुत्रकः । वृषमुत्सृज्य पश्चाद्धि पित्रा सह सपिण्डनम् इति । प्रेतत्वविमोचकवृषोत्सर्गे नान्दीश्राद्धनिषेधमाह शातातपः — स्वर्गकामो वृषोत्सर्गे नान्दीमुखविधानतः । श्राद्धं कुर्यात्तदन्यस्तु न कुर्यात् प्रेतमोचकः इति । विज्ञानेश्वरः — एकादशेऽह्नि सम्प्राप्ते यस्य नोत्सृज्यते वृषः । पिशाचत्वं स्थिरं तस्य दत्तैः श्राद्धशतैरपि इति । स्मृत्यन्तरे — वृषहीनो मृतो याति रौरवं तमसाऽऽवृतम् । उत्सर्गमात्रे रुद्रस्य लोकं यात्यत्र मानवः इति ।

**அனும்ருதி விஷயத்தில்:-** *பிதாவுக்கு க்ரியையைச் செய்து, மாதாவுக்கும் செய்து, வ்ருஷபோத்ஸர்ஜனம் செய்து, பிறகு, பிதாவோடு சேர்த்து ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். ப்ரேதத்வ விமோசநத்திற்காகச் செய்யப்படும் வ்ருஷபோத்ஸர்ஜனத்தில், நாந்தீ ச்ராத்த நிஷேதத்தைச் சொல்லுகிறார்.* **சாதாதபர்:-** *ஸ்வர்க காமனாய் வ்ருஷபோத்ஸர்ஜனம் செய்கிறவன், நாந்தீ ச்ராத்தத்தைச் செய்து செய்ய வேண்டும். ப்ரேதத்வ விமோசநத்திற்காகச் செய்யும் மற்றவன் நாந்தீ ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது.* **விக்ஞாநேச்வரர்:-** *11-ஆவது நாளில் எவனுக்கு வ்ருஷபம் விடப்படுகிறது இல்லையோ, அநேகச் ச்ராத்தங்கள் செய்யப்பட்டாலும், அவனுக்கு பிசாசத் தன்மை ஸ்திரமாகவே இருக்கும்.* **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** *வ்ருஷபோத்ஸர்ஜனம் செய்யப்படாதவன் இருள் சூழ்ந்த ரௌரவ நரகத்தை அடைகிறான். வ்ருஷபோத்ஸர்கம் செய்த உடனேயே ருத்ர லோகத்தை அடைகிறான்.*

बृहस्पतिः — काङ्क्षन्ते पितरः पुत्रान् नरके पातभीरवः । गयां यास्यति यः कश्चित् सोऽस्मान् सन्तारयिष्यति । करिष्यति वृषोत्सर्गमिष्टापूर्तं तथैव च इति । पितृगाथा च— एष्टव्या बहवः पुत्रा यद्येकोऽपि गयां व्रजेत् । यजेत वाऽश्वमेधेन नीलं वा वृषमुत्सजेत् इति ।

ப்ருஹஸ்பதி:- நரகத்தில் விழுவதினின்றும் பயந்தவர்களான பித்ருக்கள், புத்ரர்கள் (பலர்) பிறக்க வேண்டும் என வேண்டுகின்றனர். (பல புத்ரர்கள் இருந்தால்) எவனுவது ஒருவன் கயைக்குப் போவானுகில் அவன் நம்மை (நரகத்தினின்றும்) காப்பாற்றுவான். வ்ருஷபோத்ஸர்ஜனம் செய்வான். யாகத்தைச் செய்வான். பூர்தத்தைச் (குளம் வெட்டுவது முதலியது) செய்வான். பித்ருக்களின் வாக்யமும்:- பல புத்ரர்கள் பிறக்க வேண்டும் என்று கோரவேண்டும். அப்படி ஆனுல் (அவர்களுள்) ஒருவனுவது கயைக்குப் போவான். அச்வமேத யாகத்தையாவது செய்வான். நீலமான வ்ருஷபத்தையாவது விடுவான்.

नीलवृषलक्षणमुक्तं स्मृतिरत्ने — लोहितो यस्तु वर्णेन मुखे पुच्छे च पाण्डरः । श्वेतः खुरविषाणाभ्यां स नीलो वृष उच्यते इति । अत्र वृषालाभे प्रचेताः — विहिते च वृषोत्सर्गे त्वलाभे शक्त्यसम्भवे । प्रेतत्वस्य विमोकार्थं रुद्रानेकादशाशयेत् इति । बोधायनश्च — तासां पयसि पायसं श्रपयित्वा एकादशब्राह्मणान् भोजयेत् इति । व्यासोऽपि — एकादशभ्यो विप्रेभ्यो दद्यादेकादशेऽहनि । रुद्रमुद्दिश्य कर्तव्यं रुद्रप्रीतिकरं हि तत् इति ।

நீலமெனும் வ்ருஷபத்தின் லக்ஷணம் சொல்லப்பட்டுள்ளது. ஸ்ம்ருதிரத்னத்தில்:- தேஹத்தில் சிவப்பு வர்ணமும், முகத்திலும், வாலிலும் வெளுப்பு நிறம் உள்ளதும், குளம்பு, கொம்பு இவைகளில் வெளுப்பு நிறம் உள்ளதுமான வ்ருஷபம் நீல வ்ருஷபம் எனப்படுகிறது. இவ்விஷயத்தில், வ்ருஷபம் கிடைக்காவிடில், ப்ரசேதஸ்:- வ்ருஷபோத்ஸர்கம் செய்யப்படாவிடினும், வ்ருஷபம் கிடைக்காவிடினும், சக்தி இல்லாவிடினும், ப்ரேதத்வ விமோசநத்திற்காக, 11-ருத்ரர்களுக்குப் போஜனம் செய்விக்கவும்.

**போதாயனரும்:-** பசுக்களின் பாலில் பாயஸான்னத்தைப் பாகம் செய்து 11-ப்ராம்ஹணர்களுக்குப் போஜனம் செய்விக்கவும். **வ்யாஸரும்:-** 11-ஆவது நாளில், 11-ப்ராம்ஹணர்களுக்கு, ருத்ரனை உத்தேசித்துக் கொடுக்கவும். அது ருத்ரனுக்கு ப்ரீதியைச் செய்வதாய் ஆகும்.

शातातपश्च — एकादशसु विप्रेषु रुद्रानुद्दिश्य भोजयेत् । प्रेतत्वस्य विमोकार्थं मधुक्षीरघृताशनैरिति । स्मृत्यन्तरे तु — प्रेतत्वस्य विमोक्षार्थे रौद्रान् विधिरूपतः । ब्राह्मणान् भोजयेदष्टौ हिरण्येनौदनेन वा इति ।

**சாதாதபரும்:-** ருத்ரர்களை உத்தேசித்து 11-ப்ராம்ஹணர்களை ப்ரேதத்வம் நிவ்ருத்திப்பதற்காக, தேன், பால், நெய் இவைகளுடன் கூடிய ஆஹாரங்களுடன் புஜிப்பிக்கவும். **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** ப்ரேதத்வ நிவ்ருத்திக்காக ருத்ரர்களுக்காவது போஜநம் செய்விக்கவும் அல்லது 8-ப்ராம்ஹணர்களை, ஹிரண்யத்தாலாவது, அன்னத்தாலாவது, புஜிப்பிக்கவும்.

## एकोद्दिष्ट विधानम् ।

अथैकोद्दिष्टम् । तत्र याज्ञवल्क्यः — मृतेऽहनि तु कर्तव्यं प्रतिमासं च वत्सरम् । प्रतिसंवत्सरं चैवमाद्यमेकादशेऽहनि इति । पैठीनसिरपि — एकादशेऽह्नि यच्छ्राद्धं तत्सामान्यमुदाहृतम् इति । बृहन्मनुः — एकादशेऽह्नि कर्तव्यमेकोद्दिष्टं सदा द्विजैः इति ।

## ஏகோத்திஷ்ட விதானம்.

இனி ஏகோத்திஷ்டம் சொல்லப்படுகிறது. அதில், **யாஜ்ஞவல்க்யர்:-** ஒரு வர்ஷம் வரையில் ஒவ்வொரு மாஸத்திலும் இறந்த தினத்தில் ச்ராத்தம் செய்யப்பட வேண்டும். ஒவ்வொரு வர்ஷத்திலும் ம்ருததிதியில்

*ச்ராத்தம் செய்யவேண்டும். 11-ஆவது நாளில் ஆத்ய ச்ராத்தத்தையும் செய்யவேண்டும்.* **பைடீநஸியும்:-** *11-ஆவது நாளில் செய்யப்படும் ச்ராத்தம் ஸாதாரணம் எனப்படுகிறது.* **ப்ருஹன்மனு:-** *த்விஜர்கள் 11-ஆவது நாளிலேயே ஏகோத்திஷ்டத்தைச் செய்ய வேண்டும்.*

व्याघ्रः – एकादशेऽह्नि संप्राप्ते श्राद्धं दद्याद्यथाविधि । कुर्यादेवात्र वारादि तिथिभान्यनिरीक्ष्य वै इति । स्मृत्यन्तरे — एकादशेऽह्नि यच्छ्राद्धं कुर्यादेवाविचारयन् इति क्षत्रियादीनामप्याद्यश्राद्ध मेकादशाह एवेति माधवीयादौ व्यवस्थापितम् । चन्द्रिकयान्तु — आशौचान्ते ततः सम्यक्पिण्डदानं समापयेत् । ततः श्राद्धं प्रदातव्यं सर्ववर्णेष्वयं विधिः इति । वसिष्ठसंहितायां च — अथातः सम्प्रवक्ष्यामि श्राद्धं गार्ग्यमतेन वै । एकादशेऽह्नि विप्राणां नृपाणां षोडशेऽहनि । वैश्यानां विंशतिदिने शूद्राणां मासि पूरिते इति ।

**வ்யாக்ரர்:-** *11-ஆவது நாளில் விதிப்படி ச்ராத்தம் செய்யவும். வாரம், திதி, நக்ஷத்ரம் இவைகளைப் பாராமல் இன்று அவச்யம் செய்ய வேண்டும்.* **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** *11-ஆவது நாளில் செய்ய வேண்டிய ச்ராத்தத்தை ஸந்தேஹப்படாமல் செய்யவே வேண்டும். க்ஷத்ரியன் முதலியவர்க்கும், ஆத்ய ச்ராத்தம் 11-ஆவது நாளிலேயே என்று மாதவீயம் முதலிய க்ரந்தங்களில் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.* **சந்த்ரிகையிலோவெனில்:-** *ஆசௌசத்தின் முடிவில் பிண்டதானத்தை விதிப்படி முடிக்கவும். பிறகு ஏகோத்திஷ்டத்தைச் செய்ய வேண்டும். இந்த விதி எல்லா வர்ணங்களுக்கும் ஸாதாரணம் ஆகியது.* **வஸிஷ்ட ஸம்ஹிதையிலும்:-** *இனி, கார்க்யரின் மதத்தை அனுஸரித்து ச்ராத்தத்தைச் சொல்லுகிறேன். 11-ஆவது நாளில் ப்ராம்ஹணர்களுக்கும், 16-ஆவது நாளில், க்ஷத்ரியர்களுக்கும், 20-ஆவது நாளில் வைச்யர்களுக்கும், மாதம் பூர்ணமாகிய பிறகு சூத்ரர்களுக்கும் ஏகோத்திஷ்டம் விதிக்கப்படுகிறது.*

अगस्त्यः — एकादशेऽह्नि सम्प्राप्ते द्विजानामुत्तमं विदुः । एकोद्दिष्टं प्रकुर्वीत भूपतिर्द्वादशात् परे । षोडशाहात् परे वैश्यः शूद्रस्त्रिंशद्दिनात्परे इति । सर्वेष्वेतेषु वचनेषु ब्राह्मणानामेकादशदिने एकोद्दिष्टविधानात् तेषामेकादशदिने एवैकोद्दिष्टम् । क्षत्रियादीनां तु विकल्पः ।

*அகஸ்த்யர்:- "11-ஆவது நாளில் ப்ராம்ஹணர்களுக்கு ஏகோத்திஷ்டம் ச்லாக்யமாகும். க்ஷத்ரியன் 13-ஆவது நாளில் செய்யவும். 17-ஆவது நாளில் வைச்யன் செய்யவும். 31-ஆவது நாளில் சூத்ரன் செய்யவும்." முன் சொல்லிய வசனங்கள் எல்லாவற்றிலும், ப்ராம்ஹணர்களுக்கு, 11-வது நாளில் ஏகோத்திஷ்டம் விதிக்கப்படுவதால், அவர்களுக்கு 11-ஆவது நாளிலேயே ஏகோத்திஷ்டம். க்ஷத்ரியர் முதலியவற்கோ வெனில் விகல்பம்.*

अत्राहिताग्नेर्विशेषो जातुकर्णिनोक्तः — ऊर्ध्वं त्रिपक्षाद्यच्छ्राद्धं मृतेऽहन्येव कीर्तितम् । अधस्तु कारयेद्दाहादाहिताग्नेर्द्विजन्मनः इति । त्रिपक्षादर्वाग्यत् प्रेतकर्म तद्दाहदिवसादारभ्य आहिताग्नेः कार्यम्, त्रिपक्षादूर्ध्वं यत् श्राद्धं तन्मरणदिवस एव कार्यमित्यर्थः । अतः दशाहकृत्यमेकोद्दिष्टमूनमासिकं च दाहदिनादि कुर्यात् । द्वितीयमासिकं च दाहदिने कुर्यात् । कालादर्शे — त्रिपक्षात् पूर्वतः साग्नेर्भवेत् संस्कारवासरे। ऊर्ध्वं मृतदिनेऽनग्नेः सर्वाण्येव मृताहतः इति । पूर्वतः - पूर्वत्र कर्तव्यम् । संस्कारवासरे - दाहदिनादि भवेदित्यर्थः ।

*இவ்விஷயத்தில், ஆஹிதாக்னிக்கு விசேஷம் சொல்லப்பட்டுள்ளது ஜாதுகர்ணியினால்:- "ஆஹிதாக்னியாகிய ப்ராம்ஹணனுக்கு, த்ரிபக்ஷத்திற்குள் செய்யப்படும். ப்ரேத கர்மத்தைத் தஹநதினம் முதற்*

கொண்டு செய்ய வேண்டும். த்ரிபக்ஷத்திற்குமேல் செய்யப்படும் ச்ராத்தத்தை மரண தினம் முதற் கொண்டே (கணக்கிட்டுச்) செய்யவும்'' என்று. ஆகையால், 10-நாள் க்ரியை, ஏகோத்திஷ்டம், ஊனமாஸிகம் இவைகளைத் தஹநதினம் முதல் கொண்டு செய்யவும். 2-ஆவது மாஸிகத்தையும் தஹநதினத்தில் செய்யவும். காலாதர்சத்தில்:- ஆஹிதாக்னிக்கு, த்ரிபக்ஷத்திற்கு முன் செய்யப்படும் க்ருத்யத்தை, தஹநதினம் முதல் கொண்டு செய்யவும். த்ரிபக்ஷத்திற்கு மேல் செய்யப்படும் ச்ராத்தத்தை மரண தினம் முதல் கொண்டு செய்யவும். அநாஹிதாக்னிக்கு, எல்லாவற்றையும் மரணதினம் முதல் கொண்டே செய்யவும்.

व्यासः — सूतकान्ते नरः कुर्यादेकोद्दिष्टद्वयं बुधः । सूतके पतिते चापि स्वतन्त्रं नातिलङ्घयेत् इति । एकोद्दिष्टद्वयमिति महैकोद्दिष्टमावृत्ताद्यं च तद्द्वयम् । सूतकान्ते - एकादशाहे कुर्यात्, मध्ये सूतकान्तरापातेऽपि स्वतन्त्रं महैकोद्दिष्टं नातिलङ्घयेत्, तदैव कुर्यादित्यर्थः । अत एवाह विष्णुः — आद्यश्राद्धमशुद्धोऽपि कुर्यादेकादशेऽहनि इति । अत एव च तत्राकरणे पुनः संस्कारमाह बृहस्पतिः -एकादशाहे यत् श्राद्धमेकोद्दिष्टं समाचरेत् । यदि कार्यं न कुर्वीत पुनः संस्कारमर्हति इति । एतच्च अस्थिसञ्चयनाभावविषयम् । कृते त्वस्थिसञ्चयने पुनः पिण्डोदकमात्रमित्यधस्तात् प्रतिपादितम् ।

வ்யாஸர்:- அறிந்தவனான கர்த்தா ஆசௌசத்தின் முடிவில் (11-ஆவது நாளில்) மஹைகோத்திஷ்டம், ஆவ்ருத்தாத்யம் என்ற இரண்டு ஏகோத்திஷ்டத்தையும் செய்ய வேண்டும். நடுவில் வேறு ஆசௌசம் வந்தாலும் ஸ்வதந்த்ரத்தை = மஹைகோத்திஷ்டத்தைச் செய்யாமல் இருக்கக்கூடாது. அப்பொழுதே செய்ய வேண்டும் என்பது பொருள். ஆகையாலேயே, விஷ்ணு:- ''அசுத்தனாயினும், ஆத்யச்ராத்தத்தை = மஹைகோத்திஷ்டத்தை, 11-ஆவது

*நாளில் செய்ய வேண்டும்'' என்கிறார். ஆகையினாலேயே, அன்று செய்யப்படாவிடில், புநஸ்ஸம்ஸ்காரத்தை விதிக்கின்றார் ப்ருஹஸ்பதி:- ''11-ஆவது நாளில் ஏகோத்திஷ்ட ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். செய்யாவிடில் புநஸ்ஸம்ஸ்காரத்தைச் செய்ய வேண்டும்'' என்று. இவ்விதம் சொல்லியது, அஸ்தி ஸஞ்சயநம் செய்யப்படாத விஷயத்தைப் பற்றியது. அஸ்தி ஸஞ்சயநம் செய்யப்பட்டிருந்தாலோவெனில், பிண்டோதகதாநம் மட்டில், என்பது கீழே சொல்லப்பட்டுள்ளது.*

आवृत्ताद्यं तु आशौचसन्निपाते रोगादिना आद्यस्य विघ्ने सति द्वादशाहादिकालान्तरे कार्यं इति । तथा च व्यासः — एकादशाहे त्वाद्यस्य सङ्कटं तु यदा भवेत् । द्वादशाहेऽपि कर्तव्यं त्रयोविंशदिनेऽपि वा इति । चन्द्रिकायाम् — आशौचनिर्गमात् कार्यमाद्यमेकादशेऽहनि । त्रयोविंशदिने वाऽपि सप्तविंशदिनेऽपि वा इति । स्मृत्यर्थसारे — आद्य श्राद्धस्य विघ्ने तु भार्गववारनन्दा चतुर्दशीत्रिजन्मानि त्यक्त्वा ऊनमासिकात् पूर्वमनुष्ठेयम् इति । बृहन्मनुः —एकादशेऽह्नि सम्प्राप्ते यदि चन्द्रस्तु रोहिणीम् । आवसेदुत्तराख्यां वा कुर्यात्तु द्वादशेऽहनि इति ।

*ஆவ்ருத்தாத்யமோவெனில், ஆசௌசம் நேர்ந்தாலும், ரோகம் முதலியதால் அதற்கு விக்னம் நேர்ந்தாலும், 12-ஆவது நாள் முதலிய காலாந்தரத்தில் செய்யப்பட வேண்டும். அவ்விதமே, வ்யாஸர்:- 11-ஆவது நாளில் ஆவ்ருத்தாத்யத்திற்கு விக்னம் நேர்ந்தால், 12-ஆவது நாளில், அல்லது 23-ஆவது நாளில் செய்யப்பட வேண்டும். சந்த்ரிகையில்:- ஆசௌசம் முடிந்த பிறகு, ஆத்யத்தை, 11-ஆவது நாளிலாவது, 23, 27-ஆவது நாளிலாவது செய்யவும். ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில் :- ஆத்ய ச்ராத்தத்திற்கு விக்னம் நேர்ந்தால்,*

வெள்ளிக்கிழமை, நந்தாதிதி, சதுர்தசீ, த்ரிஜன்ம நக்ஷத்ரங்கள் இவைகளை விட்டு, ஊனமாஸிகத்திற்கு முன் செய்ய வேண்டும். ப்ருஹன்மனு:- *11-ஆவது நாளில், சந்த்ரன், ரோஹிணியிலாவது, உத்தரா என்னும் பெயருள்ள நக்ஷத்திரத்திலாவது இருந்தால் (உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி) 12-ஆவது நாளில் (ஆவ்ருத்தாத்யத்தை) செய்யவும்.*

स्मृत्यन्तरेऽपि – एकादशाहे यदि शुक्रवारो रोहिण्यथाप्यर्यम-तारका वा। भवेच्च कृत्वोदकपिण्डदानं श्राद्धं प्रकुर्या दपरेद्युरेव इति। एवं च एकादशाहे आवृत्ताद्यस्य निषेधे सति द्वादशाहाद्युक्तकाले तत् कृत्वा ऊनमासिकादीनि पञ्चदशश्राद्धानि कृत्वा सापिण्ड्यं कुर्यात्।

மற்றொரு ஸ்ம்ருதியிலும்:- *11-ஆவது நாளில் சுக்ரவாரமாவது, ரோஹிணியாவது, பூர்வபல்குனியாவது சேர்ந்தால், உதகபிண்டதானத்தைச் செய்து, ச்ராத்தத்தை (ஆவ்ருத்தாத்யத்தை) மறுநாளிலேயே செய்ய வேண்டும். இவ்விதம் இருப்பதால், 11-ஆவது நாளில் ஆவ்ருத்தாத்யத்திற்கு நிஷேதம் இருந்தால், 12-ஆவது நாள் முதலிய விஹித காலத்தில் அதைச் செய்து, ஊனமாஸிகம் முதலிய 15-ச்ராத்தங்களையும் செய்து ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும்.*

पितृमेधसारे — सर्ववर्णानां मृताहादेकादशेऽह्नि मध्याह्न एकोद्दिष्टं कुर्यात्, साग्नेः संस्काराहादेकादशाहे । त्र्यहतर्पणे चतुर्थेऽह्न्येकोद्दिष्टं पञ्चमे सापिण्ड्यं, एकाहतर्पणे द्वितीयेऽह्न्ये-कोद्दिष्टं तृतीये सापिण्ड्यम्, दशाहाभ्यन्तरे अनेकेषां मरणे तत्तन्मृताहादेकादशाहे, तिथिभेदेऽपि सञ्ज्ञातानुमृतायाः पत्न्याः भर्त्रैकादशाह एव सह श्राद्धं कुर्यात् इति । अत्र संवादवचनानि पूर्वमेवोक्तानि।

**பித்ருமேதஸாரத்தில்:-** "எல்லா வர்ணத்தார்களுக்கும், ம்ருதி தினம் முதல் 11-ஆவது நாளில் மத்யாஹ்னத்தில் ஏகோத்திஷ்டத்தைச் செய்ய வேண்டும். ஆஹிதாக்னிக்கு, ஸம்ஸ்கார தினத்தில் இருந்து, 11-ஆவது நாளில். மூன்று நாட்களில் தர்ப்பணம் செய்யும் விஷயத்தில், 4-ஆவது நாளில் ஏகோத்திஷ்டம், 5-ஆவது நாளில் ஸாபிண்ட்யம். ஒரு நாளில் தர்ப்பணம் செய்யும் விஷயத்தில், 2-ஆவது நாளில் ஏகோத்திஷ்டம், 3-ஆவது நாளில் ஸாபிண்ட்யம். 10-நாட்களுள் அநேகர்களின் மரணம் ஆனால் அவரவரின் ம்ருதி தினத்திலிருந்து 11-ஆவது தினத்தில். திதிபேதம் இருந்தாலும், ஸங்காத மரணத்திலும், அனுமரணத்திலும், பத்னிக்குப் பர்த்தாவுடன் சேர்ந்தே 11-ஆவது தினத்தில் ச்ராத்தத்தைச் செய்யவும்." இவ்விஷயத்தில், அனுஸரித்துள்ள வசநங்கள் முன்பே சொல்லப்பட்டுள்ளன.

स्मृत्यन्तरे — एकादशाहे सम्प्राप्ते त्रीणि कर्माणि कारयेत् । नवश्राद्धं तु पूर्वाह्णे हेम्ना वाऽऽमेन वा भवेत् । प्रेतत्वस्य विमोकार्थं वृषभं विसृजेत्ततः । स्नात्वा मध्याह्नवेलायां विप्रानेकादशावरान् । अशक्तश्चैकविप्रं वा श्रोत्रियं गुणशालिनम् । आमन्त्र्य विप्रमाहूय दद्यादभ्यञ्जनादिकम् । पादप्रक्षालनं कुर्यात् कुण्डे वा मण्डले शुभे । गोत्रं नाम च निर्दिश्य ह्यासनादीनि कल्पयेत् इति ॥

**மற்றொரு ஸ்ம்ருதியில்:-** 11-ஆவது நாள் வந்ததும் 3-கார்யங்களைச் செய்ய வேண்டும். முற்பகலில் நவச்ராத்தத்தை, ஹிரண்யத்தாலாவது, ஆமத்தாலாவது செய்யவும். பிறகு, ப்ரேதத் தன்மை போவதற்கு வ்ருஷபோத்ஸர்ஜனத்தைச் செய்யவும். பிறகு ஸ்நானம் செய்து, மத்யாஹ்ன காலத்தில் 11-ஸங்க்யைக்குக் குறையாத ப்ராம்ஹணர்களுக்குப் போஜனம் செய்விக்கவும். சக்தி இல்லாவிடில் ஒரு ப்ராம்ஹணனுக்காவது செய்விக்கவும். ச்ரோத்ரியனும், நற்குணங்க

ளுடையவனுமான ப்ராம்ஹணனை நிமந்த்ரித்து, அழைத்து எண்ணெய் முதலியதைக் கொடுக்கவும். குண்டத்திலாவது மண்டலத்திலாவது பாத ப்ரக்ஷாளனம் செய்யவும். கோத்ரம், பெயர் இவைகளைச் சொல்லி ஆஸநம் முதலியவைகளைக் கொடுக்கவும்.

देवलः — पूर्वाह्णे दैविकं कार्यमपराह्णे तु पैतृकम्। एकोद्दिष्टं तु मध्याह्ने प्रातर्वृद्धिनिमित्तकम् इति । अत्र व्यासः — आद्यमासिकमेकश्चेद्भुङ्क्ते ब्राह्मन्यात् स हीयते। तदेकादशधा भित्वा विप्रेष्वग्नावथापि वा इति। तदाह सत्यव्रतः – एकादशेऽह्नि प्रेतार्थं ब्राह्मणानेकादशामन्त्र्य मध्याह्ने नानाभक्ष्यान्नरसविन्यासैराशयित्वा विधिवत् पिण्डदानं वासोहिरण्यदास्युपानच्छत्रोदकुम्भदक्षिणा गुणवति विप्रे पात्रे दद्याच्छय्यां च तत्र स्वस्त्ययनादिधर्माः प्रवर्तन्ते इति।

தேவலர்:- முற்பகலில் தேவகார்யத்தையும், பிற்பகலில் பித்ரு கார்யத்தையும், நடுப்பகலில் ஏகோத்திஷ்டத்தையும், ப்ராத:காலத்தில் வ்ருத்தி ச்ராத்தத்தையும் செய்ய வேண்டும். இவ்விஷயத்தில், வ்யாஸர்:- ஆத்ய மாஸிகத்தை ஒருவனே புஜித்தால், அவன் ப்ராம்ஹணத் தன்மையை இழப்பான். ஆகையால், அதை 11-பாகமாகப் பிரித்து, ப்ராம்ஹணர்கள் இடத்தில் செய்யவும் அல்லது அக்னியில் செய்யவும். அதைச் சொல்லுகிறார் ஸத்யவ்ரதர்:- 11-ஆவது நாளில் ப்ரேதனுக்காக 11-ப்ராம்ஹணர்களை அழைத்து, மத்யாஹ்னத்தில் பலவிதமான பக்ஷ்யம் அன்னம் ரஸம் இவைகளுடன் போஜனத்தைக் கொடுத்து, விதிப்படி பிண்டதானம் செய்து, வஸ்த்ரம், ஹிரண்யம், வேலைக்காரி, பாதுகை, குடை, உதககும்பம், தக்ஷிணை, படுக்கை இவைகளை யோக்யனான ப்ராம்ஹணனிடத்தில் கொடுக்கவும். அதில் ஸ்வஸ்தி வாசனம் முதலிய தர்மங்களும் உண்டு.

एवञ्च दश ब्राह्मणान् प्रेतत्वविमोचनार्थं गुणवन्तमेकमाद्य श्रद्धानिमित्तार्थं भोजयित्वा गुणवति तस्मिन् दक्षिणां दद्यात् । अशक्तावेकं वा भोजयेत् । तता चात्रिः - प्रेतार्थं सूतकान्ते तु ब्राह्मणान् भोजयेद्दश । आद्यश्राद्धनिमित्ते तु एकमेकादशेऽहनि । वस्त्रालङ्कारशय्यादि पितुर्यद्वाहनादिकम् । गन्धमाल्यैः समभ्यर्च्य श्राद्धभोक्त्रे प्रदापयेत् । अशक्त एकं संभोज्य शक्त्या दद्याच्च दक्षिणाम् इति ।

இவ்விதம் இருப்பதால், 10-ப்ராம்ஹணர்களை ப்ரேதத்வ மோசனத்திற்காகவும், நற்குணங்களுடைய ஒரு ப்ராம்ஹணனை நிமித்தத்திற்காகவும் புஜிக்கச் செய்து, நற்குணமுள்ள அந்த ஒரு ப்ராம்ஹணன் இடத்தில் தக்ஷிணையைக் கொடுக்கவும். சக்தியில்லாவிடில் ஒரு ப்ராம்ஹணனையாவது புஜிக்கச் செய்யவும். அவ்விதமே, அத்ரி:- ஆசௌசத்தின் முடிவில் 11-ஆவது தினத்தில் ப்ரேதனுக்காக 10-ப்ராம்ணர்களுக்கு போஜனம் செய்விக்கவும். ஆத்ய ச்ராத்தத்திற்காக ஒரு ப்ராம்ஹணனையும் புஜிப்பிக்கவும். பிதாவினுடைய வஸ்த்ரம், அலங்காரம், படுக்கை, வாஹநம், முதலியவைகளை ச்ராத்தத்தில் புஜித்தவனுக்கு, கந்த புஷ்பங்களால் பூஜித்துக் கொடுக்கவும். சக்தி இல்லாதவன் ஒரு ப்ராம்ஹணனைப் புஜிப்பித்து, யதாசக்தி தக்ஷிணையைக் கொடுக்கவும்.

## एकोद्दिष्टस्वरूपनिरूपणम् ।

एकोद्दिष्टस्वरूपमाह याज्ञवल्क्यः — एकोद्दिष्टं दैवहीन मेकार्घ्यैकपवित्रकम् । आवाहनाग्नौकरणरहितं ह्यपसव्यवत् । उत्तिष्ठतामित्यक्षय्यस्थाने विप्रविसर्जने । अभिरम्यतामिति वदेत् ब्रूयुस्तेऽभिरताःस्मह इति । एक उद्दिष्टो यस्मिन् श्राद्धे तदेकोद्दिष्टमिति कर्मनामधेयम् । दैवहीनम् - विश्वेदेवरहितम्,

एकार्घ्यं - एकार्घ्यपात्रम्, एकपवित्रकं - एकदर्भपवित्रं च, आवाहनेन अग्नौकरणेन होमेन च समन्त्रकेण रहितम्, अपसव्यवत् - प्राचीनावीतब्रह्मसूत्रवत् । अक्षय्योदकस्थाने उत्तिष्ठतामिति वदेत् । विप्रविसर्जने अभिरम्यतामिति ब्रूयात् । ते चाभिरताः स्मः इति ब्रूयुरित्यर्थः ।

**ஏகோத்திஷ்ட ஸ்வரூபம்.**

*ஏகோத்திஷ்ட ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார்,* **யாக்ஞவல்க்யர்:-** *ஏகோத்திஷ்டம் எனும் கர்மம் சொல்லப்படுகிறது. ஒருவனே உத்தேச்யன் ஆகியதால் ஏகோத்திஷ்டம் என்று இக்கர்மத்தின் நாமதேயம். அது விச்வதேவ வரணம் இல்லாதது. அதில் அர்க்யபாத்ரம் ஒன்று. ஒரு தர்ப்பத்தால் செய்யப்பட்ட பவித்ரம். ஆவாஹநம், அக்னௌகரணம் இவைகள் மந்த்ரத்துடனில்லை. ப்ராசீநாவீதத்துடன் கூடியது. அக்ஷய்யோதக ஸ்தானத்தில் உத்திஷ்டதாம் என்று சொல்லவும். ப்ராம்ஹணனை அனுப்பும் பொழுது, 'அபிரம்யதாம்' என்று சொல்லவும். ப்ராம்ஹணர்கள் 'அபிரதா:ஸ்ம:' என்று சொல்ல வேண்டும் என்று பொருள்.*

पराशरः — आवाहनक्रियादैवनियोगरहितं हि तत् । एकोऽर्घ्यस्तत्र दातव्यस्तथैवैकपवित्रकम् । प्रेताय पिण्डो दातव्यो भुक्तवत्सु द्विजातिषु । प्रश्नश्च तत्राभिरतिर्यजमानद्विजन्मनाम् इति । पद्धतौ — एकमुद्दिश्य यत् श्राद्धमेकोद्दिष्टं हि कीर्त्यते । एकादशेऽह्नि मध्याह्ने तत् कर्तव्यं विधाय च । पिण्डमेकं प्रदातव्यं आशौचं चाप्रदानतः । एकादशे न कुर्वीत दानहोमादिकं तपः इति ।

**பராசரர்:-** *அது, ஆவாஹநம், தேவவரணம் இவை இல்லாதது. அர்க்யம் ஒன்றே. பவித்ரம் ஒன்றே. பிண்ட தானத்தைச் செய்ய வேண்டும். ப்ராம்ஹணர்கள் புஜித்த பிறகு. யஜமாநன் ப்ராம்ஹணர்கள் இவர்களுக்கு*

ப்ரச்னமும் உத்தரமும் அபிரதி சப்தத்தால். **பத்ததியில்:-** ஒருவனை உத்தேசித்துச் செய்யப்படும் ச்ராத்தம் ஏகோத்திஷ்டம் எனப்படுகிறது. 11-ஆவது நாளில் மத்யாஹ்னத்தில் அதைச் செய்ய வேண்டும். செய்து ஒரு பிண்டத்தைக் கொடுக்கவும். பிண்டப்ரதானம் வரையில் ஆசௌசம் உண்டு. 11-ஆவது நாளில் ஜபஹோமங்கள் முதலியதையும், தபஸ்ஸையும் செய்யக்கூடாது.

स्मृत्यन्तरे — आद्यश्राद्धनिमित्तं तु एकमेकादशेऽहनि । प्रेतार्थं सूतकान्ते तु ब्राह्मणान् भोजयेद्दश । अशक्त एकं सम्भोज्य शक्त्या दद्याच्च दक्षिणाम् । हिरण्यं मेदिनीं गां च वस्त्राणि विविधानि च । यद्यदिष्टतमं लोके गन्धाश्च कुसुमानि च । शय्याऽप्युपानहौ छत्रं यद्भुक्तं मृत्युकालतः । यदिष्टं जीवितस्य स्यात्तद्दद्यात्तस्य यत्नतः । तं विसृज्य द्विजं भुक्तं स्नायादनवलोकितः । श्राद्धं कुर्याद्यथाकालं सपिण्डीकरणं तथा इति ।

**மற்றொரு ஸ்ம்ருதியில்:-** ஆத்ய ச்ராத்தத்திற்காக, 11-ஆவது நாளில் ஒரு ப்ராம்ஹணனை ப்ரேதத்திற்காகவும், ஆசௌச நிவ்ருத்திக்காக, 10-ப்ராம்ஹணர்களையும் புஜிப்பிக்கவும். சக்தி இல்லாதவன் ஒரு ப்ராம்ஹணனைப் புஜிக்கச் செய்து, யதாசக்தி தக்ஷிணையைக் கொடுக்கவும். ஸ்வர்ணம், பூமி, பசு, பல வஸ்த்ரங்கள், இஷ்டமான வஸ்துக்கள், கந்தங்கள், புஷ்பங்கள், படுக்கை, பாதுகை, குடை இவைகளையும், மரண காலத்தில் அவனால் அநுபவிக்கப்பட்ட வஸ்துக்களையும், அவன் பிழைத்திருந்த காலத்தில் எது இஷ்டமான வஸ்துவோ அதையும் கவனமாய்க் கொடுக்க வேண்டும். புஜித்த ப்ராம்ஹணனை அனுப்பிய பிறகு அவனைப் பாராமல் ஸ்நானம் செய்ய வேண்டும். விஹித காலத்தில் ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டும்.

बोधायनः — अथैकोद्दिष्टे तु नाग्नौकरणं नाभिश्रवणं न पूर्वं न दैवं न धूपं न दीपं न स्वधानमस्कारौ इति । रत्नावल्याम् — अनुज्ञा द्विगुणा दर्भा जपादि स्वस्तिवाचनम् । पितृशब्दः स सम्बन्धः शर्मशब्दस्तथैव च । पात्रालम्भोपपात्रं च उल्मुकोल्लेखनादिकम् । पितृप्रश्नः सविकरः शेषप्रश्नस्तथैव च । प्रदक्षिणं विसर्गश्च सीमान्तगमनं तथा । अष्टादश पदार्थाश्च प्रेतश्राद्धे विसर्जयेत् इति ।

**போதாயனர்:-** *ஏகோத்திஷ்டத்தில் அக்னியில் ஹோமம் இல்லை. அபிச்ரவணம் இல்லை, பூர்வம் இல்லை, தைவம் இல்லை, தூபம் இல்லை, தீபம் இல்லை, ஸ்வதாசப்தம் இல்லை, நமஸ்காரம் இல்லை.* **ரத்னாவளியில்:-** *அனுக்ஞை, இரண்டாய் மடித்த தர்ப்பங்கள், ஜபம் முதலியது, ஸ்வஸ்திவாசநம், ஸம்பந்தத்துடன் கூடிய பித்ரு சப்தம், சர்ம சப்தம், பாத்ரத்தைத் தொடுவது, உபபாத்ரம், உல் முகம், கீறுவது முதலியது, பித்ரு ப்ரச்னம், விகிரம், சேஷ ப்ரச்னம், ப்ரதக்ஷிணம், விஸர்ஜநம், ஸீமாந்தகமநம் என்ற இந்த 18-விஷயங்களை ப்ரேதச்ராத்தத்தில் வர்ஜிக்க வேண்டும்.*

स्मृत्यर्थसारे — श्रोत्रियं वेदविद्विप्रं तदहरेव नियोजयेत् । तत्रैव श्मश्रुकर्माणि स्नानमभ्यज्य कारयेत् । एकोद्दिष्टे भवेदेक उद्देश्यो ब्राह्मणस्तथा । अर्घ्यपात्रं भवेदेकं पाणावेकाहुतिर्भवेत् । एकः पिण्डो भवेत्तस्मिन् तदहरेव निमन्त्रणम् । दैवं धूपं तथा दीपं स्वधाशब्दं च वर्जयेत् इति । तदहरेव - तस्मिन्नेवाहनि, निमन्त्रणं कुर्यात् । प्रेतकार्येषु सर्वत्र सद्य एव निमन्त्रणम् । पितृकार्येषु सर्वेषु पूर्वेद्युः स्यान्निमन्त्रणम् इति स्मृतेः । पाणावेकाहुतिरिति पाणिहोम-विधानात् आवाहनाग्नौकरणरहितमित्यग्नौ होमनिषेधः ।

ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- "ச்ரோத்ரியனும் வேதஜ்ஞனுமான ப்ராம்ஹணனை அன்றைக்கே வரிக்கவும். அன்றைக்கே வபநத்தையும் அப்யஞ்ஜன ஸ்நானத்தையும் செய்விக்கவும். ஏகோத்திஷ்டத்தில் உத்தேச்யன் ஒருவன், ப்ராம்ஹணனும் ஒருவன். அர்க்ய பாத்ரம் ஒன்று. பாணியில் (கையில்) ஒரே ஆஹுதி, பிண்டம் ஒன்று. அன்றைய தினத்திலேயே ஆமந்த்ரணம். தைவ வரணம், தூபம், தீபம் ஸ்வதா சப்தம் இவைகளை வர்ஜிக்கவும்" என்று அன்றே நிமந்த்ரணம் - அந்தத் தினத்திலேயே ப்ராம்ஹணனை வரிக்க வேண்டும். 'ப்ரேத கார்யங்கள் எல்லாவற்றிலும் அன்றே வரணம். பித்ரு கார்யங்கள் எல்லாவற்றிலும் முதல் நாளில் வரிக்க வேண்டும்' என்று ஸ்ம்ருதி இருப்பதால். 'பாணியில் ஒரு ஆஹுதி விதிக்கப்படுகிறது' என்று விதி இருப்பதால். 'ஆவாஹ நாக்னௌகரணங்களில்லை' என்றதில் அக்னியில் ஹோமம் நிஷேதிக்கப்படுகிறது.

तथाऽऽश्वलायनकारिका — चरुमुद्धृत्याज्यसिक्तमन्नं मेक्षणदारुणा । हस्तेऽवदानधर्मेण तूष्णीं हुत्वाऽऽहुति द्वयम् । प्रेतार्थविप्रहस्ते तूष्णीं जुहुयात्, पित्रर्थविप्रहस्ते तु समन्त्रकमेव, पितृयज्ञाहुतिं पाणौ जुहुयान्मन्त्रपूर्वकम् इति वृद्धमनुस्मरणात् । तत्रैकोद्दिष्टे पाणौ हुतमन्नं न प्राश्नीयात्, किन्तु लौकिकाग्नौ प्रक्षिपेत् । तथा पारिजाते — हस्ते हुतं तु नाश्नीयादब्दं मुक्त्वाऽनुमासिकम् । अग्नौ प्रक्षेपणं कार्यं सपिण्डीप्रेतकर्मसु इति ।

ஆச்வலாயன காரிகை:- "சருவை எடுத்து, ஆஜ்யத்துடன் சேர்ந்த அன்னத்தை மேக்ஷணதாருவினால், பாணியில் அவதாந தர்மத்தால், மந்த்ரம்இல்லாமல் இரண்டு ஆஹுதிகளைச் செய்து" என்கிறது. ப்ரேதார்த்த ப்ராம்ஹணனின் கையில் மந்த்ரம் இல்லாமல் ஹோமம் செய்யவும். பித்ரர்த்த ப்ராம்ஹணனின் கையில்

மந்த்ரத்துடன் உடனேயே செய்யவும். 'பித்ருயக்ஞாஹுதியைப் பாணியில் மந்த்ரபூர்வமாய் ஹோமம் செய்யவும்' என்று வ்ருத்தமனு ஸ்ம்ருதி உள்ளது. அந்த ஏகோத்திஷ்டத்தில் பாணியில் ஹோமம் செய்யப்பட்ட அன்னத்தைப் புஜிக்கலாகாது. லௌகிகாக்னியில் போட வேண்டும். பாரிஜாதத்தில்:- ப்ரத்யாப்திகம், அனுமாஸிகம், தவிர்த்த மற்ற ச்ராத்தங்களில், பாணியில் ஹோமம் செய்யப்பட்ட அன்னத்தைப் புஜிக்கலாகாது. ஸபிண்டீகரணம், ப்ரேத ச்ராத்தங்கள் இவைகளில், அந்த அன்னத்தை அக்னியில் போடவேண்டும்.

अत्र बोधायनः — अथैकोद्दिष्टेष्वादित एव प्राचीनावीतं कृत्वा दक्षिणाप्रत्यक्प्रवणे स्थण्डिलं कल्पयित्वाऽद्भिरवोक्ष्याग्निं प्रतिष्ठाप्य इति । तत्रैव — अथैनं पृच्छति करिष्यामीति कुरुष्वेतीतरः प्रत्याह अथाभ्यनुज्ञातो दर्व्यामुपस्तीर्य सर्वस्मात् सकृत्सकृत् समवदायाभिघार्य दक्षिणतो भस्ममिश्रानङ्गारान्निरूह्य तेषु जुहुयात् प्रेतायामुष्मै यमाय च स्वाहेति तद्धुतमहुतं च भवति इति ।

இதில் போதாயனர்:- 'ஏகோத்திஷ்டங்களில் ஆரம்பத்திலேயே ப்ராசீநாவீதம் செய்து கொண்டு, தென்மேற்கு திசையில் தாழ்ந்துள்ள இடத்தில் ஸ்தண்டிலத்தைக் கற்பித்து, ஜலத்தால் ப்ரோக்ஷித்து, அக்னியை ப்ரதிஷ்டை செய்து' என்றார். அதிலேயே:- ''பிறகு ப்ராம்ஹணனைக் கேட்கவும் 'கரிஷ்யாமி' என்று, 'குருஷ்வ' என்று ப்ராம்ஹணனின் ப்ரதிவசநம். பிறகு அனுக்ஞை செய்யப்பட்டவன் தர்வியில் உபஸ்தரித்து, எல்லாவற்றினின்றும் ஒவ்வொரு முறை எடுத்து வைத்து, அபிகாரம் செய்து, அக்னியின் தெற்குப் பாகத்தில் சாம்பலுடன் கூடிய தணல்களைத் தனியாய் ஒதுக்கி அவைகளில் 'ப்ரேதாயாமுஷ்மை யமாயச ஸ்வாஹா' என்று ஹோமம் செய்யவும். அவ்விதம் செய்வது ஹோமம்

செய்யப்பட்டதாயும், ஹோமம் செய்யப்படாததாயும் ஆகிறது'' என்று உள்ளது.

स्मृत्यन्तरे — एकादशेऽह्नि मध्याह्ने एकोद्दिष्टं कृतं च यत्। प्रेतस्येव यमस्यापि द्वयोः प्रीतिकरं भवेत् इति। एकोद्दिष्टप्रयोगस्तु-स्वस्वगृह्योक्तप्रकारो द्रष्टव्यः, आपस्तम्बादिभिरनुक्ते प्रयोगे तु बोधायनोक्तस्तु आश्रयणीयः । स्वसूत्रेऽविद्यमाने तु परसूत्रेण वर्तते। बोधायनमतं कृत्वा स्वसूत्रफलभाग्भवेत् इति नियमात्।

மற்றொரு ஸ்ம்ருதியில்:- 11-ஆவது நாளில், மத்யாஹ்னத்தில் செய்யப்பட்ட ஏகோத்திஷ்டம் ப்ரேதன், யமன் என்ற இருவருக்கும் த்ருப்திகரம் ஆகிறது. ஏகோத்திஷ்ட ப்ரயோகத்தை அவரவர் க்ருஹ்யத்திற் சொல்லியபடி அறிந்து கொள்ளவும். ஆபஸ்தம்பர் முதலியவர்களால் ப்ரயோகம் சொல்லப்படாத விஷயத்திலோ வெனில், போதாயனர் சொல்லியதை க்ரஹிக்கவும். 'தனது ஸுத்ரம் இல்லாவிடில், அன்யஸுத்ரத்தால் செய்யவும். போதாயன ஸுத்ரத்தை அவலம்பித்துச் செய்தால், தனது ஸுத்ரத்தால் செய்த பலனை அடைவான்' என்று நியமம் இருப்பதால்.

अत्र नूतनभाण्डेषु पाकमाह वैखानसः – सूतकप्रेत-कयोर्वापयित्वा पुराणानि मृन्मयानि भाण्डानि त्यक्त्वा नवानि परिगृह्य पाचयित्वा श्राद्धं कुर्यात् इति। अर्घ्यादिसत्कारे भोजने च प्रेतार्थब्राह्मणः प्रत्युङ्मुखो निवेशनीयः । तथा गौतमः — दक्षिणाग्रेषु दर्भेषु प्रेतार्थ एकं विप्रं प्रत्यङ्मुखं निधाय इति। वैखानसे — तिल दर्भास्तृते विष्टरे प्रत्यङ्मुख मासादयेदेकोद्दिष्टे इति॥

இதில், புதிய பாண்டங்களில் பாகம் செய்ய வேண்டும் என்றூர் வைகாநஸர்:- ஜநநாசௌச மரணாசௌசங்களில் வபநம் செய்வித்து, பழைய மண்பாண்டங்களைப் பரிஹரித்து, புதிய பாண்டங்களை

க்ரஹித்து, பாகம் செய்வித்து ச்ராத்தத்தைச் செய்யவும். அர்க்யம் முதலிய உபசாரத்திலும், போஜநத்திலும், ப்ராம்ஹணனை மேற்கு முகமாய் ஸ்தாபிக்க வேண்டும். அவ்விதம், கௌதமர்:- 'தெற்கு நுனியாயுள்ள தர்ப்பங்களில் ப்ரேதனுக்காக ஒரு ப்ராம்ஹணனை மேற்கு முகமாய் அமர்த்தி' என்றார். வைகாநஸத்தில்:- திலங்களாலும், தர்ப்பங்களாலும் பரப்பப்பட்ட ஆஸநத்தில் மேற்கு முகமாய் அமர்த்தவும். ஏகோத்திஷ்டத்தில்.

सुन्दरराजीये — प्राङ्मुखौ विश्वेदेवावुदङ्मुखान् प्रागन्तान् पितॄन् प्रत्यङ्मुखं प्रेतमासादयेत् इति। प्रत्युङ्मुखं निमित्तं निवेश्येति सरण्यादौ च दर्शनात् प्रत्यङ्मुखत्वमेव तस्य सिद्धम्। एकोदिष्टे तु यद्भोक्तुरभोज्यं शिष्टं भोजनम्। चन्द्रसूर्योपरागे च शिष्टमन्नं च वर्जयेत् इत्यादिना एकोद्दिष्टशिष्टान्ननिषेधात् नात्र शेषाभ्यनुज्ञा कार्या। मनुः — असपिण्डक्रियाकर्म द्विजादेः संस्थितस्य तु। अदैवं भोजयेच्छ्राद्धं पिण्डमेकं तु निर्वपेत् इति। असपिण्डक्रियाकर्म - सपिण्डीकरणात् प्राक् श्राद्धकर्मेति यावत्। तदेकोद्दिष्टविधिना कृत्वा एकपिण्डं च दत्वा तदप्सु विवर्जयेत्।

ஸுந்தரராஜீயத்தில்:- விச்வேதேவர்களைக் கிழக்கு முகமாகவும், பித்ருக்களை வடக்கு முகமாய்க் கிழக்கில் முடியும்படியாகவும், ப்ரேதனை மேற்கு முகமாகவும் அமர்த்தவும், 'ப்ரேதனை மேற்கு முகமாய் அமர்த்தி' என்று ஸரணி முதலிய க்ரந்தங்களில் காணப்படுவதால், ப்ரேதனுக்கு மேற்கு முகமாய் இருப்பது என்பது ஸித்தித்தது. "ஏகோத்திஷ்டத்தில் புஜித்தவனின் மீதியான அன்னம் புஜிப்பதற்கு அர்ஹமல்ல. சந்த்ரஸூர்ய க்ரஹணங்களிலும் மீதியுள்ள அன்னத்தையும் வர்ஜிக்கவும்" என்பது முதலிய வசநங்களால், ஏகோத்திஷ்ட சிஷ்டான்ன போஜநத்திற்கு நிஷேதம்

இருப்பதால், ஏகோத்திஷ்டத்தில் சிஷ்டமான அன்னத்தைப் புஜிப்பதற்கு அனுக்ஞை செய்யத்தக்கது அல்ல. மனு:- ''ப்ரேதனுன ப்ராம்ஹணன் முதலியவர்க்கு, ஏகோத்திஷ்டத்தைச் செய்ய வேண்டும். விச்வேதேவ வரணம் இல்லாமல் புஜிப்பிக்கவும். ஒரு பிண்டத்தைக் கொடுக்கவும்.'' மூலத்திலுள்ள, அஸபிண்டக்ரியாகர்ம' என்பதற்கு, ஸபிண்டீகரணத்திற்கு முன் செய்யும் ச்ராத்த கர்மம் என்பது பொருள். அதை ஏகோத்திஷ்ட விதியினுல் செய்து, ஒரு பிண்டத்தைக் கொடுத்து, அதை ஜலத்தில் விட வேண்டும்.

पितृमेधसारे — भुक्तशिष्टमन्नं पिण्डं सर्वाणि दर्भहोमपात्राणि चाप्सु प्रक्षिप्य स्नात्वा गृहं समेत्य पुण्याहं वाचयेत् इति । बोधायनः - एकोद्दिष्टान्त एव स्यात् संस्कर्तुः शुद्धता त्वघात् । पिण्डोदकप्रदानेन पुण्याहोक्त्या विशुद्ध्यति इति । अत्र ब्राह्मणालाभे लौकिकाग्निं प्रतिष्ठाप्य दक्षिणामुखः 'यमाय सोमꣳसुनुत' इत्यृचा घृतमिश्रेण पायसेन ग्राससंमिता द्वात्रिंशदाहुतीः हस्तेन जुहुयात् ।

பித்ருமேத ஸாரத்தில்:- போஜன சிஷ்டமான அன்னம், பிண்டம், தர்ப்பம், ஹோமபாத்ரங்கள் இவைகள் எல்லாவற்றையும் ஜலத்தில் போட்டு ஸ்நானம் செய்து, வீட்டிற்கு வந்து புண்யாஹவாசனம் செய்யவும். போதாயனர்:- ஸம்ஸ்காரம் செய்தவனுக்கு ஆசௌசத்தினின்றும் சுத்தி, பிண்டோதகங்களைக் கொடுத்து, ஏகோத்திஷ்டத்தை முடித்த பிறகு தான் ஆகும். பிறகு புண்யாஹவாசநத்தால் சுத்தனுகிருன். இந்த ஏகோத்திஷ்டத்தில் ப்ராம்ஹணன் கிடைக்காவிடில், லௌகிகாக்னியை ப்ரதிஷ்டை செய்து, தெற்கு நோக்கியவனுய், 'யமாயஸோமம்ஸுநுத' என்ற ருக்கினுல், நெய்யுடன் கூடிய பாயஸான்னத்தால், கபள

ப்ரமாணமாகிய 32-ஆஹுதிகளைக் கையால் ஹோமம் செய்யவும்.

## आवृत्ताद्यमासिकम्

एवमिदमाद्यं स्वतन्त्रैकोद्दिष्टं ब्राह्मणेऽग्नौ वा कृत्वा पुनरपि ब्राह्मणे कर्तव्यम्। तथा च स्मृत्यन्तरे — एकादशेऽह्नि सम्प्राप्ते विप्राभावे कथं भवेत्। पायसं घृतसंमिश्रं हस्तेन ग्राससंमितम्। यमाय सोममित्येव द्वात्रिंशत् जुहुयाच्चरुम्। अध्वर्युर्वाग्यतो भूत्वा प्रसव्यं दक्षिणामुखः। श्राद्धसिद्धिमवाप्नोति नात्र कार्या विचारणा इति। काश्यपः — एकोद्दिष्टे तु सम्प्राप्ते विप्राभावे कथं भवेत्। आवाह्य सुसमिद्धेऽग्नौ पायसं जुहुयाद्धविः। पौरुषेण तु सूक्तेन त्वावृत्त्या ग्राससंमितम्। अभ्यर्च्य गन्धवस्त्राद्यैरुदकुम्भं च दक्षिणाम्। ततः स्नात्वा पुनश्चाद्यं कुर्यात्तु ब्राह्मणैर्बुधः इति। परितोऽग्निं गन्धाद्यैरभ्यर्च्य दक्षिणामुदकुम्भश्चाग्निसमीपे निधाय तानि च ब्राह्मणेभ्यो दद्यादित्यर्थः।

### ஆவ்ருத்தாத்ய மாஸிகம்

இவ்விதம், இந்த ஆத்யமான ஸ்வதந்த்ரைகோத்திஷ்டத்தை ப்ராம்ஹணன் இடத்திலாவது, அக்னியிலாவது செய்து, மறுபடியும் ப்ராம்ஹணனிடத்தில் செய்ய வேண்டும், அவ்விதமே, ஒரு ஸ்ம்ருதியில்:- 11-ஆவது நாளில் ப்ராம்ஹணன் கிடைக்காவிடில் என்ன செய்வது ? நெய்யுடன் கூடிய பாயஸான்னத்தைக் கையால், கபள ப்ரமாணமாய் 'யமாயஸோமம்' என்ற மந்த்ரத்தால் 32-ஆஹுதிகளைச் செய்ய வேண்டும். கர்த்தா மௌனியாயிருந்து, ப்ராசீனுவீதியாய், தெற்கு நோக்கியவனாய் ஹோமம் செய்யவும். ச்ராத்த ஸித்தியை அடைகிறான். இவ்விஷயத்தில் ஸந்தேஹப்பட வேண்டாம். காச்யபர்:- "ஏகோத்திஷ்டம் ப்ராப்தமாகிய

பொழுது, ப்ராம்ஹணன் இல்லாவிடில் எப்படிச் செய்வது? நன்றாய் ஜ்வலிக்கும் அக்னியில் ஆவாஹனம் செய்து, பாயஸான்ன ஹவிஸ்ஸை ஹோமம் செய்யவும். புருஷ ஸூக்தத்தால் ஆவ்ருத்தியால், கபள ப்ரமாண ஆஹுதிகளைச் செய்யவும். கந்தம், வஸ்த்ரம் முதலியவைகளால் பூஜித்து, உதககும்பம் தக்ஷிணை இவைகளைக் கொடுக்கவும். பிறகு ஸ்நானம் செய்து, மறுபடி ஆத்ய ச்ராத்தத்தை, ப்ராம்ஹணர்களைக் கொண்டு செய்யவும்.'' அக்னியின் நான்கு பக்கங்களிலும் கந்தம் முதலியவைகளால் பூஜித்து, தக்ஷிணையையும், உதக கும்பத்தையும் அக்னியின் ஸமீபத்தில் வைத்து அவைகளை ப்ராம்ஹணர்களுக்குக் கொடுக்க வேண்டும் என்பது பொருள்.

चन्द्रिकायां तु — एकोद्दिष्टे तु सम्प्राप्ते विप्राभावे कथं भवेत्। उदीरतामिति मन्त्रैर्जुहुयात् घृतपायसम् । स्वगृह्योक्त-विधानेन सूक्तेन पुरुषस्य वा इति । उदीतारमवर उत्परास इत्यादीना मष्टानां ऋचां चतुरावृत्त्या द्वात्रिंशदाहुतयो भवन्ति । पुरुषसूक्तस्य षोडशर्चस्य द्विरावृत्त्या तथा भवन्ति । यथास्वकुलाचारमिह मन्त्रव्यवस्था ।

சந்த்ரிகையிலோவெனில்:- ''ஏகோத்திஷ்டம் ப்ராப்தமாய் இருக்கும் பொழுது ப்ராம்ஹணன் இல்லாவிடில் எப்படிச் செய்வது ? 'உதீரதாம்' என்பது முதலிய மந்த்ரங்களால் நெய் கலந்த பாயஸத்தை தனது க்ருஹ்யத்தில் சொல்லிய விதியால் ஹோமம் செய்யவும் அல்லது புருஷ ஸூக்தத்தால் ஹோமம் செய்யவும்'' என்று உள்ளது. 'உதீரதாம்' என்பது முதலிய எட்டு ருக்குகளை, நாலு தடவை ஆவ்ருத்தி செய்தால் 32-ஆஹுதிகள் ஆகின்றன. புருஷ ஸூக்தத்தின் 16-ருக்குகளை 2-தடவை ஆவ்ருத்தி செய்தால் 32-ஆஹுதிகள் ஆகின்றன. அவரவர் குலாசாரப்படி மந்த்ர வ்யவஸ்தையை அறியவும்.

तत्र पिण्डदानमुक्तं श्रीधरीये — एकोद्दिष्टे तु सम्प्राप्ते विप्राभावे हुते सति। पिण्डमेकं प्रदातव्यमाशौचं चाप्रदानतः इति। तत्र गौतमः — ब्राह्मणं भोजयेदाद्ये होतव्य मनलेऽपि वा। पुनश्च भोजयेद्विप्रं द्विरावृत्तिर्भवेदिह इति। व्यासोऽपि — सूतकान्ते नरः कुर्यादेकोद्दिष्टद्वयं बुधः। ब्राह्मणं भोजयेदाद्ये होतव्यमनलेऽपि वा। (पुनश्च भोजयेद्विप्रं द्विरावृत्तिर्भवेदिति) पुनश्च भोजयेद्विप्र मावृत्तिद्वयसिद्धये इति। कालादर्शेऽपि — आद्यश्राद्धं द्विजेऽग्नौ वा कुर्यात् पुनरपि द्विजे इति।

*அதில் பிண்டதானம் சொல்லப்பட்டு உள்ளது.* **ஸ்ரீதரீயத்தில்:-** *ஏகோத்திஷ்டம் ப்ராப்தமாய் இருக்கும் போது, ப்ராம்ஹணன் இல்லாவிடில், ஹோமம் செய்தால், ஒரு பிண்டத்தைக் கொடுக்கவும். அது வரையில் ஆசௌசம் உண்டு.* **அதில், கௌதமர்:-** *ஆத்ய ச்ராத்தத்தில், ப்ராம்ஹணனைப் புஜிப்பிக்கவும். அக்னியிலாவது ஹோமம் செய்யவும். மறுபடி ப்ராம்ஹணனைப் புஜிப்பிக்கவும். இதில் இரண்டு தடவை ஆவ்ருத்தியாக வேண்டும்.* **வ்யாஸரும்:-** *அறிந்தவன் ஆசௌசத்தின் முடிவில் இரண்டு ஏகோத்திஷ்டத்தைச் செய்யவும். முதலில் ப்ராம்ஹணனைப் புஜிக்கச் செய்யவும் அல்லது அக்னியில் ஹோமம் செய்யவும். மறுபடி ப்ராம்ஹணனைப் புஜிக்கச் செய்யவும். 2-தடவை செய்வதற்காக.* **காலாதர்சத்திலும்:-** *ஆத்ய ச்ராத்தத்தை ப்ராம்ஹணனிடத்திலாவது, அக்னியிலாவது செய்யவும். மறுபடி ப்ராம்ஹணனிடத்தில் செய்யவும்.*

सापिण्ड्यात् प्राङ्मासिकानि स्वस्वकाले कृतानि तु। न पुनस्तानि वै कुर्यादकृतानि पुनश्चरेत् इति गर्गस्मरणात् कथमाद्यैकोद्दिष्टावृत्तिरिति चेन्न, तद्वचनस्य द्वादशाहव्यति-रिक्तकाले कर्तव्यसापिण्ड्यविषयत्वात्। ननु, द्वादशाहे

सापिण्ड्येऽपि तस्य पूर्वभावित्वेन स दोषस्तदवस्थ इति चेन्न, तस्य सर्वदा सापिण्ड्यात् पूर्वभावित्वेऽपि अर्वाक् संवत्सराद्यस्य सपिण्डीकरणं कृतम् । षोडशानां द्विरावृत्तिं कुर्यादित्याह गौतमः इत्यावृत्तिस्मरणात्, एकादशे कृतानां तु मासिकानां पुनः कृतिः । सूतकान्ते नरः कुर्यादेकोद्दिष्टद्वयं बुधः । पुनश्च भोजयेद्विप्रं द्विरावृत्तिर्भवेदिह । सपिण्डीकरणश्राद्धं द्वादशाहे यदा भवेत् । तदाऽपकृष्य रुद्राहे श्राद्धान्येव तु षोडश इत्यादिस्मरणादार्थिकात् कण्ठोक्तेर्बलीयस्त्वाच्च ।

*''ஸாபிண்ட்யத்திற்கு முன் அந்தந்தக் காலத்தில் செய்யப்பட்ட மாஸிகங்களை, மறுபடி செய்யக்கூடாது. செய்யப்படாதவைகளை மறுபடி செய்யவும்'' என்ற கர்கஸ்ம்ருதி இருப்பதால், ஆத்யைகோத்திஷ்டத்திற்கு எப்படி ஆவ்ருத்தி ?'' எனில் அது இல்லை. அந்த வசனம் 12-ஆவது நாளைத் தவிர்த்த காலத்தில் செய்யக் கூடிய ஸாபிண்ட்யத்தைப் பற்றியது. 12-ஆவது தினத்தில் ஸாபிண்ட்யம் ஆனாலும் ஆத்யம் ஸாபிண்ட்யத்திற்குப் பூர்வ பாவியானதால், அந்தத் தோஷம் அதே மாதிரி உள்ளதே ? எனில் அது இல்லை. அது எப்பொழுதும் ஸாபிண்ட்யத்திற்கு முன் வருவதாய் இருந்தாலும், ''எவனுக்கு ஸம்வத்ஸரத்திற்கு உள்ளாகவே ஸபிண்டீகரணம் செய்யப்பட்டதோ அவனுக்கு 16-ச்ராத்தங்களுக்கும் இருமுறை அனுஷ்டானத்தைச் செய்ய வேண்டும் என்றார் கௌதமர்'' என்று ஆவ்ருத்தியை விதிக்கும் ஸ்ம்ருதி இருப்பதாலும், ''11-ஆவது நாளில் செய்யப்பட்ட மாஸிகங்களை மறுபடி செய்ய வேண்டும், ஆசௌசத்தின் முடிவில் 2-ஏகோத்திஷ்டத்தைச் செய்ய வேண்டும், மறுபடி ப்ராம்ஹணனைப் புஜிப்பிக்கவும். இதில் 2-தடவை அனுஷ்டானம். ஸபிண்டீகரணத்தை 12-ஆவது நாளில் செய்தால், அப்பொழுது 11-ஆவது நாளில் 16-ச்ராத்தங்களையும் அபகர்ஷித்துச் செய்யவும்''*

என்பது முதலிய ஸ்ம்ருதிகள் இருப்பதால், அர்த்தத்தால் ஸித்திப்பதை விட கண்டோக்தமான அர்த்தம் பலிஷ்டம் ஆனது.

यत्तु — आवृत्तिरन्यमास्यानां द्वादशाहे सपिण्डने । तथा नावर्तयेदाद्यं मले त्वावृत्तिरिष्यते इति, तस्याप्ययमर्थः - द्वादशाहसापिण्ड्ये अन्यमास्यानां ऊनमासिकादि पञ्चदशमासिकानां पुनः सपिण्ड्यनन्तरं स्वे स्वे काले यथा आवृत्तिः क्रियते, तथा आद्यं - एकोद्दिष्टं सपिण्ड्यनन्तरं नावर्तयेत्, किन्तु मलमासे मृतिश्चेत् द्वादशाहसापिण्ड्यानन्तरं शुद्धमासे मृततिथौ तदावर्तयेदिति । तच्चाग्रे वक्ष्यते ।

ஆனால் "12-ஆவது நாளில் ஸாபிண்ட்யம் செய்தால், பிறகு மற்ற மாஸிகங்களை ஆவ்ருத்தி செய்ய வேண்டும், ஆத்ய மாஸிகத்தை ஆவ்ருத்தி செய்யக் கூடாது, மல மாஸத்திலோவெனில் ஆவ்ருத்தி செய்ய வேண்டும்" என்ற வசனம் உள்ளதே எனில், அதற்கும் இவ்விதம் அர்த்தம் "12-ஆவது நாளில் ஸாபிண்ட்யம் செய்யும் போது, அன்ய மாஸ்யங்களுக்கு - ஊனமாஸிகம் முதலிய 15-மாஸிகங்களுக்கு, மறுபடி ஸபிண்டிக்குப் பிறகு அந்தந்தக் காலத்தில் எப்படி ஆவ்ருத்தி செய்யப்படுகிறதோ, அப்படி ஆத்யத்தை = ஏகோத்திஷ்டத்தை ஸபிண்டிக்குப் பிறகு ஆவ்ருத்தி செய்யக் கூடாது. ஆனால் மல மாஸத்தில் ம்ருதி ஆனால் சுத்த மாஸத்தில் ம்ருத திதியில் அதை ஆவ்ருத்தி செய்ய வேண்டும்" என்று அந்த விஷயம் மேல் சொல்லப்படப் போகிறது.

यदपि जाबालिवचनम् — श्राद्धं कृत्वा तु तस्यैव पुनः श्राद्धं न तद्दिने इति यच्चान्यत् - नैकः श्राद्धद्वयं कुर्यात् समानेऽहनि कस्यचित् इति, तदेकोद्दिष्टव्यतिरिक्तविषयम्, तस्य एकस्मिन्दिने

आवृत्तिविधानात् । द्वादशाहेतरकालसापिण्ड्ये स्वकाले कृतस्य ऊनमासिकादेर्न पुनः करणम् — सापिण्ड्यात् प्राङ्मासिकानि स्वस्वकाले कृतानि तु । न पुनस्तानि वै कुर्यादकृतानि पुनश्चरेत् इति गर्गस्मरणात्, अर्वागब्दाद्यत्र यत्र सपिण्डीकरणं कृतम् । तदूर्ध्व-मासिकानां तु यथाकालमनुष्ठितिः इति कार्ष्णाजिनिस्मरणात्, वत्सरान्ते तु सापिण्ड्यं यश्चिकीर्षति स द्विजः । मासिकानि यथाकालं कुर्यादेव यथाविधि । त्रिपक्षाद्येषु काले सापिण्ड्यं यश्चिकीर्षति । अब्दावशिष्टमासानामपकर्षस्तदा भवेत् । अपकृष्य कृतानां च यथाकालं पुनः कृतिः इति स्मृतिरत्नेऽभिधानाच्च ।

*ஆனால்:- ''எவனை உத்தேசித்து ச்ராத்தம் செய்தானோ, அவனுக்கு அதே தினத்தில் மறுபடி ச்ராத்தம் செய்யக் கூடாது'' என்ற ஜாபாலி வசனம் உள்ளதே, மற்றும் ஒரு வசனம் ''ஒரு கர்த்தா ஒருவனுக்கு ஒரே நாளில் 2-ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது'' என்று உள்ளதே எனில், அது ஏகோத்திஷ்ட ச்ராத்தத்தைத் தவிர்த்த ச்ராத்தத்தைப் பற்றியது. ஏகோத்திஷ்டத்திற்கு ஒரே தினத்தில் ஆவ்ருத்தி விதிக்கப்பட்டு இருப்பதால். 12-ஆவது தினத்தைத் தவிர்த்த காலத்தில் ஸாபிண்ட்யம் செய்யும் விஷயத்தில் ஆத்யைகோதிஷ்டம் ஒன்றே, இரண்டு இல்லை. த்ரிபக்ஷாதி காலத்தில் ஸாபிண்ட்யம் ஆனால் அதன் காலத்தில் செய்யப்பட்ட ஊனமாஸிகம் முதலியதற்குப் புந: கரணம் இல்லை. 'ஸாபிண்ட்யத்திற்கு முன் அந்தந்தக் காலத்தில் செய்யப்பட்ட மாஸிகங்களை, மறுபடி செய்ய வேண்டியதில்லை. செய்யப்படாதவைகளை மறுபடி செய்ய வேண்டும்' என்று கர்க ஸ்ம்ருதி இருப்பதால். 'வர்ஷத்திற்குள் எந்தெந்தக் காலத்தில் ஸபிண்டீகரணம் செய்யப்பட்டாலும் அதற்கு மேல் உள்ள மாஸிகங்களுக்கு அதனதன் காலத்தில் மறுபடி அனுஷ்டானம் உண்டு' என்று கார்ஷ்ணாஜினி ஸ்ம்ருதியினாலும், 'வர்ஷாந்தத்தில்*

ஸாபிண்ட்யத்தைச் செய்ய விரும்புகிறவன், மாஸிகங்களைக் காலத்தை அதிக்ரமிக்காமல் விதிப்படி செய்யவும். த்ரிபக்ஷாதி காலங்களில் ஸாபிண்ட்யத்தைச் செய்ய விரும்புகிறவன், மீதியுள்ள மாஸிகங்களை அபகர்ஷித்துச் செய்யவும். அபகர்ஷித்துச் செய்த மாஸிகங்களுக்கு அந்தந்தக் காலத்தில் மறுபடி அனுஷ்டானம் உண்டு'' என்று ஸ்ம்ருதி ரத்னத்தில் சொல்லப்பட்டு உள்ளது.

यत्तु द्वादशाहे कृतानां तु यथाकालं पुनःकृतिः इति, तस्यार्थः – द्वादशाहे कृतानामूनमासिकादीनां पुनःकृतिरिति ॥ एवञ्च द्वादशाहे सापिण्ड्ये आद्यश्राद्धादिषोडशमासिकानामप्यावृत्तिः, आद्यस्य तु एकादशाह एवावृत्तिः, इतरेषां तु एकादशाहे द्वादशाहे वा कृतानामूनमासिकादीनां स्वस्वकाले पुनः करणम्, त्रिपक्षे तु सापिण्ड्ये ऊनद्वितीययोः स्वकाले कृतयोर्न पुनः करणम् । तदुत्तरभावीनि तु मासिकान्यपकृष्य कृत्वा सपिण्डीकरणात् परमपि स्वस्वकाले पुनः कुर्यात् । एवं त्रिमासादौ सापिण्ड्येऽपि तत्पूर्वं कृतानां नावृत्तिः, तदुत्तरभाविनामेव पुनःकरणम् । एवं संवत्सरान्ते सपिण्डीकरणे आद्यश्राद्धादीनां षोडशानामपि वत्सरान्ते सपिण्डीकरणे आद्यश्राद्धादीनां षोडशानामपि मासिकानां कृतानां न पुनः कृतिः ।

'12-ஆவது நாளில் செய்யப்பட்டவைகளுக்கு காலப்படி மறுபடி புந:கரணம்' என்ற வசநம் உள்ளதே எனில் அதற்கு இவ்விதம் அர்த்தம் '12-ஆவது நாளில் செய்யப்பட்ட ஊனமாஸிகம் முதலியவைகளுக்குப் புந:கரணம்' என்று, இவ்விதம் இருப்பதால், 12-ஆவது நாளில் ஸாபிண்ட்யம் செய்யும் விஷயத்தில் ஆத்ய ச்ராத்தம் முதலிய 16-மாஸிகங்களுக்கும் ஆவ்ருத்தி, ஆத்யத்திற்கோ வெனில் 11-ஆவது நாளிலேயே தான்

ஆவ்ருத்தி. மற்ற மாஸிகங்களுக்கோ வெனில் 11-ஆவது நாளிலோ, 12-ஆவது நாளிலோ செய்யப்பட்ட ஊனமாஸிகம் முதலியவைகளுக்கு அதனதன் காலத்தில் புந:கரணம். த்ரிபக்ஷத்தில் ஸாபிண்ட்யம் செய்யும் விஷயத்திலோ வெனில், ஊனமாஸிகம், த்விதீய மாஸிகம் இவைகள் ஸ்வகாலத்தில் செய்யப்பட்டிருந்தால் புந:கரணம் இல்லை. அதற்கு மேல் உள்ள மாஸிகங்களை அபகர்ஷித்துச் செய்து ஸபிண்டீகரணத்திற்குப் பிறகும் அதனதன் காலத்தில் மறுபடி செய்யவும். இவ்விதம் 3-ஆவது மாதம் முதலிய காலத்தில் ஸாபிண்ட்யம் செய்தாலும், அதற்கு முன் செய்யப்பட்டவைகளுக்கு ஆவ்ருத்தி இல்லை. அதற்கு மேற்பட்டவைகளுக்கே புந:கரணம், இவ்விதம் வர்ஷத்தின் முடிவில் ஸபிண்டீகரணம் செய்தாலும் ஆத்ய ச்ராத்தம் முதலிய 16-மாஸிகங்களுக்கும் ஸ்வகாலத்தில் செய்யப்பட்டவை களுக்குப் புந:கரணம் இல்லை.

एतदेवाभिप्रेत्य गालवः — त्रिपक्षादिषु कालेषु सापिण्ड्यं यश्चिकीर्षति । शिष्टानां मासिकानाञ्च यथाकालं पुनः क्रिया इति । गोभिलः – यस्य संवत्सरादर्वाग्विहिता तु सपिण्डता । विधिवत्तानि कुर्वीत पुनः श्राद्धानि षोडश इति । अङ्गिराश्च – यस्य संवत्सरादर्वाक् सपिण्डीकरणं कृतम् । मासिकं सोदकुम्भं च देयं तस्यापि वत्सरम् इति ।

இவ்விதம் அபிப்ராயத்துடனேயே, காலவர்:- 'த்ரிபக்ஷம் முதலிய காலங்களில் எவன் ஸாபிண்ட்யத்தைச் செய்ய விரும்புகிறானோ அவன் ஸாபிண்ட்யத்திற்குப் பிறகு, மீதி உள்ள மாஸிகங்களை அதனதன் காலத்தில் செய்ய வேண்டும், என்றார். கோபிலர்:- எவனுக்கு, வர்ஷத்திற்குள் ஸாபிண்ட்யம் செய்யப்பட்டதோ, அவனுக்கு மறுபடி அந்த 16-ச்ராத்தங்களையும் செய்ய வேண்டும். அங்கிரஸ்ஸும்:- எவனுக்கு வர்ஷத்திற்குள்

ஸபிண்டீகரணம் செய்யப்பட்டதோ அவனுக்கும், வர்ஷம் முடியும் வரையில் மாஸிகம் ஸோதகும்பம் இவைகளைச் செய்ய வேண்டும்.

विज्ञानेश्वरीये – श्राद्धानि षोडशाकृत्वा न तु कुर्यात् सपिण्डताम्। श्राद्धानि षोडशापाद्य विदधीत सपिण्डनम् । प्रेतसंस्कारकार्याणि यानि श्राद्धानि षोडश । यथाकाले च कार्याणि नान्यथा मुच्यते ततः इति । स्मृत्यन्तरेऽपि — यदा संवत्सरादर्वाक्सापिण्ड्यं कर्तुमिष्यते । आवर्तनं षोडशानां तदा कर्तव्यमेव हि इति । सङ्ग्रहे – स्वकाले तानि कुर्वीत सपिण्डीकरणादधः । सापिण्ड्येऽब्दादधस्तानि कुर्यात् काले स्वके पुनः इति । पैठीनसिरपि — अर्वाक्सपिण्डीकरणात् कुर्याच्छ्राद्धानि षोडश इति ।

**விக்ஞானேச்வரீயத்தில்:-** 16-ச்ராத்தங்களைச் செய்யாமல் ஸாபிண்ட்யத்தைச் செய்யக் கூடாது. அவைகளைச் செய்தே ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். ப்ரேதனுக்கு ஸம்ஸ்கார கார்யங்கள், 16-ச்ராத்தங்கள் இவைகளைக் காலப்படி செய்ய வேண்டும். செய்யப் படாவிடில் ப்ரேத பாவத்திலிருநதும் விடுபடுவதில்லை. **மற்றொரு ஸ்ம்ருதியிலும்:-** எப்பொழுதோ வர்ஷத்திற்குள் ஸபிண்டீகரணத்தைச் செய்ய விரும்பினுல் (செய்த பிறகு) 16-மாஸிகங்களுக்கும் ஆவ்ருத்தியைச் செய்ய வேண்டும். **ஸங்க்ரஹத்தில்:-** ஸபிண்டீகரணத்திற்கு முன் அதனதன் காலத்தில் மாஸிகங்களைச் செய்யவும். வர்ஷத்திற்குள் ஸாபிண்ட்யம் ஆனுல், பிறகு அவைகளை அதனதன் காலத்தில் மறுபடி செய்யவும். **பைடீநஸியும்:-** ஸபிண்டீகரணத்திற்கு முன் 16-ச்ராத்தங்களையும் செய்யவும்.

## षोडशश्राद्धानि

षोडशश्राद्धान्याह विज्ञानेश्वरः – एकादशे त्रिपक्षे च षण्मासे मासिकाब्दिके। षोडशैतानि श्राद्धानि संस्मृतानि मनीषिभिः इति। एकादशाहे विहितमाद्यश्राद्धम्, एतच्चाद्योनमासिकस्याप्युपलक्षणम्, षण्मासे - ऊनषण्मासे विहितमूनषाण्मासिकम्, मासिकम् - प्रतिमासं मृताहे विहितम्। आब्दिकशब्द ऊनाब्दिकपरः। तथा जातुकर्णिः - द्वादश प्रतिमास्यानि ह्याद्यषाण्मासिके तथा। त्रैपक्षिकाब्दिके चेति श्राद्धान्येतानि षोडश इति। आद्यषाण्मासिकाब्दिकशब्दा ऊनमासिकोनषाण्मासिकोनाब्दिकपराः। एकादशाह्निकेनाद्येन सह द्वादशप्रतिमास्यानि।

### 16 ச்ராத்தங்கள்.

*16-ச்ராத்தங்களைச் சொல்லுகிறுர், விக்ஞாநேச்வரர்:- 11-ஆவது நாளிலும், த்ரிபக்ஷத்திலும், 6-ஆவது மாஸத்திலும், ஒவ்வொரு மாஸத்திலும், வர்ஷாந்தத்திலும், ச்ராத்தங்கள் வித்வான்களால் விதிக்கப்பட்டுள்ளன. இவை பதினுறு. 11-ஆவது நாளில் விதிக்கப்பட்டது ஆத்ய ச்ராத்தம். இது ஆத்யோந மாஸிகத்திற்கும் உபலக்ஷணம். 6-ஆவது மாஸத்தில் = ஊநஷாண் மாஸத்தில் விதிக்கப்பட்டது ஊநஷாண் மாஸிகம். மாஸிகம் = ஒவ்வொரு மாஸத்திலும் ம்ருதி திதியில் விதிக்கப்பட்டது. ஆப்திகம் = ஊநாப்திகம் என்பதாம். அவ்விதம், ஜாதுகர்ணீ:- ப்ரதிமாஸம் செய்யப்படுவது 12, ஆத்யம், ஷாண்மாஸிகம், த்ரைபக்ஷிகம், ஆப்திகம் என்ற இவை 16-ச்ராத்தங்கள். மூலத்திலுள்ள, ஆத்ய, ஷாண்மாஸிக, ஆப்திக, என்ற பதங்கள், முறையே, ஊநமாஸிகம், ஊநஷாண்மாஸிகம், ஊநாப்திகம் என்ற இவைகளைச் சொல்லுகின்றன. 11-ஆவது நாளில் செய்யப்படும் ஆத்யத்துடன் 12-ப்ரதிமாஸ்யங்கள்.*

गालवश्च — ऊनषाण्मासिकं षष्ठे मास्यूने ह्यूनमासिकम् । त्रैपक्षिकं त्रिपक्षे स्यादूनाब्दं द्वादशे तथा इति । कालादर्शे — एकादशेऽह्नि मास्यूने आद्य षष्ठे तथाऽन्तिमे । प्रतिमासं मृतेऽह्न्यब्दं स्युस्त्रिपक्षे च षोडश इति । एकादशेऽह्नि -मरणादेकादशेऽहनि, अब्दशब्दसमभिव्याहारात् अन्तिमशब्देन संवत्सरान्तिमो मास उच्यते । आद्ये मास्यूने, षष्ठे मास्यूने, संवत्सरान्तिमे मासि द्वादशे मास्यूने । अब्दमिति, कालाध्वनोरत्यन्तसंयोग इति द्वितीया, संवत्सरपूर्तिपर्यन्तम्, प्रतिमासम् - मासे मासे, मृतेह्नि - मरण दिने, त्रिपक्षे च - मरणदिनात्तृतीये पक्षे च, षोडशमासिकाख्यानि श्राद्धानि स्युः । एतेषु षोडशसु कालेषु षोडशमासिकानि कार्याणीत्यर्थः ।

காலவரும்;- *ஊநஷாண்மாஸிகம் 6-ஆவது மாதம் ஊநமாய் இருக்கும் பொழுது, ஊனமாஸிகம், முதல் மாதம் ஊநமாய் இருக்கும் பொழுது. த்ரைபக்ஷிகம் என்பது 3-ஆவது பக்ஷத்தில். ஊநாப்தம் என்பது 12-ஆவது மாதத்தில்.* காலாதர்சத்தில்:- *11-ஆவது நாளிலும், முதல் மாதம் ஊநமாயுள்ள போதும், ஊநமான 6-ஆவது மாதத்திலும், ஊநமான 12-ஆவது மாதத்திலும், ஒவ்வொரு மாதத்திலும் ம்ருத திதியிலும், த்ரிபக்ஷத்திலும் ஆக 16-ச்ராத்தங்கள். மூலத்தில் உள்ள 11-ஆவது நாளில் என்பதற்கு மரணத்தில் இருந்து 11-ஆவது நாளில் என்பது பொருள். அந்திமே என்பதற்கு வர்ஷத்தின் கடைசி மாதத்தில் என்று பொருள். அப்த சப்தத்துடன் சேர்த்துச் சொல்லி இருப்பதால். முதல் மாதம் ஊநமாயிருக்கும் பொழுதும், 6-ஆவது மாதம் ஊநமாய் இருக்கும் பொழுதும், 12-ஆவது மாதம் ஊநமாய் இருக்கும் பொழுதும் என்றாயிற்று. 'அப்தம்' என்பதற்கு வர்ஷம் முடியும் வரையில் என்பது பொருள். ப்ரதி மாஸம் = ஒவ்வொரு மாதத்திலும், ம்ருத தினத்தில் மரண தினத்தில்.*

*த்ரிபக்ஷத்தில் = மரணத்தினின்றும் 3-ஆவது பக்ஷத்திலும், 16-மாஸிகங்கள் என்ற ச்ராத்தங்கள் செய்யப்பட வேண்டும். இந்தப் பதினாறு காலங்களில் 16-மாஸிகங்கள் செய்யப்பட வேண்டும் என்பது பொருள்.*

स्मृत्यन्तरे — एकादशे भवेदाद्यं मास्यूने ह्यूनमासिकम् । त्रैपक्षिकं त्रिपक्षे स्यादूनषाण्मासिकं तथा। प्रतिमासं मृताहेषु ऊनाब्दं चेति षोडश । द्वादशाहे यदा कुर्यात् सपिण्डीकरणं सुतः । मध्याह्ने चैव सर्वाणि कुर्यात् श्राद्धानि षोडश । सपिण्डीकरणात् पूर्वं मासिकेषु कृतेषु च । अपकृष्यैकोद्दिष्टेन पिण्डमेकं विधीयते इति । एकमिति प्रतिमासमेकमित्यर्थः ।

**மற்றொரு ஸ்ம்ருதியில்:-** *11-ஆவது நாளில் ஆத்யம். முதல் மாதம் ஊநமாய் இருக்கும் பொழுது ஊநமாஸிகம். த்ரிபக்ஷத்தில் த்ரைபக்ஷிகம். ஊநஷாண்மாஸிகமும் அப்படியே. ஒவ்வொரு மாஸத்திலும் ம்ருத திதியில், ஊநாப்தம், என்று 16-மாஸிகங்கள், 12-ஆவது நாளில் ஸபிண்டீகரணம் செய்தால், மத்யாஹ்னத்தில் 16-மாஸிகங்கள் எல்லாவற்றையும் செய்ய வேண்டும். ஸபிண்டீகரணத்திற்கு முன் அபகர்ஷித்து ஏகோத்திஷ்டமாய்ச் செய்யப்பட்ட மாஸிகங்களில் ஒரு பிண்டத்தைக் கொடுக்கவும். மூலத்தில் உள்ள 'ஏகம்' என்பதற்கு ஒவ்வொரு மாதத்திற்கும் ஒரு பிண்டம் என்பது பொருள்.*

तथा च स्मृत्यन्तरे — मासिकानां तु सापिण्ड्यात् पूर्वं तु युगपत् कृतौ । प्रत्येकं पिण्डदानं स्यादग्नौ प्रेताहुतिः सकृत् इति । पञ्चदशावदानं कृत्वा एकां प्रेताहुतिं कुर्यात् ।

**மற்றொரு ஸ்ம்ருதியில்:-** *'மாஸிகங்களை, ஸாபிண்ட்யத்திற்கு முன் ஒரு நாளில் சேர்த்துச் செய்வதானால், பிண்டதானம் தனித்தனி. அக்னியில்*

ப்ரேதாஹுதி ஒரே தடவை'. 15-தடவை அவதானம் செய்து ஒரே ப்ரேதாஹுதியைச் செய்ய வேண்டும்.

पैठीनसिः — षाण्मासिकाब्दिके श्राद्धे स्यातां पूर्वेद्युरेव ते। मासिकानि मृताहे स्युर्दिवसे द्वादशेऽपि वा । त्रिपक्षादौ तु सापिण्ड्ये मासिकानि मृतेऽहनि इति। त्रिपक्षादौ सापिण्ड्ये तत्पूर्वं मृततिथौ तदुत्तरमासिकान्यपकृष्य कृत्वा सापिण्ड्यं कुर्यात्, न त्वेकादशाहे द्वादशाहे वा । द्वादशाहे सापिण्ड्ये तस्मिन्नेव दिने मध्याह्ने पञ्चदशश्राद्धानि कृत्वाऽनन्तरं सपिण्डीकरणं कुर्यात् । वत्सरान्ते सापिण्ड्ये. तत्तन्मासमृतमिथौ तत्तन्मासिकानि कुर्यात्, ऊनमासिकादीनि च मृततिथेः पूर्वं यथोक्तकाले कुर्यादित्यर्थः । द्वादशे इत्येकादशदिनस्याप्युपलक्षणम्, 'नवश्राद्धं च तत्रैव षोडशश्राद्धमेव च। न कृतं चेत् परे कुर्यात् सपिण्डीकरणाहनि इति स्मरणात् । एकादशदिने षोडशश्राद्धाकरणे द्वादशदिने कुर्यादित्यर्थः ।

**பைடீநஸி:-** 'ஷாண்மாஸிகம், ஊநாப்திகம் இவைகளை முதல் நாளில் செய்யவும். மாஸிகங்களை ம்ருத திதியில் செய்யவும் அல்லது 12-ஆவது நாளில் செய்யவும். த்ரிபக்ஷாதி காலத்தில் ஸாபிண்ட்யமானால் மாஸிகங்களை ம்ருத திதியில் செய்யவும்'. ''த்ரிபக்ஷம் முதலிய காலத்தில் ஸாபிண்ட்யம் செய்தால், அதற்கு முன் ம்ருத திதியில் அதற்கு மேல் உள்ள மாஸிகங்களை அபகர்ஷித்துச் செய்து, ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும், 11-ஆவது நாளிலாவது, 12-ஆவது நாளிலாவது செய்யக்கூடாது. 12-ஆவது நாளில் ஸாபிண்ட்யம் செய்வதானால், அன்றே மத்யாஹ்னத்தில் 15-(மாஸிக) ச்ராத்தங்களைச் செய்து, பிறகு ஸபிண்டீகரணத்தைச் செய்யவும். வர்ஷத்தின் முடிவில் ஸாபிண்ட்யம் செய்வதானால் அந்தந்த மாஸத்தின் ம்ருத திதியில் அந்தந்த மாஸிகங்களைச் செய்யவும். ஊநமாஸிகம்

முதலியவைகளையும் ம்ருத திதிக்கு முன் விஹிதமான காலத்தில் செய்யவும்'' என்பது பொருள். 12-ஆவது நாளில் என்றது 11-ஆவது நாளுக்கும் உபலக்ஷணம். 'நவச்ராத்தமும், ஷோடச ச்ராத்தமும் அன்றைக்கே செய்யப்பட வேண்டும். அன்று செய்யப்படாவிடில் மறுநாளில் ஸபிண்டீகரண தினத்தில் செய்யவும்' என்று ஸ்ம்ருதி இருப்பதால். 11-ஆவது தினத்தில் ஷோடச ச்ராத்தம் செய்யாவிடில், 12-ஆவது தினத்தில் செய்யவும் என்பது பொருள்.

एकोद्दिष्टं नवश्राद्धं श्राद्धान्यपि च षोडश । एकस्मिन् दिवसे कुर्यादेकोद्दिष्टं तु निष्फलम् इति । द्वादशाहसपिण्डीकरणे एकोद्दिष्टादीनि एकादशाहे कुर्यात्, अन्यथा एकोद्दिष्टन्तु निष्फलमिति । तथा प्रचेताः — षोडशादीनि सर्वाणि कुर्यादेकादशेऽहनि । सपिण्डीकरणं चापि कुर्याद्वा द्वादशेऽहनि इति । गौतमोऽपि – देशकालादिवैषम्यान्मृत्युरोगादिशङ्कया । एकादशेऽह्नि कार्याणि ह्यपकृष्यापि षोडश इति । गालवोऽपि — एकचित्यां समारूढौ दम्पती निधनं गतौ । एकोद्दिष्टं षोडशं च भर्तुरेकादशेऽहनि । द्वादशाहे तु सम्प्राप्ते पिण्डमेकं तयोः क्षिपेत् इति ।

41. 'ஏகோத்திஷ்டம், நவச்ராத்தம், ஷோடசச்ராத்தம் இவைகளை ஒரே தினத்தில் செய்தால், ஏகோத்திஷ்டம் நிஷ்பலமே ஆகும்' என்பதற்கு, 12-ஆவது நாளில் ஸபிண்டீகரணம் செய்யும் பக்ஷத்தில் ஏகோத்திஷ்டம் முதலியவைகளை 11-ஆவது தினத்தில் செய்ய வேண்டும். இல்லாவிடில் ஏகோத்திஷ்டம் நிஷ்பலம் என்பது பொருள். அவ்விதம், ப்ரசேதஸ்:- ஷோடசம் முதலிய எல்லாவற்றையும் 11-ஆவது நாளில் செய்யலாம். 12-ஆவது நாளில் ஸபிண்டீகரணத்தையும் செய்யலாம். கௌதமரும்:- தேசகாலங்கள் அனுகூலம் இல்லாததாலும்,

*மரணம் ரோகம் முதலிய ஸந்தேஹத்தாலும், 16-ச்ராத்தங்களையும் அபகர்ஷித்து 11-ஆவது நாளில் செய்யவும்.* **காலவரும்:-** *மரித்த தம்பதிகள் ஒரே சிதையில் தஹிக்கப்பட்டால், அவர்களுக்கு ஏகோத்திஷ்டமும் ஷோடசமும் பர்த்தாவின் 11-ஆவது நாளில் செய்யப்படவேண்டும். 12-ஆவது நாளில் இருவருக்கும் ஒரே (சேர்த்தே) ஸபிண்டீகரணம் செய்யப்பட வேண்டும்.*

स्मृतिरत्ने — एकादशेऽह्नि कुर्वाणः पूर्वाह्णे सर्वमाचरेत् । अपराह्णे तु सापिण्ड्यं कुर्यादित्याह शाकलः । अन्यस्मिंस्तु दिने कुर्वन् पूर्वपूर्वदिने चरेत् । अथवा यदि तत्रापि सर्वं चैकदिने भवेत् इति । अन्यस्मिन्निति द्वादशाहादौ सापिण्ड्यं कुर्वन् तत्पूर्वदिने षोडशश्राद्धं कुर्यादित्यर्थः । एकादशे कृतानान्तु मासिकानां पुनः कृतिः । सपिण्डीकरणश्राद्धं द्वादशाहे यदा भवेत् । तदाऽपकृष्य रुद्राहे श्राद्धान्येव तु षोडश इत्यादिबहुस्मृतिसंमतत्वात् शिष्टाचाराच्च द्वादशाहे सपिण्डीकरणे एकादशाहे द्वादशेऽहनि वा षोडशश्राद्धकरणं युज्यते ।

**ஸ்ம்ருதிரத்னத்தில்:-** *11-ஆவது நாளில் (ஸாபிண்ட்யம்) செய்பவன் முற்பகலில் எல்லாவற்றையும் செய்ய வேண்டும். பிற்பகலில் ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும் என்றார் சாகலர். மற்ற நாளில் செய்தால் அதற்கு முந்திய தினத்தில் செய்யவும் அல்லது அந்த ஸாபிண்ட்ய தினத்திலேயே எல்லாவற்றையும் ஒரு தினத்தில் செய்யவும். மூலத்தில் உள்ள 'அன்யஸ்மின்' என்பதற்கு, 12-ஆவது நாள் முதலிய காலத்தில் ஸாபிண்ட்யத்தைச் செய்பவன், அதற்கு முன் தினத்தில் ஷோடச ச்ராத்தங்களைச் செய்யவும் என்பது பொருள். '11-ஆவது நாளில் செய்யப்பட்ட மாஸிகங்களை மறுபடி செய்யவும்' '12-ஆவது நாளில் ஸபிண்டீகரணம் செய்வதானால், 11-ஆவது நாளில் 16-ச்ராத்தங்களையும்*

அபகர்ஷித்துச் செய்யவும்' என்பது முதலிய வெகு ஸ்ம்ருதிகளுக்கு ஸம்மதமாய் இருப்பதாலும், சிஷ்டாசாரம் இருப்பதாலும், 12-ஆவது நாளில் ஸபிண்டீகரணம் செய்யும் பக்ஷத்தில், 11-ஆவது நாளிலாவது, 12-ஆவது நாளிலாவது ஷோடச ச்ராத்தங்களைச் செய்வது உபபன்னம் ஆகிறது.

यत्तु सङ्ग्रहवचनम् — एकोद्दिष्टस्य दिवसे सपिण्डीकरणं विना । श्राद्धं कुर्यात् पितृक्रोधात् क्षयमाप्नोति सन्ततिः इति अत्र साङ्गं सपिण्डीकरणं गृह्यते । षोडशश्राद्धं सपिण्डीकरणं नवश्राद्धं च विना एकोद्दिष्टदिवसे कर्तव्यं यत् श्राद्धान्तरमन्तरितं स्वदेयश्राद्धं च तत्र न कुर्यात् इत्यर्थः । एतच्च एकोद्दिष्टदिने सपिण्डीकरण माहिताग्निविषयम्, तदग्रे वक्ष्यते ।

ஆனால்:- ''11-ஆவது நாளில் ஸபிண்டீகரணம் தவிர்த்து மற்ற ச்ராத்தத்தைச் செய்தால், பித்ருக்களின் கோபத்தால் குலம் நசிக்கும்'' என்று ஸங்க்ரஹவசநம் உள்ளதே ? எனில், இந்த வசநத்தில் அங்கங்களுடன் கூடிய ஸபிண்டீகரணம் சொல்லப்படுகிறது. ஷோடச ச்ராத்தம், ஸபிண்டீகரணம், நவச்ராத்தம் இவைகளைத் தவிர்த்து, ஏகோத்திஷ்ட தினத்தில் செய்ய வேண்டியதாய் ப்ராப்தமான ப்ரத்யாப்திக ச்ராத்தத்தையாவது, ஆசௌச மத்யத்தில் அந்தரிதமான ச்ராத்தத்தையாவது அன்று செய்யக் கூடாது என்பது பொருள். இவ்விதம் ஏகோத்திஷ்ட தினத்தில் ஸபிண்டீகரணம் செய்யலாம் என்பது ஆஹிதாக்னியைப் பற்றியது. அது மேலே சொல்லப்படப் போகிறது.

यत्तु जाबालिवचनम् — श्राद्धं कृत्वा तु तस्यैव पुनः श्राद्धं न तद्दिने इति, यदपि दक्षवचनम् - नैकः श्राद्धद्वयं कुर्यात् समानेऽहनि कस्यचित् इति, तदेकोद्दिष्ट श्राद्धषोडशश्राद्धव्यतिरिक्तविषयम्, तयोस्तत्र विधानात् । उद्देश्यैक्येऽपि नवश्राद्धैकोद्दिष्ट

श्राद्धसमुच्चयवदेकोद्दिष्टद्वयवच्च न दोषः । तदेवमेकादशाहे द्वादशाहे वा मासिकानि सर्वाण्यपकृष्य कृत्वा द्वादशाहे सापिण्ड्यं कुर्यात्, सापिण्ड्योत्तरकालभावीनि स्वस्वकाले पुनश्च कुर्यात् ।

ஆனால், ஜாபாலி:- ''ஒருவனை உத்தேசித்து ச்ராத்தம் செய்த பிறகு அதே தினத்தில் அவனை உத்தேசித்து மறுபடி ச்ராத்தம் கூடாது'' என்று சொல்லியதும், ''ஒருவனுக்கு ச்ராத்தம் செய்த பிறகு, அதே தினத்தில் அவனுக்கே மறுபடி ச்ராத்தம் கூடாது'' என்ற தக்ஷவசநமும் உள்ளதே எனில், அது ஏகோத்திஷ்ட ச்ராத்தம் ஷோடச ச்ராத்தம் இவைகளைத் தவிர்த்த ச்ராத்தத்தைப் பற்றியது. அவைகளை அன்றே விதித்து இருப்பதால், உத்தேச்யன் ஒருவனாயினும், நவச்ராத்தம் ஏகோத்திஷ்ட ச்ராத்தம் இவைகளைச் சேர்த்துச் செய்வது போலும், ஏகோத்திஷ்டம் இரண்டைச் சேர்த்துச் செய்வது போலும் குற்றமாகாது. ஆகையால் இவ்விதம் இருப்பதால், 11-ஆவது நாளிலாவது, 12-ஆவது நாளிலாவது மாஸிகங்கள் எல்லாவற்றையும் அபகர்ஷித்துச் செய்து, 12-ஆவது நாளில் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். ஸாபிண்ட்யத்திற்கு மேல் காலத்தில் வரும் மாஸிகங்களை அதனதன் காலத்தில் செய்யவும்.

## आशौचाद्यन्तरितमासिकादिविषयः

आशौचाद्यन्तरितं मासिकमुत्तरमासिकाह एव तन्त्रतः कुर्यात्, न पृथक् पाकहोमादिः, पिण्डदानं तु पृथगेव । तथा कालादर्शे — आपदाद्यकृतं यत्तु कुर्यादूर्ध्वमृताहतः । न पृथक् पाकहोमादिः पिण्डदानं पृथक् पृथक् इति । आदिशब्देनाशौचोपसङ्ग्रहः, आपदादिना अकृतमन्तरितं यन्मासिकं, तत् ऊर्ध्वमृताहतः - उत्तरमासमृतदिने कुर्यादित्यर्थः । उत्तरमासमृततिथौ विधानात् अन्तरितं मासिकमूनमासिकदिने न कार्यम्, ऊनमतिक्रम्य मृततिथावेव कार्यम् ।

## ஆசௌசம் முதலியதால் நின்ற மாஸிகம் முதலியதைப் பற்றியது.

ஆசௌசம் முதலியதால் அந்தரிதமான மாஸிகத்தை அடுத்த மாஸிக தினத்திலேயே, தந்த்ரமாய் (சேர்த்து)ச் செய்ய வேண்டும். தனியாய் பாகம், ஹோமம் முதலியது இல்லை. பிண்டதானம் மட்டில் தனியே. அவ்விதம், காலாதர்சத்தில்:- 'ஆபத்து முதலியதால் செய்யப் படாததை அடுத்த திதியில் செய்யவும். யாகம் ஹோமம் முதலியது தனியாய் இல்லை. பிண்டதானம் மட்டில் தனித்தனியே'. மூலத்தில் உள்ள ஆதி சப்தத்தால் ஆசௌசம் க்ரஹிக்கப்படுகிறது. ஆபத்து முதலியதால் செய்யப்படாததும் அந்தரிதமுமான மாஸிகம் எதுவோ அதை, ஊர்த்வ ம்ருதாஹத: - அடுத்த மாஸத்திய ம்ருத திதியில் செய்யவும் என்பது பொருள். அடுத்த மாஸத்தின் ம்ருத திதியில் விதித்து இருப்பதால், அந்தரிதமான மாஸிகத்தை ஊனமாஸிக தினத்தில் செய்யக்கூடாது. ஊனமாஸிக தினத்தைத் தாண்டி ம்ருததிதியிலேயே செய்ய வேண்டும்.

ऋश्यशृङ्गोऽपि — एकोद्दिष्टे तु सम्प्राप्ते यदि विघ्नः प्रजायते। मासेऽन्यस्मिंस्तिथौ तस्यां कुर्यादन्तरितं च तत् इति । कालादर्शटीकायामिदं व्याख्यातम् — एकोद्दिष्टपदमुभयविध-मासिकोपलक्षणम्, अन्तरितं मासिकं तदुत्तरमासिकं चोत्तरमृताहे कुर्यात् इति । एतच्चाद्यश्राद्धव्यतिरिक्तविषयम् । आद्यश्राद्ध-स्यान्तराये तु अकृतसञ्चयस्य दहनादिदशदिनपर्यन्तप्रेतकार्याणि पुनरप्येकाहेन कर्तव्यानि, कृतसञ्चयस्य तु दहनसञ्चयव्यतिरिक्त नवश्राद्धादि पुनः कर्तव्यमिति पूर्वमेवोक्तम्।

ருச்யச்ருங்கரும்:- ஏகோத்திஷ்டம் ப்ராப்தமா யிருக்க, அதற்கு விக்னம் நேரிட்டால், அடுத்த மாஸத்தில் ம்ருத திதியில் அந்தரிதத்தையும் சேர்த்துச் செய்யவும்.

காலாதர்சடீகையில்:- இதற்கு வ்யாக்யானம் செய்யப்பட்டு உள்ளது - 'ஏகோத்திஷ்டபதம் இரண்டு விதமான மாஸிகத்தையும் சொல்லுகிறது. அந்தரிதமான மாஸிகத்தையும் அதற்கு அடுத்த மாஸிகத்தையும், அடுத்த ம்ருததிதியில் செய்ய வேண்டும்', என்று. இதுவும் ஆத்யச்ராத்தத்தைத் தவிர்த்ததைப் பற்றியது. ஆத்ய ச்ராத்தத்திற்கு விக்னம் வந்தால், ஸஞ்சயநம் செய்யப்படாவிடில் தஹநம் முதல் 10-நாள் வரை உள்ள ப்ரேத கார்யங்களை மறுபடி ஒரு நாளில் செய்ய வேண்டும். ஸஞ்சயநம் செய்யப்பட்டிருந்தால், தஹநம் ஸஞ்சயநம் தவிர்த்து, நவச்ராத்தம் முதலியதை மறுபடி செய்ய வேண்டும் என்பது முன்பே சொல்லப்பட்டுள்ளது.

कण्वः — नवश्राद्धं मासिकं च यद्यदन्तरितं भवेत् । तत्तदुत्तरसातन्त्र्यादनुष्ठेयं प्रचक्षते इति । माधवीये चन्द्रिकायां च विशेषोऽभिहितः — अन्तरितं मासिकमुत्तरमासतिथौ सातन्त्र्येण कर्तव्यम् इत्येतत् सूतकव्यतिरिक्तनिमित्तान्तरेण विघ्ने समुत्पन्ने सपिण्डीकरणात् पूर्वं प्रतिमासं क्षयाहे विहितैकोद्दिष्टमासिक-श्राद्धविषयम्, आशौचनिमित्तविघ्ने तु एकोद्दिष्ट मासिकश्राद्धमपि सूतकानन्तरमेव, तान्येव तु पुनः कुर्यात् इत्यादिविहितोनमासिक श्राद्धं च सूतकेनान्तरितं सूतकानन्तरमेव, सूतकव्यति-रिक्तनिमित्तान्तरे विघ्ने सति उत्तरमासमृततिथौ कर्तव्यम् ।

கண்வர்:- நவச்ராத்தம், மாஸிகம் இவைகளில், எதெது அந்தரிதமாய் ஆகியதோ, அதை அடுத்ததுடன் சேர்த்து ஸமாநதந்த்ரமாய் அனுஷ்டிக்க வேண்டும் என்கின்றனர் (அறிந்தவர்). மாதவீயத்திலும், சந்த்ரிகையிலும் விசேஷம் சொல்லப்பட்டு உள்ளது:- ''அந்தரிதமான மாஸிகத்தை உத்தர மாஸ திதியில் ஸமாந தந்த்ரமாய்ச் செய்யவும்'' என்றது, ஆசௌசம் தவிர வேறு காரணத்தால் விக்னம் ஏற்பட்டால், ஸபிண்டீகரணத்திற்கு

முன்பு மாஸந்தோறும் ம்ருததிதியில் விவரிக்கப்பட்டுள்ள ஏகோத்திஷ்ட மாஸிகத்தைப் பற்றியது. ஆசௌச நிமித்த விக்னத்திலோ வெனில், ஏகோத்திஷ்ட மாஸிக ச்ராத்தத்தையும் ஆசௌசம் முடிந்தவுடனேயே செய்ய வேண்டும். 'அவைகளேயே மறுபடி செய்யவும்' என்பது முதலிய வசநங்களால் விதிக்கப்பட்ட ஊனமாஸிக ச்ராத்தமும் ஆசௌசத்தால் அந்தரிதமானுல் ஆசௌசம் முடிந்த உடனேயே செய்யப்பட வேண்டும். ஆசௌசம் அல்லாத காரணத்தால் விக்னம் நேர்ந்தால் அடுத்த மாஸத்திய ம்ருத திதியில் செய்யப்பட வேண்டும்' என்று.

यत्तु स्मृत्यन्तरम् — तदहश्चेत् प्रदुष्येत केनचित् सूतकादिना। सूतकानन्तरं कुर्यात् पुनस्तदहरेव वा इति, अत्र श्राद्धाहे सूतकेन नष्टे सति सूतकानन्तरं कुर्यादिति पक्षः । पुनस्तदहरेव वेति पक्षस्तु आदिशब्दात् निमित्तान्तरेण दुष्टमासिकश्राद्धविषयः । तथा षट्त्रिंशन्मते — मासिकाब्दे तु संप्राप्ते ह्यन्तरा मृतसूतके । वदन्ति शुद्धौ तत्कालं दर्शे वाऽपि विचक्षणाः इति । एतदुक्तं भवति, आशौचसमनन्तरकालो मुख्यकालः सन्निकृष्टत्वात् श्रेष्ठः, दर्शकालस्तु मुख्यकाल प्रत्यासत्त्यभावात् ततो जघन्य इति। दर्शग्रहणं शुक्लकृष्णैकादश्योरुपलक्षणम् ।

ஆனுல், மற்ருெரு ஸ்ம்ருதி:- 'அந்தத் தினம், ஆசௌசம் முதலிய எக்காரணத்தாலாவது துஷ்டமானுல், ஆசௌசம் முடிந்தவுடன் செய்யவும். அல்லது அடுத்த ம்ருத திதியில் செய்யவும்' என்கிறதே எனில், இதில், ச்ராத்த தினம் ஆசௌசத்தால் நஷ்டம் ஆனுல் ஆசௌசம் முடிந்தவுடன் செய்யவும், என்று ஒரு பக்ஷம். 'புனஸ்த தஹரேவவா' என்ற பக்ஷமோ வெனில், 'ஆதி' சப்தத்தால் ஆசௌச வ்யதிரிக்த காரணத்தால் துஷ்டமான மாஸிக ச்ராத்தத்தைப் பற்றியதாகிறது. அவ்விதம்

ஷட்த்ரிசன்மதத்தில்:- மாஸிகம் அல்லது ஆப்திகம் ப்ராப்தமாய் இருக்க, ஆசௌசம் ப்ராப்தம் ஆனால், ஆசௌசத்தின் முடிவில் ச்ராத்தத்திற்குக் காலம் அல்லது அமையில் என்கின்றனர் அறிந்தவர்கள். இதனால் இவ்விதம் சொல்லியதாக ஆகிறது. 'ஆசௌசத்திற்கு அடுத்து உள்ள காலம் முக்ய காலம், ஸமீபத்தில் இருப்பதால் சிறந்தது. தர்சகாலமோவெனில், முக்ய காலத்திற்கு ஸாமீப்யம் இல்லாததால் அதைவிடத் தாழ்ந்தது' என்று. தர்சம் என்றது சுக்ல, க்ருஷ்ண ஏகாதசிகளுக்கும் உபலக்ஷணம்.

अत एव मरीचिः — श्राद्धविघ्ने समुत्पन्ने ह्यविज्ञाते मृतेऽहनि । एकादश्यां तु कर्तव्यं कृष्णपक्षे विशेषतः इति । देवस्वामिनाऽप्येवं विषयव्यवस्था कृता — एकोद्दिष्टे तु सम्प्राप्ते यदि विघ्नः प्रजायते इत्यादिवचनं सूतकाशौचव्यतिरिक्त-निमित्तान्तरतस्तदहर्विघाते, सूतकाशौचविघाते तु सूतकानन्तरं कुर्यात्, वदन्ति शुद्धौ तत्काल इत्याद्यवगन्तव्यम् इति । अन्ये तु — उत्तरमासमृततिथौ कर्तव्यताप्रतिपादकवचनमेकोद्दिष्टमासिक-विषयम्, सूतकानन्तरदिने दर्शादौ कर्तव्यताप्रतिपादकवचनं सपिण्डीकरणानन्तरभाव्यनुमासिकविषयमित्याहुः । यथोचितमिह द्रष्टव्यम् ।

மரீசி:- 'ச்ராத்தத்திற்கு விக்னம் ஏற்பட்டாலும், ச்ராத்த தினம் அறியப்படாவிடினும், ச்ராத்தத்தை ஏகாதசியில் செய்யவும். க்ருஷ்ண பக்ஷத்தின் ஏகாதசியில் செய்வது ச்லாக்யமாகும்' என்றார். தேவஸ்வாமி என்பவராலும் இவ்விதம் விஷய நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது:- 'ஏகோத்திஷ்டேது ஸம்ப்ராப்தே யதிவிக்ன: ப்ரஜாயதே' என்பது முதலிய வசனம், ஜனன மரண ஆசௌசங்களைத் தவிர்த்த காரணாந்தரத்தால் அன்று விக்னம் ஏற்பட்ட விஷயத்தில். ஜநந மரண ஆசௌச

விக்னத்திலோவெனில் ஆசௌசத்தின் முடிவில் செய்யவும். 'வதந்தி சுத்தௌ தத்காலம்' என்பது முதலியதைக் கவனிக்கவும்' என்று. மற்றவரோவெனில்:- 'உத்தரமாஸ ம்ருத திதியில் செய்ய வேண்டும் என்பதைச் சொல்லும் வசனம் ஏகோத்திஷ்ட மாஸிகத்தைப் பற்றியது. ஆசௌசத்திற்கு மறுநாளிலும் தர்சம் முதலியதிலும் செய்யும்படி சொல்லும் வசனம், ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு செய்யப்படும் அனுமாஸிகத்தைப் பற்றியது' என்கின்றனர். இவ்விஷயத்தில் உசிதமாகியதை க்ரஹிக்கவும்.

## आशौचाद्यन्तरितोनमासिकविधिः

ऊनमासिकान्यतिक्रान्तानि, मासिकाब्दे तु सम्प्राप्ते इति षट्त्रिंशन्मतवचनानुसारेण परमासे दर्शादौ कार्याणीति केचिदाहुः । अपरे तु — त्रैपक्षिकोनषाण्मास्ये ऊनाब्दिकमथाचरेत् । एतेषामेव काले तु न पुनः करणं भवेत् । ऊनानां नापकर्षः स्यात् पुनरप्यपकर्षणे । उत्कर्षश्चापि न भवेत् प्रमादान्तरितस्य तु इत्यादिवचनजातमुदाहरन्तः ऊनानां स्वस्वकाले अकृतानामुत्कर्षो नास्ति, किन्तु लोप एवेत्याहुः । ऊनान्यूनेषु कुर्वीत इति वचनमपि व्याकुर्वते, द्वित्रिदिनैरूनेषु कालेषु ऊनानि कुर्यात् अन्तरितमून-मूनान्तरे योजयेदिति नार्थ इति ।

### ஆசௌசாதிகள் குறுக்கிடுகிற ஊநமாஸிகத்தின் விதி.

அதிக்ராந்தங்களான (ஸ்வகாலத்தில் செய்யப்படாத) ஊநமாஸிகங்களை, 'மாஸிகாப்தேது ஸம்ப்ராப்தே' என்ற வசநத்தை அனுஸரித்து, அடுத்த மாஸத்தில் தர்சம் முதலிய காலத்தில் செய்ய வேண்டும் என்கின்றனர் சிலர். மற்றவரோவெனில், 'த்ரைபக்ஷிகம், ஊநமாஸிகம், ஷாண்மாஸிகம், ஊநாப்திகம் இவைகளை அதனதன் காலத்தில் செய்யவும். இவைகளுக்கு புந:கரணம் இல்லை.

'ஊநங்களுக்கு அபகர்ஷம் இல்லை. என்பது முதலிய வசநங்களைச் சொல்லுகின்றவராய் அதனதன் காலத்தில் செய்யப்படாத ஊநமாஸிகங்களுக்கு உத்கர்ஷம் இல்லை (சென்றதைச் செய்வது என்பது இல்லை). ஆனால் லோபமே தான் என்கின்றனர். 'ஊநாந்யூநேஷு குர்வீத' என்ற வசனத்திற்கும் வ்யாக்யாநம் செய்கின்றனர்:- 'இரண்டு அல்லது மூன்று தினங்களால் குறைந்த காலங்களில் ஊநங்களைச் செய்ய வேண்டும் என்பது பொருள். இதன்றி, அந்தரிதமான ஊநத்தை மற்றொரு ஊநத்தில் சேர்த்துச் செய்யவும் என்று அர்த்தம் இல்லை' என்று.

## ऊनमासिककालः

ऊनानां कालमाह गालवः — ऊनषाण्मासिकं षष्ठे मासार्धे तूनमासिकम्। त्रैपक्षिकं त्रिपक्षे स्यादूनाब्दं द्वादशे तथा इति। स एव — त्रिभिर्वा दिवसैरूने त्वेकेन द्वितयेन वा। आद्यादिषु च मासेषु कुर्यादूनानि वै द्विजः इति। गौतमश्च — एकद्वित्रदिनैरूने त्रिभागेनोन एव वा। श्राद्धान्यूनाब्दिकादीनि कुर्यादित्याह गौतमः इति।

### ஊநமாஸிக காலம்.

ஊநமாஸிகங்களின் காலத்தைச் சொல்லுகிறார், காலவர்:- ஊநஷாண் மாஸிகத்தை 6-ஆவது மாஸத்திலும், ஊநமாஸிகத்தை மாஸத்தின் பாதியிலும், த்ரைபக்ஷிகத்தை 3-ஆவது பக்ஷத்திலும், ஊநாப்திகத்தை 12-ஆவது மாஸத்திலும் செய்ய வேண்டும். காலவரே:- மூன்று அல்லது 2, 1-தினத்தால் குறைந்த முதல் மாதம் முதலிய காலங்களில் ஊநமாஸிகங்களைச் செய்யவும். கௌதமரும்:- ஒன்று அல்லது 2, 3-தினத்தால், அல்லது மூன்றிலொரு பாகத்தால் குறைந்த காலத்தில், ஊநாப்திகம் முதலிய ச்ராத்தங்களைச் செய்யவும், என்றார் கௌதமர்.

व्यासः — द्वादशाहे त्रिपक्षे च षण्मासे मासि चाब्दिके इति । गोभिलश्च — मरणाद्वादशेऽह्नि स्यान्मास्यूनैर्वोनमासिकम् इति । कार्ष्णाजिनिः — ऊनान्यूनेषु मासेषु विषमेषु दिनेषु च । त्रैपक्षिकं त्रिपक्षे स्यान्मृताहेष्वितराणि तु इति । भविष्यत्पुराणे — षष्ठे षाण्मासिकं कार्यं द्वादशे मासि चाब्दिकम् । त्रैपक्षिकं भवेद्वृत्ते त्रिपक्षे विषमे दिने इति । वृत्ते - प्रवृत्त इत्यत्यर्थः ।

**வ்யாஸர்:-** *12-ஆவது நாளிலும், 3-ஆவது பக்ஷத்திலும், 6-ஆவது மாஸத்திலும், வர்ஷத்தின் முடிவிலும், ஊநங்களைச் செய்யவும்.* **கோபிலரும்:-** *மரணத்தினின்று 12-ஆவது நாளில் அல்லது மாதம் குறைந்துள்ள காலத்திலாவது ஊநமாஸிகம்.* **கார்ஷ்ணாஜிநி:-** *ஊநங்களை மாஸங்கள் ஊநமாயிருக்கும் போது, ஒற்றைப்படையான நாட்களிலும், த்ரைபக்ஷிகத்தை 3-ஆவது பக்ஷத்திலும், மற்ற மாஸிகங்களை ம்ருத திதியிலும் செய்ய வேண்டும்.* **பவிஷ்யத் புராணத்தில்:-** *6-ஆவது மாஸத்தில் ஷாண்மாஸிகத்தைச் செய்யவும். 12-ஆவது மாஸத்தில் ஊநாப்திகத்தையும், த்ரைபக்ஷிகத்தை 3-ஆவது பக்ஷம் ஆரம்பித்த உடன் ஒற்றைப் படையான தினத்திலும் செய்யவும்.*

पितृमेधसारे — प्रथमषष्ठद्वादशमासेषु द्वित्रदिनैरूनेषून-मासिकानि कुर्यात्, त्रिभागशेषेष्वित्येके, द्वादशाहे वाऽर्धमासे वोनमासिकमित्यपरे इति । कालादर्शे — त्रिभिर्द्वाभ्यामुतैकेन मास्यूने ह्यूनमासिकम् । ऊनषाण्मासमूनाब्द मन्नेनैव समाचरेत् । त्रिभागशेषे मासे तु कुर्यादिति हि केचन । अमावास्यादिनियतं माससंवत्सरादृते इति हारीतस्मरणात् ॥ मासम् - मासिकम्, संवत्सरम् - मृताहे प्रत्याब्दिकम् ।

**பித்ருமேதஸாரத்தில்:-** *1-ஆவது, 6-ஆவது, 12-ஆவது மாஸங்கள், 2 அல்லது 3-தினங்களால் குறைந்திருக்கும்*

பொழுது, ஊநமாஸிகங்களைச் செய்யவும். மூன்றில் ஒரு பாகம் மீதியுள்ள ஸமயத்தில், என்று சிலர். 12-ஆவது தினத்தில், அல்லது பாதி மாஸத்தில் ஊநமாஸிகம் என்று மற்றவர் சொல்லுகின்றனர். காலாதர்சத்தில்:- 3 அல்லது 2, 1 தினத்தால் குறைந்துள்ள முதல் மாஸத்தில் ஊனமாஸிகம். ஊநஷாண்மாஸம், ஊநாப்திகம் இவைகளும் அப்படியே. அன்னத்தினாலேயே செய்ய வேண்டும். மூன்றில் ஒரு பாகம் மீதியுள்ள மாஸத்தில் செய்யவும் என்று சிலர். த்ரைபக்ஷிகத்தை, 3-ஆவது பக்ஷம் ஆரம்பித்த உடன், ஒற்றைப்படையான தினத்தில் செய்யவும். ஊநமாஸிகத்தை 28-ஆவது நாளில் செய்யவும். 'அன்னேனைவ' = அன்னத்தினாலேயே மாஸிகங்களைச் செய்யவும். ஆமத்தினால் செய்யக்கூடாது. 'ச்ராத்தத்திற்கு விக்னம் நேர்ந்தால், ப்ராம்ஹணர்கள் ஆமச்ராத்தத்தைச் செய்யலாம், மாஸிகம், ப்ரத்யாப்திகம் தவிர்த்து' என்று ஹாரீத ஸ்ம்ருதி உள்ளது.

पद्धतौ — सप्तविंशदिनादूर्ध्वं त्रियहस्सूनमासिकम् । चत्वारिंशद्दिनादूर्ध्वं पञ्चाहस्सु त्रिपक्षिकम् । तथा दशसु षाण्मासं सप्तत्यतिशतात् परम् । ऊर्ध्वं पञ्चदशाहस्सु चत्वारिंशच्छतत्रयात् । ऊनाब्दिकं प्रकुर्वीत तिथा वाब्दिकमाचरेत् इति ।

பத்ததியில்:- 27-ஆவது நாளுக்கு மேல் 3-நாட்களில் ஊநமாஸிகத்தையும், 40-தினங்களுக்குமேல், 5-தினங்களில் த்ரைபக்ஷிகத்தையும், 170-தினங்களுக்கு மேல் 10-தினங்களில் ஊநஷாண்மாஸிகத்தையும் 340-தினங்களுக்கு மேல் 15-தினங்களில் ஊநாப்திகத்தையும், திதியில் ஆப்திகத்தையும் செய்யவும்.

## ऊनमासिकवर्ज्यकालः

अत्र वर्ज्यमाह गार्ग्यः — नन्दायां भार्गवदिने चतुर्दश्यां त्रिपुष्करे । ऊनश्राद्धं न कुर्वीत गृही पुत्रधनक्षयात् इति ।। मरीचिः

— द्विपुष्करेषु नन्दासु सिनीवाल्यां भृगोर्दिने । चतुर्दश्यां च नोनानि कृत्तिकायां त्रिपुष्करे इति । त्रिपुष्करं नाम ('यदा भद्रतिथीनां स्यात् पापवारेण संयुतिः । खण्डक्षितीशयोगश्चेत् स त्रियोगस्त्रिपुष्करः) द्वितीयासप्तमीद्वादशीनां भद्रतिथीनां कृत्तिकापुनर्वसूत्तरफल्गुनीविशाखोत्तराषाढा पूर्वभाद्रपदा नक्षत्राणां भानुभौमशनैश्चरवाराणां च त्रयाणां मेलने त्रिपुष्करम् । द्वयोर्मेलने द्विपुष्करम् । भद्रा त्रिपदनक्षत्रं भानुभौमार्किवासराः । त्रिपुष्करा इति ख्यातास्तत्र तूनं न कारयेत् इति स्मरणात् ।

**ஊநமாஸிகத்தில் தவிர்க்கக் கூடிய காலம்.**

இவைகளில் தவிர்க்கக் கூடியதைச் சொல்லுகிறார் கார்க்யர்:- நந்தா திதி, வெள்ளிக் கிழமை, சதுர்தசீ, த்ரிபுஷ்கரம் இவைகளில் ஊநமாஸிக ச்ராத்தத்தைச் செய்யக்கூடாது. செய்தால் புத்ரனுக்கும் தனத்திற்கும் க்ஷயம் உண்டாகும். மரீசி:- த்விபுஷ்கரங்கள், நந்தாதிதிகள், அமாவாஸ்யை, வெள்ளிக்கிழமை, சதுர்தசீ, க்ருத்திகாநக்ஷத்ரம், த்ரிபுஷ்கரம் இவைகளில் ஊநமாஸிகங்களைச் செய்யக்கூடாது. த்ரிபுஷ்கரம் என்பது, த்விதீயா, ஸப்தமீ, த்வாதசீ என்ற பத்ர திதிகள், க்ருத்திகா, புனர்வஸு, உத்தரபல்குநீ, விசாகா, உத்தராஷாடா, பூர்வபாத்ரபதா என்ற நக்ஷத்ரங்கள், ஞாயிறு, செவ்வாய், சனி என்ற வாரங்கள் என்ற இவைகளுள், மூன்றுக்குச் சேர்க்கை இருந்தால் த்ரிபுஷ்கரம். இரண்டிற்குச் சேர்க்கை இருந்தால் த்விபுஷ்கரம். 'பத்ராதிதி, த்ரிபத நக்ஷத்ரம், பானு - பௌம - சனி - வாரங்கள் இவைகளுள் மூன்று சேர்ந்தால் த்ரிபுஷ்கரங்கள் எனப்படுகின்றன. அவைகளில் ஊநமாஸிகத்தைச் செய்யக் கூடாது' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

कालादर्शे — त्रिपुष्करे च नन्दासु दर्शे भार्गववासरे । चतुर्दश्यां न कुर्वीत ह्यूनानि त्रीणि वह्निभे इति । वह्निभम् -

कृत्तिकानक्षत्रम्, प्रतिपत् षष्ठ्येकादश्यो नन्दाः । स्मृत्यन्तरे — आग्नेयमैन्द्रं सार्पं च तिस्रः पूर्वाश्च नैरृतम् । यद्येषूनत्रयं कुर्यात् ज्येष्ठपुत्रो विनश्यति इति ।

*காலாதர்சத்தில்:- த்ரிபுஷ்கரத்திலும், நந்தைகளிலும், தர்சத்திலும், சுக்ரவாரத்திலும், சதுர்தசியிலும், க்ருத்திகையிலும் மூன்று ஊநமாஸங்களையும் செய்யக் கூடாது. மூலத்தில் உள்ள வஹ்நிபம் க்ருத்திகா நக்ஷத்ரம். நந்தைகள் ப்ரதமா, ஷஷ்டீ, ஏகாதசீ என்ற திதிகள். மற்றொரு ஸ்ம்ருதியில்:- க்ருத்திகா, ஜ்யேஷ்டா, ஆச்லேஷா, பூர்வபல்குனீ, பூர்வாஷாடா, பூர்வப்ரோஷ்டபதா, மூலம் என்ற இந்த நக்ஷத்ரங்களில், 3-ஊநமாஸிகங்களைச் செய்தால் ஜ்யேஷ்ட புத்ரனுக்கு விநாசம் உண்டாகும்.*

वत्सरान्तसापिण्ड्ये अत्यब्दसापिण्ड्ये च मासिकनिर्णयः ।

वत्सरान्ते सापिण्ड्ये उपाधिवशात् प्रागकृतान्यूनमासिकादीनि सर्वाणि मासिकानि द्वादशमासिकाहे वा ऊनाब्दिकाहे वा आब्दिकात् पूर्वदिने सपिण्डीकरणाहे वा कुर्यात् । एवं पित्रोः पत्न्यादिव्यतिरिक्तानां च सङ्घातमरणे एकोद्दिष्टान्तकृत्यव्यतिरेकेण मासिकसापिण्ड्यादिनिषेधात् वत्सरान्ते सापिण्ड्यविधानाच्च आब्दिकात् पूर्वं सापिण्ड्याहे मासिकानि कुर्यात् । अत्यब्दसापिण्ड्ये कृतान्यकृतानि च मासिकादीनि कृष्णैकादश्यां मृताहे सपिण्डीकरणाहे वा कुर्यात्, श्राद्धानि षोडशापाद्य विदधीत सपिण्डताम् इति लोकाक्षिवचनात्, कृतेषु मासिकेष्वेषु सपिण्डीकरणं विना । संवत्सरे व्यतीते तु पुनस्तानि समाचरेत् इति शङ्खस्मरणाच्च ।

**வர்ஷத்தின் முடிவிலாவது, வர்ஷம் முடிந்த பிறகாவது ஸாபிண்ட்யம் செய்தால் மாஸிகங்களின் நிர்ணயம்.**

*வர்ஷத்தின் முடிவில் ஸாபிண்ட்யம் செய்யும் விஷயத்தில், ஏதாவது தொந்தரையினுல், முன்பு செய்யப்படாத ஊநமாஸிகம் முதலிய எல்லா மாஸிகங்களையும், 12-ஆவது மாஸிக தினத்திலாவது, ஊநாப்திக மாஸிக தினத்திலாவது, ஆப்திக தினத்திற்கு முந்திய தினமாகிய ஸபிண்டீகரண தினத்திலாவது செய்ய வேண்டும். இவ்விதம், மாதா பிதாக்களுக்கும், பத்னீ முதலியவர்களைத் (7-பேர்கள்) தவிர்த்தவர்களுக்கும் ஸங்காதமரண விஷயத்தில், ஏகோத்திஷ்டம் முடியும் வரையுள்ள க்ருத்யம் தவிர்த்து, மாஸிகம், ஸாபிண்ட்யம் முதலியவைக்கு நிஷேதம் இருப்பதாலும், வர்ஷ முடிவில் ஸாபிண்ட்யம் விதிக்கப்பட்டு இருப்பதாலும், ஆப்திகத்திற்கு முன் ஸாபிண்ட்ய தினத்தில் மாஸிகங்களைச் செய்ய வேண்டும். வர்ஷத்திற்குப் பிறகு ஸாபிண்ட்யம் செய்யும் விஷயத்தில், செய்யப்பட்டும், செய்யப்படாமலும் உள்ள மாஸிகம் முதலிவைகளை, க்ருஷ்ணபக்ஷ ஏகாதசியிலாவது, தர்சத்திலாவது, ம்ருத திதியிலாவது, ஸபிண்டீகரண தினத்திலாவது செய்யவும். '16-ச்ராத்தங்களைச் செய்து ஸாபிண்ட்யத்தைச் செய்யவும்' என்று லோகாக்ஷி வசநம் இருப்பதாலும், 'இந்த மாஸிகங்கள் எல்லாம் செய்யப்பட்ட பிறகு, ஸபிண்டீகரணம் செய்யப்படாமல் வர்ஷம் அதிக்ராந்தம் ஆனுல் மறுபடி அவைகளைச் செய்யவும்' என்று சங்க ஸ்ம்ருதி இருப்பதாலும் இப்படி.*

मासिकानां सपिण्डीकरणाङ्गत्वात् स्वकाले सपिण्डीकरणाकरणे कालान्तरे तत्करणे कृतैरप्यङ्गभूतैर्मासिकैः सह सापिण्ड्यं कुर्यात् । तथा च कात्यायनः — प्रधानस्याक्रियायां तु साङ्गं तत् क्रियते पुनः । तदङ्गस्याक्रियायां तु नावृत्तिर्नैव तत्क्रिया

इति । ननु — तर्हि प्रधानभूतसापिण्ड्यमात्रानुष्ठानेन कृतं मासिकानुष्ठानमिति चेन्मेवम्, यस्यैतानि न दत्तानि प्रेतश्राद्धानि षोडश । पिशाचत्वं स्थिरं तस्य दत्तैः श्राद्धशतैरपि इति तदकरणे प्रत्यवायस्मरणात् ।

*மாஸிகங்கள் எல்லாம் ஸபிண்டீகரணத்திற்கு அங்கமாகியதால், ஸபிண்டீகரண காலத்தில் ஸபிண்டீகரணத்தைச் செய்யாமல் வேறு காலத்தில் அதைச் செய்வதானல், முன் செய்யப்பட்டிருந்தாலும், அங்கங்களாகிய மாஸிகங்களுடன் ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும். அவ்விதமே, காத்யாயனர்:- 'ப்ரதானமான கர்மத்தைச் செய்யாவிடில், அதை மறுபடி அங்கங்களுடன் கூடியதாகவே செய்யவும். அதன் அங்கத்தைச் செய்யாவிடிலோ வெனில், அதற்கு (ப்ரதானத்திற்கு) ஆவ்ருத்தி இல்லை, அதை (அங்கத்தை)ச் செய்யவும் வேண்டியது இல்லை' என்றார். அப்பொழுது, ப்ரதானம் ஆகிய ஸாபிண்ட்யத்தை மட்டில் செய்வதால் மாஸிக அனுஷ்டானமும் செய்யப்பட்டதாகிறதே ? எனில், இவ்விதம் சொல்லக்கூடாது. (ஏனெனில்) 'எவனுக்கு இந்த 16- ப்ரேத ச்ராத்தங்களும் கொடுக்கப்படவே இல்லையோ அவனுக்குப் பிசாசத் தன்மை ஸ்திரமாகவே இருக்கும், நூறு ச்ராத்தங்கள் கொடுக்கப்பட்டாலும், என்று மாஸிகங்களைச் செய்யாத விஷயத்தில் தோஷம் சொல்லப்பட்டு இருப்பதால்.*

कालं विदधाति गर्गः — कृष्णपक्षे तु पञ्चम्यामष्टम्यां दर्श एव वा । एकादश्यां तु कर्तव्यं स्वकालाकरणे सति इति । वत्सरान्त-सापिण्ड्ये अत्यब्दसापिण्ड्ये च मासिकानामावृत्तिर्नास्ति, किन्तु सपिण्डीकरणात् पूर्वं सकृदेव तानि कुर्यात्, यस्य संवत्सरादर्वाक् सपिण्डीकरणं इत्यादिभिर्वत्सरात् प्रागेव सपिण्डीकरणे तदूर्ध्व-

मासिकानां पुनः करणविधानात् । विज्ञानेश्वरेण तु वत्सरादर्वाक्सापिण्ड्येऽपि मासिकानां पुनः करणं नाङ्गीकृतम् ।

*காலத்தை விதிக்கின்றூர் கார்கர்:- 'க்ருஷ்ண பக்ஷத்தில் பஞ்சமியிலாவது, அஷ்டமியிலாவது, தர்சத்திலாவது, ஏகாதசியிலாவது செய்யவும், ஸ்வகாலத்தில் செய்யாவிடில்' என்று. வத்ஸராந்த ஸாபிண்ட்யத்திலும், வத்ஸரத்திற்குப் பிறகு ஸாபிண்ட்யத்திலும், மாஸிகங்களுக்கு ஆவ்ருத்தி இல்லை. ஆனால், ஸபிண்டீகரணத்திற்கு முன் ஒரு முறையே அவைகளைச் செய்யவும். 'யஸ்ய ஸம்வத்ஸராதர்வாக் ஸபிண்டீகரணம்' என்பது முதலிய வசநங்களால், வர்ஷத்திற்கு முன்பே ஸபிண்டீகரணம் செய்யப்பட்டால், அதற்கு மேல் உள்ள மாஸிகங்களை மறுபடி செய்யும்படி விதி இருப்பதால். விஜ்ஞானேச்வரராலோவெனில் வர்ஷத்திற்கு முன் ஸாபிண்ட்யம் செய்த விஷயத்திலும், மாஸிகங்களை மறுபடி செய்வது என்பது அங்கீகரிக்கப்படவில்லை.*

तथा हि — यदा प्राक्संवत्सरात् सपिण्डीकरणम्, तदा षोडश श्राद्धानि कृत्वा सपिण्डीकरणं कार्यमिति वा, सपिण्डीकरणं कृत्वा स्वकालेषु वा तानि कर्तव्यानीति संशयः, उभयथा वचनदर्शनात् श्राद्धानि षोडशाकृत्वा न तु कुर्यात् सपिण्डताम् । श्राद्धानि षोडशापाद्य विदधीत सपिण्डताम् इति, तथा — यस्य संवत्सरादर्वाक्सपिण्डीकरणं भवेत् । मासिकं सोदकुम्भं च देयं तस्यापि वत्सरम् इति । तत्र सपिण्डीकरणं कृत्वा स्वकाले एव तानि कर्तव्यानीति प्रथमकल्पः, अप्राप्तकालत्वेन प्रागनधिकारात् । यदपि वचनं, षोडश श्राद्धानि कृत्वैव सपिण्डीकरणं संवत्सरात् प्रागपि कर्तव्यमिति सोऽयमापत्कल्पः इति ।

*அவ்விதமே, 'எப்பொழுது வர்ஷத்திற்குள் ஸபிண்டீகரணம் செய்யப்படுகிறதோ, அப்பொழுது,*

16-ச்ராத்தங்களைச் செய்து ஸபிண்டீகரணத்தைச் செய்யவேண்டுமா அல்லது ஸபிண்டீகரணத்தைச் செய்து, அதனதன் காலங்களில் அவைகளைச் செய்ய வேண்டுமா என்று ஸம்சயம். இரண்டு விதமாயும் வசநங்கள் காணப்படுவதால். '16-ச்ராத்தங்களைச் செய்யாமல் ஸாபிண்ட்யத்தைச் செய்யக் கூடாது. அவைகளைச் செய்து ஸாபிண்ட்யத்தைச் செய்யவும்' என்றும், அவ்விதம், 'எவனுக்கு வர்ஷத்திற்கு முன் ஸபிண்டீகரணம் செய்யப்பட்டதோ, அவனுக்கும் வர்ஷம் முடியும் வரையில் மாஸிகமும், ஸோதகும்பமும் செய்யப்பட வேண்டும்' என்றும். அவ்விஷயத்தில், ஸபிண்டீகரணத்தைச் செய்து ஸ்வகாலத்திலேயே அவைகளைச் செய்ய வேண்டும் என்பது முக்ய கல்பம். காலம் ப்ராப்தம் ஆகாததால் முன் செய்வதற்கு அதிகாரம் இல்லாததால். 'ஷோடச ச்ராத்தங்களைச் செய்தே வர்ஷத்திற்கு முன்பிலும் ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டும்' என்ற வசநம் ஆபத்கல்பத்தைப் பற்றியது' என்றார்.

एतच्च विज्ञानेश्वरोक्तं यदा संवत्सरादर्वाक्सापिण्ड्यं कर्तुमिष्यते। आवर्तनं षोडशानां तदा कर्तव्यमेव हि इत्यादि पूर्वोक्त बहुस्मृतिविरोधात् शिष्टाचारविरोधाच्चोपेक्ष्यम्।

இவ்விதம் விஜ்ஞானேச்வரர் சொல்லியது, 'யதாஸம்வஸ்ரா+கர்தவ்யமேவஹி' என்பது முதலிய முன் சொல்லப்பட்ட வசனங்களுக்கு விருத்தமாய் இருப்பதாலும், சிஷ்டாசார விரோதம் இருப்பதாலும் ஆதரிப்பதற் கர்ஹமல்ல.

## शुभागमे मासिकापकर्षणम्

सपिण्डीकरणात् पूर्वं कृतान्यपि मासिकानि शुभागमे तत्पूर्वमेव तदुत्तरभावीनि पुनरप्यपकृष्य कुर्यात्, न स्वकाले पुनः

कुर्यात् । यदाह शाट्यायनिः — सपिण्डीकरणादर्वागपकृष्य कृतान्यपि । पुनरप्यपकृष्यन्ते वृद्ध्युत्तरनिषेधनात् । जन्मत्रये नापकर्षो न नन्दासु भृगोर्दिने । न भानुभौमदिवसे न दोषोऽस्ति मृतेऽहनि इति । मृतेऽहनि जन्मत्रयादावप्यपकर्षे दोषो नास्तीत्यर्थः । स एव — प्रेतश्राद्धानि शिष्टानि सपिण्डीकरणं तथा । अपकृष्यापि कुर्वीत कर्ता नान्दीमुखे द्विजः इति ।

**சுப கார்யம் வந்தால் மாஸிகங்களின் அபகர்ஷம்**

*ஸபிண்டீகரணத்திற்கு முன் செய்யப்பட்ட மாஸிகங்களையும், சுப கார்யம் வந்தால், அதற்கு முன்பே, சுபகார்யத்திற்கு மேல் வரக்கூடியவைகளை மறுபடி அபகர்ஷித்துச் செய்யவேண்டும். அதனதன் காலத்தில் மறுபடி செய்யக்கூடாது. அதைச் சொல்லுகிறூர்,* **சாட்யாயனி:-** *''ஸபிண்டீகரணத்திற்கு முன் அபகர்ஷித்துச் செய்யப்பட்டு இருந்தாலும் மாஸிகங்கள் வ்ருத்திக்கு முன் மறுபடி அபகர்ஷிக்கப்பட வேண்டும். வ்ருத்திக்கு மேல் நிஷேதிக்கப்பட்டு இருந்தால். ஜன்மாநுஜன்ம த்ரிஜன்மங்களிலும், நந்தைகளிலும், ப்ருகுவாரத்திலும், பானுவாரத்திலும், பௌமவாரத்திலும் அபகர்ஷிக்கக் கூடாது. ம்ருத திதியில் தோஷம் இல்லை.'' ம்ருத திதியில் ஜன்மத்ரயம் முதலியது நேர்ந்தாலும் அபகர்ஷத்தில் தோஷம் இல்லை, என்பது பொருள்.* **சாட்யாயனியே:-** *மீதியுள்ள ப்ரேத ச்ராத்தங்களையும், ஸபிண்டீ கரணத்தையும், நாந்தீ ச்ராத்தம் ஸமீபித்து இருந்தால், கர்த்தா அபகர்ஷித்துச் செய்ய வேண்டும்.*

कालादर्शे — वृद्धौ तान्यपकृष्यापि कुर्यात्तन्मृतिवासरे इति । वृद्धिः शुभम्, तस्मिन्नुपस्थिते आगामिमासिकान्याकृष्य वृद्धेः पूर्वं मरणदिने कुर्यादित्यर्थः । कात्यायनः — निर्वर्त्य वृद्धितन्त्रं तु मासिकानि न तन्त्रयेत् । अयातयामं मरणं न भवेत्

पुनरस्य तु इति । अयातयामं - नवम् । तदेवम् - प्रेतसंस्कारकार्याणि यानि श्राद्धानि षोडश । यथाकाले तु कार्याणि नान्यथा मुच्यते ततः इत्यादिवचनानि द्वादशाहादौ सापिण्ड्यार्थमपकृष्टमासिकानां स्वस्वकाले पुनःकरणपराणि, त्रिपक्षादौ सापिण्ड्ये उत्सवार्थमप-कृष्टानां मासिकानां न पुनः करणम्, उत्सवार्थान्येव सापिण्ड्यार्थानि च भवन्तीति वचनादा वृत्तिर्बाध्यते, सपिण्डीकरणात् परन्तु शुभागमे सापिण्ड्यार्थमप-कृष्टानां शुभार्थं पुनरप्यपकर्षः न स्वकाले पुनः करणमिति ज्ञेयम् ।

காலாதர்சத்தில்:- ''வ்ருத்தியில், அவைகளை அபகர்ஷித்தே ம்ருத திதியில் செய்யவும்.'' வ்ருத்தி என்பதற்கு சுபம் என்பது பொருள். சுபகார்யம் ஸமீபித்து இருந்தால் வரப்போகும் மாஸிகங்களை அபகர்ஷித்து, சுபத்திற்கு முன் ம்ருத திதியில் செய்யவும் என்பது பொருள். காத்யாயனர்:- சுபகார்யத்தைச் செய்த பிறகு மாஸிகங்களை செய்யக் கூடாது. அவ்விதம் இருந்தால் கர்த்தாவுக்கு மறுபடி புதிதாகிய பந்து மரணம் நேராமல் இருக்கும். இவ்விதம் இருப்பதால் 'ப்ரேதனின் ஸம்ஸ்கார கர்மங்களும், ஷோடச ச்ராத்தங்களும் அந்தந்தக் காலங்களில் செய்யப்பட வேண்டும். இல்லாவிடில் ப்ரேதன் ப்ரேதத்வத்தினின்றும் விடுபடுவது இல்லை' என்பது முதலிய வசநங்கள், 12-ஆவது நாள் முதலிய காலத்தில் ஸாபிண்ட்யத்திற்காக அபகர்ஷிக்கப்பட்ட மாஸிகங்களை அதனதன் காலத்தில் மறுபடி செய்ய வேண்டும் என்பதில் தாத்பர்யம் உள்ளவைகள். த்ரிபக்ஷம் முதலிய காலத்தில் ஸாபிண்ட்யம் செய்வதானல், அதற்கு முன் சுபகார்யத்திற்காக அபகர்ஷிக்கப்பட்ட மாஸிகங்களுக்குப் புநःகரணம் என்பது இல்லை. 'உத்ஸவத்திற்காக அபகர்ஷிக்கப்பட்டவைகளே ஸாபிண்ட்யத்திற்காகவும் ஆகின்றன' என்ற வசனத்தால் ஆவ்ருத்தி பாதிக்கப்

इति भविष्यत्पुराण वचनात्, वत्सरान्ते ततः प्रेतः पितृत्वमुपपद्यते इति बोधायनस्मरणाच्च । संवत्सरे पूर्ण इत्यभिधानात् द्वित्रादिदिनैरूने न कर्तव्यम्, संवत्सरस्य तदा अपूर्णत्वात् ।

*வத்ஸராந்தத்தில் ஸபிண்டீகரணம் செய்வது அநாஹிதாக்னிக்கு முக்யம் ஆகியது. 'அநாஹிதாக்னியான யஜமானன், அநாஹிதாக்னியான ப்ரேதனுக்கு வர்ஷம் முடிந்த பிறகு ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டும். யுதிஷ்டிர !' என்று பவிஷ்யத் புராண வசநத்தாலும், 'வர்ஷம் முடிந்த பிறகு ப்ரேதன் பித்ருத்வத்தை அடைகிறான்' என்று போதாயந ஸ்ம்ருதியாலும், 'ஸம்வத்ஸரே பூர்ணே' என்று சொல்லி இருப்பதால், 2 அல்லது 3 தினங்கள் குறைந்துள்ள காலத்தில் செய்யக் கூடாது. அப்பொழுது ஸம்வத்ஸரம் பூர்ணம் ஆகாததால்.*

न चात्र वारादिदोषः, सपिण्डीकरणं कुर्याद्वत्सरान्ते यदा पुनः । ऊनाब्दिकात् परं कुर्यादाब्दिकात् पूर्ववासरे । वत्सरान्ते यदा कुर्यात् सपिण्डीकरणं सुतः । तदा तु तिथिवारादीन् कुर्यादेवा- विचारयन् इति स्मरणात् । आब्दिकात् पूर्ववासरे सपिण्डी- करणासंभवे आब्दिकदिने कुर्यात् । तदा न पृथगाब्दिकं कुर्यात्, सापिण्ड्यं यदि वर्षान्ते मृतमासे मृतेऽहनि । कुर्वीत विधिवत् पुत्रस्तदेव प्रथमाब्दिकम् इति स्मरणात् ।

*இவ்விஷயத்தில் வாராதி தோஷம் என்பது இல்லை. 'வர்ஷாந்தத்தில், ஊநாப்திகத்திற்குப் பிறகு, ஆப்திகத்திற்கு முதல் நாளில் செய்யவும். புத்ரன் வர்ஷாந்தத்தில் செய்வதானுல் திதி வாரம் முதலியதை விசாரிக்காமல் செய்யவேண்டும்' என்று ஸ்ம்ருதி இருப்பதால். ஆப்திகத்திற்கு முதல் நாளில் ஸபிண்டீகரணம் செய்ய முடியாவிடில் ஆப்திக தினத்தில் செய்யவும். அப்பொழுது தனியாய் ஆப்திகம் செய்ய*

வேண்டியது இல்லை. 'வர்ஷாந்தத்தில் ம்ருதமாஸத்தில் ம்ருத திதியில் விதிப்படி ஸாபிண்ட்யத்தைச் செய்வானாகில் அதே ப்ரதமாப்திகம்' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

द्वादशाहे सपिण्डीकरणं षोडशश्राद्धपूर्वकं कर्तव्यम्, तदपि प्रशस्तम्, संवत्सरप्रतिमा वै द्वादशरात्रयः इति श्रुतेः, आनन्त्यात् कुलधर्माणां पुंसां चैवायुषः क्षयात् । अस्थिरत्वाच्छरीरस्य द्वादशाहः प्रशस्यते इति स्मरणात् ।

12-ஆவது நாளில் ஸாபிண்ட்யத்தை, ஷோடச ச்ராத்தங்களைச் செய்து பிறகே செய்ய வேண்டும். 12-ஆவது நாளும் ச்லாக்யம். '12-நாட்கள் ஒரு வர்ஷத்திற்குச் சமம் என்று ச்ருதியாலும், 'குலதர்மங்கள் (சுபகார்யங்கள்) அநேகமாய் இருக்குமாதலாலும், மனிதர்களின் ஆயுள் குறைவானதாலும், சரீரம் ஸ்திரம் அல்லாததாலும், 12-ஆவது நாள் ச்லாக்யம் எனப்படுகிறது' என்று ஸ்ம்ருதி இருப்பதாலும்.

एकपुत्रस्य द्वादशाह एव मुख्यः, कः संवत्सरं जीविष्यति इति श्रुतेः, एकपुत्रोऽग्निमांश्चैव कुर्वीत द्वादशेऽहनि । सपिण्डीकरणश्राद्धं तयोरेष इति स्थितिः । सपिण्डीकरणं पित्रोः कुर्यादेको हि यः सुतः । अस्थिरत्वाच्छरीरस्य द्वादशाहः प्रशस्यते इत्यादिस्मरणाच्च ।

ப்ராதா இல்லாமல் ஒரே புத்ரனாய் இருப்பவன், 12-ஆவது நாளில் செய்வதே முக்யபக்ஷம். 'எவன் ஒரு வர்ஷம் வரையில் ஜீவித்திருப்பான்? என்று ச்ருதி இருப்பதாலும், 'ஏகபுத்ரனாய் இருப்பவனும், ஆஹிதாக்னியும், 12-ஆவது நாளில் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். அவ்விருவர்க்கும் இதுவே முக்ய காலம் என்று நிர்ணயம். ஏகபுத்ரனாய் இருப்பவன் ஸபிண்டீகரணத்தைச் செய்தால் அவனுக்கு 12-ஆவது நாளே ப்ரசஸ்தம்

எனப்படுகிறது, சரீரம் அஸ்திரம் ஆனதால்' என்பது முதலிய ஸ்ம்ருதி உள்ளது.

न चात्र वारादिदोषः, तथा च सायणीये — श्राद्धं सपिण्डनं कुर्यात् तिथिवारान्न चिन्तयेत्। वर्षान्ते द्वादशाहे वा सपिण्डीकरणं यदि इति। मातापितृ व्यतिरिक्तविषये स्मृत्यन्तरम् — द्वादशेऽहनि सम्प्राप्ते यदि शुक्रदिनं भवेत्। मातापितृभ्यामन्यस्य नैव कुर्यात् सपिण्डनम् इति। अन्यत्रापि — नाङ्गारे च चतुर्दश्यां भृगुवारे गुरोर्दिने। सपिण्डीकरणं कुर्यात् कुलक्षयकरं भवेत्। श्वोभूते तत्तु कुर्वीत सापिण्ड्यं षोडशेऽथवा। त्रयोविंशदिने वाऽपि त्रिपक्षादावनन्तरे इति।

இந்த விஷயத்தில் வாராதி தோஷம் இல்லை. அவ்விதமே, ஸாயணீயத்தில்:- ஸாபிண்ட்ய ச்ராத்தத்தைச் செய்தால் திதி வாரங்களை ஆலோசிக்கக் கூடாது, வர்ஷ முடிவிலாவது, 12-ஆவது நாளிலாவது ஸாபிண்ட்யத்தைச் செய்யும் விஷயத்தில் மாதா பிதாக்களைத் தவிர்த்த மற்றவர் விஷயத்தில், ஓர் ஸ்ம்ருதியில்:- 12-ஆவது நாளில் சுக்ரவாரம் நேர்ந்தால், மாதா பித்ருக்களன்றி மற்றவனுக்கு ஸாபிண்ட்யத்தைச் செய்யவே கூடாது. மற்றொரு ஸ்ம்ருதியிலும்:- பௌமவாரம், சதுர்தசீ, சுக்ரவாரம், குருவாரம் இவைகளில் ஸாபிண்ட்யத்தைச் செய்யக் கூடாது. செய்தால் குலக்ஷயகரம் ஆகும். அதை மறுநாளில் செய்யவும் அல்லது 16-ஆவது நாளில், 23-ஆவது நாளில் அல்லது த்ரிபக்ஷம் முதலிய காலத்திலாவது செய்யவும்.

द्वादशाहसपिण्डीकरणासम्भवे त्रिपक्षादिषु वारादिकं परीक्ष्य कुर्यात्। तदुक्तं स्मृतिरत्ने — एकादशादित्यदिने वर्षान्ते वाऽपि यश्चरेत्। सलग्नग्रहवारादिबलं न प्रतिशोधयेत्। त्रिपक्षादिषु कालेषु सपिण्डीकरणं यदि। तत्र प्रशस्तं नक्षत्रं प्रविशोध्य समाचरेत् इति।

*12-ஆவது நாளில் ஸபிண்டீகரணம் செய்ய முடியாவிடில், த்ரிபக்ஷாதி காலங்களில் வாரம் முதலியதைச் சோதித்துச் செய்யவும். அவ்விதம் ஸ்ம்ருதி ரத்னத்தில்:- 11-ஆவது தினத்திலோ, 12-ஆவது தினத்திலோ, வர்ஷாந்தத்திலோ ஸாபிண்ட்யத்தைச் செய்கிறவன். லக்னம், க்ரஹங்கள், வாரம் முதலியதின் பலத்தைச் சோதிக்கக் கூடாது. த்ரிபக்ஷம் முதலிய காலத்தில் ஸாபிண்ட்யமானுல், ப்ரசஸ்தமான நக்ஷத்ரத்தைச் சோதித்துச் செய்ய வேண்டும்.*

हारीतः — एकादशे द्वादशे वा यदि न स्यात् सपिण्डनम् । उत्तरोत्तरकालेषु यथासम्भवमाचरेत् इति । ते चाङ्गिरसा दर्शिताः — द्वादशाहे त्रिपक्षे वा तृतीये मासि षष्ठके । एकादशे वा मास्यब्दे वृद्धौ कुर्यात् सपिण्डतामिति । पद्धतौ च — अथ द्वादशाहे तृतीये चतुर्थे षष्ठे वैकादशे वा मासि सपिण्डीकरणम् इति । कालादर्शेऽपि — एकादशे द्वादशेऽह्नि त्रिपक्षे वा त्रिमासके । षष्ठे वैकादशे वाऽब्दे संपूर्णे वा शुभागमे ॥ सपिण्डीकरणस्यैते अष्टौ कालाः प्रकीर्तिताः इति । अष्टौ काला इत्युपलक्षणम् ।

ஹாரீதர்:- *11, 12-ஆவது நாளில் ஸாபிண்ட்யம் செய்யப்படாவிடில், மேல் உள்ள காலங்களுள் நேர்ந்த ஒரு காலத்தில் செய்யவும். அக்காலங்களும் அங்கிரஸ்ஸால் சொல்லப்பட்டுள்ளன:- 12-ஆவது நாள், த்ரிபக்ஷம், 3-ஆவது மாஸம், 6-ஆவது மாஸம், 11-ஆவது மாஸம், வர்ஷாந்தம், சுபம் நேர்ந்த ஸமயம் இவைகளுள் ஒன்றில் செய்யவும்.* பத்ததியிலும்:- *12-ஆவது நாள், 3-ஆவது மாஸம், 4-ஆவது மாஸம், 6-ஆவது மாஸம், 11-ஆவது மாஸம் இவைகளுல் ஒன்றில் ஸாபிண்ட்யம்.* காலாதர்சத்திலும்:- *11-ஆவது நாள், 12-ஆவது நாள், த்ரிபக்ஷம், 3-ஆவது மாஸம், 6, 11-ஆவது மாஸங்கள், வர்ஷாந்தம், சுபகார்யஸமாகமம் என்று எட்டுக்காலங்கள் ஸாபிண்ட்யத்திற்கு விதிக்கப்பட்டுள்ளன.*

*எட்டுக்காலங்கள் என்றது மற்றக் காலங்களுக்கு முபலக்ஷணம்,*

तथा च स्मृतिरत्ने — एकादशे द्वादशेऽह्नि त्रयोदशदिनेऽपि वा। त्रिपक्षे वा त्रिमासे वा षष्ठे वैकादशेऽपि वा। वत्सरान्तेऽपि वा कुर्यात् त्रयोविंशदिनेऽपि वा। वृद्धिपूर्वदिने वेति दशकालाः सपिण्डने इति। गर्गश्च — अथ वा त्वकृतं यत्तु द्वादशाहे सपिण्डनम्। त्रयोदशदिने कुर्यात् त्रयोविंशदिनेऽथ वा इति। श्रीधरीये — एकादशाहमारभ्य यावदाषोडशाद्दिनात्। सपिण्डीकरणं कुर्यात्ततः सप्तदशेऽह्नि वा इति। बृहस्पतिः — द्वादशाहादिकालेषु सपिण्डीकरणं न चेत्। तदा प्रशस्तनक्षत्रे त्रिपक्षादिषु कारयेत् इति। व्यासः — प्रमादादकृते तस्मिन् द्वादशैकादशेऽहनि। त्रयोविंशदिने वाऽपि त्रिपक्षाद्युत्तरेषु वा। तत्र प्रशस्तनक्षत्रं परिशोध्य समाचरेत्। त्रिपदर्क्षं विना जन्मभानुभौमशनैश्चरान्। शुक्रवारं तदंशं च विनाऽन्यत्र समाचरेत् इति।

***ஸ்ம்ருதிரத்னத்தில்:-*** *11, 12, 13-ஆவது தினங்கள், த்ரிபக்ஷம், 3, 6, 11-ஆவது மாஸங்கள், வர்ஷத்தின் முடிவு, 23-ஆவது தினம், நாந்தியின் முதல் தினம் என்று பத்துக் காலங்கள் ஸாபிண்ட்யத்தில் விதிக்கப்பட்டுள்ளன.* ***கர்கரும்:-*** *12-ஆவது நாளில் ஸாபிண்ட்யம் செய்யப்படாவிடில், 13 அல்லது 23-ஆவது தினத்தில் செய்யவும்.* ***ச்ரீதரீயத்தில்:-*** *11-ஆவது நாள் முதல் 16-ஆவது நாள் வரையில் ஸாபிண்ட்யத்தைச் செய்யலாம். பிறகு 17-ஆவது தினத்திலும் செய்யலாம்.* ***ப்ருஹஸ்பதி:-*** *12-ஆவது தினம் முதலிய காலங்களில் ஸாபிண்ட்யம் செய்யப்படாவிடில், த்ரிபக்ஷம் முதலிய காலங்களில் ப்ரசஸ்தமான நக்ஷத்ரத்தில் செய்யவும்.* ***வ்யாஸர்:-*** *11, 12-ஆவது தினங்களில் செய்யப்படாவிடில் 23-ஆவது*

தினத்திலாவது, த்ரிபக்ஷம் முதலிய மேல் காலங்களிலாவது, சிறந்த நக்ஷத்ரத்தைச் சோதித்துச் செய்யவும். த்ரிபத நக்ஷத்ரம், ஜன்மநக்ஷத்ரம், பானுவாரம், பௌமவாரம், சனி வாரம், சுக்ரனின் வாரம் அம்சம் இவைகளைத் தவிர்த்து மற்றக் காலத்தில் செய்யவும்.

शङ्खः — चतुर्दश्यां तु यत् पूर्वं सपिण्डीकरणं स्मृतम् । एकोद्दिष्टविधानेन तत् कार्यं शस्त्रघातिनः इति । यदेतत् सपिण्डीकरणं, तत् शस्त्रहतस्य एकोद्दिष्टं चतुर्दश्यां कार्यं, न सपिण्डीकरणमित्यर्थः । स्मृतिरत्ने — सपिण्डीकरणे त्रीणि ऋक्षाण्याहुर्मनीषिणः । प्राजापत्यं तथा रौद्रं नक्षत्रं त्विन्द्रदैवतम् इति । ऋश्यशृङ्गः — सपिण्डीकरणं येन प्रमादादकृतं तदा । अनुराधार्द्रहस्तेषु रोहिण्यां वा समाचरेत् इति । गालवश्च — सपिण्डीकरणश्राद्ध मुक्तकाले न चेत् कृतम् । रौद्रे हस्ते च रोहिण्यां मैत्रभे वा समाचरेत् इति ।

சங்கர்:- ஸபிண்டீகரணம் என்றது எதுவோ, அது சஸ்த்ரஹதனுக்கு, ஏகோத்திஷ்டமாய்ச் சதுர்தசியில் செய்யப்பட வேண்டும். ஸபிண்டீகரணமாய்ச் செய்யப்படக் கூடாது, என்று பொருள் ஸ்ம்ருதிரத்னத்தில்:- ரோஹிணீ, ஆர்த்ரா, ஜ்யேஷ்டா, இந்த மூன்று நக்ஷத்ரங்களும் ச்லாக்யங்கள் என்கின்றனர். வித்வான்கள். ருச்யச்ருங்கர்:- எவன் கவனமின்மையால் ஸாபிண்ட்யத்தைச் செய்யவில்லையோ அவன், அநுராதா, ஆர்த்ரா, ஹஸ்தம், ரோஹிணீ இவைகளுள் ஒன்றில் செய்யவும். காலவரும்:- விஹித காலத்தில் ஸபிண்டீகரணத்தைச் செய்யாவிடில், ஆர்த்ரா, ஹஸ்தம், ரோஹிணீ, ஜ்யேஷ்டா இந்த நக்ஷத்ரங்களுள் ஒன்றில் செய்யவும்.

### वत्सरातिक्रमे सपिण्डीकरणप्रकारः, तत्कालश्च

संवत्सरात्यये तु पुनः षोडशश्राद्धानुष्ठानपूर्वकं कर्तव्यम्, कृतेऽपि षोडशश्राद्धे सपिण्डीकरणं विना । संवत्सरे व्यतीते तु पुनः षोडशमर्हति इति स्मरणात् । अत्र कालमाह बृहस्पतिः — अकृते प्राप्तकाले तु श्राद्धकालोऽत्र वक्ष्यते । कन्याकुम्भगते भानौ कृष्णपक्षे विधीयते इति । गर्गश्च - कृष्णपक्षे तु पञ्चम्या मष्टम्यां दर्श एव वा । एकादश्यां तु कर्तव्यं स्वकालाकरणे सति इति ।

### வர்ஷம் முடிந்த பிறகு ஸபிண்டீகரணத்தின் ப்ரகாரமும், காலமும்

*வர்ஷம் முடிந்த பிறகோவெனில், மறுபடி ஷோடச ச்ராத்தங்களைச் செய்து ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். 'ஷோடச ச்ராத்தங்களும் செய்யப்பட்டு, ஸபிண்டீகரணம் செய்யப்படாமல் வர்ஷம் முடிந்து விட்டால், மறுபடி ஷோடச ச்ராத்தங்களைச் செய்ய வேண்டும்' என்று ஸ்ம்ருதி இருப்பதால். இதில் காலத்தைச் சொல்லுகிறார்,* **ப்ருஹஸ்பதி:-** *விஹித காலத்தில் செய்யப்படாவிடில், ச்ராத்த காலம் இப்பொழுது சொல்லப்படுகிறது. கன்யா, கும்பம் இந்த ராசிகளில் ஸூர்யன் இருக்கும் பொழுது க்ருஷ்ண பக்ஷத்தில் விதிக்கப்படுகிறது.* **கர்கரும்:-** *ஸ்வகாலத்தில் செய்யாவிடில், க்ருஷ்ணபக்ஷத்தில், பஞ்சமீ, அஷ்டமீ, தர்சம், ஏகாதசீ இவைகளுள் ஒன்றில் செய்யவும்.*

स्मृतिरत्ने — अमायां च क्षयाहे च प्रेतपक्षे तथैव च । श्राद्धं सपिण्डनं कुर्यात्तिथिवारौ न शोधयेत् इति । श्रीधरीये — कन्याकुम्भगते सहस्रकिरणे तामिस्रपक्षे भृगोर्वारिर्क्षोदय मङ्गनातनययोर्जन्मत्रयं चात्मनः । हित्वा नन्दकरीं चतुर्दश तिथिं श्राद्धं विदध्याद्वसुत्वाष्ट्रार्काग्निसमीरमन्त्रिमघमित्राख्येन्दु-विष्ण्वंबुषु इति । नृसिंहः — कन्याकुम्भगते सूर्ये कृष्णपक्षे

विशेषतः । पञ्चम्याः परतः श्रेष्ठ आपञ्चम्याः सितेऽपि च इति । बृहस्पतिः — अन्त्यत्रिभागः शस्तः स्यात् कृष्णपक्षे सपिण्डनम् । आद्यभागे च कर्तव्यं सिते पक्षे च सङ्कटे इति । प्रेतस्य वत्सरादर्वाग्यदा संस्कारमिच्छति । न कालनियमो ज्ञेयो न मौढ्यं गुरुशुक्रयोः इति वत्सरादर्वागेव कालदोषाभावविधानात्, अर्थात् संवत्सरात् परमधिमासमौढ्यदोषश्च परिहार्यः ।

**ஸ்ம்ருதிரத்னத்தில்:-** *அமை அல்லது ம்ருத திதி, மஹாளய பக்ஷம், இவைகளுள் ஒன்றில் ஸபிண்டீகரணத்தைச் செய்யவும். திதி வாராதி தோஷங்களைக் கவனிக்க வேண்டாம்.* **ச்ரீதரீயத்தில்:-** *கன்யா கும்ப மாஸங்களில் க்ருஷ்ண பக்ஷத்தில், சுக்ரனின் வாரம் நக்ஷத்ரம் உதயம் இவைகளையும், தன்னுடையவும், பத்னீ புத்ரர்களுடையவும் ஜன்மானுஜன்ம த்ரிஜன்மங்களையும், நந்தாதிதி, சதுர்தசீ இவைகளைத் தள்ளி, அவிட்டம், சித்திரை, ஹஸ்தம், க்ருத்திகை, ஸ்வாதீ, புஷ்யம், மகம், அநுராதா, ம்ருக சீர்ஷம், ச்ரவணம், பூர்வாஷாடா இந்த நக்ஷத்ரங்களில் செய்யவும்.* **ந்ருஸிம்ஹர்:-** *கன்யா மாஸம், கும்ப மாஸம் இவைகளில் க்ருஷ்ண பக்ஷத்தில் பஞ்சமிக்கு மேற்பட்டும், சுக்ல பக்ஷத்தில் பஞ்சமிக்குக் கீழ்ப்பட்டும் உள்ள காலம் ச்ரேஷ்டம் ஆகும்.* **ப்ருஹஸ்பதி:-** *க்ருஷ்ண பக்ஷத்தில் கடைசியான மூன்றில் ஒரு பாகம் ச்லாக்யம் ஆகும். விஹித காலம் கிடைக்காவிடில், சுக்ல பக்ஷத்திலும் முதலாவதாகிய மூன்றில் ஒரு பாகத்தில் ஸாபிண்ட்யத்தைச் செய்யலாம். 'ம்ருதனுக்கு வர்ஷத்திற்குள் ஸம்ஸ்காரம் செய்ய விரும்பினால் காலநியமம் இல்லை. குரு சுக்ர மௌட்யமும் இல்லை' என்ற வசனத்தால் வர்ஷத்திற்குள் செய்யும் விஷயத்திலேயே காலதோஷம் இல்லை என்று விதிக்கப்படுவதால், வர்ஷத்திற்குப் பிறகு அதிக மாஸம், மௌட்யதோஷம் இவைகளைப் பரிஹரிக்க வேண்டும் என்பது பொருட்படுகிறது.*

## वर्णभेदेन सापिण्ड्यकालनियमः ।

वर्णभेदेन कालव्यवस्थामाह वृद्धमनुः — द्वादशेऽहनि विप्राणामाशौचान्ते तु भूभृताम् । वैश्यानां च त्रिपक्षादावथवा स्यात् सपिण्डनम् । शूद्राणां द्वादशाहे च कर्ता तत्कालतः शुचिः इति । अथवा स्यादिति विप्रक्षत्रियविशां त्रिपक्षादिषु कालेषु वा सपिण्डनमित्यर्थः । विष्णुश्च — मन्त्रवर्जं हि शूद्राणां द्वादशाहे सपिण्डनम् इति, स तत् सच्छूद्रविषयम् । अत एव प्रजापतिः — शूद्राणां द्वादशेऽह्नि स्यादाशौचान्तेऽथ वा भवेत् । कुर्यादाशौचमध्येऽपि सच्छूद्राणां सपिण्डनम् इति ।

### வர்ணபேதப்படி ஸாபிண்ட்யகாலம்

*வர்ணபேதத்தை அனுஸரித்து காலவ்யவஸ்தையைச் சொல்லுகிறார், வ்ருத்தமனு:- 'ப்ராம்ஹணர்களுக்கு 12-ஆவது நாளிலும், க்ஷத்ரியர்களுக்கு ஆசௌசத்தின் முடிவிலும், வைச்யர்களுக்கு த்ரிபக்ஷம் முதலிய காலத்திலும், சூத்ரர்களுக்கு 12-ஆவது நாளிலும் ஸபிண்டநம் விஹிதம் ஆகிறது. கர்த்தா அக்காலத்தில் மட்டில் சுத்தனாகிறான். மூலத்தில் உள்ள 'அதவாஸ்யாத்' என்பதற்கு ப்ராம்ஹண க்ஷத்ரிய வைச்யர்களுக்கு த்ரிபக்ஷம் முதலிய காலங்களிலாவது ஸாபிண்ட்யம், என்பது பொருள். விஷ்ணுவும்:- 'சூத்ரர்களுக்கு 12-ஆவது நாளில் மந்த்ரமில்லாமல் ஸாபிண்ட்யம்' என்கிறார். இது ஸத்சூத்ரனைப் பற்றியது. ஆகையாலேயே, ப்ரஜாபதி:- சூத்ரர்களுக்கு 12-ஆவது நாளில் செய்யப்படலாம், அல்லது ஆசௌசத்தின் முடிவில் செய்யப்படலாம். ஸத் சூத்ரர்களுக்கு ஆசௌசத்தின் நடுவிலும் ஸாபிண்ட்யத்தைச் செய்யலாம் என்றார்.*

सच्छूद्रलक्षणमाह व्याघ्रपादः — संस्कृतायां तु शूद्रायां ब्रह्मबीजसमुद्भवः । स्वकर्मनिरतश्चैव सच्छूद्रः स प्रकीर्तितः इति ।

संस्कृतायां - ब्राह्मणेन विधिवदूढायां इत्यर्थः । असवर्ण विवाहस्य कलौनिषेधाद्युगान्तरविषयं शूद्राणां द्वादशाहे सपिण्डनम् । तथा चापस्तम्बः — शूद्राणां हीनजातीनामाशौचान्ते सपिण्डनम् । पक्वान्नेन न कर्तव्यमामेन श्राद्धमाचरेत् इति ।

ஸச்சூத்ரனின் லக்ஷணத்தைச் சொல்லுகிறார், வ்யாக்ரபாதர்:- 'ஸம்ஸ்க்ருதையான சூத்ர ஸ்த்ரீயின் இடத்தில் ப்ராம்ஹணனுக்குப் பிறந்தவனும், ஸ்வகர்ம அனுஷ்டானத்தில் நிரதனுமானவன் ஸச்சூத்ரன் எனப்படுகிறான்' என்று. மூலத்தில் உள்ள 'ஸம்ஸ்க்ருதாயாம்' என்ற பதத்திற்கு, 'ப்ராம்ஹணனால் விதிப்படி மணக்கப்பட்ட' என்பது பொருள். அஸவர்ண விவாஹத்திற்குக் கலியில் நிஷேதம் இருப்பதால் சூத்ரர்களுக்கு 12-ஆவது நாளில் ஸாபிண்ட்யம் என்பது மற்ற யுகங்களைப் பற்றியது. அவ்விதமே, ஆபஸ்தம்பர்:- 'தாழ்ந்த ஜாதியான சூத்ரர்களுக்கு, ஆசௌசத்தின் முடிவில் ஸாபிண்ட்யம். பக்வான்னத்தால் செய்யக் கூடாது. ஆமத்தால் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்' என்றார்.

कात्यायनोऽपि — सर्वेषामेव वर्णानामाशौचान्ते सपिण्डनम् । न पक्वं भोजयेद्विप्रान् सच्छूद्रोऽपि कदाचन । भोजने त्वश्नतां पापं त्वस्याऽपि प्रभवेत् सताम् इति । सतां शूद्रान्नभोक्तॄणाम्, अस्य - शूद्रस्य चेत्यर्थः । एवं च ब्राह्मणानां महागुरुपितृविषये त्रयोदशदिने सापिण्ड्यम्, उत्पाद्य पुत्रं संस्कृत्य वेदमध्याप्य यः पिता । कुर्याद्वृत्तिं मृते तस्मिन् द्वादशाहं महागुरौ इति द्वादशाह माशौचविधानात् ।

காத்யாயனரும்:- எல்லா வர்ணத்தாருக்கும் ஆசௌசத்தின் முடிவில் ஸாபிண்ட்யம் விதிக்கப் படுகிறது. ஸச்சூத்ரனாயினும் ப்ராம்ஹணர்களைப் பக்வான்னத்தை ஒரு காலும் புஜிப்பிக்கலாகாது. புஜிப்பித்தாலோவெனில், புஜித்த ப்ராம்ஹணர்களுக்கும்,

புஜிப்பித்தவனுக்கும் பாபம் ஏற்படும். இவ்விதம் இருப்பதால், ப்ராம்ஹணர்கள் மஹாகுரு மரண விஷயத்தில் 13-ஆவது நாளில் ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும். "எந்தப் பிதா புத்ரனை உத்பத்தி செய்து, உபநயனம் செய்து, வேதத்தைக் கற்பித்து, பிழைப்பையும் கற்பிக்கின்றானோ, அந்த மஹாகுரு என்ற பிதா இறந்தால் 12-நாள் ஆசௌசம்" என்று 12-நாள் ஆசௌசம் விதிக்கப்படுவதால்.

दर्शापाते एकादशाहे आहिताग्नि कर्तृकसापिण्ड्यम्।

यत्तु — द्वादशाहे वैकादशाहे वा इति बोधायनादिभिरेकादशाहे सपिण्डीकरणमुक्तम्, तत् एकादशाहे दर्शापाते सत्याहिताग्निकर्तृविषयम्। तथा च हारीतः - या तु पूर्वममावास्या मृताहाद्दशमी भवेत्। सपिण्डीकरणं तस्यां कुर्यादेव सुतोऽग्निमान् इति। वृद्धवसिष्ठोऽपि — प्रथमा स्यादमावास्या मृताहाद्दशमेऽहनि। सपिण्डीकरणं तत्र कुर्यादेव सुतोऽग्निमान् इति। मृताहादिति मर्यादायां पञ्चमी, मृताहादूर्ध्वदिनमारभ्येत्यर्थः। या तु पूर्वममावास्या प्रथमा स्यादमावास्या इति विशेषणसामर्थ्या देकादशदिने प्राथमिकदर्शापाते सपिण्डनम्, न द्वितीयादाविति कैश्चिद्व्याख्यातम्। माधवीयादौ विशेषानभिधानात्, ऋषिवाक्ये लाघवानादरात् तदुपेक्ष्यम्।

**தர்சம் வந்தால் 11-ஆவது நாளில் ஆஹிதாக்னி செய்ய வேண்டிய ஸாபிண்ட்யம்.**

"12-ஆவது நாளிலாவது, 11-ஆவது நாளிலாவது" என்று போதாயனர் முதலியவர்களால் 11-ஆவது நாளில் ஸபிண்டீகரணம் விதிக்கப்பட்டது எதுவோ அது, 11-ஆவது நாளில் தர்சம் வந்தால் ஆஹிதாக்னியான கர்த்தாவைப் பற்றியது. அவ்விதமே, ஹாரீதர்:- ம்ருத தினத்தில் இருந்து 10-ஆவது நாளில் முதலில் எந்த

*அமாவாஸ்யை வந்தாலும் அதில் ஆஹிதாக்னியான புத்ரன் ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டும்.* **வ்ருத்தவஸிஷ்டரும்:-** *''ம்ருத தினத்தில் இருந்து பத்தாவது நாளில் முதல் அமாவாஸ்யை வந்தால் அதில் ஆஹிதாக்னியான புத்ரன் ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டும்'' என்றார். இதில் மூலத்தில் உள்ள 'ம்ருதாஹாத்' என்பதில் உள்ள 5-ஆவது விபக்தி மர்யாதார்த்தத்தில். அதாவது ம்ருத தினத்திற்கு மறுநாள் முதற் கொண்டு என்பது பொருள். ''யாது பூர்வமமாவாஸ்யா, ப்ரதமாஸ்யா தமாவாஸ்யா என்று விசேஷண பலத்தால், 11-ஆவது தினத்தில் முதலாவது அமாவாஸ்யை வந்தால் ஸபிண்டநம், இரண்டாவது முதலியதாகில் ஸபிண்டநம் இல்லை'' என்று சிலர் வ்யாக்யாநம் செய்தனர். மாதவீயம் முதலியதில் விசேஷம் சொல்லாததால், ருஷிவாக்யத்தில் லாகவத்தை ஆதரிப்பதில்லை யாதலால், அந்த வ்யாக்யானம் உபேக்ஷிக்கத் தகுந்தது.*

अत एव कार्ष्णाजिनिः — सपिण्डीकरणं कुर्यात् पूर्ववच्चाग्निमान् सुतः । परतो दशरात्राच्चेत्कुहूरब्दोपरीतरः इति । दशरात्रात् परतः कुहूश्चेत् - एकादशेऽह्न्यमावास्या चेदित्यर्थः । इतरः - अनग्निः । एवं च एकादशेऽह्न्यमावास्यागमे मध्याह्ने आद्यमासिकादि, अपराह्णे सपिण्डीकरणम्, अपराह्णे सायाह्ने वा पिण्डपितृयज्ञ इति विवेकः । सपिण्डीकरणं विना पिण्डपितृयज्ञासिद्धेरेकादशदिन एव सपिण्डनं कुर्यात् । तथा च स्मृत्यन्तरे — सपिण्डनं विना पुत्रः पितृयज्ञं न चाश्रयेत् । न पार्वणं नाभ्युदयं कुर्वन्न लभते फलम् इति । गालवः — सपिण्डीकरणात् प्रेते पैतृकं पदमास्थिते । आहिताग्निः सिनीवाल्यां पितृयज्ञः प्रवर्तते इति ।

**கார்ஷ்ணாஜிநி:-** *''ஆஹிதாக்னியான புத்ரன் 10-ஆவது நாளுக்கு மேல் அமாவாஸ்யை நேர்ந்தால் = 11-ஆவது நாளில் அமாவாஸ்யை ஆனால் என்பது பொருள்,*

ஸபிண்டீகரணத்தைச் செய்யவும். அநாஹிதாக்னியான புத்ரன் வர்ஷாந்தத்தில் செய்யவும்'' என்றார். இவ்விதம் இருப்பதால், 11-ஆவது நாளில் அமாவாஸ்யை வந்தால் மத்யாஹ்னத்தில் ஆத்யமாஸிகம் முதலியதும், அபராஹ்ணத்தில் ஸபிண்டீகரணமும், அபராஹ்ணத்திலாவது ஸாயாஹ்னத்திலாவது பிண்ட பித்ருயஜ்ஞமும் (செய்யப்பட வேண்டும்) என்பது விளக்கம். ஸபிண்டீகரணம் செய்யாவிடில் பிண்டபித்ருயஜ்ஞம் ஸித்தமாகாதாகையால், 11-ஆவது தினத்திலேயே ஸபிண்டீகரணத்தைச்செய்ய வேண்டும். ஆகையாலேயே, ஓர் ஸ்ம்ருதியில்:- 'ஸபிண்டநம் செய்யாமல் புத்ரன் பிண்ட பித்ரு யஜ்ஞத்தைச் செய்யக் கூடாது. பார்வணம், அப்யுதயம் இவைகளையும் செய்யக் கூடாது. செய்தவன் அதன் பலனை அடைவதில்லை' என்றுள்ளது. காலவர்:- ஸபிண்டீகரணத்தால், பிதா பித்ருத்வத்தை அடைந்த பிறகு, தர்சத்தில் ஆஹிதாக்நி பிண்டபித்ரு யஜ்ஞத்தைச் செய்ய வேண்டும்.

जाबालिः — सपिण्डीकरणं कुर्यात् पूर्वं दर्शेऽग्निमान् सुतः । परतो दशरात्रस्य पूर्णेऽब्दे तु तथा परः । नासपिण्ड्यग्निमान् विप्रः पितृयज्ञं समाचरेत् । पापी स्यादसपिण्डी तु पितृहा चोपजायते इति । व्यासोऽपि — अतीते दशरात्रे तु पूर्वाऽमा साग्निकस्य तु । तत्रैव सह पिण्डत्वं कृत्वा पार्वणमाचरेत् इति । पार्वणं पिण्डपितृयज्ञम् । एकादशदिने एकाग्निना सपिण्डीकरणं न कर्तव्यम्, क्वचिद्विप्रक्षत्रिययोर्नैकोद्दिष्टस्य वासरे । सपिण्डीकरणं कार्यमन्येषामिति रोमशः इति स्मरणात् । क्वचित् - क्वचिदपि, अन्येषां - अनाहिताग्नीनामित्यर्थः । आपदि तु न दोषः - एकादशदिनेऽप्येतान्येकोद्दिष्टानि षोडश । सपिण्डीकरणं चापि कुर्यादापदि नान्यदा इति स्मरणात् । एवं च अनापदि एकाग्निना द्वादशाहादिष्वेव सपिण्डीकरणं कार्यम्, आहिताग्निना एकादशदिने

दर्शागमे सति तत्रैव सपिण्डीकरणं कर्तव्यम्, आपदि तु तत्रासम्भवे द्वादशाहादौ कार्यम्।

**ஜாபாலி:-** *ஆஹிதாக்னியான புத்ரன், 11-ஆவது நாளில் தர்சமானால் அதில் ஸபிண்டீகரணத்தைச் செய்யவும். அநாஹிதாக்னி வர்ஷம் பூர்ணமான பிறகு செய்யவும். ஆஹிதாக்னியான ப்ராம்ஹணன் ஸபிண்டநம் செய்யாமல் பித்ருயஜ்ஞத்தைச் செய்யக் கூடாது. ஸபிண்டநம் செய்யாமல் பித்ருயஜ்ஞத்தைச் செய்பவன் பாபியாவான், பித்ருஹத்யை செய்தவனாயுமாவான்.* **வ்யாஸரும்:-** *பத்து நாள் சென்றதும் முதலாகிய அமை ஆஹிதாக்னிக்கு. அதிலேயே ஸாபிண்ட்யத்தைச் செய்து பார்வணத்தைச் செய்யவும். பார்வணம் = பிண்டபித்ருயஜ்ஞம். அநாஹிதாக்னி 11-ஆவது நாளில் ஸாபிண்ட்யத்தைச் செய்யக் கூடாது. 'ஏகோத்திஷ்ட தினத்தில் ப்ராம்ஹணனுக்கும் க்ஷத்ரியனுக்கும் ஸபிண்டீகரணத்தை அநாஹிதாக்னிகள் ஒரு காலும் செய்யக் கூடாது என்றார் ரோமசர்' என்று ஸ்ம்ருதி இருப்பதால். ஆபத்விஷயத்தில் ஆனால் தோஷம் இல்லை. '11-ஆவது நாளிலும் இந்தப் பதினாறு மாஸிகங்களையும் ஸபிண்டீகரணத்தையும் ஆபத் விஷயத்தில் செய்யலாம், ஆபத்காலமானால், மற்றக் காலத்தில் கூடாது' என்று ஸ்ம்ருதி இருப்பதால். இவ்விதம் இருப்பதால் ஆபத்காலம் இல்லாத விஷயத்தில், அநாஹிதாக்னியானவன் 12-ஆவது நாள் முதலிய காலங்களிலேயே ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும். ஆஹிதாக்னியானவன், 10-ஆவது நாளில் தர்சம் வந்தால் அதிலேயே ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும். ஆபத்திலானால் தர்சத்தில் செய்ய முடியாவிடில் 12-ஆவது நாள் முதலிய காலத்தில் செய்ய வேண்டும்.*

तथा कर्मप्रदीपिकायाम् — अनन्तरममावास्या दशरात्रस्य या भवेत्। सपिण्डीकरणं तस्यां कुर्यादेवाग्निमान् सुतः। अभावे

द्वादशाहादौ सपिण्डीकरणं स्मृतम् इति । दर्शानागमे तु साग्निर्द्वादशेऽह्नि सपिण्डीकरणं कुर्यात्। तदुक्तं भविष्यत्पुराणे— यजमानोऽग्निमान् राजन् प्रेतश्चानग्निमान् भवेत्। द्वादशाहे भवेत् कार्यं सपिण्डीकरणं सुतैः इति। गोभिलः — साग्निकस्तु यदा कर्ता प्रेतश्चानग्निमान् भवेत्। द्वादशाहे तदा कार्यं सपिण्डीकरणं सुतैः इति । पितुरनग्निकत्वेऽपि पुत्रस्याग्निमत्त्वं पितुर्वैधुर्यादिनाऽग्न्याधानासंभवे वेदितव्यम्, तच्च यजमान प्रकरणे निरूपितम् । प्रेतश्चाप्यग्निमान् भवेत् इति कैश्चित् पठितम्, तत् माधवीयादिविरोधादुपेक्ष्यम्। तथा हि, कर्तुः साग्निकत्वे वचनद्वयमिदमुदाहृत्य उभयोः साग्नित्वे वचनान्तरमुदाहृतम्, तच्च वक्ष्यते। कात्यायनः — एकादशाहं निर्वर्त्य पूर्वं दर्शाद्यथाविधि। प्रकुर्वीताग्निमान् विप्रो मातापित्रोः सपिण्डनम् इति। पैठीनसिः – सपिण्डीकरणं पुत्रः पितुः कुर्वीत योऽग्निमान् । अनग्नेस्तु विजनीयात् एकोद्दिष्टात्परेऽहनि इति। प्रेतस्य साग्निकत्वे कर्तुरनग्नित्वे तृतीये पक्षे सपिण्डीकरणं कार्यम्। तदाह सुमन्तुः – प्रेतश्चेदाहिताग्निः स्यात् कर्ताऽनग्निर्यदा भवेत् । सपिण्डीकरणं तस्य कुर्यात्पक्षे तृतीयके इति। अत्र विषये द्वादशाहेऽत्रिविहितं भविष्यत्पुरणे - अनग्निस्तु यदा वीर भवेत्कुर्यात्तदा गृही । प्रेतश्चेदग्निमांस्तत्र द्वादशाहे सपिण्डनमिति । उभयोः साग्निकत्वे द्वादशाहे सपिण्डी कार्या । तदुक्तं विज्ञानेश्वरीये— साग्निकस्तु यदा कर्ता प्रेतश्चाप्यग्निमान् भवेत्। द्वादशाहे तदा कार्यं सपिण्डीकरणं पितुः इति।

**கர்மப்ரதீபிகையில்:-** *11-ஆவது நாளில் தர்சம் வந்தால் அதில் ஆஹிதாக்னியான புத்ரன் ஸபிண்டீகரணத்தை அவச்யம் செய்ய வேண்டும். முடியாவிடில் 12-ஆவது நாள் முதலிய காலத்தில் செய்ய*

வேண்டும். தர்சம் வராவிடில் ஆஹிதாக்னி 12-ஆவது நாளில் ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும் அவ்விதம் சொல்லப்பட்டுள்ளது, **பவிஷ்யத்புராணத்தில்:-** 'யஜமாநன் ஆஹிதாக்னியாயும், இறந்தவன் அநாஹிதாக்னியாயும் இருந்தால், 12-ஆவது நாளில் புத்ரர்கள் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும்' என்று. **கோபிலர்:-** கர்த்தா ஆஹிதாக்னியாயும், இறந்தவன் அநாஹிதாக்னியாயும் இருந்தால், அப்பொழுது 12-ஆவது நாளில் புத்ரர்கள் ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும். பிதா அநாஹிதாக்னியாய் இருந்தாலும், புத்ரன் ஆஹிதாக்னியாய் இருக்கும் தன்மை, பிதாவுக்கு வைதுர்யம் (பத்னியில்லாத் தன்மை) முதலிய காரணம் இருப்பதால் ஸம்பவிக்கும் விஷயத்தில் என்றறியவும். அந்த விஷயம் யஜமாந ப்ரகரணத்தில் சொல்லப்பட்டு உள்ளது. 'ப்ரேதச்சாப்யக்னிமான் பவேத்' என்று சிலர் படித்தனர். அது, மாதவீயாதிக்ரந்த விருத்தமாய் இருப்பதால் உபேக்ஷிக்கத் தகுந்தது. அதாவது, கர்த்தா ஆஹிதாக்னியாய் இருக்கும் விஷயத்தில் இந்த இரண்டு வசநத்தையும் சொல்லி, கர்த்தா ம்ருதன் இருவரும் ஆஹிதாக்னிகளாய் இருக்கும் பக்ஷத்தில் வேறு வசநம் சொல்லப்பட்டு உள்ளது. அது மேலே சொல்லப்படப் போகிறது. **காத்யாயனர்:-** ஆஹிதாக்னியாகிய ப்ராம்ஹணன் 11-ஆவது நாள் க்ரியையை முடித்து, தர்சத்திற்கு முன் மாதா பிதாக்களுக்கு ஸாபிண்ட்யத்தை விதிப்படி செய்ய வேண்டும். **பைடீநஸி:-** ஆஹிதாக்னியான புத்ரன் பிதாவுக்கு 11-ஆவது நாளில் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். அநாஹிதாக்னியானவன் ஏகோத்திஷ்டத்திற்கு மறுநாளில் செய்ய வேண்டும். இறந்தவன் ஆஹிதாக்னியாயும், கர்த்தா அநாஹிதாக்னியாயும் ஆனுல், 3-ஆவது பக்ஷத்தில் ஸபிண்டீகரணம் செய்யப்பட வேண்டும். அதைச் சொல்லுகிருர், **ஸுமந்து:-** 'ப்ரேதன் ஆஹிதாக்னியாயும், கர்த்தா அநாஹிதாக்னியாயும் இருந்தால், 3-ஆவது

பக்ஷத்தில் அவனுக்கு ஸபிண்டீகரணம் செய்யப்பட வேண்டும்' என்று. இவ்விஷயத்தில் 12-ஆவது நாளிலும் விதிக்கப்பட்டுள்ளது பவிஷ்யத்புராணத்தில்:- கர்த்தா அநாஹிதாக்னியாயும், பிதா ஆஹிதாக்னியாயும் இருந்தால் அப்பொழுது 12-ஆவது நாளில் ஸபிண்டனத்தைச் செய்யவும். ம்ருதன், கர்த்தா இருவரும் ஆஹிதாக்னிகளாகில், 12-ஆவது நாளில் ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும். அது சொல்லப்பட்டுள்ளது. விஜ்ஞானேச்வரீயத்தில்:- கர்த்தா ஆஹிதாக்னி, ம்ருதனும் ஆஹிதாக்னி என்ற பக்ஷத்தில், 12-ஆவது நாளில் பிதாவுக்கு ஸபிண்டீகரணத்தைச் செய்யவும்.

उभयोरनग्निकत्वे द्वादशाहादयः काला विकल्प्यन्ते । तदुक्तं भविष्यत्पुराणे — सपिण्डीकरणं कुर्याद्यजमानस्त्वनग्निमान् । अनाहिताग्नेः प्रेतस्य पूर्णेऽब्दे भरतर्षभ । द्वादशेऽहनि षष्ठे वा त्रिपक्षे वा त्रिमासि वा। एकादशेऽपि वा मासि मङ्गळं स्यादुपस्थितम् इति । कालादर्शे — साग्नौ कर्तर्युभावाद्यौ प्रेते साग्नावनन्तरः । अनग्नेस्तु द्वितीयाद्याः सप्तकाला मुनीरिताः इति । कर्तरि - पुत्रे, साग्नौ - आहिताग्नौ सति, एकादशे द्वादशेऽह्नि त्रिपक्षे वा त्रिमासके । एकादशे द्वादशेऽह्नि त्रिपक्षे वा त्रिमासके । षष्ठे वैकादशे वाऽब्दे सम्पूर्णे वा शुभागमे इत्युक्तेष्वष्टसु कालेषु मध्ये आद्यौ - एकादशाहो द्वादशाहश्चेति द्वौ कालौ स्याताम् । एकादाहे दर्शागमे सत्येकादशाहः, अन्यथा द्वादशाहः अनग्नौ कर्तरि आहिताग्नौ प्रेते इति अनन्तरः कालस्त्रिपक्षः, अनाहिताग्नेस्तु द्वितीयाद्याः द्वादशाहाद्याः सप्त काला इत्यर्थः । सप्त काला इति पूर्वोक्तत्रयोदशाहादिकालाना मप्युलक्षणम् । साग्निः कर्ता चेत् द्वादशाह एव सापिण्ड्यं कुर्यान्नान्यत्र । अनग्निः कर्ता चेत् साग्नौ प्रेते त्रिपक्ष द्वादशाहयोरेव, नान्यत्र । अनग्नौ तु प्रेते अनग्निः कर्ता

द्वादशाहादिषूक्तेषु कालेष्वेव नान्यत्रेति कर्तृनियमोऽभिप्रेतः । द्वादशाहे यदि कुर्यात् साग्निरेवेत्येवं विधः कालनियमो नाभिप्रेतः । द्वादशाहादिकालेषु सपिण्डीकरणेष्विमे । साग्न्यनग्नित्वविधयः कर्तुरेव नियामका इति स्मरणात् । एवं सत्यपि नियमे दैवात् द्वादशाहे त्रिपक्षे वा सापिण्ड्ये अकृते सति न तस्य लोपः, किन्तु तदुत्तरकाले कर्तव्यम् ।

*கர்த்தாவும், பிதாவும் அநாகிதாக்னிகளாகில், 12-ஆவது நாள் முதலிய காலங்கள் விகல்பமாய்ச் சொல்லப்படுகின்றன. அது சொல்லப்பட்டுள்ளது.* **பவிஷ்யத்புராணத்தில்:-** *அநாஹிதாக்நியான கர்த்தா அநாஹிதாக்நியான பிதாவுக்கு வர்ஷாந்தத்தில் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். அல்லது 12-ஆவது நாளில், 6-ஆவது மாஸத்தில், 3-ஆவது பக்ஷத்தில் 3-ஆவது மாஸத்தில், 11-ஆவது மாஸத்தில் சுபகார்யம் ஸமீபித்துள்ள காலத்திலாவது செய்யவும்.* **காலாதர்சத்தில்:-** *"ஸாக்னௌ கர்த்தர்யுபாவாத்யா + முநீரித:" என்றுள்ளது. இதன் பொருள்:- 'கர்த்தரி = புத்ரனானவன், ஸாக்னௌ = ஆஹிதாக்னியாய் இருக்கும் பக்ஷத்தில், 'ஏகாதசே த்வாதசேஹ்னி த்ரிபக்ஷேவா த்ரிமாஸகே. ஷஷ்டே வைகாதசே வாப்தே ஸம்பூர்ணே வா சுபாகமே' என்று முன்பு சொல்லப் பட்டுள்ள எட்டுக் காலங்களுள், ஆத்யௌ முந்தியுள்ள 11-ஆவது நாள், 12-ஆவது நாள் என்ற 2-காலங்கள் விதிக்கப்படுகின்றன. 11-ஆவது நாளில் தர்சம் நேர்ந்தால் 11-ஆவது நாள், இல்லாவிடில் 12-ஆவது நாள் என்று. கர்த்தா அநாஹிதாக்னியாய் இருந்து, ம்ருதன் ஆஹிதாக்னி ஆகில், அநந்தர:=அடுத்த த்ரிபக்ஷம் காலம். அநக்னேஸ்து = அநாஹிதாக்னிக்கோ வெனில், த்விதீயாத்யா: = 12-ஆவது நாள் முதலிய, ஸப்தகாலா: = ஏழு காலங்கள், முநீரிதா: = ருஷிகளால் சொல்லப்பட்டுள்ளன" என்பது பொருள். இவ்விடத்தில், ஏழு காலங்கள் என்றது முன் சொல்லிய*

13-ஆவது நாள் முதலிய காலங்களையும் குறிக்கின்றது.

ஆஹிதாக்னி கர்த்தாவானுல் 12-ஆவது நாளிலேயே ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும். மற்றக் காலத்தில் கூடாது. அநாஹிதாக்னி கர்த்தாவானுல் இறந்தவன் ஆஹிதாக்னியானுல், த்ரிபக்ஷம், அல்லது 12-ஆவது நாளிலேயே செய்யவும். மற்றக் காலத்தில் கூடாது. அநாஹிதாக்னி இறந்து கர்த்தா அநாஹிதாக்னியாய் இருந்தால், முன் சொல்லப்பட்டுள்ள 12-ஆவது நாள் முதலிய காலங்களில் தான் செய்ய வேண்டும், மற்றக் காலங்களில் கூடாது, என்று கர்த்தாவின் விஷயத்தில் நியமம் அபிப்ராயப்பட்டு உள்ளது. '12-ஆவது நாளில் செய்வதானுல் ஆஹிதாக்னி தான் செய்யலாம்' என்பது போன்ற கால நியமம் அபிப்ராய விஷயமல்ல. ''12-ஆவது நாள் முதலிய காலங்களில், ஆஹிதாக்னி அநாஹிதாக்னி என்ற விதிபேதங்கள் எல்லாம் கர்த்தாவுக்கே நியாமகங்கள்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

இவ்விதம் நியமம் இருந்தும், தைவ வசத்தால் 12-ஆவது நாளிலோ, த்ரிபக்ஷத்திலோ ஸாபிண்ட்யம் செய்யப்படாவிடில் அதற்கு லோபம் என்பது இல்லை. ஆனுல், அதற்கு மேல் உள்ள காலத்தில் செய்யப்பட வேண்டும். அது சொல்லப்பட்டுள்ளது.

तदुक्तं कालादर्शे — प्रमादादकृते तस्मिन् त्रिपक्षे द्वादशेऽह्नि वा । उत्तरोत्तरकालेषु यथासम्भवमाचरेत् इति । साग्निना साग्नेरनग्नेर्वा द्वादशाहे सपिण्डीकरणे प्रमादादकृते सति, अनग्निना साग्नेस्त्रिपक्षे तस्मिन्नकृते सति, उत्तरोत्तरकालेषु यत्र सम्भवति तत्र कुर्यादित्यर्थः । प्रचेताः — एकादशेऽह्नि कुर्वीत साग्निकस्तु सपिण्डनम् । द्वादशाहादिकालेषु साग्निकोऽनग्निकोऽपि वा इति । गोभिलः — द्वादशाहादिकालेषु प्रमादादननुष्ठितम् । सपिण्डीकरणं कुर्यात् कालेषूत्तरभाविषु इति । पितृमेधसारे — साग्निः कर्ता द्वादशाह एव सापिण्ड्यं कुर्यात्, तद्भिना

पिण्डपितृयज्ञासिद्धेः । पुत्रोऽनग्निः पिताचेत् साग्निस्त्रिपक्ष एव सापिण्ड्यं कुर्यात्, कयोर्द्वादशाहादौ प्रमादादकृतं कालोत्तरभाविषु सापिण्ड्यं कुर्यात् इति । तयोः - आहिताग्र्यनाहिताग्न्योरित्यर्थः ।

**காலாதர்சத்தில்:-** *ஆஹிதாக்னியானவன், ஆஹிதாக்னி அல்லது அநாஹிதாக்னியான பிதாவுக்கு, 12-ஆவது நாளில் ஸபிண்டீகரணத்தைச் செய்ய முடியாவிடில், அநாஹிதாக்னியானவன் ஆஹிதாக்னியான பிதாவுக்கு த்ரிபக்ஷத்தில் செய்ய முடியாவிடில், அதற்கு மேல் மேலுள்ள காலங்களுள் எதில் செய்ய முடியுமோ அதில் செய்ய வேண்டும் (என்பது பொருள்.)*

**ப்ரசேதஸ்:-** *ஆஹிதாக்நியானால், 11-ஆவது நாளில் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். ஆஹிதாக்னி ஆனாலும், அநாஹித அக்னியானாலும் 12-ஆவது நாள் முதலிய காலங்களில் செய்யலாம்.*

**கோபிலர்:-** *12-ஆவது நாள் முதலிய காலங்களில் கவனமின்மையால் அனுஷ்டிக்கப்படாத ஸபிண்டீ கரணத்தை மேல் வரும் காலங்களில் அனுஷ்டிக்கவும்.*

**பித்ருமேதஸாரத்தில்:-** *ஆஹிதாக்னியான கர்த்தா, 12-ஆவது நாளிலேயே ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும், செய்யாவிடில் பிண்ட பித்ருயஜ்ஞம் ஸித்திக்காதாகையால். புத்ரன் அநாஹிதாக்னியாயும் இறந்த பிதா ஆஹிதாக்னியுமாகில், த்ரிபக்ஷத்திலேயே ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். அவ்விருவர்க்கும் 12-ஆவது நாள் முதலிய காலத்தில் செய்யப்படாவிடில், மேலுள்ள காலங்களில் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். தயோ: = ஆஹிதாக்னிக்கும், அநாஹிதாக்னிக்கும் என்று பொருள்.*

सापिण्ड्याकरणे मुख्यकर्तुः शुभानधिकारः ।

सपिण्डीकरणकर्तुः शुभागमे सपिण्डीकरणं कृत्वैव शुभकर्म कर्तव्यम् । तदाह शाट्यायनिः — प्रेतश्राद्धानि शिष्टानि

सपिण्डीकरणं तथा। अपकृष्यापि कुर्वीत कर्ता नान्दीमुखे द्विजः ।। सपिण्डीकरणश्राद्धमकृत्वा शुभकर्मकृत् । ध्रुवं प्राप्नोति नरकं सपिण्डानां मृतौ क्रमात् इति। स्मृत्यन्तरे — सपिण्डीकरणात् पूर्वं शोभनं न विधीयते। यदि चेत्तत् कृतं कर्म कर्तृनाशाय कल्पते इति। चतुर्विंशतिमतेऽपि — भ्राता वा भ्रातृपुत्रो वा सपिण्डः शिष्य एव वा। सपिण्डीकरणं कृत्वा कुर्यादभ्युदयं ततः इति। गौतमोऽपि — अग्रजो वाऽनुजो वाऽपि सपिण्डः सोदकोऽपि वा। सपिण्डीकरणं कुर्यात् पुत्रो वा वृद्ध्युपस्थितौ । सपिण्डीकरणं हित्वा वृद्धिश्राद्धमुपक्रमेत्। अयातयामं मरणं भवेत्तस्य न संशयः इति। मुख्यकर्तुरेवायं दोषो नेतरेषाम्, कुर्यादेव शुभं मुख्यकर्तुश्च सन्निधौ इति स्मरणात्।

**ஸாபிண்ட்யத்தைச் செய்யாவிடில் முக்ய கர்த்தாவுக்குச் சுபகார்யங்களில் அதிகாரமில்லை.**

*ஸபிண்டீகரணம் செய்ய வேண்டியவனுக்குச் சுபகார்யம் நேர்ந்தால் ஸபிண்டீகரணம் செய்த பிறகே அவன் சுபகார்யத்தைச் செய்ய வேண்டும். அதைச் சொல்லுகிறார்,* **சாட்யாயனி:-** *கர்த்தாவாகிய ப்ராம்ஹணன், நாந்தீச்ராத்தம் ப்ராப்தமானால், மீதியுள்ள ப்ரேத ச்ராத்தங்களையும், ஸபிண்டீகரணத்தையும் அபகர்ஷித்தாவது செய்ய வேண்டும். ஸபிண்டர்களின் ம்ருதியில் க்ரமப்படி ஸபிண்டீகரண ச்ராத்தத்தைச் செய்யாமல் சுபகர்மத்தைச் செய்பவன் நிச்சயமாய் நரகத்தை அடைவான்.* **ஓர் ஸ்ம்ருதியில்:-** *ஸபிண்டீ கரணத்திற்கு முன் சுபகர்மம் விதிக்கப்படவில்லை. செய்தால், அந்தக் கர்மம் கர்த்தாவுக்கு நாசத்தைச் செய்வதற்காகும்.*

**சதுர்விம்சதிமதத்திலும்:-** *ப்ராதா, ப்ராத்ருபுத்ரன், ஸபிண்டன், சிஷ்யன் யாராகினும் ஸபிண்டீகரணம் செய்து, பிறகு நாந்தியைச் செய்ய வேண்டும்.*

கௌதமரும்:- தமயன், தம்பி, ஸபிண்டன், ஸமாநோதகன், புத்ரன் யாராயினும், நாந்தீ ப்ராப்தமானுல், ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டும். ஸபிண்டீகரணத்தைச் செய்யாமல் வ்ருத்தி ச்ராத்தத்தைச் செய்தால், அவனுக்குப் புதிதாகிய பந்து மரணம் நேரிடும். முக்ய கர்த்தாவுக்கே இந்தத் தோஷம், மற்றவர்க்கில்லே. முக்ய கர்த்தா ஸந்நிஹிதனுகில் சுபகர்மத்தைச் செய்யலாம், என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

## सापिण्ड्याधिकारिनिरूपणम् ।

सपिण्डीकरणे अधिकारी निरूपितः स्मृत्यन्तरे — औरसो दत्तको वाऽपि सपिण्डीकरणं चरेत् । परित्यज्यैव जीवन्तं पुत्रं नान्यस्तु कारयेत् । अथ शिष्यब्रह्मचारिबन्धुभृत्यपुरोहितैः । कारयित्वा दशाहान्तं सपिण्डीकरणं विना । सपिण्डीकरणश्राद्धं पुत्रैः कार्यं प्रयत्नतः इति । प्रजापतिः — दाहाद्येकादशाहान्तं गौणपुत्रः समाचरेत् । पित्रोः सपिण्डीकरणं प्रकुर्यादौरसः सुतः । भ्राता वा भ्रातृपुत्रो वा सपिण्डः शिष्य एव वा । सपिण्डीकरणं कुर्यात् पुत्रहीनस्य सर्वदा । अथवा प्रेतभूतस्य पत्नी कुर्यादमन्त्रकम् । ऋत्विजा कारयेद्यद्वा सपिण्डीकरणं तथा । ऋत्विगादिर्यदा कुर्याद्धोमं श्राद्धं क्रियां क्वचित् । उपवीत्येव कुर्वीत कर्तुः स्यादपसव्यकम् इति । आदिशब्दात् असगोत्रादयो गृह्यन्ते ।

### ஸாபிண்ட்யத்தில் அதிகாரிகளின் நிருபணம்.

ஸாபிண்ட்யத்தில் அதிகாரி சொல்லப்பட்டுள்ளான், ஒரு ஸ்ம்ருதியில்:- ஔரஸபுத்ரன் அல்லது தத்தபுத்ரன் ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டும். புத்ரன் ஜீவித்திருக்கும் பொழுது அவனைத் தவிர்த்து மற்றவன் செய்யக் கூடாது அல்லது (புத்ரன் ஸமீபத்தில் இல்லாவிடில்) சிஷ்யன், ப்ரம்ஹசாரீ, பந்து, ப்ருத்யன், புரோஹிதன் இவர்களுள் எவனுலாவது, 10-நாள் வரையில்

க்ருத்யத்தை ஸபிண்டீகரணம் தவிர்த்துச் செய்வித்து, ஸபிண்டீகரணத்தை எவ்விதத்திலாவது புத்ரர்களால் செய்விக்கவும்.

**ப்ரஜாபதி:**- தஹநம் முதல் 11-ஆவது நாள் வரையில், கௌண புத்ரன் செய்யலாம். மாதா பிதாக்களுக்கு ஸபிண்டீகரணத்தை ஔரஸபுத்ரன் செய்ய வேண்டும். புத்ரன் இல்லாதவனுக்கு ப்ராதா அல்லது ப்ராத்ருபுத்ரன், ஸபிண்டன், சிஷ்யன் யாராவது செய்யலாம் அல்லது மந்த்ரம் இல்லாமல் பத்நீ செய்யலாம் அல்லது ருத்விக்கினால் செய்விக்கலாம். ருத்விக் முதலியவன் ஹோமம், ச்ராத்தம், க்ரியை இவைகளைச் செய்தால்உபவீதியாகவே செய்ய வேண்டும். கர்த்தாவுக்கு ப்ராசீனாவீதம். மூலத்திலுள்ள 'ஆதி' பதத்தால் அஸகோத்ரன் முதலியவர்கள் சொல்லப்படுகின்றனர்.

विष्णुः — ज्येष्ठो वाऽप्यनुजो वापि सपिण्डः सोदकोऽपि वा । यस्तु सन्निहितस्तस्य त्वधिकारः सपिण्डने इति । शङ्खश्च — अपुत्रायाः पतिर्दद्यात् सपुत्राया न तु क्वचित् । पत्युः पिण्डं तथा भार्या भर्तृभार्ये परस्परम् इति । लोकाक्षिः — सर्वाभावे स्वयं पत्न्यः स्वभर्तॄणाममन्त्रकम् । सपिण्डीकरणं कुर्युस्ततः पार्वणमेव च इति । पार्वणम् - दर्शमहालयादि । सर्वाभावे स्वयं पत्न्यः इत्येतदासुरादिविवाहोढाविषयम्, ब्राह्मादिविवाहोढा तु पुत्रपौत्राभावे स्वयं कुर्यात् ।

**விஷ்ணு:**- ஜ்யேஷ்டன், கனிஷ்டன், ஸபிண்டன், ஸமானோதகன் இவர்களுள் எவன் ஸமீபத்தில் இருக்கின்றானோ அவனுக்கு ஸபிண்டனத்தில் அதிகாரம்.

**சங்கரும்:**- புத்ரனில்லாத பத்நிக்குப் பதி செய்ய வேண்டும். புத்ரன் உள்ளவளுக்கு ஒரு காலும் செய்யக் கூடாது. அவ்விதம் அபுத்ரனான பர்த்தாவுக்குப் பார்யை பிண்டத்தைக் கொடுக்க வேண்டும். பர்த்தாவும்

பார்யையும் ஒருவர்க்கொருவர் பிண்டத்தைக் கொடுக்க வேண்டும்.

**லோகாக்ஷி:**- ஒருவரும் இல்லாவிடில் பத்னிகள் தமது பர்த்தாக்களுக்குத் தானே மந்த்ரம் இல்லாமல் ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டும். பிறகு தர்சம், மஹாளயம் முதலியதையும் செய்ய வேண்டும். 'ஒருவரும் இல்லாவிடில் பத்நிகள் தாமாகவே செய்யவும்' என்றவிது ஆஸுரவிவாஹம் முதலியதால் மணக்கப்பட்டவர்களைப் பற்றியது. ப்ராம்ஹம் முதலிய விவாஹத்தால் மணக்கப்பட்டவளாயின் புத்ரன் பௌத்ரன் இல்லாவிடின் தானே செய்யவேண்டும்.

तथा माधवीये — पुत्रः कुर्यात् पितुः श्राद्धं पत्नी तु तदसन्निधौ । धनहार्यथ दौहित्रस्ततो भ्राताऽथ तत्सुतः इति । शङ्खोऽपि — पितुः पुत्रेण कर्तव्यं पौत्रेणापि सपिण्डनम् । तदभावे तु पत्नी स्यात् पत्न्यभावे तु सोदरः इति । पत्न्यभावे तु सोदर इत्ययं क्रमः पत्न्या दायहरत्वे द्रष्टव्यः । अपुत्रा शयनं भर्तुः पालयन्ती व्रते स्थिता । पत्न्येव दद्यात्तत्पिण्डं कृत्स्नमंशं लभेत च इति वृद्धमनुस्मरणात् । अन्यथा यो दायहरः स एव कुर्यात् ।

அவ்விதம், **மாதவீயத்தில்:**- பிதாவுக்கு ஸாபிண்ட்யத்தைப் புத்ரன் செய்ய வேண்டும். அவன் ஸமீபத்தில் இல்லாவிடில் பத்நீ செய்ய வேண்டும். பிறகு தனத்தை அடையும் தௌஹித்ரன், பிறகு ப்ராதா, ப்ராத்ருபுத்ரன் செய்ய வேண்டும். **சங்கரும்:**- பிதாவுக்குப் புத்ரன் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். அவனில்லாவிடில் பௌத்ரன், அவனில்லாவிடில் பத்நீ, அவளில்லாவிடில் ஸஹோதரன் செய்யவும். இவ்விதம் உள்ள க்ரமம் பத்நீ அர்த்தத்தை அடையும் விஷயத்தில் என்று அறியவும். 'பாதிவ்ரத்யத்துடன் கூடிய பத்நீ புத்ரன் இல்லாதவளாகில் அவளே பர்த்தாவுக்கு ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும். பர்த்தாவின் தநம் முழுவதையும் அவளே

அடைய வேண்டும்' என்று வ்ருத்தமனு வசனம் இருப்பதால், அவ்விதம் இல்லாவிடில் எவன் தனத்தை அடைபவனோ அவனே செய்ய வேண்டும்.

अत एवापस्तम्बः — यश्चार्थहरः स पिण्डदायी इति । सर्वमेतदधस्तान्निरूपितम् । विवाहाद्यनन्तरम् - विवाहोपनयादूर्ध्वं वर्षं वर्षार्धमेव वा । न कुर्यात् पिण्डनिर्वापं न कुर्यात् करकाणि च इति पिण्डनिर्वापनिषेधः सपिण्डीव्यतिरिक्त विषयः, मौञ्जीबन्धा द्विवाहाच्च वर्षं वर्षार्धमेव वा । पिण्डान् सपिण्डा नो दद्युः सपिण्डीकरणादृते इति कार्ष्णाजिनिस्मरणात् । कालादर्शेऽपि — मौञ्जीबन्धा द्वत्सरार्धं वत्सरं पाणिपीडनात् । पिण्डनिर्वाप-करणविहीनं श्राद्धमाचरेत् । नैमित्तिकमहालय गयाप्रत्याब्दिकादृते इति । नैमित्तिकं - सपिण्डीकरणम् ।

ஆகையாலேயே, ஆபஸ்தம்பர்:- 'எவன் தநஹாரியோ அவன் பிண்டத்தைக் கொடுக்கவேண்டும்' என்றார். இவ்விஷயம் எல்லாம் கீழே சொல்லப்பட்டு உள்ளன. விவாஹம் முதலியதைச் செய்த பிறகு 'விவாஹம், உபநயநம் இவைகளைச் செய்த பிறகு, வர்ஷம் அல்லது 6-மாதத்திற்குள் பிண்டத்தைச் செய்யக் கூடாது, ஸோதகும்பங்களையும் செய்யக் கூடாது' என்ற நிஷேதம் ஸாபிண்ட்யம் தவிர மற்றதைப் பற்றியது. 'உபநயநம், விவாஹம் இவைகளைச் செய்த பிறகு, ஒரு வர்ஷம் அல்லது 6-மாதம் வரையில் ஸபிண்டர்கள் பிண்டதானம் செய்யக் கூடாது, ஸபிண்டீகரணம் தவிர்த்து' என்று கார்ஷ்ணாஜிநி ஸ்ம்ருதி இருப்பதால். காலாதர்சத்திலும்:- உபநயநத்திற்குப் பிறகு 6-மாதம் வரையிலும், விவாஹத்திற்குப் பிறகு ஒரு வர்ஷம் வரையிலும் பிண்டதானம் இல்லாமல் ச்ராத்தத்தைச் செய்யவும். நைமித்திகம், (ஸபிண்டீகரணம்) மஹாளயம், கயாச்ராத்தம், ப்ரத்யாப்திக ச்ராத்தம் இவைகளைத் தவிர்த்து.

स्मृत्यन्तरे च — महालये गयाश्राद्धे मातापित्रोर्मृतेऽहनि । द्वादशाहेऽपि कुर्वीत पिण्डनिर्वापणं सुतः इति । यत्तु स्मृत्यन्तरम् — अपुत्रस्य परेतस्य नैव कुर्यात् सपिण्डनम् । आशौचमुदकं पिण्डमेकोद्दिष्टं न पार्वणम् इति, यदपि वचनान्तरम् — अपुत्रा ये मृताः केचित् पुरुषा वा स्त्रियोऽपि वा । तेषां सपिण्डनाभावादेकोद्दिष्टं न पार्वणम् इति, तत्पुत्रोत्पादनप्रशंसापरमिति कालादर्शमाधवीयादौ व्याख्यातम् । तथा च पूर्वोक्तशङ्खादि वचनान्युपपन्नानि भवन्ति । पैठीनसिरपि — अपुत्रायां मृतायां तु पतिः कुर्यात् सपिण्डनम् इति । सुमन्तुरपि — अपुत्रे संस्थिते कर्ता न भवेत् श्राद्धकर्मणि । तत्र पत्न्यपि कुर्वीत सापिण्ड्यं पार्वणं तथा इति ।

**மற்றொரு ஸ்ம்ருதியில்:-** *மஹாளயம், கயாச்ராத்தம், மாதா பிதாக்களின் ப்ரத்யாப்திகம், ஸபிண்டீகரணம் இவைகளில் புத்ரன் பிண்டதானத்தைச் செய்யலாம். ஆனால் மற்றொரு ஸ்ம்ருதியில்:- 'அபுத்ரனாய் இறந்தவனுக்கு ஸாபிண்ட்யம், ஆசௌசம், உதகதானம், பிண்டதானம், ஏகோத்திஷ்டம், பார்வணம் ஒன்றையும் செய்யக் கூடாது' என்ற வசனமும், மற்றொரு வசனம் 'புத்ரன் இல்லாமல் இறந்தவர்கள் புருஷர்கள் ஆயினும், ஸ்த்ரீகள் ஆயினும் அவர்களுக்கு ஸாபிண்ட்யம் இல்லாததால் ஏகோத்திஷ்டமும் இல்லை, பார்வணமும் இல்லை' என்றும் உள்ளதே எனில், அது புத்ரோத்பாதனத்தை ப்ரஶம்ஸை செயவதில் தாத்பர்யம் உள்ளது என்று காலாதர்சம், மாதவீயம் முதலியதில் வ்யாக்யானம் செய்யப்பட்டு உள்ளது. அவ்விதம் சொல்வதாலேயே முன் சொல்லப்பட்ட சங்கர் முதலியவரின் வசனங்கள் பொருத்தம் உள்ளவைகள் ஆகின்றன.* **பைடீநஸியும்:-** *புத்ரன் இல்லாமல் ஸ்த்ரீ இறந்தால் பர்த்தா ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும்*

என்றார். ஸுமந்துவும்:- அபுத்ரனான புருஷன் இறந்தால் அவனுக்கு ச்ராத்தம் செய்பவன் இல்லாவிடில் அவனது பத்நீ ஸாபிண்ட்யத்தையும் ச்ராத்தத்தையும் செய்ய வேண்டும் என்றார்.

अपुत्रगृहस्थब्रह्मचारिणोः सापिण्ड्यम् ।

तथा चापुत्रस्य गृहस्थस्य ब्रह्मचारिणश्च सापिण्ड्यमाह यमः— अष्टमाद्द्वादशा दूर्ध्वं गृहस्थ ब्रह्मचारिणोः । सपिण्डीकरणं कुर्यात् न प्रागिति यमोदितम् इति । अष्टमादिति अष्टमे वर्षे ब्राह्मणमुपनयेत् इत्याश्वलायनेनोक्तत्वात् ततः पूर्वं मुपनयनाभावेन विवाहस्याभाव इत्यभिप्रायेणोक्तम् ॥ गर्भाष्टमेषु ब्राह्मणमुपनयीत इत्यापस्तम्बादिवचनानुसारेण गर्भषष्ठादौ कृतोपनयनस्य एकदेशाध्ययनानन्तरं कृतविवाहस्य अष्टमात् प्रागपि सापिण्ड्यं कार्यम् । तथा स्मृत्यर्थसारे — वयोऽवस्थाविशेषमनादृत्य सर्वत्र पुरुषाणां स्त्रीणां च विवाहादूर्ध्वं सपिण्डीकरणं कार्यमेव इति ।

**புத்ரன் இல்லாத க்ருஹஸ்தனுக்கும், ப்ரம்ஹசாரிக்கும் ஸாபிண்ட்யம்.**

அவ்விதமே புத்ரன் இல்லாத க்ருஹஸ்தனுக்கும், ப்ரம்ஹசாரிக்கும் ஸாபிண்ட்யத்தைச் சொல்லுகிறார். **யமன்:-** '8-வயதிற்கு மேற்பட்ட க்ருஹஸ்தனுக்கும், 12-வயதிற்கு மேற்பட்ட ப்ரம்ஹசாரிக்கும் ஸபிண்டீகரணத்தைச் செய்யவும். அதற்கு முன் கூடாது என்று யமனால் சொல்லப்பட்டது' என்று, 8-ஆவது வயது என்று சொல்லியது, '8-ஆவது வர்ஷத்தில் ப்ராம்ஹணனுக்கு உபநயநம் செய்ய வேண்டும்' என்று ஆச்வலாயனர் சொல்லி இருப்பதால், அதற்கு முன் உபநயநம் இல்லாததால் விவாஹம் இல்லை என்ற அபிப்ராயத்தால் சொல்லப்பட்டது. 'காப்பஷஷ்ட

கர்ப்பஸப்தம கர்ப்பாஷ்டம வர்ஷங்களில் ப்ராம்ஹணனுக்கு உபநயநம் செய்யவும்' என்று ஆபஸ்தம்பர் முதலியவர்களின் வசனத்தை அனுஸரித்து, கர்ப்பஷஷ்டம் முதலிய காலத்தில் உபநயனம் செய்யப்பட்டவனுக்கு, வேதத்தின் சில பாகத்தை அத்யயநம் செய்த பிறகு, விவாஹமும் ஆகி அவன் இறந்தால் அவனுக்கு 8-வயதிற்கு முன்பும் ஸாபிண்ட்யம் செய்யப்பட வேண்டும். ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:- ''வயஸ்ஸின் விசேஷத்தைக் கவனிக்காமல் புருஷர்களுக்கும், ஸ்த்ரீகளுக்கும் விவாஹத்திற்குப் பிறகு ஸபிண்டீகரணத்தை அவச்யம் செய்ய வேண்டும்'' என்று உள்ளது.

स्मृत्यन्तरे — ऊनद्विवत्सरादर्वागूढायाः खननं ततः । उत्थाप्य सन्दहेत्तस्याः सापिण्ड्यान्तं समाचरेत् । द्वादशाब्दादधश्चोर्ध्वं कन्यकायाः सपिण्डनम् । स्वाम्यभावाद्धि नास्त्येव नारायणबलिं चरेत् इति । एवमसंपूर्णद्वादश वर्षाणां ब्रह्मचारिणां नारायणबलिरेव कार्यः । निषिद्धसापिण्ड्यानां तद्विधानात् ।

மற்றொரு ஸ்ம்ருதியில்:- '2-வயது பூர்ணம் ஆவதற்குள் விவாஹம் ஆகி இறந்தவளுக்குக் கனனஸம்ஸ்காரம் செய்யவும். பிறகு சவத்தை வெளியில் எடுத்துத் தஹனஸம்ஸ்காரம் செய்து, ஸாபிண்ட்யம் முடியும் வரையில் செய்யவும். 12-வயதிற்கு முன்பு ஆனாலும், பின்பு ஆனாலும் விவாஹம் ஆகாதவளுக்கு ஸாபிண்ட்யம் பதி இல்லாததால் நிச்சயமாகக் கிடையாது. நாராயண பலியைச் செய்யவும்' என்று உள்ளது. இவ்விதம் 12-வயது பூர்ணமாகாத ப்ரம்ஹசாரிகளுக்கு நாராயண பலியே செய்யப்பட வேண்டும். ஸாபிண்ட்யம் நிஷேதிக்கப்பட்டவர்களுக்கு நாராயணபலி விதிக்கப் பட்டு இருப்பதால்.

पतितादीनां सापिण्ड्यनिषेधः

तथा च वृद्धवसिष्ठः — सपिण्डीकरणं नैव मृतानां ब्रह्मचारिणाम् । क्लीबानां पतितानां च दुष्टस्त्रीणां तथैव च । नैष्ठिकानां यतीनां च श्राद्धं नारायणार्पणम् । उपकुर्वाणकस्यैव सपिण्डीकरणं विदुः इति । नारायणार्पणं - नारायणबलिः । स्मृत्यन्तरे — अपूर्णद्वादशाब्दानां मृतानां ब्रह्मचारिणाम् । दाहादिषोडशान्तं तु निर्वर्त्यैव यथाविधि । द्वादशेऽहनि सम्प्राप्ते नैव कुर्यात् सपिण्डनम् । नारायणं समुद्दिश्य विप्रानष्टौ तु भोजयेत् । एकोद्दिष्ट विधानेन श्राद्धं वा कारयेद्द्विजः इति । अस्य प्रत्याब्दिकादिश्राद्धमपि नास्ति, नासपिण्डीकृते प्रेते पितृकार्यं प्रवर्तते इति स्मरणात् ।

**பதிதன் முதலியவர்க்கு ஸாபிண்ட்ய நிஷேதம்**

**வ்ருத்தவஸிஷ்டர்:-** *ப்ரம்ஹசாரிகள், நபும்ஸர்கள், பதிதர்கள், துஷ்டஸ்த்ரீகள், நைஷ்டிகர்கள், யதிகள் இவர்களின் ம்ருதியில் ஸபிண்டீகரணம் இல்லை. அவர்களுக்கு நாராயணபலியே விதிக்கப்படுகிறது. உபகுர்வாணன் என்ற ப்ரம்ஹசாரிக்கே ஸபிண்டீகரணத்தை விதிக்கின்றனர்.* **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** *'12-வயது பூர்ணம் ஆகாமல் இறந்த ப்ரம்ஹசாரிகளுக்குத் தஹநம் முதல் ஷோடச ச்ராத்தம் வரையில் விதிப்படி செய்து, 12-ஆவது நாளில் ஸபிண்டீகரணத்தைச் செய்யக் கூடாது. நாராயணனை உத்தேசித்து 8-ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்கவும் அல்லது ஏகோத்திஷ்ட விதியால் ச்ராத்தத்தைச் செய்யவும்' என்று உள்ளது. இவனுக்கு ப்ரத்யாப்திகம் முதலிய ச்ராத்தமும் இல்லை. 'ஸபிண்டீகரணம் ஆகாவிடில் ம்ருதனுக்கு ச்ராத்தம் விதிக்கப்படுவது இல்லை' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.*

व्युत्क्रममृतसापिण्ड्यविधिः

अपुत्रायाः पत्न्याः पतिः सापिण्ड्यं कुर्यात् । अपुत्राया मृतायास्तु पतिः कुर्यात् सपिण्डनम् इति स्मृतेः । ननु व्युत्क्रमेण प्रमीतानां नैव कार्या सपिण्डता इति निषेधात् पत्न्याः कथं भर्त्रा सपिण्डीकरणं कार्यमिति चेन्न, तस्य मातापितृभर्तृपत्नीव्यतिरिक्त विषयत्वात् । तथा च स्कान्दे — अक्रमेण मृतानां न सपिण्डीकृतिरिष्यते । यदि माता यदि पिता भर्ता नैष विधिः स्मृतः इति । यदि माता व्युत्क्रममृता, यदि पिता, यदि भर्ता वा व्युत्क्रममृतः, तदा एष निषेधो न, किन्तु, विधिः स्मृतः - सपिण्डीकरणविधिरेव मन्वादिभिः स्मृत इत्यर्थः ।

**வ்யுத்க்ரமமாய் மரித்தவரின் ஸாபிண்ட்யம்.**

*புத்ரன் இல்லாத பத்நிக்குப் பர்த்தா ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும். 'புத்ரன் இல்லாமல் மரித்தவளுக்குப் பர்த்தா ஸாபிண்ட்யத்தைச் செய்யவும்' என்று ஸ்ம்ருதி உள்ளது. 'வ்யுத்க்ரமமாய் மரித்தவர்களுக்கு ஸாபிண்ட்யம் கூடாது என்று நிஷேதம் இருப்பதால், பத்னிக்குப் பர்த்தா எப்படி ஸாபிண்ட்யம் செய்யலாம் ? எனில் அது இல்லை. அந்த நிஷேதம் மாதா, பிதா, பர்த்தா, பத்நீ இவர்களைத் தவிர்த்த மற்றவர்களைப் பற்றியதால். அவ்விதமே, ஸ்காந்தத்தில்:- அக்ரமமாய் இறந்தவர்களுக்கு ஸபிண்டீகரணம் விதிக்கப்படவே இல்லை. மாதா, பிதா, பர்த்தா இவர்களின் விஷயத்தில் இந்த விதி இல்லை (அவர்களுக்குச் செய்யலாம்). மாதா அக்ரமமாய் இறந்தாலும், பிதா அக்ரமமாய் இறந்தாலும், பர்த்தா அக்ரமமாய் இறந்தாலும் இந்த நிஷேதம் இல்லை. ஆனால் விதி: ஸ்ம்ருத: = ஸபிண்டீகரண விதியே மனு முதலியவர்களால் விதிக்கப்பட்டு உள்ளது என்பது பொருள்.*

तथा च मनुः — ध्रियमाणे तु पितरि पूर्वेषामेव निर्वपेत् । पिता यस्य तु वृत्तः स्याज्जीवेच्चापि पितामहः । पितुः स्वनाम सङ्कीर्त्य कीर्तयेत् प्रपितामहम् इति । जीवेच्चापि पितामह इत्यस्यापि पूर्वेषामेव निर्वपेदित्यन्वयः । कथं निर्वपेदित्याह पितुः स्वनाम सङ्कीर्त्येति । एवं च ध्रियमाणे पितरि जीवपितृककर्तृकवृद्ध्यादि-श्राद्धे पितुः सापिण्ड्ये च, पितुः पितृभ्यः पितुः पितामहेभ्यः पितुः प्रपितामहेभ्यः पितुः पितृपितामह प्रपितामहेभ्य इति वा, पितामहे ध्रियमाणे पितामहस्य पितृभ्यः पितामहस्य पितामहेभ्यः पितामहस्य प्रपितामहेभ्यः पितामहस्य पितृपितामहप्रपितामहेभ्य इति वा कीर्तयेदित्यर्थः ।

**மனு:**- *பிதா ஜீவித்து இருந்தால் முந்தியவர்களுக்கே பிண்டத்தைக் கொடுக்க வேண்டும். எவனுக்குப் பிதா இறந்து பிதாமஹன் ஜீவித்து இருக்கின்றனோ அவன் பிதாவின் நாமத்தைச் சொல்லி ப்ரபிதா மஹனின் நாமத்தைச் சொல்ல வேண்டும். 'ஜீவேச்சாபி பிதாமஹ:' என்பதற்கும் 'பூர்வேஷாமேவ நிர்வபேத்' என்பதுடன் சேர்க்கை உண்டு. எப்படிக் கொடுப்பது என்றால் சொல்லுகிறார், 'பிது: ஸ்வநாம ஸங்கீர்த்ய' என்று. இவ்விதம் இருப்பதால், பிதா ஜீவித்து இருக்கும் பொழுது, ஜீவ பித்ருகன் செய்யக் கூடிய நாந்தீ முதலிய ச்ராத்தங்களிலும், பிதாவின் ஸாபிண்ட்யத்திலும், பிது: பித்ருப்ப: பிது: பிதா மஹேப்ய:, பிது: ப்ரபிதாமஹேப்ய: என்றுவது, பிது: பித்ருபிதா மஹப்ரபிதாமஹேப்ய: என்றுவது, பிதாமஹன் ஜீவித்து இருந்தால், பிதாமஹஸ்ய பித்ருப்ய:, பிதாமஹஸ்ய பிதாமஹேப்ய:, பிதாமஹஸ்ய ப்ரபிதாமஹேப்ய: என்றுவது, பிதாமஹஸ்ய பித்ரு பிதாமஹப்ரபிதாமஹேப்ய: என்றுவது சொல்ல வேண்டும் என்பது பொருள்.*

सुमन्तुश्च— त्रयाणामपि पिण्डानामेकेनापि सपिण्डने । पितृत्वमश्नुते प्रेत इति धर्मो व्यवस्थितः इति । ब्राह्मेऽपि — मृते पितरि यस्याथ विद्यते च पितामहः । तेन देयास्त्रयः पिण्डाः प्रपितामहपूर्वकाः । तेभ्यश्च पैतृकः पिण्डो नियोक्तव्यश्च पूर्ववत् इति । कात्यायनः — व्युत्क्रमाच्च मृते देयं येभ्य एव ददात्यसौ इति । असौ व्युत् क्रममृतो जीवद्दशायां येभ्यो ददाति तेभ्य एव तत्सपिण्डीकरणे व्युत्क्रममृतपितृको ददातीत्यर्थः ।

**ஸுமந்துவும்:-** மூன்று பிண்டங்களுள் ஒன்றுடன் ஸாபிண்ட்யம் ஆனாலும், இறந்தவன் பித்ருத்வத்தை அடைகிறான் என்று தர்மம் நிர்ணயிக்கப்பட்டு இருக்கிறது. **ப்ராம்ஹத்திலும்:-** எவனுடைய பிதா மரித்திருக்கும் பொழுது பிதாமஹன் ஜீவித்து இருக்கின்றானோ அவன், ப்ரபிதாமஹன் முதலாக 3-பிண்டங்களைக் கொடுக்கவும். அந்தப் பிண்டங்களுடன் முன்போல் பித்ரு பிண்டத்தைச் சேர்க்க வேண்டும். **காத்யாயனர்:-** "அக்ரமமாய் இறந்தவன் விஷயத்தில், அவன் ஜீவித்து இருக்கும் பொழுது எவர்களுக்குக் கொடுத்தானோ அவர்களுக்கே இவன் (கர்த்தா) பிண்டங்களைக் கொடுக்க வேண்டும்" அக்ரமமாய் இறந்தவன் ஜீவித்து இருக்கையில் எவர்களுக்குக் கொடுப்பானோ அவர்களுக்கே அக்ரம ம்ருதனின் ஸபிண்டீகரணத்தில் அக்ரம ம்ருதனின் புத்ரன் கொடுக்க வேண்டும் என்பது பொருள்.

यत्तु विष्णुवचनम् — यस्य पिता प्रेतः स्यात् पितृपिण्डं निधाय पितामहात् द्वाभ्यां पराभ्यां दद्यात् इति । तस्यायमर्थः — पितामहे ध्रियमाणे प्रेते च पितरि पितुरेकं पिण्डमेकोद्दिष्टविधानेन निधाय पितुर्यः पितामहः ततः पराभ्यां द्वाभ्यां च दद्यात्, पितुः पितामहस्त्वात्मनः प्रपितामहः संप्रदानभूतः स्थित एवेति प्रपितामहाय ततः पराभ्यां द्वाभ्यां च दद्यात् इति । तथा

विज्ञानेश्वरीये — चतुर्णां निर्वपेत् पिण्डान् पूर्वं तेषु समापयेत्। ततः प्रभृति वै प्रेतः पितृसामान्यमश्नुते इति।

*ஆனால், "எவனின் பிதா இறந்தானே அவன் பித்ரு பிண்டத்தை வைத்து, பிதாமஹனுக்குப் பிறகு இருவருக்குப் பிண்டத்தைக் கொடுக்கவும்" என்று விஷ்ணு வசனம் உள்ளதே ? எனில், அதற்கு அர்த்தம் இவ்விதம் - 'பிதாமஹன் ஜீவித்து இருக்க, பிதா இறந்தால், பிதாவுக்கு ஒரு பிண்டத்தை ஏகோத்திஷ்ட விதிப்படி வைத்து விட்டு, பிதாவின் பிதாமஹன் எவனோ அவனுக்கு மேல் உள்ள இருவருக்கும் கொடுக்கவும். பிதாவின் பிதாமஹன் தனக்கு ப்ரபிதாமஹன் உத்தேச்யன் ஆகையால் அவன் ஸித்தனாகவே உள்ளான் என்று, ப்ரபிதாமஹனுக்கும் அவனுக்கு மேல் உள்ள இருவருக்கும் கொடுக்க வேண்டும்" என்று. அவ்விதமே, விக்ஞாநேச்வரீயத்தில்:- நால்வருக்கும் பிண்டத்தைக் கொடுக்கவும். முதல் பிண்டத்தை மற்றப் பிண்டங்களில் சேர்க்கவும். அது முதல் ப்ரேதன் பித்ருக்களுடன் ஸாம்யத்தை அடைகிறான்.*

एवं च व्युत्क्रममृतस्य पितुः सपिण्डीकरणं तत् पितृपितामहप्रपितामहेष्वन्यतमस्य जीवने द्वयोर्वा जीवनेऽपि प्रेतोद्देशेन जीवव्यतिरिक्तत्रिपुरुषोद्देशेन च पार्वणैकोद्दिष्ट-समुच्चयात्मकं (सपिण्डीकरणं) कर्तव्यम्॥ तथा च कालादर्शे — पितुर्मृतस्य सापिण्ड्यं मृतयोरूर्ध्वयोर्द्वयोः। एकस्मिन् वा द्वयोर्वाऽपि जीवतोः सुत आचरेत् इति। एकस्मिन् द्वयोर्वेत्यभिधानात् पितामहादिषु त्रिषु जीवत्सु न सापिण्ड्यम्, पिता यस्य तु वृत्तस्याज्जीवेच्चापि पितामहः इति त्रयाणामपि पिण्डनामेकेनापि सपिण्डनम् इति पूर्वोक्तमन्वादिवचनैर्द्वयोरेकस्य वा जीवने सापिण्ड्यप्रतिपादनात्। वत्सरान्ते प्रेताय तत्पित्रे तत्पितामहाय तत्प्रपितामहाय च ब्राह्मणान् भोजयेत् त्रिषु पिण्डः

प्रवर्तते इति पितुः पित्रादीनां त्रयाणां श्राद्धे पिण्डदानस्मरणात् तेषु त्रिषु जीवत्सु तदयोगाच्च । तथा च दक्षः — पितामहं च जीवन्त मतिक्रम्य तदा सुतः । अतिक्रम्य द्वयं वापि सपिण्डीकरणं चरेत् इति ।

இவ்விதம் இருப்பதால் அக்ரமமாய் இறந்த பிதாவுக்கு ஸபிண்டீகரணத்தை, ம்ருதனின் பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹர்களுள், ஒருவரோ, இருவரோ ஜீவித்து இருக்கும் விஷயத்தில், ப்ரேதனை உத்தேசித்தும், பிழைத்து இருப்பவரைத் தவிர்த்து மூன்று புருஷர்களை உத்தேசித்தும், பார்வண ஏகோத்திஷ்ட ஸமுச்சய ரூபமாக (ஸபிண்டீகரணம்) செய்யப்பட வேண்டும். அவ்விதமே, காலாதர்சத்தில்:- ம்ருதனுடைய பிதாவுக்கு ஸாபிண்ட்யத்தை, மேலாகிய இருவர் இறந்து இருக்கும் பக்ஷத்தில் செய்யவும். ஒருவன் ஜீவித்து இருந்தாலும், இருவர் ஜீவித்து இருந்தாலும் புத்ரன் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். 'ஒருவன் ஜீவித்து இருந்தாலும், இருவர் ஜீவித்து இருந்தாலும்' என்று சொல்லியதால், பிதாமஹன் முதலிய மூவரும் ஜீவித்து இருக்கும் பக்ஷத்தில் ஸாபிண்ட்யம் இல்லை. 'பிதா யஸ்யது + பிதாமஹ:' என்றும், 'த்ரயாணுமபி+ஸபிண்டநம்' என்றும் முன் சொல்லிய மன்வாதி வசனங்களால் இருவர் அல்லது ஒருவன் ஜீவித்து இருந்தாலும் ஸாபிண்ட்யம் செய்யலாம் என்று இருப்பதால் வர்ஷத்தின் முடிவில் ப்ரேதன், அவனது பிதா, பிதாமஹன், ப்ரபிதாமஹன் இவர்களின் பொருட்டு ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்கவும். த்ரிஷு பிண்ட: ப்ரவர்த்ததே' என்று பிதாவின் பிதா முதலிய மூவர்களுக்கு ச்ராத்தத்தில் பிண்டதானம் விதிக்கப்பட்டு இருப்பதாலும், அவர் மூவரும் ஜீவித்திருக்கும் போது பிண்ட தானம் ஸம்பவிக்காததாலும், அவ்விதமே, தக்ஷர்:- பிதாமஹன் ஜீவித்து இருந்தால் அவனை அதிக்ரமித்து, ப்ரபிதாமஹனும் ஜீவித்து இருந்தால் அவனையும் அதிக்ரமித்து ஸபிண்டீகரணத்தைச் செய்யவும்.

तथा पिण्डपितृयज्ञं प्रकृत्य सुमन्तुः — येभ्य एव पिता दद्यात्तेभ्यः कुर्वीत साग्निकः । पितामहेऽप्येवमेव कुर्याज्जीवति साग्निकः इति । यत्तु — ध्रियमाणे तु पितरि पूर्वेषामेव निर्वपेत् । पूर्वेषु त्रिषु दातव्यं जीवेच्च त्रितयं यदा इति, तत् जीवपितृकश्राद्धविषयमिति व्याख्यातारः । यच्च — जीवमानेऽपि पितरि पूर्वेषामेव निर्वपेत् । विप्रवद्वाऽपि तं श्राद्धे स्वकं पितरमाशयेत् ।। उभौ यस्य व्यतीतौ तु जीवेच्च प्रपितामहः । द्वौ पिण्डौ निर्वपेत्तत्र भोजयेत् प्रपितामहम् इति पिण्डद्वयमुक्तम्, तत् जीवपित्रादिवरणविषयम् । तच्च - पूर्वेषामेव निर्वपेत् चतुरो निर्वपेत् पिण्डान् त्रिभिः पिण्डैर्नियोजयेत् इति मन्वादिवचन-विरोधादुपेक्ष्यमित्याहुः ।।

*அவ்விதம், பிண்ட பித்ரு யக்ஞத்தை ஆரம்பித்து,* **ஸுமந்து:-** *ஆஹிதாக்னி, (பிதா ஜீவித்து இருந்தால்) பிதா எவர்களுக்குச் செய்வாரோ அவர்களுக்குச் (பிண்டதானத்தைச்) செய்யவும். பிதாமஹனும் ஜீவித்து இருந்தால் பிதாமஹன் எவர்களுக்குச் செய்வாரோ அவர்களுக்குச் செய்யவும் என்றார். ஆனால், ''பிதா ஜீவித்து இருந்தால் அவனுக்கு முந்தியவர்களுக்கே செய்யவும். மூவர்களும் ஜீவித்து இருந்தால், அவர்களுக்கு முந்திய மூவர்களுக்குக் கொடுக்கவும்'' என்ற வசனம் உள்ளதே ? எனில் அது ஜீவபித்ருகன் செய்யும் ச்ராத்தத்தைப் பற்றியது என்றனர் வ்யாக்யானகாரர்கள். தவிர, 'பிதா ஜீவித்து இருந்தால், பிதாவுக்கு முந்தியவர்களுக்கே கொடுக்க வேண்டும். அல்லது, ப்ராம்ஹணனைப் போலவே, தனது பிதாவையும் ச்ராத்தத்தில் புஜிப்பிக்கவும். எவனது பிதா பிதாமஹன் இருவரும் இறந்து ப்ரபிதாமஹன் ஜீவித்து இருக்கின்றானோ அவன் ப்ரபிதாமஹனைப் புஜிப்பித்து இரண்டு பிண்டங்களைக் கொடுக்கவும்' என்று இரண்டு பிண்டங்கள் சொல்லப்பட்டு இருப்பதும்*

காணப்படுகிறதே ? எனில், அது ஜீவித்து இருக்கும் பிதா முதலியவரை வரிக்கும் விஷயத்தைப் பற்றியது. அதுவும், 'முன்னோருக்கே கொடுக்க வேண்டும்' 'நான்கு பிண்டங்களைக் கொடுக்கவும்' 'மூன்று பிண்டங்களுடன் சேர்க்கவும்' என்பது முதலிய மன்வாதி வசனங்களுடன் விரோதிப்பதால் உபேக்ஷிக்கத் தகுந்தது என்கின்றனர்.

यच्च — सपितुः पितृकृत्येषु ह्यधिकारो न विद्यते । न जीवन्तमतिक्रम्य किञ्चिद्दद्यादिति श्रुतिः इति, तत् पित्र्येष्ट्यां पितृयज्ञे च वृद्धौ मातुर्मृतेऽहनि । विप्रसंपदि तीर्थेषु सोऽपि श्राद्धं समाचरेत् । पितुर्या देवताः प्रोक्ताः ता एवात्रापि देवताः । षडेते जीवतः पितुः इति जीवपितृकस्य श्राद्धविधानात् तद्व्यतिरिक्तदर्शादि श्राद्ध विषयम् । तथा लोकाक्षिः — अमाश्राद्धं गयाश्राद्धं श्राद्धं चापरपक्षिकम् । न जीवपितृकः कुर्यात् तिलैः कृष्णैश्च तर्पणम् इति ।

ஆனால், 'ஜீவ பித்ருகனுக்கு பித்ரு கார்யங்களில் அதிகாரம் இல்லை. ஜீவித்து இருக்கும் பிதாவை அதிக்ரமித்து ஒன்றையும் கொடுக்கக் கூடாது என்கிறது வேதம்' என்ற வசனம் உள்ளதே ? எனில், அது, பித்ர்யேஷ்டி, பித்ருயக்ஞம், நாந்தீ, மாதாவின் ம்ருதாஹம், ப்ராம்ஹண ஸம்பத்து, தீர்த்தங்கள் இவைகளில் ஜீவ பித்ருகனும் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். பிதாவுக்கு உத்தேச்யர்கள் எவரோ அவரே இவனுக்கும் உத்தேச்யர்கள்' என்று ச்ராத்தம் விதிக்கப்பட்டு இருப்பதால், அவைகளைத் தவிர்த்த தர்ச ச்ராத்தம் முதலியதைப் பற்றியது. அவ்விதம், லோகாக்ஷி:- அமாச்ராத்தம், கயா ச்ராத்தம், மஹாளய ச்ராத்தம், கறுப்பு எள்ளுகளுடன் தர்ப்பணம் இவைகளை ஜீவ பித்ருகன் செய்யக் கூடாது என்றார்.

ततः पितृव्युत्क्रममरणे जीवद्व्यतिरिक्तानां त्रयाणां परं तेषां पिण्डदानं तत्पिण्डैः सह प्रेतपिण्ड संसर्ग इति निर्णयः । ननु —

लेपभाजश्चतुर्थाद्याः पित्राद्याः पिण्डभागिनः इति स्मरणात् प्रपितामहात् परेषां पिण्डभागित्वमनुपपन्नमिति चैन्मैवम्, पित्रादिजीवने तेषामपि पिण्डभाक्त्वात् पूर्वपूर्वात्यये क्रमेणोत्तरोत्तरस्य लेपभाक्त्वात् । अन्यथा व्युत्क्रममरणाभावेऽपि पितुः सपिण्डीकरणे लेपभाजश्चतुर्थस्य पिण्डभाक्त्वं न स्यात् । ततश्च त्रिभिः पिण्डैश्च संसृजेत् इत्यादि बहुस्मृतिव्याकोप-प्रसङ्गः ।

*ஆகையால் பிதாவுக்கு அக்ரம மரண விஷயத்தில், பிழைத்திருக்கும் மூன்று பேர்களுக்கு மேல் உள்ளவர்களுக்குப் பிண்ட தானம் அவர்களின் பிண்டங்களுடன் ஸம்யோஜனம் என்பது நிர்ணயமாம். 'நான்காமவன் முதல் மூவர் லேபபாகிகள், பிதா முதல் மூவர் பிண்டபாகிகள்' என்று ஸ்ம்ருதி இருப்பதால் ப்ரபிதாமஹனுக்கு மேல் உள்ளவர்களுக்குப் பிண்டபாகித்வம் உபபன்னம் ஆகாதே ? எனில், இவ்விதம் சொல்லக் கூடாது. பிதா முதலியவர் ஜீவித்து இருந்தால் அவர்களும் பிண்டபாகிகள் ஆகையால் முன் முன் உள்ளவனின் மரணம் ஆனுல் க்ரமமாய் மேல் மேல் உள்ளவனுக்கு லேபபாகித்வம் ஏற்படுவதால். இல்லாவிடில், அக்ரம மரணம் இல்லாத விஷயத்திலும், பிதாவின் ஸபிண்டீகரணத்தில் லேபபாகியான நான்காமவனுக்குப் பிண்டபாகித்வம் இல்லை என்ருகும். பிறகு 'மூன்று பிண்டங்களுடன் சேர்க்கவும்' என்பது முதலிய வெகு ஸ்ம்ருதி விரோதம் நேரிடக்கூடும்.*

एवं मातरि मृतायां पितामह्यादिष्वन्यतमात्यये मातुः सापिण्ड्यं कर्तव्यम् । तथा च ब्रह्मा — मातर्यपि च वृत्तायां विद्यते च पितामही । प्रपितामहीपूर्वं तु कार्यस्तत्राप्ययं विधिः इति । भर्तुर्व्युत्क्रममरणेऽपि पत्नी सपिण्डनं कुर्यात्, व्युत्क्रमेण मृतानां च सपिण्डीकृतिरिष्यते । यदि माता यदि पिता भर्ता चैष विधिः स्मृतः इति स्मरणात् ।

இவ்விதம், மாதா இறந்து பிதாமஹீ இவர்களுள் ஒவ்வொருத்தி இறந்து இருந்தால் மாதாவின் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். அவ்விதமே, ப்ரம்ஹா:- மாதா இறந்து பிதாமஹீ ஜீவித்து இருந்தால், ப்ரபிதாமஹீ முதல் கொண்டு ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டும். பர்த்தாவின் அக்ரம மரணத்திலும், பத்னீ ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். 'வ்யுத்க்ரமேண+பர்த்தா சைஷ விதி: ஸ்ம்ருத:' என்று ஸ்ம்ருதி உள்ளது.

भार्यामरणेऽपि पतिः कुर्यात् — अपुत्राया मृतायास्तु पतिः कुर्यात् सपिण्डताम्। श्वश्र्वादिभिः सहैवास्याः सपिण्डीकरणं भवेत् इत्यादिस्मरणात् । व्युत्क्रममरणे पुत्रः पत्नी पतिश्च अन्नेन सापिण्ड्यं कुर्यात्, तद्व्यतिरिक्तानां व्युत्क्रममरणे सापिण्ड्यं न कुर्यात्, आमेन हेम्ना वा कुर्यात् । तदाह गोभिलः — अनुक्तकालेष्वपि तु व्यत्क्रमेण मृतावपि। आमेन वाऽपि सापिण्ड्यं हेम्ना याऽपि प्रकल्पयेत् इति । सपिण्डीकरणस्य द्वादशाहादयो वत्सरान्ताः काला उक्ताः तेषु प्रमादादकृते सपिण्डीकरणे व्युत्क्रममृतावपि पुत्रव्यतिरिक्तः कर्ता आमेन हेम्ना वा कुर्यात् इत्यर्थः ।

பார்யையின் மரணத்திலும் பர்த்தா ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். 'புத்ரன் இல்லாமல் இறந்த பத்னிக்குப் பதி ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். இவளுக்கு ச்வச்ரூ முதலியவர்களுடன் ஸபிண்டீகரணம் செய்யப்பட வேண்டும்' என்பது ஸ்ம்ருதி உள்ளது. அக்ரம மரணத்திலும், புத்ரன், பத்னீ, பதி இவர்கள் அன்னத்தால் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். மற்றவர்களின் அக்ரம மரணத்தில் ஸாபிண்ட்யத்தைச் செய்யக் கூடாது. ஆமத்தினாலாவது ஹிரண்யத்தினாலாவது செய்யவும். அதைச் சொல்லுகிறார். கோபிலர்:- 'அனுக்தகாலே + ப்ரகல்ப்பயேத்' என்று. இதன் பொருள் -

ஸபிண்டீகரணத்திற்கு 12-ஆவது நாள் முதல் வர்ஷாந்தம் வரையில் உள்ள சில காலங்கள் சொல்லப்பட்டு உள்ளன. அவைகளில் கவனம் இன்மையால் ஸபிண்டீகரணம் செய்யப்படாவிடினும், அக்ரம மரண விஷயத்திலும், புத்ரன் அல்லாத கர்த்தா ஆமத்தாலாவது ஹிரண்யத்தாலாவது செய்ய வேண்டும் என்பது பொருள்.

स्मृत्यन्तरेऽपि — व्युत्क्रमाच्च प्रमीतानां नैव कार्या सपिण्डता । अथवाऽऽमेन कर्तव्या हेम्ना वा तदसम्भवे । गृहादाहृत्य पक्वान्नं पिण्डं दद्यात्तिलैस्सह । पिण्डं दत्वा यथान्यायं पिण्डसंयोजनं चरेत् इति ॥ यथान्यायं - जीवन्तमतिक्रम्य । अत्र सपिण्डीकरणमात्रस्यामादिविधानेऽपि तन्नान्तरीयकतया श्राद्धान्तं सिद्धमिति केचित् । अन्येषु व्युत्क्रममृतौ सपिण्डीकरणमात्रस्यामादिविधानात् पूर्ववर्तिश्राद्धानां सत्यां शक्तौ नामादिनियम इत्याहुः ।

மற்றொரு ஸ்ம்ருதியிலும்:- அக்ரமமாய் இறந்தவர்க்கும் ஸாபிண்ட்யத்தைச் செய்யக் கூடாது அல்லது ஆமத்தால் செய்யவும். அது முடியாவிடில் ஹிரண்யத்தால் செய்யவும். க்ருஹத்தில் இருந்து பக்வான்னத்தை எடுத்துத் திலத்துடன் பிண்டத்தைக் கொடுக்கவும். பிறகு ந்யாயப்படி பிண்ட ஸம்யோஜனத்தைச் செய்யவும். யதாந்யாயம் = ஜீவித்து இருப்பவனை அதிக்ரமித்து. இவ்விஷயத்தில், ஸபிண்டீகரணத்திற்கு மட்டில் ஆமம் முதலியதால் விதி இருந்தாலும், அதற்கு நாந்தரீயகம் ஆகியதால் (ஆவச்யகம் ஆகியதால்) ச்ராத்தம் வரையில் உள்ளது ஸித்தமாகியது என்கின்றனர் சிலர். மற்றவரோ வெனில், அக்ரம ம்ருதியில் ஸபிண்டீகரணத்தை மட்டில் ஆமம் முதலியதால் விதித்து இருப்பதால், அதற்கு முந்தியுள்ள ச்ராத்தங்களுக்கு சக்தி இருக்கும் பக்ஷத்தில் ஆமம் முதலிய நியமம் இல்லை என்கின்றனர்.

एवञ्च मातापितृव्यतिरिक्तव्युत् क्रममृतौ सापिण्ड्ये निषेधः पाक्षिकः, पक्षे आमेन हेम्ना वा विधानात् । एवं विहितामश्राद्धाभिप्रायेण — ज्येष्ठो वाऽप्यनुजो वाऽपि कुर्याद्भ्रातुः सपिण्डनम् । न पुत्रस्य पिता कुर्यान्नानुजस्य तथाऽग्रजः ॥ यदि स्नेहेन कुर्यातां सपिण्डीकरणं विना । अन्याभावे पिता माता ज्येष्ठो वाऽपि सपिण्डनम् । कुर्याज्जीवन्तमाक्रम्य पिण्डभागं नियोजयेत् । सर्वाभावे पिता वाऽपि कुर्यात् भ्राताऽथवाऽग्रजः इत्यादीनि व्युत्क्रमसापिण्ड्यप्रतिपादकानि द्रष्टव्यानि ।

இவ்விதம் இருப்பதால், மாதா பிதாக்களைத் தவிர்த்த மற்றவர்க்கு அக்ரம ம்ருதியில் ஸாபிண்ட்ய நிஷேதம் பாக்ஷிகம், ஒரு பக்ஷத்தில் ஆமத்தாலாவது ஹிரண்யத்தாலாவது விதிக்கப்பட்டு உள்ளது. இவ்விதம் விதிக்கப்பட்ட ஆம ச்ராத்த அபிப்ராயத்தால், 'ஜ்யேஷ்டன் ஆயினும் கனிஷ்டன் ஆயினும், ப்ராதாவுக்கு ஸாபிண்ட்யத்தைச் செய்யவும்.' 'புத்ரனுக்குப் பிதாவும், கனிஷ்டனுக்கு ஜ்யேஷ்டனும் செய்யக் கூடாது. ஸ்நேஹத்தால் செய்தால் ஸபிண்டீகரணத்தைத் தவிர்த்து மற்றதைச் செய்யவும். 'ஒருவரும் இல்லாவிடில் பிதா, மாதா, ஜ்யேஷ்டன் யாராவது ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். ஜீவித்து இருப்பவனை விட்டு மேலே உள்ளவருடன் பிண்டத்தைச் சேர்க்கவும். ஒருவரும் இல்லாவிடில், பிதா அல்லது ஜ்யேஷ்ட ப்ராதா செய்யவும். இது முதலாகிய அக்ரம ஸாபிண்ட்யத்தைச் சொல்லும் வசனங்களைப் பார்க்கவும்.

## क्रमसापिण्ड्यनिरूपणम् ।

अत्र व्युत्क्रममृतानां मातापितृभर्तृपत्नीना मन्नेन सापिण्ड्ये कृते, इतरेषामामेन हेम्ना वा कृतेऽपि तदन्तर्हितमरणे तत्सापिण्ड्यानन्तरमेतेषां पुनरन्नेन सपिण्डीकरणं विदधाति,

काश्यपः — व्युत्क्रमेण प्रमीतानां सपिण्डीकृतिरिष्यते। अन्तर्हिते मृते पश्चात् पुनः कुर्यात् सपिण्डनम् इति।

**க்ரம ஸாபிண்ட்யத்தின் நிரூபணம்.**

*இவ்விஷயத்தில், அக்ரமமாய் இறந்த மாதா, பிதா, பர்த்தா, பத்நீ இவர்களுக்கு அன்னத்தால் ஸாபிண்ட்யம் செய்த பிறகும், மற்றவர்க்கு ஆமத்தாலாவது ஹிரண்யத்தாலாவது செய்த பிறகும், நடுவில் இறந்தவனின் மரணம் ஆனால் அவனுடைய ஸாபிண்ட்யத்திற்குப் பிறகு இவர்களுக்கு மறுபடி அன்னத்தால் ஸபிண்டீகரணத்தை விதிக்கின்றார்* **காச்யபர்:-** *அக்ரமமாய் இறந்தவர்க்கும் ஸபிண்டீகரணம் விதிக்கப்படுகிறது. நடுவில் இறந்தவன் இறந்த பிறகு மறுபடி ஸாபிண்ட்யத்தைச் செய்யவும்.*

दक्षश्च — पितामहश्च जीवन्तमतिक्रम्य यदा सुतः। अतिक्रम्य द्वयं वाऽपि सपिण्डीकरणं चरेत्। तयोरापन्नयोः काले पुनः कुर्यात् सपिण्डनम् इति। वसिष्ठश्च — व्युत्क्रमेणापि सापिण्ड्यं कर्तव्यमृषिसम्मतम्। तत्राप्यूर्ध्वस्य सापिण्ड्ये कृतेऽस्य पुनराचरेत्। भ्राता वा भ्रातृपुत्रो वा सपिण्डः शिष्य एव वा। अत्र वा प्रेतभूतस्य पत्नी कुर्यादमन्त्रकम्। ऋत्विजा कारयेद्वा सपिण्डीकरणं पुनः इति। अत्र अमन्त्रकविधानं मन्त्रोच्चरणाशक्तपत्नीविषयमित्यधस्तान्निरूपितम्।

**தக்ஷரும்:-** *ஜீவித்து இருக்கும் பிதாமஹனைத் தாண்டி ப்ரபிதாமஹனையும் தாண்டி, புத்ரன் ஸபிண்டீகரணம் செய்தால் அவ்விருவரும் இறந்த பிறகு அக்காலத்தில் மறுபடி ஸாபிண்ட்யத்தைச் செய்யவும்.* **வஸிஷ்டரும்:-** *அக்ரம ம்ருதியிலும் ஸாபிண்ட்யம் செய்ய வேண்டும் என்பது ருஷிகளின் கொள்கை. அவ்விஷயத்திலும் மேலே உள்ளவனுக்கு ஸாபிண்ட்யம் செய்த பிறகு இவனுக்கு மறுபடி ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும். ப்ராதா,*

ப்ராத்ரு புத்ரன், ஸபிண்டன், சிஷ்யன், பத்நீ இவர்களுள் யாராவது செய்ய வேண்டும். பத்நீ அமந்த்ரகமாய்ச் செய்ய வேண்டும் அல்லது ருத் விக்கினால் செய்விக்கவும். இவ்விடத்தில் 'அமந்த்ரகமாய்' என்ற விதி, மந்த்ரத்தை உச்சரிப்பதில் சக்தியற்ற பத்னியைப் பற்றியது என்பது கீழே சொல்லப்பட்டு உள்ளது.

## पतितैः सह सापिण्ड्यनिषेधः ।

पतितैः सह सापिण्ड्यनिषेधमाह शातातपः — क्लीबैर्न पतितैश्चैव दुष्टाभिः स्त्रीभिरेव च । सपिण्डीकरणं कुर्या देकोद्दिष्टं समाचरेत् इति । पतितमतिक्रम्य तदूर्ध्वगतैः सापिण्ड्यं कृत्वा अनुमासिकादावेकोद्दिष्टं समाचरेदित्यर्थः । पारिजातेऽपि — पितुर्न नाम निर्देश्यं महापातकदोषिणः । आवाहनादिकार्येषु किन्तु तत्परभाविनाम् । पितामहपुरोगाणां त्रयाणां नाम निर्दिशेत् । पितामहोऽपि दुष्टश्चेत् प्रपितामहपूर्वकाः । निर्देष्टव्यास्त्रयो मर्त्या स्तस्मिन्नपि विदूषिते । प्रपितामह पित्राद्यास्त्रयो वाच्या यथाक्रमम् । दुष्टश्चेन्मध्यमः कश्चित् तद्वर्ज्यान् पूर्वपश्चिमान् । त्रीनेव निर्दिशेन्मर्त्यान् किं त्वत्रैतद्विशिष्यते । चण्डालादिहते ताते पतिते सङ्गवर्जिते । व्युत्क्रमाच्च मृते देयं येभ्य एव ददात्यसौ इति ।

### பதிதர்களுடன் ஸாபிண்ட்யம் கூடாது.

பதிதர்களுடன் ஸாபிண்ட்யத்தை நிஷேதிக்கின்றார், சாதாதபர்:- நபும்ஸகர்கள், பதிதர்கள், தோஷம் உள்ள ஸ்த்ரீகள் இவர்களுடன் ஸாபிண்ட்யம் செய்யக் கூடாது. ஏகோத்திஷ்டத்தைச் செய்ய வேண்டும். பதிதனைத் தாண்டி, அவனுக்கு மேல் உள்ளவர்களோடு ஸாபிண்ட்யத்தைச் செய்து அனுமாஸிகம் முதலியதில் ஏகோத்திஷ்டத்தைச் செய்யவும் என்பது பொருள். பாரிஜாதத்திலும் :-மஹாபாதகத்தால் துஷ்டனாகில் ம்ருதனின் பிதாவின் பெயரை நிர்த்தேசிக்கக் கூடாது, ஆவாஹநம் முதலியதில்.

ஆனால் அவனுக்கு மேல் உள்ள (ம்ருதனின்) பிதாமஹன் முதலிய மூவரின் பெயரை நிர்த்தேசிக்கவும். பிதாமஹனும் பதிதனாகில், ப்ரபிதாமஹன் முதலிய மூவரின் நாமத்தை க்ரஹிக்கவும். ப்ரபிதாமஹனும் துஷ்டனாகில், ப்ரபிதாமஹனின் பிதா முதலிய மூவரின் நாமத்தை க்ரமமாய் க்ரஹிக்கவும். இவர்களுள் நடுவில் ஒருவன் பதிதனாகில், அவனைத் தள்ளி முன்பின் உள்ள மூவர்களையே க்ரஹிக்கவும். ஆனால் இதில் இது விசேஷமாய்ச் சொல்லப்படுகிறது, பிதா சண்டாளாதிகளால் கொல்லப்பட்டாலும், பதிதனாயினும், யதியாயினும், அக்ரமமாய் இறந்தவனாயினும், இவன் எவர்க்குக் கொடுப்பானோ அவருக்கே புத்ரன் கொடுக்க வேண்டும்.

स्मृत्यन्तरे च — वृद्धे पितरि सन्यस्ते ताते च पतिते सति। येभ्य एव पिता दद्यात्तेभ्यो दद्यात् स्वयं सुतः इति। तथा — येभ्यो ददाति पित्रादिस्तेभ्यः पित्रादि जीवने। दद्यात् तथा यतौ ताते पतिते व्युत्क्रमात् मृते इति। पितृव्यतिरिक्तस्य पतितस्य सपिण्डनं नास्ति, सपिण्डीकरणं नैव मृतानां ब्रह्मचारिणाम्। क्लीबानां पतितानां च दुष्टस्त्रीणां तथैव च। नैष्ठिकानां यतीनां च श्राद्धं नारायणार्पणम् इति वृद्धवसिष्ठ स्मरणात्।

மற்றொரு ஸ்ம்ருதியில்:- பிதா வ்ருத்தனாய் யதியாகினாலும், பதிதனானாலும், பிதா எவர்களுக்குக் கொடுப்பானோ அவர்களுக்கே புத்ரன் கொடுக்க வேண்டும். அவ்விதம் - 'பிதா முதலியவன் எவர்களுக்குக் கொடுப்பானோ அவர்களுக்கே பிதா ஜீவித்து இருக்கும் பொழுது புத்ரன் கொடுக்க வேண்டும். அவ்விதம், பிதா யதியாய் இருந்தாலும், பதிதன் ஆகிலும், அக்ரமமாய் இறந்தாலும், முன் சொல்லிய படியே கொடுக்க வேண்டும். பிதாவைத் தவிர்த்த மற்றவன் பதிதனாகில் அவனுக்கு ஸாபிண்ட்யம் இல்லை. ''இறந்த

ப்ரம்ஹசாரிக்கும், நபும்ஸகர்கள், பதிதர்கள், தோஷமுள்ள ஸ்த்ரீகள், இவர்களுக்கும் ஸபிண்டீகரணம் இல்லை. நைஷ்டிக ப்ரம்ஹசாரிகளுக்கும், யதிகளுக்கும் இல்லை. இவர்களுக்கு ச்ராத்தம் நாராயணபலி மட்டுமே'' என்று வ்ருத்த வஸிஷ்ட ஸ்ம்ருதி உள்ளது.

## सपिण्डीकरणप्रकारः

सपिण्डीकरणे इतिकर्तव्यतामाह याज्ञवल्क्यः — गन्धोदकतिलैर्युक्तं कुर्यात् पात्र चतुष्टयम् । अर्घ्यार्थं पितृपात्रेषु प्रेतपात्रं प्रसेचयेत् । ये समाना इति द्वाभ्यां शेषं पूर्ववदाचरेदिति । विज्ञानेश्वरेणास्यार्थोऽभिहितः – गन्धोदकतिलैर्युक्तं पात्रचतुष्टयं अर्घ्यार्थं - अर्घ्यसिद्ध्यर्थं पूर्वोक्तविधिना कुर्यात् । तिलैर्युक्तं पात्रचतुष्टयमिति वदता पितृवर्गे चत्वारो ब्राह्मणा दर्शिताः - वैश्वदेवे द्वौ स्थितावेव । तत्र प्रेतपात्रोदकं किञ्चिदवशेषं त्रेधा विभज्य पितृपात्रेषु सेचयेत् ये समाना इति द्वाभ्यां, शेषं - विश्वेदेवावाहनादिविसर्जनान्तं पूर्ववत् पार्वणवदाचरेत् । प्रेतार्घ्यपात्राव-शिष्टोदकेन प्रेतस्थाने ब्राह्मणहस्ते अर्घ्यं दत्वा शेषं एकोद्दिष्टवत् समापयेत् । पित्र्येषु त्रिषु पार्वणवदिति ।

### ஸபிண்டீகரண ப்ரகாரம்.

ஸபிண்டீகரணத்தில் செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார். யாஜ்ஞவல்க்யர்:- 'கந்தஜலம், திலம் இவைகளுடன் கூடியதாய் நான்கு பாத்ரங்களை வைக்கவும், அர்க்யத்திற்காகப் பித்ருபாத்ரங்களில் ப்ரேத பாத்ர ஜலத்தைச் சேர்க்கவும். 'யேஸமாநா:' என்ற 2-மந்த்ரங்களால், மீதியை முன்போல் செய்யவும்' என்றார். இதற்கு அர்த்தம் சொல்லப்பட்டு உள்ளது விஜ்ஞாநேச்வரரால்:- கந்தோதக திலங்களுடன் கூடிய நான்கு பாத்ரங்களை, அர்க்யம் ஸித்திப்பதற்காக, முன் சொல்லிய விதிப்படி வைக்கவும். திலங்களுடன் கூடிய

*நான்கு பாத்ரங்களைச் சொல்லியதால், பித்ருவர்க்கத்தில் நான்கு ப்ராம்ஹணர்கள் தெரிவிக்கப்பட்டனர். வைச்வ தேவத்தில் இருவர் இருக்கின்றனரே. அதில், ப்ரேத பாத்ரத்தில் மீதியுள்ள ஸ்வல்ப ஜலத்தை மூன்றாய்ப் பிரித்து பித்ரு பாத்ரங்களில் சேர்க்கவும், 'யேஸமாநா:' என்ற இரண்டு மந்த்ரங்களால். சேஷம் = மீதியுள்ள விச்வேதேவாவாஹநம் முதல் விஸர்ஜநம் வரையிலுள்ளதை, பூர்வவத் = பார்வண ச்ராத்தத்திற் போல் செய்யவும். பிரேதார்க்கிய பாத்ரத்தில் மீதியுள்ள ஜலத்தால் ப்ரேத ஸ்தான ப்ராம்ஹணனின் கையில் அர்க்யத்தைக் கொடுத்து மீதியை ஏகோத்திஷ்டத்தில் போல் முடிக்கவும். பித்ரர்த்த ப்ராம்ஹணர்கள் மூவர் இடத்திலும் பார்வணத்தில் போல் செய்யவும் என்று.*

कात्यायनः — चत्वारि पात्राणि सतिलं गन्धोदकैः पूरयित्वा त्रिस्त्रिः पितृपात्रेष्वासिञ्चति ये समानाः इति द्वाभ्या मेतेन पिण्डा व्याख्याताः इति । विष्णुः — संवत्सरान्ते प्रेताय तत्पित्रे तत्पितामहाय च ब्राह्मणान् देवपूर्वं योजयेत् इति । गालवश्च — सपिण्डीकरणं कुर्यात् ततः प्रेतत्वमुक्तये । विश्वान् देवान् नियोज्यादौ कालकामुकसंज्ञकान् । प्रेतं पितामहादींश्च मन्त्रैरघ्यादिभिः श्रयेत् । अनुसन्धीयते पूर्वः परो विच्छिद्यते ततः इति । उक्तेषु एतेषु वचनेषु प्रथमतो विश्वेदेववरणं ततः प्रेतवरणम्, पितामहादिवरणमिति क्रमः प्रतीयते ।

**காத்யாயனர்:-** *நான்கு பாத்ரங்களைத் திலத்துடன் கந்தோதகங்களால் நிரப்பி, மும்மூன்று முறை பித்ருபாத்ரங்களில் 'யேஸமாநா:' என்பது முதலிய மந்த்ரங்களால் சேர்க்கவும். இதனுல் பிண்டங்களும் சொல்லப்பட்டன.* **விஷ்ணு:-** *வர்ஷத்தின் முடிவில் ப்ரேதனுக்கும், அவனது பிதாவுக்கும் பிதாமஹனுக்கும் (ப்ரபிதாமஹனுக்கும்) ப்ராம்ஹணர்களை தேவபூர்வமாய் வரிக்கவும்.* **காலவரும்:-** *பிறகு ப்ரேதத்வம்*

விடுபடுவதற்காக ஸபிண்டீகரணத்தைச் செய்யவும். ஆதியில் காலகாம நாமதேயம் உள்ள விச்வ தேவர்களை வரித்து, ப்ரேதனையும், பிதாமஹாதிகளையும் மந்த்ரங்களுடன் அர்க்யம் முதலியவைகளால் பூஜிக்கவும். பிறகு பிதா அனு ஸந்திக்கப்படுகிறான், ப்ரபிதாமஹன் விடுபடுகிறான். சொல்லிய இந்த வசனங்களில், முதலில் விச்வேதேவவரணம், பிறகு ப்ரேத வரணம், பிறகு பிதாமஹாதி வரணம் என்று க்ரமம் தோன்றுகிறது.

क्रमान्तरं तु स्मृत्यन्तरेऽभिहितम् — श्राद्धद्वयमुपक्रम्य सपिण्डीकरणं भवेत्। पार्वणं तत्र पूर्वं स्यादेकोद्दिष्टमथाचरेत्। तथा सपिण्डीकरणश्राद्धे दैवं पूर्वं नियोजयेत्। पितॄन्नियोजयेत् पश्चात् ततः प्रेतं विनिर्दिशेदिति। चन्द्रिकायामपि — कामकालौ वैश्वदेवे निर्दिष्टौ तु सपिण्डने। पितामहादीन्निर्दिश्य पितुरुच्चारणं ततः इति।

மற்றொரு க்ரமம் சொல்லப்பட்டு உள்ளது, ஒரு ஸ்ம்ருதியில்:- 'இரண்டு ச்ராத்தத்தை ஆரம்பித்து ஸபிண்டீகரணம் செய்யப்பட வேண்டும். அவைகளுள் பார்வணம் முதலாவதாகும். பிறகு ஏகோத்திஷ்டத்தைச் செய்யவும்'' அவ்விதமே, ஸபிண்டீகரண ச்ராத்தத்தில் தேவர்களை முன்பு வரிக்கவும். பிறகு பித்ருக்களை வரிக்கவும். பிறகு ப்ரேதனை வரிக்கவும். சந்த்ரிகையிலும்:- ஸபிண்டீகரணத்தில் விச்வேதேவஸ்தானத்தில் காலகாமர்கள் சொல்லப்பட்டு உள்ளனர். பிதாமஹாதிகளை வரித்துப் பிறகு பிதாவை வரிக்கவும்.

बृहद्विण्डः — पितुर्मरणमारभ्य द्वादशे दिवसे चरेत्। प्रेतभावविनिर्मोकद्वारा प्रेतस्य वै पितुः। पितामहादिभिः सार्धं सापिण्ड्यस्य प्रसिद्धये। समानोदकभावस्य सिद्ध्यर्थं च पितुः सुतः। एषां पितामहादीनां विधिना पार्वणेन तु। स्वपितुः प्रेतभूतस्य त्वेकोद्दिष्टविधानतः। इत्थं च पार्वणात्मैकोद्दिष्टात्मोभय रूपकम्। पितामहादीन्निर्दिश्य पितुरुच्चारणं ततः।

सम्बन्धगोत्रनामानि वस्वादींश्च प्रकीर्तयेत् । दद्यात् कृसरताम्बूलं गन्धमभ्यञ्जनादिकम् ।

**ப்ருஹத்விஷ்ணு:-** *பிதாவின் மரணதினம் முதல் 12-ஆவது நாளில் செய்யவும். ப்ரேதத்வ நிவ்ருத்தி த்வாரா, ப்ரேதனை பிதாவுக்குப் பிதாமஹாதிகளுடன் ஸபிண்டத்வம் ஸித்திப்பதற்கும், ஸமாநோதகத்வம் ஸித்திப்பதற்கும், பிதாவுக்குப் புத்ரன், இந்தப் பிதாமஹாதிகளுக்குப் பார்வண விதியாலும், ப்ரேதனை தனது பிதாவுக்கு ஏகோத்திஷ்ட விதியாலும், இவ்விதம் பார்வண ஏகோத்திஷ்ட த்வய ரூபமாகச் செய்யவும். பிதாமஹாதிகளை முதலில் சொல்லி, பிறகு பிதாவைச் சொல்லவும். ஸம்பந்தம் கோத்ரம் பெயர் வஸு முதலியவர்கள் என்ற எல்லாவற்றையும் சொல்ல வேண்டும். க்ருஸரம் தாம்பூலம் அப்யஞ்ஜனம் முதலியவைகளையும் கொடுக்கவும்.*

ततः स्नातान् समाहूय स्नातस्तानुपवेश्य च । दर्भं विप्रकरे दत्वा वृणुयाद् देवपूर्वकम् ।। सपिण्डीकरणादर्वागृजुदर्भैः पितृक्रियाः । परतो द्विगुणैरेव दैवकर्म सदर्जुभिः । पित्र्ये ह्येकः पवित्रादौ द्वौ दर्भौ देवकर्मणि । द्वौ निमन्त्रयते विप्रौ वैश्वदेवार्थमादितः ।। कामकालौ वैश्वदेवे देवते सम्प्रकीर्तिते । पितामहादि-सम्बन्धांस्त्र्यवरान् श्रोत्रियान् द्विजान् । प्रेतस्थाने त्वेकविप्रं यद्वा पैतामहादिषु । एकं वा प्रेतमेकं वा दैवेऽप्येकं निमन्त्रयेत् । पितामहादीनभ्यर्च्य ततः प्रेतं समर्चयेत् । सपिण्डीकरणश्राद्धं पितृपूर्वमुदीरितम् । प्रेतपूर्वं वदन्त्येके तदसाम्प्रतमीरितम् ।

*பிறகு, ஸ்நானம் செய்த அவர்களை அழைத்து, உட்கார்த்தி, தர்ப்பத்தை ப்ராம்ஹணர்கள் கையில் கொடுத்து, தேவ பூர்வமாய் வரிக்கவும். ஸபிண்டீகரணத்திற்கு முன் ருஜுவான தர்ப்பங்களால்*

கார்யத்தைச் செய்யவும். பிறகு இரண்டாக மடிக்கப்பட்ட தர்ப்பங்களாலேயே செய்யவும். தேவ கர்மத்தை எப்பொழுதும் ருஜுவான தர்ப்பங்களால் செய்யவும். பித்ரு கர்மத்தில் ஒரு தர்ப்பத்தால் பவித்ரம். தேவ கார்யத்தில் இரண்டு தர்ப்பங்களால் பவித்ரம் முதலில் விச்வே தேவர்களுக்காக இரண்டு ப்ராம்ஹணர்களை வரிக்கவும். காலன் காமன் என்ற இருவர் விச்வே தேவ கார்யத்தில் தேவதைகள் எனச் சொல்லப்பட்டு உள்ளனர். பிதாமஹன் முதலியவர்க்காக மூன்றுக்குக் குறையாதவரான ச்ரோத்ரிய ப்ராம்ஹணர்களை வரிக்கவும். ப்ரேத ஸ்தானத்தில் ஒரு ப்ராம்ஹணனை வரிக்கவும் அல்லது பிதாமஹாதிகளுக்காகவும் ஒரு ப்ராம்ஹணனை வரிக்கவும். ப்ரேதனொருவன், விச்வே தேவருக்காக ஒருவனை வரிக்கவும். பிதாமஹாதிகளை யர்ச்சித்துப் பிறகு ப்ரேதனை யர்ச்சிக்கவும். ஸபிண்டீகரண ச்ராத்தம் பித்ருக்களை முந்தியுடையது எனப்பட்டது. சிலர் ப்ரேதனை முந்தியதாய் உடையது என்கின்றனர். அது யுக்தமல்ல என்று சொல்லப்பட்டுள்ளது.

वैश्वदेवार्चनं कृत्वाऽनन्तरं प्रेतभोजनम् । पार्वणस्य हि तन्त्रस्य मध्ये तन्त्रान्तरं भवेत् । पार्वणैकोद्दिष्टयोश्च पार्वणं पूर्वभाग्भवेत् । पादान् प्रक्षालयेत् दर्भांस्तिलान्योप्यावटत्रये । देवार्थानामुत्तरे तु पित्रर्थानां तु मध्यमे । दक्षिणे तु निमित्तस्य पादप्रक्षालनक्रमः ।

விச்வேதேவர்களுக்கு அர்ச்சனம் செய்து பிறகு ப்ரேதபோஜனம் செய்ய வேண்டியது ஆகும். பார்வண ப்ரகாரத்தின் நடுவில் ஏகோத்திஷ்ட ப்ரகாரம் வரக்கூடும். (அது கூடாது என்பதாம்). பார்வணம் ஏகோத்திஷ்டம் இரண்டும் சேர்ந்தால் பார்வணம் முந்தியதாக வேண்டும். மூன்று குழிகளில் தர்ப்பங்களையும் திலங்களையும் போட்டு ப்ராம்ஹணர்களின் கால்களை அலம்பவும். தேவார்த்த ப்ராம்ஹணர்களின் கால்களை வடக்குக் குண்டத்திலும்,

பித்ரர்த்த ப்ராம்ஹணர்களின் கால்களை நடுக் குண்டத்திலும், நிமித்த ப்ராம்ஹணனின் கால்களைத் தெற்குக் குண்டத்திலும் அலம்பவும். இது க்ரமம்.

कुण्डानि निखनेत् श्राद्धे येन केनापि शङ्कुना । आयसेन खनेद्यस्तु निराशाः पितरो गताः । श्राद्धस्य चैककुण्डं स्याद्गजपादसुसम्मितम् । सापिण्ड्यकं त्रिकुण्डं स्याद्वृत्ताकारं तु दक्षिणे । त्रिकोणं मध्यमं कुण्डमुत्तरं चतुरश्रकम् । आयामस्तस्य विस्तारस्तदर्धं खननं भवेत् । न्यूनातिरिक्तं यः कुर्यात् स भवेत् पितृघातुकः । पादादाजानु वाऽऽजङ्घमपि वा चरणद्वयम् । कूर्परान्तं करौ सम्यक् क्षालयेत् प्रथमं बुधः । आचान्तान् वैश्वदेवार्थान् प्राङ्मुखानुपवेशयेत् । आसनेषु च क्लृप्तेषु ततः पैतामहान्निजान् । उदङ्मुखान्निवेश्यैव ततः प्रेतार्थमुत्तमम् । प्रत्यङ्मुखं निवेश्यैनं सर्वं पित्र्यवदाचरेत् । एकोद्दिष्टनिषिद्धं तु यद्यदावाहनादिकम् । तत्सपिण्डीकृतौ प्रेते सर्वं पित्र्यवदाचरेत् ।

ச்ராத்தத்தில் குண்டங்களை ஏதாவது கட்டையினால் கல்லவும். இரும்பினால் கல்லினால் பித்ருக்கள் ஆசையற்றவராய்ச் செல்கின்றனர். ச்ராத்தத்தில் ஒரே குண்டமாகும். அது யானையின் காலின் அளவுள்ளதாய் இருக்க வேண்டும். ஸாபிண்ட்ய ச்ராத்தத்தில் மூன்று குண்டங்களாம். தென் புறத்தில் உள்ளது வர்த்துளமாயும், நடுவில் உள்ளது த்ரிகோணமாயும், வட புறத்தில் உள்ளது நான்கு மூலை உள்ளதாய் இருக்க வேண்டும். அகலம், நீளம் எவ்வளவோ அதன் பாதியளவு ஆழம் இருக்க வேண்டும். இதற்குக் குறைவாகவோ அதிகமாகவோ செய்பவன் பித்ருக்களைக் கொன்றவனாவான், பாதம் முதல் முழங்கால், கணுக்கால் வரையில் அல்லது பாதம் மட்டில் அலம்பவும். முதலில் கைகளை மணிக்கட்டுக்கு மேல் வரையில் அலம்பவும். ஆசமனம் செய்து வைச்வதேவ ப்ராம்ஹணர்களைக் கிழக்கு நோக்கியவர்களாய்

ஆஸநங்களில் உட்கார வைக்கவும். பிறகு பிதா மஹார்த்யர்த்தர்கள் ஆனவர்களையும் வடக்கு முகமாய் உட்கார வைக்கவும். பிறகு ப்ரேதார்த்தனுன ப்ராம்ஹணனை மேற்கு முகமாய் உட்கார வைக்கவும். எல்லாவற்றையும் பித்ர்ய ப்ராம்ஹணர்களுக்குப் போல் செய்யவும். ஏகோத்திஷ்ட விதியில் நிஷித்தமான ஆவாஹனம் முதலியதை ஸபிண்டீகரணத்தில் ப்ரேதனிடத்தில் பித்ர்ய ப்ராம்ஹணர்களிடத்தில் போல் செய்யவும்.

दक्षिणाग्रेषु दर्भेषु त्वर्घ्यपात्रचतुष्टयम् ।। सादयेत् प्रथमं तत्र पित्र्यं पैतामिहं ततः । प्रपितामहदेवत्यं ततः प्रेतार्थमुत्तमम् । पात्रेषु त्रिदलान् कूर्चानन्तर्धाय तिलोदकम् । शन्न इत्यादिभिर्मन्त्रैर्निनयेत् तेषु च क्रमात् । प्रेतशब्दं पितृस्थाने यथालिङ्गं स्त्रिया अपि । पित्रर्घ्यं पितृहस्तेषु दत्वा प्रेतार्थमन्तिमम् ।। प्रेतविप्रकरे दत्वा या दिव्या इति मन्त्रतः । देवपूर्वं तु गन्धाद्यैर्विप्राणां पूजनं भवेत् । प्रेतोद्दिष्टे विशेषेण दद्यादाच्छादनादिकम् । अग्नौकरणहोमं च यथाशास्त्रं समाचरेत् ।

தெற்கு நுனியாய் உள்ள தர்ப்பங்களில் நான்கு அர்க்ய பாத்ரங்களை வைக்கவும். அவைகளுள் முதலாவது பிதாவுக்கு, பிறகு உள்ளது பிதாமஹனுக்கு, பிறகுள்ளது பிரபிதாமஹருக்கு, பிறகுள்ளது ப்ரேதனுக்கு. பாத்ரங்களில் 3-தர்ப்பங்கள் உள்ள கூர்ச்சங்களை வைத்து, திலோதகத்தை 'சந்ந:' என்பது முதலிய மந்த்ரங்களால் க்ரமமாய் அவைகளில் சேர்க்கவும். ப்ரேத பாத்ரத்தில் சேர்க்கையில் பித்ரு சப்தம் இல்லாமல் ப்ரேத சப்தத்தைச் சொல்லவும். ஸ்த்ரீ விஷயத்தில் லிங்கத்தை மாற்றவும். பித்ரர்க்யத்தை பித்ரு ப்ராம்ஹணர்களின் கைகளிலும், ப்ரேதார்க்யத்தை ப்ரேத ப்ராம்ஹண ஹஸ்தத்திலும் 'யாதிவ்யா:' என்ற மந்த்ரத்தால் கொடுத்து, தேவ பூர்வமாய் ப்ராம்ஹணர்களைப் பூஜிக்க வேண்டும். ப்ரேதார்த்த ப்ராம்ஹணனிடத்தில் விசேஷமாய் வஸ்த்ரம் முதலியதைக் கொடுக்கவும். அக்னௌகரண ஹோமத்தையும் சாஸ்த்ரப்படி செய்யவும்.

यथेष्टं भोजयेद्विप्रानन्नं व्यञ्जनसंयुतम् । रक्षोघ्नान् श्रावयेन्मन्त्रान् वैष्णवान् पैतृकानपि । तृप्ताः स्थ इति पृष्टास्ते तृप्ताः स्मो ब्रुवते द्विजाः । अन्नं तु विकिरेत् भूमौ दद्यादाचमनं ततः । होमभोजनशेषाभ्यां पिण्डान् कृत्वा तिलान्वितान् । पितामहादिपिण्डांस्त्रीन् दद्यात्तु पितृयज्ञवत् । प्रेताय दक्षिणे दद्यात् पिण्डं चोभयतोदकम् । करिष्ये पिण्डसंयोगमिति पृष्ट्वा तदाज्ञया । ये समाना इति द्वाभ्यां पितृपिण्डेषु योजयेत् । पिण्डसंयोजनादूर्ध्वं प्रेतत्वस्य निवृत्तितः । मार्जनादिषु कृत्येषु चतुर्थं विनिवर्तयेत् । अभ्यर्थयेत् द्विजांस्तेऽपि प्रतिब्रूयुर्यथोचितम् । अन्नशेषमनुज्ञाप्य नमस्कृत्य निवर्तयेत् इति ।

இஷ்டப்படி ப்ராம்ஹணர்களை வ்யஞ்ஜனங்களுடன் கூடிய அன்னத்தைப் புஜிப்பிக்கவும். ரக்ஷோக்னங்கள், வைஷ்ணவங்கள், பைத்ருகங்களான மந்த்ரங்களைக் கேட்கச் செய்யவும். 'த்ருப்தா:ஸ்த' என்று கேட்கவும். ப்ராம்ஹணர்கள் 'த்ருப்தா: ஸ்ம:' என்று சொல்ல வேண்டும். பூமியில் அன்னத்தை இறைக்கவும். பிறகு ஆபோசனத்தைக் கொடுக்கவும். ஹோமபோஜனங்களில் மீதியுள்ள அன்னத்தால் திலங்களுடன் சேர்த்துப் பிண்டங்களைச் செய்து பிதாமஹாதி பிண்டங்கள் மூன்றை பித்ருயஜ்ஞத்தில் போல் கொடுக்கவும். தென் புறத்தில் ப்ரேதனுக்குப் பிண்டத்தை 2 மார்ஜனங்களுடன் கொடுக்கவும். 'பிண்டஸம்யோகம் கரிஷ்யே' என்று கேட்டு அவர்களின் அனுஜ்ஞையினால் 'யேஸமாநா:' என்ற 2-மந்த்ரங்களால் பித்ரு பிண்டங்களில் சேர்க்கவும். பிண்ட ஸம்யோஜநம் ஆகிய பிறகு ப்ரேதத்வம் நிவ்ருத்தம் ஆகியதால் மார்ஜநம் முதலிய கார்யங்களில் நான்காம் அவனை விட்டு விட வேண்டும். அந்த ப்ராம்ஹணர்களை ப்ரார்த்திக்கவும். அவர்களும் உசிதம் ஆகியபடி பதில் அளிக்க வேண்டும். அன்ன சேஷ போஜனத்திற்கு அனுஜ்ஞை பெற்று, நமஸ்கரித்து அவர்களை அனுப்பவும்.

स्मृतिरत्ने — इति बोधायनः प्राह सपिण्डीकरणं ब्रुवन् । तस्योपस्थानमात्रं तु प्रेतपूर्वं महामुनिः । आवाहनादौ त्वन्यत्र पितृपूर्वत्वमूचिवान् । प्रेतपूर्वत्वशास्त्राणामयमर्थो व्यवस्थितः । एवं प्रेतस्य हि त्रीणि पितृणां चैकमेव वा । इत्यापस्तम्बवाक्यं च न विरोधीति दृश्यते । भुञ्जानानाभिमुख्येन पुण्यसूक्तानि कीर्तयेत् । तदभिश्रवणं नाम तदप्यत्रोचिवान् मुनिः इति । पुण्यसूक्तानि - पुरुषसूक्तादीनि । पितृसूक्तमत्र वर्जयेत्, नान्दीमुखे गया श्राद्धे नित्यश्राद्धे च मासिके । सपिण्डीकरणश्राद्धे न जपेत् पितृसूक्तकम् इति स्मृतिः ।

ஸ்ம்ருதிரத்னத்தில்:- ''ஸபிண்டீகரணத்தைச் சொல்லும் போதாயனர் இவ்விதம் சொல்லுகிறார். அதில் உபஸ்தானத்தை மட்டில் ப்ரேதனுக்கு முன்பு சொல்லுகிறார். ஆவாஹநம் முதலிய மற்ற கார்யங்களைப் பித்ருக்களுக்கு முன்பு விதித்தார். ப்ரேதனுக்கு முன்பு செய்ய வேண்டும் என்ற சாஸ்த்ரங்களுக்கு இந்த விஷயம் ஸித்தமாய் உள்ளது. இவ்விதம், ப்ரேதனுக்கு மூன்று, பித்ருக்களுக்கும் அப்படியே, எல்லோருக்கும் ஒவ்வொன்றும் இருக்கலாம், என்ற ஆபஸ்தம்ப வசனம் விரோதம் இல்லாதது என்று காணப்படுகிறது. புஜிக்கும் ப்ராம்ஹணர்களுக்கு எதிரில் இருந்து புண்ய ஸூக்தங்களைப் படிக்கவும். அது அபிச்ரவணம் எனப்படுகிறது. அதையும் இதில் முனி விதித்தார்'' புண்யஸூக்தங்கள் = புருஷ ஸூக்தம் முதலியவை. பித்ருஸூக்தத்தை இதில் வர்ஜிக்க வேண்டும். 'நாந்தீமுகம், கயாச்ராத்தம், நித்யச்ராத்தம், மாஸிகம், ஸபிண்டீகரணம் இவைகளில் பித்ருஸூக்தத்தை ஜபிக்கக் கூடாது என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

याज्ञवल्क्यः —- द्वौ दैवे प्राक् त्रयः पित्र्य उदगेकैकमेव वा इति । स्मृतिसारसमुच्चये तु — पूर्वं निमन्त्र्य दैवे द्वौ त्रीन् विप्रान्

पितृकर्मणि । दैवे पित्र्येऽपि वैकैकं सपिण्डीकरणं विना इति । अतश्च द्वौ दैवे पितृकार्ये त्रीनेकैकमुभयत्र वा इत्यादौ वैकैकमिति वचनं सापिण्ड्यव्यतिरिक्तपार्वणविषयमापद्विषयं वा ।

**யாஜ்ஞவல்க்யர்:-** தேவஸ்தானத்தில் இருவர் கிழக்கு முகமாகவும், பித்ரு ஸ்தானத்தில் மூவர் வடக்கு முகமாகவும் இருக்க வேண்டும் அல்லது ஒவ்வொரு ஸ்தானத்திற்கு ஒவ்வொருவராவது இருக்க வேண்டும். **ஸ்ம்ருதிஸாரஸமுச்சயத்திலோ வெனில்:-** முதலில் தேவஸ்தானத்தில் இருவர்களை வரித்து, பித்ரு ஸ்தானத்தில் மூவர்களை வரிக்கவும் அல்லது தேவ பித்ரு ஸ்தானங்களில் ஒவ்வொருவரையாவது வரிக்கவும். ஸபிண்டீகரணம் தவிர்த்து. ஆகையால், 'த்வௌ தைவே பித்ருகார்யேத்ரீ நேகைகமுபயத்ரவா' என்பது முதலியவைகளில் ஒவ்வொருவரையாவது என்ற வசநம் ஸாபிண்ட்யம் தவிர்த்த மற்றதைப் பற்றியது அல்லது ஆபத் காலத்தைப் பற்றியது.

सायणीये — सपिण्डीकरणेऽवश्यं विष्णुमभ्यर्चयेद्द्विजे । सप्तकं तु तदाख्यातं विना विष्णुं कथं तथा इति । विष्णुवरणाभावे सापिण्ड्यस्य सप्तकत्वख्यातिर्भज्येतेत्यर्थः । तत्रैव — इति वै देवलः प्राह शाण्डिल्यश्च महामुनिः । यत्किञ्चित् पार्वणश्राद्धं तत्र सर्वत्र वै द्विजे । पूजयेद्विष्णुमित्येवं श्राद्धं सिद्ध्यति नान्यथा इति । एवं विष्णुपुराणे ।

**ஸாயணீயத்தில்:-** ஸபிண்டீகரணத்தில் விஷ்ணுவை அவச்யம் பூஜிக்கவும். அது ஏழு பேர்களை உடையது என்று சொல்லப்பட்டு உள்ளது. விஷ்ணு இல்லாவிடில் எப்படி ஸப்தகம் என்று ஆகும். விஷ்ணு வரணம் இல்லாவிடில் ஸாபிண்ட்யத்திற்கு ஸப்தகம் என்ற ப்ரஸித்தி பங்னம் ஆகும் என்பது பொருள். **ஸாயணீயத்திலேயே:-** இவ்விதம்

சாண்டில்யர் சொல்லுகிறார், தேவல மஹாமுனியும் சொல்லுகிறார். பார்வண ச்ராத்தம் எதுவானாலும், அது எல்லாவற்றிலும், விஷ்ணுவைப் பூஜிக்கவும். இவ்விதம் செய்வதால் ச்ராத்தம் ஸித்தமாகிறது. மற்றப்படி செய்தால் ஸித்திக்கிறதில்லை. இவ்விதம் விஷ்ணு புராணத்தில் உள்ளது.

विष्णुवरणाभावे दोषमाह मनुः — दैवाद्यन्तं भवेत् श्राद्धं पित्राद्यन्तं न तद्भवेत्। पित्राद्यन्तं तदीहानः श्राद्धमाप्नोति निष्फलम् इति। चन्द्रिकायाम् — स्वधाशब्दं धूपदीपौ नमः शब्दं प्रयोजयेत्। नैवं प्रेते नमः शब्द उपतिष्ठपदं भवेत् । विप्रपाणावथाग्नौ वा जुहुयादाहुति द्वयम्। निरूह्य वह्नेरङ्गारान् प्रेतस्य च यमस्य च ॥ स्वाहेति जुहुयादन्नमुक्त्वैतद्गोत्रनामनी । प्रेतहस्तेऽपि वा हुत्वा भोजयेच्च यथाक्रमम्। सम्बुद्ध्या निर्दिशेन्नाम पित्रादीनामसाविति। यज्ञशर्मन्निमं पिण्डमुपतिष्ठेति चान्ततः । पिण्डं चतुर्थं प्रेताय दद्याद्दक्षिणहस्ततः । प्रेतपात्रस्थमुदकं पित्राद्यर्थेष्वथानयेत् । समानो मन्त्र इत्याभ्यामृग्भ्यां द्वाभ्यां यथाक्रमम्। मधुत्रयेण चादाय प्रेतपिण्डं त्रिधा कृतम् । सङ्गच्छध्वमिति द्वाभ्यां पितृपिण्डेषु योजयेत् । ये समाना इति द्वाभ्यां पिण्डोपस्थानमिष्यते । पिण्डसंयोजनादूर्ध्वं प्रेतत्वस्य निवृत्तितः । मार्जनादिषु सर्वत्र चतुर्थो विनिवर्तते । केवलः पितृशब्दस्तु पितृसामान्यवाचकः । पितामहादिसम्बन्धं मन्त्रं मन्त्रादिषूहयेत् इति।

விஷ்ணுவரணம் இல்லாவிடில் தோஷத்தைச் சொல்லுகிறார், மனு:- ச்ராத்தம் தேவ கார்யத்தை முன்பும் பின்பும் உடையதாய் இருக்க வேண்டும். பித்ரு கார்யத்தை முன்பு உடையதாய்ச் செய்பவன் ச்ராத்த பலத்தை அடைவது இல்லை. சந்த்ரிகையில்:- ஸ்வதா என்ற சப்தம், தூபம், தீபம், நம: என்ற சப்தம் இவைகளைச் சேர்க்கவும்.

ப்ரேதன் இடத்தில் நமச் சப்தத்தை ப்ரயோகிக்க கூடாது. 'உபதிஷ்ட' என்ற பதம் ப்ரயோகிக்கப்பட வேண்டும். ப்ராம்ஹணனின் கையிலாவது அக்னியிலாவது இரண்டு ஆஹுதிகளைச் செய்யவும். அக்னியிலிருந்தும் அங்காரங்களை (தணல்களை) ஒதுக்கி ப்ரேதனுக்கும் யமனுக்கும் 'ஸ்வாஹா' என்று அன்னத்தை ஹோமம் செய்யவும். ப்ரேதனின் கோத்திரம் நாமம் இவைகளைச் சொல்லி அல்லது ப்ரேத ப்ராம்ஹணனின் கையில் ஹோமம் செய்யவும். பிறகு க்ரமப்படி புஜிப்பிக்கவும். பித்ராதிகளின் நாமத்தை ஸம்புத்தியாய் 'யஜ்ஞசர்மன்' என்று சொல்லவும். முடிவில் ப்ரேதபிண்டத்தை 'உபதிஷ்ட' என்று நான்காவதாக வலது கைப் பக்கத்தில் வைக்கவும். பிறகு, ப்ரேதனின் அர்க்ய பாத்திரத்தில் உள்ள ஜலத்தைப் பித்ராதிகளின் அர்க்ய பாத்ரங்களில் சேர்க்கவும், 'ஸமாநோமந்த்ர:' என்ற இரண்டு ருக்குகளாலும் க்ரமப்படி. 'மதுவாதா:' என்ற மூன்று மந்த்ரங்களால் எடுத்து ப்ரேத பிண்டத்தை மூன்று பாகமாகச் செய்து 'ஸங்கச்சத்வம்' என்ற இரண்டு மந்த்ரங்களால் பித்ராதி பிண்டங்களில் சேர்க்கவும். 'யேஸமாநா:' என்ற இரண்டு மந்த்ரங்களால் பிண்டங்களை உபஸ்தானம் செய்யவும். பிண்ட ஸம்யோஜனத்திற்கு மேல், ப்ரேதத் தன்மை நிவ்ருத்திப்பதால் மார்ஜனம் முதலியது எல்லாவற்றிலும், நான்காமவன் நிவ்ருத்திக்கின்றான். தனியான பித்ரு சப்தம் பித்ருக்கள் எல்லோரையும் சொல்வதே ஆகும். பிதாமஹன் முதலிய ஸம்பந்தம் உள்ள மந்த்ரத்தை மந்த்ரங்களினுதிகளில் ஊஹிக்கவும்.

बोधायनः — मधुत्रयेण सङ्गच्छध्वं समानो मन्त्र इति त्रिभिर्द्वाभ्यां वाऽर्घ्यसंसर्गः सङ्गच्छध्वं समानो मन्त्र इति द्वाभ्यां पिण्डसंसर्गः इति । आश्वलायनः — समानो मन्त्रः समानीव इति द्वाभ्या मर्घ्यसंसर्गो मधुमतीभिः सङ्गच्छध्वं समानो मन्त्र इति

त्रिभिः पिण्डसंसर्गः इति । गौतमः — ये समाना इत्यर्घ्यसंसर्गो ये सजाता इति पिण्डसंसर्गः इति । वैखानसः — समानो मन्त्रः समानीव इति द्वाभ्यामर्घ्यसंसर्गः सङ्गच्छध्वं समानो मन्त्र इति द्वाभ्यां पिण्डसंसर्गः इति ।

**போதாயனர்:-** *மதுவாதா: என்ற மூன்று மந்த்ரங்கள், ஸங்கச்சத்வம், ஸமாநோமந்த்ர: என்பது முதலாகிய 3 மந்த்ரங்கள் அல்லது 2- மந்த்ரங்கள் இவைகளால் அர்க்ய ஸம்யோஜனம், ஸங்கச்சத்வம், ஸமாநோமந்த்ர: என்ற 2-மந்த்ரங்களால் பிண்டஸம்யோஜனம்.* **ஆச்வலாயனர்:-** *ஸமாநோமந்த்ர:, ஸமாநீவ: என்ற 2-மந்த்ரங்களால் அர்க்ய ஸம்ஸர்கம், மதுவாதா: என்ற 3-மந்த்ரங்கள், ஸங்கச்சத்வம், ஸமாநோமந்த்ர: என்ற மூன்று மந்த்ரங்கள் இவைகளால் பிண்டஸம்ஸர்கம்.* **கௌதமர்:-** *யேஸமாநா: என்பதால் அர்க்ய ஸம்யோகம். யேஸஜாதா: என்பதால் பிண்டஸம்யோகம்.* **வைகாநஸர்:-** *ஸமாநோ மந்த்ர:, ஸமாநீவ: என்ற 2-மந்த்ரங்களால் அர்க்ய ஸம்ஸர்கம், ஸங்கச்சத்வம், ஸமாநோமந்த்ர: என்ற 2-மந்த்ரங்களால் பிண்டஸம்ஸர்கம்.*

शातातपः — निर्वपेच्चतुरः पिण्डान् श्रद्धया पितृनामतः । पिण्डं दत्वा पितॄणां तु पश्चात् प्रेतस्य पार्श्वतः । तं च पिण्डं त्रिधा कृत्वा त्वानुपूर्व्यात्तु सत्तमः । निदध्यात्त्रिषु पिण्डेषु ह्येवं संसर्जने विधिः इति । संसृज्यमानपिण्डाभिप्रायेण चतुरः पिण्डानित्युक्तम्, यथास्वसूत्रं पिण्डसङ्ख्या द्रष्टव्या । द्वैधं दक्षिणाग्रा नित्यादिनाऽऽपस्तम्बेन पितृमातृवर्गयोरुभयोरपि पिण्डदान-विधानात् आपस्तम्बिनः प्रेतपिण्डेन सह सप्त पिण्डान् दद्युः ।

**சாதாதபர்:-** *பித்ருக்களின் நாமங்களைச் சொல்லி ச்ரத்தையுடன் நான்கு பிண்டங்களை வைக்கவும். பித்ருக்களுக்குப் பிண்டங்களைக் கொடுத்துப் பிறகு பித்ரு*

பிண்டங்களின் பக்கத்தில் ப்ரேத பிண்டத்தை வைக்கவும். அந்தப் பிண்டத்தை மூன்றாகச் செய்து, மூன்று பிண்டங்களில் வைக்கவும், ஸம்ஸர்கத்தில் விதி இவ்விதமாம். சேர்க்கப்படுகின்ற பிண்டத்தையும் சேர்த்து நான்கு பிண்டங்கள் எனப்பட்டது. அவரவர் ஸூத்ரப்படி பிண்டத்தின் ஸங்க்யையை அறியவும். 'த்வைதம் தக்ஷிணாக்ரான்' என்பது முதலியதால், ஆபஸ்தம்பர் பித்ருமாத்ருவர்க்கங்கள் இரண்டிற்கும் பிண்ட தானத்தை விதித்து இருப்பதால், ஆபஸ்தம்பர்கள் ப்ரேத பிண்டத்துடன் ஏழு பிண்டங்களைக் கொடுக்க வேண்டும்.

तथा च पितृमेधसारे — हुतशेषमिश्रैरन्नैस्तिलयुक्तैः सप्त पिण्डाननुमरणेऽष्टौ पिण्डाननेकसापिण्ड्ये तावतो निमित्तपिण्डान् कृत्वा उच्छिष्टसन्निधावग्रेर्दक्षिणतस्त्रेधा दक्षिणाग्रान् दर्भान् संस्तीर्य दक्षिणामुखस्सव्यञ्जान्वाच्य तेषु मध्यमदर्भेषु मार्जयन्तां मम पितुः पितरः इत्यादिभिः पश्चिमदर्भेषु मार्जयन्तां मम पितुर्मातर इत्यादिभिर्दक्षिणापवर्गं मार्जयेत्। अत्र पूर्वं मातृमृतौ मार्जयन्तां मम मातर इति मार्जयित्वा मार्जनक्रमेण एतत्ते पितुस्तत इत्यादिभिः षट्पिण्डान् दत्वा ये च त्वामनु याश्च त्वामन्विति प्रतिपिण्डं दर्भमूलेषु लेपं निमृज्य मार्जयतां मम प्रेतः मार्जयतां मम प्रेतेत्यपो दत्वा अमुकगोत्र अमुकशर्मन् प्रेतैतं पिण्डमुपतिष्ठेति प्रेतपिण्डं प्रदाय अमुकगोत्रे अमुकनाम्नि प्रेते इति स्त्रियाः ब्राह्मणाभ्यनुज्ञातः समानो मन्त्रः समानी व इति द्वाभ्यां प्रेतार्घ्यं पित्र्याद्यर्घ्यपात्रेषु निनीय तूष्णीं प्रेतपिण्डमादाय त्रेधा विभज्य तद्भागत्रयं पित्रादिपिण्डानां पुरस्तान्निधाय वैतरणीगोदानं कृत्वाऽनुज्ञप्तो मधुमतीभिः सङ्गच्छध्वं समानो मन्त्रः समानीव इति चतुर्भिस्तत्पिण्डैः सह त्रयं हस्ताभ्यां युगपत् संसृजेत्। एवं प्रेतपिण्डं पित्रादिपिण्डैः संसृज्य ये समाना ये सजाता इति द्वाभ्यां पिण्डानुपस्थाय संसृष्टेनार्घ्योदकेन मन्त्रानूहेन पूर्ववन्मार्जयेत् इति।

**பித்ருமேத ஸாரத்தில்:-** ஹோம சேஷான்னத்துடன் சேர்ந்தும் திலத்துடன் சேர்ந்துமுள்ள அன்னங்களால் ஏழு பிண்டங்களை, அனுமரணத்திலானல் எட்டுப் பிண்டங்களை, பலருக்கு ஸாபிண்ட்யமானல் அவ்வளவு நிமித்த பிண்டங்களையும் செய்து, உச்சிஷ்ட ஸன்னிதியில் அக்னிக்குத் தென்புறத்தில் தெற்கு நுனியுள்ள தர்ப்பங்களை மூன்று விதமாகப் பரப்பி, தெற்கு நோக்கியவனாய், இடது முழங்காலைக் கவிழ்த்து, அந்தத் தர்ப்பங்களுள் நடுவிலுள்ள தர்ப்பங்களில் 'மார்ஜயந்தாம் மம பிது: பிதர:' என்பது முதலிய மந்த்ரங்களாலும், மேற்குத் திக்கிலுள்ள தர்ப்பங்களில் 'மார்ஜயந்தாம் மம பிதுர் மாதர:' என்பது முதலிய மந்த்ரங்களாலும் தெற்கில் முடிவாகும்படி மார்ஜனம் செய்யவும். இதில், முன்பு மாதா மரித்து இருந்தால், ''மார்ஜயந்தாம் மம மாதர:' என்று மார்ஜனம் செய்து, மார்ஜனம் செய்த க்ரமப்படி 'ஏதத் தே பிதுஸ்தத' என்பது முதலியவைகளால் ஆறு பிண்டங்களை வைத்து, 'யேச த்வாமனு, யாச்ச த்வா மனு' என்பவைகளால் ஒவ்வொரு பிண்டத்திலும் தர்ப்பங்களின் அடியில் லேபத்தைத் (கையிலுள்ளவற்றை) துடைத்து, 'மார்ஜயதாம் மம ப்ரேத:', அல்லது 'மார்ஜயதாம் மம ப்ரேதா' என்று ஜலத்தை விட்டு, '.....கோத்ர .....சர்மன் ப்ரேத ஏதம் பிண்டம் உபதிஷ்ட' என்று பிண்டத்தைக் கொடுத்து, '......கோத்ரே .....நாம்னி ப்ரேதே' என்று ஸ்த்ரீக்கு. ப்ராம்ஹணர்களால் அனுஜ்ஞை செய்யப்பட்டவனாய் 'ஸமானோ மந்த்ர:' 'ஸமானீவ:' என்ற 2-மந்த்ரங்களால் ப்ரேத அர்க்யத்தைப் பித்ராதிகளின் அர்க்ய பாத்ரங்களில் சேர்த்து, மௌனமாய் ப்ரேத பிண்டத்தை எடுத்து, மூன்றாகச் செய்து, மூன்று பாகங்களையும் பிதா முதலியவரின் பிண்டங்களின் எதிரில் வைத்து, வைதரணீ கோதானத்தைச் செய்து, அனுஜ்ஞையைப் பெற்றவனாய் மதுமதீ மந்த்ரங்களாலும், ஸங்கச்சத்வம், ஸமானோ மந்த்ர: ஸமானீவ: என்ற

4-மந்த்ரங்களாலும் அந்தப் பிண்டங்களுடன் மூன்று பாகத்தையும் கைகளால் ஒரே ஸமயத்தில் சேர்க்கவும். இவ்விதம் ப்ரேத பிண்டத்தைப் பித்ராதி பிண்டங்களுடன் சேர்த்து, 'யே ஸமாநா:' "யே ஸஜாதா:' என்ற 2-மந்த்ரங்களால் பிண்டங்களுக்கு உபஸ்தானம் செய்து, சேர்க்கப்பட்ட அர்க்ய ஜலத்தால் மந்த்ரங்களை ஊஹிக்காமல் முன் போல் மார்ஜனம் செய்யவும்.

अत्र याज्ञवल्क्यः — सर्वमन्नमुपादाय सतिलं दक्षिणामुखः । उच्छिष्ट सन्निधौ पिण्डान् दद्याद्वै पितृयज्ञवत् इति । सर्वमन्नमिति पायसापूपफलादीत्यर्थः । बोधायनः — सर्वोपकरणैर्यथोपपादनं संपूज्य अक्षय्यं वाचयित्वैवं स्वधां वाचयित्वा उत्थाप्योपसङ्गृह्य प्रसाद्य प्रदक्षिणीकृत्य अनुव्रज्य यथेतमेत्य दक्षिणेनाग्निं दर्भान् संस्तीर्य तेष्वन्नशेषैः पिण्डान् ददाति नोच्छिष्टं परिसमूहत्य पिण्डान् ददाति इति । आपस्तम्बः — भुक्तवतोऽनुव्रज्य प्रदक्षिणीकृत्य द्वैधं दक्षिणाग्रान् दर्भान् संस्तीर्य इत्यादि । आश्वलायनः — भुक्तवत्स्वनाचान्तेषु पिण्डान् दद्यादाचान्तेषु इत्येके इति । जमदग्निः — नदी वैतरणीनाम दुर्गन्धरुधिरावहा । कृष्णतोया महावेगिन्यस्थिकेशतरङ्गिणी ॥ दत्ता गौर्येन सापिण्ड्ये स तां तरति नेतरः । अकृते तत्र पच्यन्ते प्रायश्चित्ते तु पापिनः । विभक्तं प्रेतपिण्डं तु पितृपिण्डेषु योजयेत् । तृचेन मधुवातेति सङ्गच्छध्वं तृचेन चेति । स्मृत्यर्थसारे — सपिण्डीकरणेष्वेतान् पिण्डानप्स्वेव निक्षिपेत् । अन्यथाकरणे तेषां पितृदेवा रुदन्ति हि इति ।

**யாஜ்ஞவல்க்யர்:-** அன்னம் எல்லாவற்றையும் திலத்துடன் சேர்த்து எடுத்து, தெற்கு நோக்கியவனாய் உச்சிஷ்ட ஸன்னிதியில் பிண்டங்களை பித்ரு யஜ்ஞத்தில் போல் கொடுக்கவும். 'ஸர்வமன்னம்' என்றதற்குப் பாயஸாபூப பலங்கள் முதலியவை என்று பொருள்.

**போதாயனர்:-** எல்லா உபகரணங்களாலும் ஸம்பவித்த வரையில் பூஜித்து, அக்ஷய்யவாசனம், ஸ்வதாவாசனம் இவைகளைச் செய்து, எழுப்பி, நமஸ்கரித்து, ப்ரஸாதநம் செய்து, ப்ரதக்ஷிணம் செய்து, பின்சென்று, சென்றபடி திரும்பி வந்து, அக்னிக்குத் தென் புறத்தில் தெற்கு நுனியாய்த் தர்ப்பங்களைப் பரப்பி, அவைகளில் பிண்டங்களைக் கொடுக்கவும். உச்சிஷ்டத்தை மெழுகுவதற்கு முன் பிண்டதானம் கூடாது. **ஆபஸ்தம்பர்:-** புஜித்த ப்ராம்ஹணர்களைத் தொடர்ந்து சென்று ப்ரதக்ஷிணம் செய்து, பிறகு, 2-ப்ரகாரமாய், தெற்கு நுனியுள்ளதாய், தர்ப்பங்களைப் பரப்பி' என்பது முதலியவை. **ஆச்வலாயனர்:-** புஜித்த ப்ராம்ஹணர்கள் புஜித்த பிறகு ஆசமனம் செய்வதற்கு முன் பிண்டதானம் செய்யவும். ஆசமனம் செய்தபிறகு என்கின்றனர் சிலர். **ஜமதக்னி:-** வைதரணீ என்னும் நதி துர்நாற்றமுள்ள ரக்தத்துடன் கூடியதாய், கறுத்த தண்ணீருள்ளதாய், மஹாவேகமுள்ளதாய், எலும்பு மயிர் இவைகளுடன் கூடிய அலைகளுடையதாய் உள்ளது. எவனால் ஸாபிண்ட்யத்தில் பசு கொடுக்கப்பட்டதோ அவன் அந்த நதியைத் தாண்டுவான். மற்றவன் தாண்டுவதில்லை. ப்ராயச்சித்தம் செய்து கொள்ளாவிடில் பாபிகள் அந்த நதியில் துன்புறுகிறார்கள். (மூன்றாய்) பிரிக்கப்பட்ட ப்ரேத பிண்டத்தைப் பித்ரு பிண்டங்களுடன் சேர்க்கவும். மதுவாதா: என்ற மூன்று ருக்குகளாலும், ஸங்கச்சத்வம், முதலிய 3-ருக்குகளாலும். **ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:-** ஸபிண்டீகரணங்களில் இந்தப் பிண்டங்களை ஜலத்திலேயே போடவேண்டும். வேறு விதம் செய்தால் அவர்களின் பித்ரு தேவர்கள் கண்ணீர் விடுகின்றனர்.

आश्वलायनोऽपि — पत्न्यां रजस्वलायां च व्याधितायामथापि वा । प्रक्षिपेन्मध्यमं पिण्डं जले गव्यथवाऽनले । पतितायां च वा पत्न्यां मृतायां च तथा द्विजः । सपिण्डीकरणे चैव

मध्ये पिण्डं तथा चरेत् । वृद्धिश्राद्धे सपिण्ड्यां च प्रेतश्राद्धेऽनुमासिके। संवत्सरविमोके च न कुर्यात्तिलतर्पणम् । नवश्राद्धानि मिश्राणि सपिण्डीकरणं तथा । कृत्वा तु विधिवत् स्नायान्नैव स्नायान्मृतेऽहनि इति । मिश्राणि - सपिण्डीकरणात् पूर्वभावीनि षोडशश्राद्धानीति व्याख्यातारः ।

ஆச்வலாயனரும்:- பத்னீ ரஜஸ்வலையாய் இருந்தாலும், வ்யாதியுற்று இருந்தாலும், நடுப் பிண்டத்தை ஜலத்தில் போடவும். அல்லது கோவுக்குக் கொடுக்கவும். அல்லது அக்னியில் போடவும். பத்னீ பதியையாய் இருந்தாலும், ம்ருதியை அடைந் திருந்தாலும், ஸபிண்டீகரணத்திலும், நடுப்பிண்டத்தை முன் சொல்லியபடி செய்யவும். நாந்தீ ச்ராத்தத்திலும், ஸபிண்டீகரணத்திலும், ப்ரேத ச்ராத்தத்திலும், அநுமாஸிகத்திலும், ஸாம்வத்ஸரிகத்திலும், விமோக த்திலும், திலதர்ப்பணத்தைச் செய்யக் கூடாது. நவச்ராத்தங்கள், மிச்ரங்கள், ஸபிண்டீகரணம் இவைகளைச் செய்த பிறகு விதிப்படி ஸ்நானம் செய்யவும். ப்ரத்யாப்திகம் செய்த பிறகு ஸ்நானம் செய்யக் கூடாது. மிச்ரங்கள் ஸபிண்டீகரணத்திற்கு முன் செய்யப்படும் ஷோடச ச்ராத்தங்கள் என்கின்றனர் வ்யாக்யானம் செய்பவர்கள்.

## मातृसापिण्ड्यविधिः

मातुः सपिण्डीकरणमाह शङ्खः — मातुः सपिण्डीकरणं कथं कार्यं भवेत् सुतैः । पितामह्यादिभिः सार्धं सपिण्डीकरणं स्मृतम् इति । विज्ञानेश्वरीये — पितामह्यादिभिः सार्धं सपिण्डीकरणं सुतः । मातुः कुर्वीत पित्राद्यैः पितुः कुर्याद्यथाविधि इति । मातुः पितामह्यादिभिः: सार्धमिति सम्बन्धः ।

## மாத்ருஸாபிண்ட்ய விதி.

மாதாவின் ஸாபிண்ட்யத்தைச் சொல்லுகிறார், **சங்கர்:-** மாதாவின் ஸாபிண்ட்யத்தைப் புத்ரர்கள் எப்படிச் செய்ய வேண்டும். பிதாமஹீ முதலியவருடன் ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டும். **விக்ஞானேச்வரீயத்தில்:-** மாதாவின் ஸாபிண்ட்யத்தைப் பிதாமஹீ முதலியவர்களுடனும், பிதாவின் ஸாபிண்ட்யத்தைப் பிதாமஹாதிகளுடனும் செய்யவும்.

काश्यपः — योजयेन्मातुरर्घ्यं च त्वृग्भ्यां मात्रादिषु त्रिषु । एवं त्रिधा कृतं पिण्डं त्रिषु पिण्डेषु योजयेत् इति । मात्रादिषु - पितामह्यादिषु । प्रमीतपितृकस्य विकल्पमाह यमः — जीवत्पिता पितामह्या मातुः कुर्यात् सपिण्डताम् । प्रमीतपितृकः पित्रा पितामह्याऽथ वा सुतः इति । लोकाक्षिरपि — पितामह्यादिभिः सार्धं मातरं तु सपिण्डयेत् । पितरि ध्रियमाणे तु तेन वोपरते सति इति । अन्वारोहणे तु भर्त्रैव सापिण्ड्यं नियतम् । तदाह शातातपः —मृता याऽनुगता नाथं सा तेन सहपिण्डताम् । अर्हति स्वर्गवासेऽपि यावदाभूतसंप्लवम् इति ।

**காச்யபர்:-** மாதாவின் அர்க்யத்தைப் பிதாமஹ்யாதிகளின் அர்க்யத்தில் இரண்டு ருக்குகளால் சேர்க்கவும். இவ்விதம் 3-பாகங்களாக்கப்பட்ட பிண்டத்தை மூன்று பிண்டங்களில் சேர்க்கவும். பிதா இல்லாதவனுக்கு விகல்பத்தைச் சொல்லுகிறார். **யமன்:-** ஜீவ பிதாவாய் உள்ளவன் மாதாவுக்கு ஸாபிண்ட்யத்தைப் பிதாமஹியோடு செய்யவும். பிதா இல்லாத புத்ரன் பிதாவோடு அல்லது பிதாமஹியோடு ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். **லோகாக்ஷியும்:-** பிதா ஜீவித்திருக்கும் போது மாதாவுக்கு ஸாபிண்ட்யத்தைப் பிதாமஹ்யாதிகளுடன் செய்யவும். பிதா இறந்த பிறகு பிதாவுடனாவது,

பிதாமஹ்யாதிகளுடனுவது செய்யவும். அனுமரண விஷயத்திலோ வெனில் பர்த்தாவுடனேயே பிண்ட ஸம்யோகம் நியதம். அதைச் சொல்லுகிறுர், சாதாதபர்:- பர்த்தாவை அனுஸரித்து அனுமரணம் செய்தவள் எவளோ அவள் பர்த்தாவோடு ஸாபிண்ட்யத்திற்கு உரியவளாகிறுள். ப்ரளயகாலம் வரையில் ஸ்வர்க்க வாஸத்திற்கும் உரியவளாகிறுள்.

यमः –पत्या चैकेन कर्तव्यं सपिण्डीकरणं स्त्रियाः । सा मृतापि हि तेनैक्यं गता मन्त्राहुतिव्रतैः इति । अत्र एकशब्दः पितामह्यादिविकल्पव्यावृत्त्यर्थः । षट्त्रिंशन्मतेऽपि — मातुः सपिण्डीकरणं पत्या सार्धं विधीयते । यस्मात् पतिव्रतानां तु सैव सन्ततिरिष्यते इति । शङ्खश्च — अन्वारोहे तु भर्त्रैव मातुस्सह सपिण्डनम् इति । स्मृतिसारसमुच्चये — परेद्युरनुयाने तु मरणाहक्रमेण तु । दहनादिसपिण्ड्यन्तं सहकुर्याद्यथाविधि । पिण्डं दत्वा स्वधां तस्याः भर्तृपात्रे निनीय तु । मन्त्रेणैव तु तत् पात्रं पितृपात्रेषु सेचयेत् । भर्तृपिण्डेन संसृज्य पितृपिण्डैस्तु संसृजेत् इति ।

**யமன்**:- ஸ்த்ரீக்கு ஸபிண்டீகரணம் பர்த்தா ஒருவனுடனேயே செய்யப்பட வேண்டும். இறந்தாலும் அவள் பர்த்தாவுடன் ஐக்யத்தை மந்த்ரம், ஆஹுதி, வ்ரதம் இவைகளால் அடைந்துள்ளாள் அல்லவா. மூலத்தில் உள்ள 'ஏகேந' என்ற சப்தம் பிதாமஹ்யாதிகளுடன் ஸாபிண்ட்ய விகல்பம் இல்லை என்பதற்காம். **ஷட்த்ரிசன்மதத்திலும்**:- மாதாவுக்குப் பதியுடன் ஸாபிண்ட்யம் விதிக்கப்படுகிறது. ஏனெனில், பதிவ்ரதைகளுக்கு அதுவே ப்ராசீனுசாரமாய் விதிக்கப்படுகிறது. **சங்கரும்**:- அனுமரண விஷயத்தில் மாதாவுக்கு ஸாபிண்ட்யத்தைப் பர்த்தாவுடனேயே செய்ய வேண்டும். **ஸ்ம்ருதிஸாரஸமுச்சயத்தில்**:- மறுநாளில்

அனுகமனம் செய்தாலோ வெனில், மரண தினம் முதற் கொண்டே தஹநம் முதல் ஸபிண்டீகரணம் வரையில் சேர்த்தே விதிப்படி செய்யவும். பிண்டத்தைக் கொடுத்து அவளது அர்க்யத்தைப் பர்த்தாவின் அர்க்ய பாத்ரத்தில் சேர்த்து, அந்த அர்க்யத்தை மந்த்ரத்துடன் பித்ரு பாத்ரங்களில் சேர்க்கவும். மாத்ரு பிண்டத்தைப் பித்ரு பிண்டத்துடன் சேர்த்து, அதைப் பித்ரு பிண்டங்களுடன் சேர்க்கவும்.

विश्वादर्शे — स्त्रीपिण्डे पतिपिण्डगे तदनु तं पित्रादिभिर्मिश्रयेत् इति । चन्द्रिकायां विशेषोऽभिहितः —दशाष्ट द्वादश विप्रान्निमन्त्र्य द्वादशेऽहनि । द्विधास्तृतेषु दर्भेषु त्वर्घ्यपात्रं प्रकल्पयेत् । पित्रादेश्च पुरश्चैव मात्रादेस्तदनन्तरम् । पित्रर्घ्यपात्रमुदकं क्रमात् पैतामहादिषु । ये समाना इति द्वाभ्यां मन्त्राभ्यां योजयेत् क्रमात् । योजयेन्मातुरर्घ्यं च त्वृग्भ्यां मात्रादिषु त्रिषु । एवं त्रिधाकृतं पिण्डं पिण्डेषु त्रिषु योजयेत् । पित्रोः सञ्जातमरणे त्वनुयानविधिः स्मृतः इति । एतत् — दैवं पित्र्यञ्च तन्त्रं स्यान्निमित्तं प्रतिपूरुषम् । पिण्डं दत्वा स्वधां तस्या भर्तृपात्रे निनीय च इत्यादिवचनविरोधात् शिष्टचाराभावाच्च अनादरणीयम् ।

விச்வாதர்சத்தில்:- ஸ்த்ரீ பிண்டத்தைப் பதிபிண்டத்துடன் சேர்த்த பிறகு அதைப் பித்ராதி பிண்டங்களுடன் சேர்க்கவும். சந்த்ரிகையில்: விசேஷம் சொல்லப்பட்டு உள்ளது:- 10-8 அல்லது 12-ப்ராம்ஹணர்களை வரித்து, 12-ஆவது நாளில், இரண்டு விதமாகப் பரப்பப்பட்ட தர்ப்பங்களில் அர்க்ய பாத்ரத்தை வைக்கவும். முதலில் பிதா முதலியவர்க்கும், பிறகு மாதா முதலியவர்க்கும். பிதாவின் அர்க்ய பாத்திரத்தில் உள்ள ஜலத்தைப் பிதாமஹாதிகளின் அர்க்ய பாத்ரங்களில் ‘யே

ஸமாநா:' என்பது முதலாகிய 2-மந்த்ரங்களால் க்ரமமாய்ச் சேர்க்கவும். மாதாவின் அர்க்யத்தையும் ஷ்டி ருக்குகளால் மாத்ராத்யர்க்யங்களில் சேர்க்கவும். இவ்விதம் மூன்றுகச் செய்யப்பட்ட பிண்டத்தை மூன்று பிண்டங்களிலும் க்ரமமாகச் சேர்க்கவும். மாதா பிதாக்களின் ஸங்காத மரணத்திலும் அனுகமன விதியே சொல்லப்பட்டு உள்ளது. இவ்விதம் சொல்லியது, "தைவமும் பித்ர்யமும் ஒன்று. நிமித்தம் ஒவ்வொருவருக்கும் தனி. பிண்டத்தைக் கொடுத்து அவளுடைய அர்க்யத்தைப் பர்த்தாவின் பாத்ரத்தில் சேர்த்து" என்பது முதலாகிய வசநங்களுடன் விரோதிப்பதாலும், சிஷ்டாசாரம் இல்லாததாலும் உபேக்ஷிக்கத் தக்கது ஆகும்.

गालवः — एकचित्यां समारूढौ दम्पती निधनं गतौ । एकोद्दिष्टं षोडशं च भर्तुरेकादशेऽहनि । द्वादशेऽहनि सम्प्राप्ते पिण्डमेकं द्वयोः क्षिपेत् । पितृपिण्डेन संयोज्य मातृपिण्डं पुनस्तथा । पितामहादि पिण्डेषु विभज्य विनियोजयेत् इति । वसिष्ठस्तु — अनुयाने तु पतिना सपिण्डीकरणं सह । अन्तर्धाय तृणं मध्ये भर्तृश्वशुरयोरपि इति । यमोऽपि — तूष्णीं दम्पतिपिण्डार्थं कुशैरन्तरयन् पितॄन् । श्वशुरस्याग्रतो यस्माच्छिरः प्रच्छादनक्रिया । पुत्रैर्दर्भेण सा कार्या मातुरभ्युदयार्थिभिः इति ।

காலவர்:- மரித்த தம்பதிகள், ஒரு சிதையில் ஸம்ஸ்கரிக்கப்பட்டால், ஏகோத்திஷ்டமும் ஷோடசமும் பர்த்தாவின் 11-ஆவது தினத்தில், 12-ஆவது நாளில் இருவருக்கும் ஒவ்வொரு பிண்டத்தைக் கொடுக்கவும். மாத்ரு பிண்டத்தைப் பித்ரு பிண்டத்துடன் சேர்த்து, அதை மூன்று பாகமாகச் செய்து பிதாமஹாதி பிண்டங்களுடன் சேர்க்கவும். வஸிஷ்டரோவெனில்:- அனுமரண விஷயத்திலோ வெனில், பதியுடன் சேர்ந்து ஸபிண்டீகரணம். பர்த்தா, ச்வசுரன் இருவருக்கும் நடுவில்

த்ருணத்தைப் (தர்ப்பத்தை) போட்டுச் செய்யவும். **யமனும்:-** தம்பதிகளுக்குப் பிண்டம் கொடுப்பதற்காக மந்த்ரம் இல்லாமல் குசங்களால் பித்ரு பிண்டங்களை மறைக்கவும். மாமனார் முன்னிலையில் மர்யாதைக்காகச் சிரஸ்ஸை மூடிக் கொள்வது வழக்கமானதால், நன்மையை விரும்பும் புத்ரர்கள் தர்ப்பங்களால் மாதாவின் நடுவில் மறைவைச் செய்ய வேண்டும்.

बहुपत्न्यनुमरणे तु — निमित्तपिण्डमेकैकं दत्वा तैः संसृजेत् क्रमात् इति स्मरणात् प्रतिपत्न्येकैकं पिण्डं दत्वा ज्यैष्ठ्यक्रमाद्विभज्य मन्त्रावृत्त्या संसृजेत्, बहुपत्नीकपक्षे तु मन्त्रावृत्तिः पुनः पुनः । विभज्य पिण्डं दद्यात्तु गार्ग्यस्य वचनं तथा इति स्मरणाच्च ।

அநேகம் பத்னிகளின் அனுமரண விஷயத்திலோ வெனில், ''நிமித்த பிண்டத்தைத் தனித்தனியாகக் கொடுத்து, அவைகளுடன் க்ரமமாய்ச் சேர்க்க வேண்டும்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால், ஒவ்வொரு பத்னிக்கும் ஒவ்வொரு பிண்டத்தைக் கொடுத்து, ஜ்யேஷ்ட க்ரமமாய் விபாகம் செய்து, மந்த்ரத்தை ஆவ்ருத்தி செய்து ஸம்ஸர்க்கம் செய்யவும். ''அநேக பத்னிகளுள்ளவன் விஷயத்தில் அடிக்கடி மந்த்ராவ்ருத்தி, பிண்டத்தை விபாகம் செய்து சேர்க்கவும்''என்று கார்க்யரின் வாக்யம் என்று ஸ்ம்ருதி உள்ளது. மாதா பிதாக்களுக்குச் சேர்ந்து மரண விஷயத்திலும், மாதாவின் பிண்டத்தைப் பித்ரு பிண்டத்துடன் சேர்த்து, அந்தப் பிண்டத்தை மூன்று பாகமாக்கி, பிதாமஹாதி பிண்டங்கள் மூன்றில் சேர்க்கவும். 'மாதா பிதாக்களுக்கு ஸங்காத மரணமாகில் அனுகமனவிதி விதிக்கப்பட்டுள்ளது. மற்ற விஷயத்தில் தனியாகவே செய்யவும் என்றார் பிதாமஹர்' எனறு ஸ்ம்ருதி.

स्मृत्यर्थसारे — अनुमरणे सहमरणे च तस्या अर्घ्यपिण्डौ पत्युरर्घ्य पिण्डाभ्यां पूर्वं संसृज्य पश्चादर्घ्यपिण्डौ त्रिधा विभज्य

पित्राद्यर्घ्यपिण्डैः पूर्ववत् संसृजेत् इति। एवञ्च पितुः सपिण्डीकरणे प्रेतार्घ्यपिण्डौ त्रिधा विभज्य पित्राद्यर्घ्यपिण्डैः संसृजेत्। (मातुः सपिण्डीकरणे प्रेतार्घ्यं पित्राद्यर्घ्यैः संसृज्य प्रेतपिण्डं पितामह्यादि पिण्डैः संसृजेत्) प्रमीतपितृकस्तु पित्रादिपिण्डैः पितामह्यादि-पिण्डैर्वा संसृजेत्, पितामह्यादिपिण्डसंसर्गः शिष्टाचारानुगुणः। अनुमरणे सहमरणे च तस्या अर्घ्यपिण्डौ पत्युरर्घ्यपिण्डाभ्यां पूर्वं संसृज्य पश्चादर्घ्यं पिण्डौ त्रेधा विभज्य पित्राद्यर्घ्यपिण्डैः पूर्ववत् संसृजेदिति विवेकः।

**ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:-** *அனுமரணத்திலும், சேர்ந்து மரணத்திலும், ஸ்த்ரீயின் அர்க்ய பிண்டங்களைப் பதியின் அர்க்ய பிண்டங்களுடன் முதலில் சேர்த்து, பிறகு அந்த அர்க்ய பிண்டங்களை மூன்றாகப் பிரித்து, பித்ராதிகளின் அர்க்ய பிண்டங்களுடன் முன் போல் சேர்க்கவும். இவ்விதம் இருப்பதால், பிதாவின் ஸபிண்டீகரணத்தில் ப்ரேதனின் அர்க்ய பிண்டங்களை மூன்றாகப் பிரித்து, பிதா முதலியவரின் அர்க்ய பிண்டங்களுடன் சேர்க்கவும். 'மாதாவின் ஸபிண்டீகரணத்தில் ப்ரேத அர்க்யத்தைப் பித்ராதிகளின் அர்க்யங்களுடன் சேர்த்து, ப்ரேத பிண்டத்தைப் பிதாமஹ்யாதி பிண்டங்களுடன் சேர்க்கவும்.' பிதா இறந்தவனானால் பித்ராதி பிண்டங்களோடாவது, பிதாமஹ்யாதி பிண்டங்களோடாவது சேர்க்கவும். பிதாமஹ்யாதி பிண்டங்களுடன் சேர்ப்பதே சிஷ்டாசாரத்திற்கு ஏற்றது. அனுமரணத்திலும் ஸஹமரணத்திலும், அவளின் அர்க்ய பிண்டங்களைப் பதியின் அர்க்ய பிண்டங்களுடன் முதலில் சேர்த்து, பிறகு அர்க்ய பிண்டங்களை மூன்றாகப் பிரித்து, பித்ராதிகளின் அர்க்ய பிண்டங்களுடன் முன் போல் சேர்க்கவும் என்பது விளக்கம்.*

तथा च— पितामह्यादिभिः सार्धं सपिण्डीकरणं स्मृतम् इति पूर्वोक्तशङ्खादिवचनानि तत्तत्पिण्डसंसर्गाभिप्रायाणि न तु श्राद्धदेवताप्रदिपादनपराणि, श्राद्धदेवतास्तु सर्वत्र पित्रादयः, त एव भोजनीयाः । तथा विज्ञानेश्वरः — सपिण्डीकरणश्राद्धं देवपूर्वं नियोजयेत् । पितॄनेवाशयेत्तत्र पुनः प्रेतं च निर्दिशेत् इति ।

*அவ்விதமே, 'பிதாமஹீ முதலியவருடன் ஸபிண்டீகரணம் விதிக்கப்பட்டு உள்ளது' என்று முன் சொல்லப்பட்ட சங்கர் முதலியவரின் வசனங்கள், அந்தந்தப் பிண்டங்களுடன் ஸம்ஸர்க்கத்தில் தாத்பர்யத்தை உடையவைகளே, இதன்றி ச்ராத்த தேவதைகளைச் சொல்வதில் தாத்பர்யம் உள்ளவைகள் அல்ல. ச்ராத்த தேவதைகளோ வெனில் பிதா முதலியவர்கள். அவர்களே புஜிப்பிக்கத் தக்கவர்கள். அவ்விதம், விஜ்ஞாநேச்வரர்:- ஸபிண்டீகரண ச்ராத்தத்தைச் தேவபூர்வமாய் வரிக்கவும். அதில் பித்ருக்களையே புஜிப்பிக்கவும். மறுபடி ப்ரேதனை வரிக்கவும்.*

स्मृत्यन्तरे च — मातुः पितुश्च सापिण्ड्ये पित्रादीनेव भोजयेत् । पितामह्यादिभिः सार्धं मातुः कुर्यान्मृतेऽहनि इति । अन्यत्रापि — सापिण्ड्ये ह्युभयत्रापि पितरश्चैव देवताः । स्त्रीणामर्घ्यं तु पित्रादौ नयेत्पिण्डांस्त्रियादिषु इति । पित्रादीनां भोजनविधानात्तेषामेवार्घ्यसद्भावात् स्त्रीमृतौ प्रेतार्घ्यं पित्राद्यर्घ्यैः संसृजेत्, पितामह्यादेर्भोजनाभावेऽपि पिण्डदानविधानात् स्त्रीपिण्डं पितामह्यादिपिण्डेष्वेव योजयेदित्यर्थः ।

**மற்றொரு ஸ்ம்ருதியிலும்:-** *மாதா, பிதா இவர்களின் ஸாபிண்ட்யத்தில் பிதா முதலியவர்களையே புஜிப்பிக்கவும். மாதாவின் ம்ருதாஹ ச்ராத்தத்தில் பிதாமஹீ முதலியவருடன் சேர்த்துச் செய்யவும்.* **மற்றொரு**

ஸ்ம்ருதியிலும்:- "ஸாபிண்ட்யம் இரண்டிலும் பித்ராதிகளே தேவதைகள். ஸ்த்ரீகளின் அர்க்யத்தைப் பித்ராதிகளின் அர்க்யத்தில் சேர்க்கவும். பிண்டத்தை ஸ்த்ரீகளின் பிண்டங்களில் சேர்க்கவும்." பித்ராதிகளுக்குப் போஜனம் விதிக்கப்பட்டு இருப்பதால், அவர்களுக்கே அர்க்யம் இருப்பதால், ஸ்த்ரீ ம்ருதியில் ப்ரேத அர்க்யத்தைப் பித்ராத்யர்க்யங்களுடன் சேர்க்க வேண்டும். பிதாமஹீ முதலியவர்க்குப் போஜனம் இல்லாவிடினும் பிண்டதான விதி இருப்பதால் மாத்ரு பிண்டத்தைப் பிதாமஹ்யாதி பிண்டங்களிலேயே சேர்க்க வேண்டும் என்பது பொருள்.

स्मृत्यन्तरे — स्त्रीमृताहे स्त्रियो भोज्याः पितरः स्त्रीसपिण्डने । पित्रादेरेव होमः स्यात् पिण्डदानं तु वर्गयोः इति । पितरः - जीवपितृकस्य पितामहादयस्त्रयः । प्रमीतपितृकस्य पित्रादयस्त्रयः श्राद्धदेवताः, तेषामेव भोजनं होमश्च, होममन्त्रेषु च ऊहोऽस्ति, पिण्डदानं तु पित्रादेः पितामह्यादीनां तिसृणां चेत्यर्थः । रुद्रस्कन्दे च — स्त्रीणां सापिण्ड्ये भर्तुः पित्रादिभ्यः पिण्डं दद्यात्तथैव तेषां स्त्रीभ्यः इति । अतः पितामह्यादीनां भोजनाभावेऽपि पिण्डदानसद्भावात् पितामह्यादिपिण्डैर्मातृपिण्ड-संयोगो युज्यते ॥

ஓர் ஸ்ம்ருதியில்:- ஸ்த்ரீ ம்ருதாஹத்தில் ஸ்த்ரீகளைப் புஜிப்பிக்கவும். ஸ்த்ரீ ஸாபிண்ட்யத்தில் பித்ராதிகளைப் புஜிப்பிக்கவும். ஹோமம் பிதா முதலியவர்க்கே. பிண்டதானமோ வெனில் இரண்டு வர்க்கங்களுக்கும். மூலத்திலுள்ள 'பிதர:' என்பதால், ஜீவபிதாவாய் உள்ளவனுக்குப் பிதாமஹன் முதலிய மூவரும், அஜீவபித்ருகனுக்குப் பிதா முதலிய மூவரும் ச்ராத்த தேவதைகளாம். அவர்களுக்கே போஜனமும் ஹோமமும். ஹோம மந்த்ரங்களில் ஊஹம் உண்டு. பிண்டதானமோ

வெனில் பிதா முதலியவர்க்கும், பிதாமஹீ முதலிய மூவர்க்கும் என்பது பொருள். ருத்ரஸ்கந்தத்திலும்:- ''ஸ்த்ரீகளின் ஸாபிண்ட்யத்தில் பர்த்தாவின் பித்ராதிகளுக்குப் பிண்டத்தைக் கொடுக்கவும். அவ்விதமே அவர்களின் ஸ்த்ரீகளுக்கும் கொடுக்கவும்.'' ஆகையால் பிதாமஹீ முதலியவர்க்குப் போஜனம் இல்லாவிடினும் பிண்டதானம் இருப்பதால், பிதாமஹ்யாதி பிண்டங்களுடன் மாத்ரு பிண்ட ஸம்யோகம் உபபன்னம் ஆகிறது.

तथा च पितृमेधसारे — पुंसः स्त्रिया वा सापिण्ड्ये पित्रादीनेव वृणुयात्, पुंसः पिण्डं पित्रादिपिण्डैः संसृजेत्, स्त्रियः पिण्डं श्वश्र्वादिपिण्डैरेवानुमृतौ पत्या इति । अत्र केचिदाहुः — पितामह्यादिभिः सार्धं सपिण्डीकरणं स्मृतम् इति शङ्खादिवचनानि मातृसापिण्ड्ये पितामह्यादिभोजनपराणि, न तु पिण्डसंसर्गमात्राभिप्रायाणि, पितॄनेवाशयेत्तत्र इत्यादीनि तु अनुमृतिविषयाणि, अनुयाने पित्रादिपिण्डेष्वेव तत्पिण्डसंयोग-विधानात् भोजनमपि तेषां तत्र युज्यते इति ।

பித்ருமேதஸாரத்தில்:- புருஷனுடைய ஸாபிண்ட்யத்திலும், ஸ்த்ரீயினுடைய ஸாபிண்ட்யத்திலும் பித்ராதிகளையே வரிக்கவும். புருஷனின் பிண்டத்தைப் பித்ராதி பிண்டங்களுடன் சேர்க்கவும். ஸ்த்ரீயின் பிண்டத்தை அவளது மாமியார் முதலியவரின் பிண்டங்களுடன் சேர்க்கவும். அனுமரண விஷயத்தில் பதிபிண்டத்துடன் சேர்க்கவும். இதில் சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர்:- ''பிதாமஹ்யாதிபிஸ் ஸார்த்தம் ஸபிண்டீகரணம் ஸ்ம்ருதம்'' என்ற சங்கர் முதலியவரின் வசனங்கள், மாத்ரு ஸாபிண்ட்யத்தில் பிதாமஹ்யாதி களுக்குப் போஜன விதியில் தாத்பர்யம் உள்ளவை, பிண்ட ஸம்ஸர்க்கத்தை மட்டில் விதிப்பதில் அபிப்ராயம்

உள்ளவை அல்ல. 'பித்ரூநேவாசயேத்தத்ர' என்பது முதலிய வசனங்களிலோ வெனில் அனுமரணத்தைப் பற்றியவை. அனுமரணத்தில் பித்ராதி பிண்டங்களிலேயே ஸ்த்ரீபிண்ட ஸம்யோகம் விதிக்கப்பட்டு இருப்பதால் போஜனமும் அவர்களுக்கு யுக்தம் என்கிறது'' என்று.

अपरे पुनराहुः — सपिण्डीकरणं पित्रोः पितृयज्ञविधानतः इति स्मरणात् पिण्डपितृयज्ञे च पिण्डत्रयविधानात् पिण्डपितृयज्ञे च पिण्डत्रविधानात् तिलयुक्तेन चान्नेन पिण्डांस्त्रीनेव पुत्रकः। पितॄनुद्दिश्य दर्भेषु कुर्यादुच्छिष्टसन्निधौ इति विधानात्, कात्यायनाश्वलायनादिभिश्च पिण्डपितृयज्ञप्रकारेण पार्वण पिण्ड-विधानात्, तत्र पित्रादीनां भोजने पितामह्यादीनां पिण्डदानस्या-नौचित्यात्, पिण्डपितृयज्ञविधानेनानुष्ठातॄणां मातृसापिण्ड्ये पितामह्यादीनामेव भोजनम्, पितामह्यादि पिण्डैरेव मातृपिण्ड-संसर्गः पितामह्यादिभिः सार्धं सपिण्डीकरणं स्मृतम् इत्यादीनि च पिण्डत्रयवतां पितामह्यादि भोजनपिण्डदानतत्संसर्गपराणि। पितॄनेवाशयेत्तत्र इत्यादीनि तु पिण्डषट्कवतां पित्रादिभोजन-पराणि। पितामह्यादिभिः सार्धम् इति वचनात् पितामह्यादिभिः सह पिण्डसंसर्गः इति।

மற்றும் சிலரோ வெனில் இவ்விதம் சொல்லுகின்றனர்:- ''ஸபிண்டீகரணம் பித்ரோ: பித்ருயஜ்ஞவிதாநத:''' என்று ஸ்ம்ருதி இருப்பதால், பிண்ட பித்ரு யஜ்ஞத்தில் மூன்று பிண்டங்கள் விதிக்கப்பட்டு இருப்பதால் 'திலயுக்தேந சான்னேன பிண்டான் த்ரீநேவ புத்ரக:. பித்ரூனுத்திச்ய தர்ப்பேஷு குர்யாதுச்சிஷ்ட ஸன்னிதௌ' என்று விதி இருப்பதால், காத்யாயனர், ஆச்வலாயனர் முதலியவர்களாலும் பிண்ட பித்ரு யஜ்ஞ ப்ரகாரமாய்ப் பார்வண பிண்டங்கள் விதிக்கப்பட்டு இருப்பதால், அதில் பித்ராதிகளுக்குப்

போஜனம் ஆகும் போது பிதாமஹீ முதலியவர்க்குப் பிண்டதானம் என்பது உசிதம் ஆகாததால், பிண்ட பித்ரு யஜ்ஞ விதானமாய் அனுஷ்டிப்பவர்களுக்கு மாத்ரு ஸாபிண்ட்யத்தில் பிதாமஹீ முதலியவர்க்கே போஜனம், பிதாமஹ்யாதி பிண்டங்களுடனேயே மாத்ரு பிண்ட ஸம்யோகம். 'பிதாமஹ்யாதிபிஸ் ஸார்த்தம் ஸபிண்டீ கரணம் ஸ்ம்ருதம்' என்பது முதலிய வசனங்களும், பிதாமஹீ முதலியவர்க்குப் போஜனம் பிண்ட தானம் அவைகளுடன் ஸம்ஸர்க்கம் என்றதில் தாத்பர்யம் உள்ளவை. 'பித்ரூநேவாசயேத் தத்ர' என்பது முதலிய வசனங்களோ வெனில், 6-பிண்டம் உள்ளவர்கள் பித்ராதிகளைப் புஜிப்பிக்க வேண்டும் என்பதில் தாத்பர்யமுள்ளவைகள். 'பிதாமஹ்யாதிபிஸ் ஸார்த்தம்' என்ற வசனம் இருப்பதால் பிதாமஹீ முதலியவருடன் பிண்ட ஸம்யோகம்'' என்று.

यथाकुलाचारमिह व्यवस्था । यत्र शास्त्रगतिर्भिन्ना सर्वकर्मसु भारत । उदितेऽनुदिते चैव होमभेदो यथा भवेत् । तस्मात् कुलक्रमायातमाचारं त्वाचरेद्बुधः । स गरीयान् महाबाहो सर्वशास्त्रोदितादपि इति सुमन्तुस्मरणात् । पुत्रिकासुतो मातृसपिण्डनं मातामहादिभिः सह कुर्यात् । तथा बोधायनः — आदिशेत् प्रथमे पिण्डे मातरं पुत्रिकासुतः । द्वितीये पितरं तस्यास्तृतीये च पितामहम् इति ।

இவ்விஷயத்தில் அவரவர் குலாசாரப்படி வ்யவஸ்தை என்றறியவும். 'ஓ பாரத ! எக்காரணத்தால் எல்லாக் கார்யங்களிலும் சாஸ்த்ர மார்க்கம் பேதம் உள்ளதாக இருக்கிறதோ, உதயத்திற்குப் பிறகு ஹோமம் என்றும், உதயத்திற்கு முன் ஹோமம் என்றும் எப்படியோ அது போல். அக்காரணத்தால், அறிந்தவன் குலக்ரமமாய் அனுஷ்டிக்கப்பட்டு வந்த ஆசாரத்தை ஆசரிக்க வேண்டும்.

எல்லா சாஸ்த்ரங்களாலும் சொல்லப்பட்டதை விட அது பெரியதாகும்' என்று ஸுமந்து ஸ்ம்ருதி உள்ளது. புத்ரிகாபுத்ரன் மாத்ரு ஸாபிண்ட்யத்தை மாதாமஹாதிகளுடன் செய்ய வேண்டும். அவ்விதம், **போதாயனர்:-** புத்ரிகாபுத்ரன் முதல் பிண்டத்தில் மாதாவைச் சொல்ல வேண்டும். 2-ஆவது பிண்டத்தில் அவளது பிதாவையும், 3-ஆவது பிண்டத்தில் அவளது பிதாமஹனையும் சொல்ல வேண்டும்.

व्याघ्रपादोऽपि — मातुः प्रथमतः पिण्डं निर्वपेत् पुत्रिकासुतः । द्वितीयं तु पितुस्तस्यास्तृतीयं तु पितुः पितुः इति । सुमन्तुरपि — पिता पितामहे योज्यः पूर्णे संवत्सरे सुतैः । माता मातामहे योज्या तद्वदित्याह भार्गवः इति । उशना अपि — तैः । मातुर्मातामहे तद्वदेषा कार्या सपिण्डता इति । व्याघ्रः — पत्या सहैकता तावद्यावत् पुत्रो न जायते । पुत्रिकासुत उत्पन्ने पत्यैकत्वं निवर्तते इति ।

**வ்யாக்ரபாதரும்:-** புத்ரிகாபுத்ரன், முதல் பிண்டத்தை மாதாவுக்கும், 2-ஆவது பிண்டத்தை அவளது பிதாவுக்கும், 3-ஆவது பிண்டத்தை அவளது பிதாமஹனுக்கும் கொடுக்க வேண்டும். **ஸுமந்துவும்:-** 'புத்ரர்கள், பிதாவைப் பிதாமஹன் இடத்தில் சேர்க்க வேண்டும், வர்ஷாந்தத்தில் மாதாவை மாதாமஹன் இடத்தில் சேர்க்கவும்' என்றார் பார்க்கவர். **உசனஸ்ஸும்:-** வர்ஷாந்தத்தில் புத்ரர்கள் பிதாவுக்குப் பிதாமஹன் இடத்தில் எப்படியோ அப்படி மாதாவுக்கு மாதாமஹன் இடத்தில் ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும். **வ்யாக்ரர்:-** புத்ரிகைக்குப் பதியுடன் ஏகத்வம் என்பது புத்ரன் பிறக்கும் வரையிலேயே. புத்ரன் பிறந்து விட்டால் பதியுடன் ஐக்யம் நிவ்ருத்திக்கின்றது.

बोधायनः — कोकिलस्य यथा पुत्रा अन्यसम्बन्धजीविनः ।

पुष्टास्ते स्वकुलं यान्ति सपुत्रा पुत्रिका तथा । मातुर्मातुः पितुर्नित्यं तस्याश्चैव पितुः पितुः । प्रदद्यात् पुत्रिकापुत्रः पिण्डदाने त्वयं विधिः इति । एतत् सर्वं ब्राह्मादिविवाहेषु द्रष्टव्यम् । आसुरादिविवाहेषु विकल्पमाह, शातातपः — तन्मात्रा तत्पितामह्या तच्छ्वश्र्वा वा सपिण्डनम् । आसुरादिविवाहेषु वर्णानां योषितां भवेत् इति । स्मृत्यन्तरे — मातुः सपिण्डीकरणं मातामह्यादिभिः स्मृतम् । पितामह्यादिभिर्वाऽपि ह्यासुराद्या-गतासुतः इति ।

**போதாயனர்:-** எப்படி குயிலின் குஞ்சுகள் பிறரின் ஸம்பந்தத்தால் ஜீவித்துப் பருத்த பிறகு தனது கூட்டத்தை அடைகின்றனவோ, அது போல் புத்ரிகையும் புத்ரனுடன் தன் குலத்தை அடைகிறாள். புத்ரிகாபுத்ரன் மாதாவுக்கும் அவளது பிதாவுக்கும் அவளது பிதாமஹனுக்கும் பிண்டத்தைக் கொடுக்க வேண்டும். பிண்ட தானத்தில் இதுவே விதியாம். இதெல்லாம் ப்ராம்ஹாதி விவாஹங்களில் என்று அறியவும். ஆஸுராதி விவாஹங்களில் விகல்பத்தைச் சொல்லுகிறார். **சாதாதபர்:-** ஆஸுராதி விவாஹங்களில் எல்லா வர்ணத்தாருக்கும் ஸ்த்ரீகளின் ஸாபிண்ட்யத்தை அவளது மாதாவுடன் அல்லது அவளது பிதாமஹியுடன், அல்லது அவளது மாமியாருடன் செய்ய வேண்டும். **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** ஆஸுராதி விவாஹத்தால் வந்தவளது புத்ரன், மாதாவின் ஸபிண்டீகரணத்தை மாதாமஹி முதலியவர்களுடன் செய்ய வேண்டும் அல்லது பிதாமஹி முதலியவருடன் செய்யவும்.

विज्ञानेश्वरः - मातुः सपिण्डीकरणं पित्रैकेन त्रिभिश्च वा । आसुराद्यागतापुत्रः पितामह्यादिभिस्तु वा इति । पित्रैकेनेत्यनुमृतिविषयम्, तच्चोक्तप्रकारं द्रष्टव्यम् । चन्द्रिकायाम्

— पितामह्यादिभिर्धर्म्यं विवाहोढस्त्रियाः सुतः । पितृपक्षैर्मातृ-पक्षैरासुराद्यागतासुतः । विवाहपुत्रभेदेन तद्गोत्रं च व्यवस्थितम् इति । पितृमेधसारे तु — आसुरादिविवाहेऽपि पितामह्यादिभिरेव वचनादाचाराद्विकल्प स्मरणाच्च इति ।

**விஜ்ஞாநேச்வரர்:-** *மாதாமஹனுடன் மாதாவுக்கு ஸாபிண்ட்யம் செய்தால், மாதாமஹ ச்ராத்தம் பித்ரு ச்ராத்தம் போல் நித்யமாகவே ஆகும். பிதாவுடனோ, பிதாமஹியுடனோ மாதாவுக்கு ஸாபிண்ட்யம் ஆனால் மாதாமஹ ச்ராத்தம் நித்யமல்ல. செய்தால் நன்மை உண்டு, செய்யாவிடில் தோஷம் இல்லை.* **யமனும்:-** *ஆஸுராதி விவாஹத்தால் வந்தவளின் புத்ரன் மாதாவின் ஸாபிண்ட்யத்தைப் பிதா ஒருவனோடாவது மூன்று பேர்களுடனாவது பிதாமஹீ முதலியவர்களுடனாவது செய்யவும். 'பிதாவோடு மட்டில் என்றது அனுமரணத்தைப் பற்றியது. அது முன் சொல்லப்பட்டபடி என்று அறியவும்.* **சந்த்ரிகையில்:-** *தர்ம்ய விவாஹத்தால் மணக்கப்பட்டவளின் புத்ரன் மாத்ரு ஸாபிண்ட்யத்தை பிதாமஹி முதலியவர்களோடு செய்யவும். ஆஸுராதி விவாஹத்தால் மணக்கப்பட்டவளின் புத்ரன் பிதா முதலியவரின் பக்ஷத்தினருடனாவது மாதாவின் பக்ஷத்தைச் சேர்ந்தவர்களுடனாவது செய்யவும். விவாஹ பேதத்தாலும் புத்ர பேதத்தாலும் அவனது கோத்ரமும் வ்யவஸ்தை செய்யப்பட்டு உள்ளது.* **பித்ருமேத ஸாரத்திலோ வெனில்:-** *ஆஸுராதி விவாஹத்திலும் பிதாமஹி முதலியவருடனேயே ஸம்ஸர்கம். அவ்விதம் வசனம் இருப்பதாலும் ஆசாரம் இருப்பதாலும் விகல்பம் சொல்லப்பட்டு இருப்பதாலும் என்று உள்ளது.*

पितामह्यादिपिण्डैरेव हि मातृपिण्डं शिष्टाः संयोजयन्ति, किञ्च आपस्तम्बेन दुहितृमतेऽतिरथं शतं देयम् इति कन्याधिगमार्थद्रव्यदान विधानात् भिक्षणे निमित्तमाचार्यो विवाहः

इति द्रव्यार्जननिमित्ते विवाहस्य परिगणनात्, गौतमेन च षडित्येके इति पञ्चमविवाहस्य चासुरस्य धर्म्यत्वस्मरणात्, पितामह्यादि-भिर्धर्म्यविवाहोढस्त्रियास्सुतः इति वचनाच्च पितामह्यादिपिण्डैरेव मातृपिण्डसंयोगः । पितृपक्षैर्मातृ पक्षैरा-सुराद्यागतासुतः इति विकल्प स्मरणेऽपि वैकल्पिकधर्मेष्वा-चारस्यैव व्यवस्थापकत्वात् पितृपक्षैः पितामह्यादिभिरेव पिण्डसंयोग इत्याहुः ।

பிதாமஹ்யாதி பிண்டங்களுடனேயே மாத்ரு பிண்டத்தைச் சிஷ்டர்கள் சேர்க்கிறார்கள், இன்னும் ஆபஸ்தம்பரால், 'பெண்ணின் பிதாவுக்கு ஒரு ரதத்துடன் 100-பசுக்களைக் கொடுக்க வேண்டும்' என்று, கன்யையைப் பெறுவதற்காக த்ரவ்யதானம் விதிக்கப்பட்டு இருப்பதாலும், 'யாசிப்பதற்குக் காரணம் ஆசார்யன் விவாஹம்' என்று த்ரவ்யார்ஜன நிமித்தங்களில் விவாஹமும் சேர்க்கப்பட்டு இருப்பதாலும், கௌதமராலும் 'ஆறு விவாஹங்களும் தர்மயங்கள் என்று சிலர்' என்று ஐந்தாவது விவாஹமான ஆஸுர விவாஹமும் தர்ம்யம் என்று சொல்லப்பட்டு இருப்பதாலும் 'தர்ம்ய விவாஹத்தால் விவாஹிக்கப்பட்டவளின் புத்ரன் பிதாமஹீ முதலியவர்களுடன் சேர்க்க வேண்டும்' என்ற வசனத்தாலும், பிதாமஹீ முதலியவரின் பிண்டங்களுடனேயே மாத்ரு பிண்டஸம்யோகம் செய்யப்பட வேண்டும். ஆஸுராதி விவாஹோடா புத்ரன் பிதாமஹ்யாதிகளுடனாவது, மாத்ரு பக்ஷத்தைச் சேர்ந்தவர்களுடனாவது சேர்க்கலாம் என்று விகல்ப ஸ்ம்ருதி இருந்தாலும், விகல்ப்ப ப்ராப்தமான தர்மங்களில் ஆசாரத்தாலேயே வ்யவஸ்தையே என்றிருப்பதால், பித்ரு பக்ஷத்திய பிதாமஹீ முதலியவருடனேயே பிண்ட ஸம்யோகம் செய்யப்பட வேண்டும் என்கின்றனர் (அறிந்தவர்கள்).

मातुः सापिण्ड्ये गोत्रनियमः ।

मातुः सापिण्ड्ये गोत्रनियममाह मार्कण्डेयः — ब्राह्मादिषु विवाहेषु या चोढा कन्यका भवेत् । भर्तृगोत्रेण कर्तव्यास्तस्याः पिण्डोदकक्रियाः ॥ आसुरादिविवाहेषु पितृगोत्रेण धर्मवित् इति । ब्राह्मादिविवाहाभिप्रायेणाह शातातपः — स्वगोत्राद्भ्रश्यते नारी विवाहात् सप्तमे पदे । स्वामिगोत्रेण कर्तव्यास्तस्याः पिण्डोदकक्रियाः इति । बृहस्पतिरपि — पाणिग्रहणका मन्त्राः पितृगोत्रापहारकाः । भर्तृगोत्रेण नारीणां देयं पिण्डोदकं तथा इति । मनुरपि — पितृगोत्रं कुमारीणा मूढानां भर्तृगोत्रतः इति ।

**மாதாவின் ஸாபிண்ட்யத்தில் கோத்ர நியமம்.**

*மாதாவின் ஸாபிண்ட்யத்தில் கோத்ர நியமத்தைச் சொல்லுகிறார்* **மார்க்கண்டேயர்:-** *ப்ராம்ஹம் முதலிய விவாஹங்களில் மணக்கப்பட்டவள் எவளோ அவளுக்குப் பிண்டோதக க்ரியைகளைப் பர்த்தாவின் கோத்ரத்தால் செய்ய வேண்டும். ஆஸுரம் முதலிய விவாஹங்களில் மணக்கப்பட்டவளுக்குப் பிண்டோதக க்ரியைகளை, பித்ரு கோத்ரத்தால் செய்யவும். ப்ராம்ஹம் முதலிய விவாஹத்தின் அபிப்ராயத்தால் சொல்லுகிறார்* **சாதாதபர்:-** *ஸ்த்ரீயானவள், விவாஹத்தால் ஸப்தபதியானவுடன் பித்ரு கோத்ரத்தில் இருந்து விலகுகிறாள். (ஆகையால்) அவளுக்குப் பிண்டோதக க்ரியைகளைப் பர்த்தாவின் கோத்ரத்தால் செய்ய வேண்டும்.* **ப்ருஹஸ்பதியும்:-** *பாணிக்ரஹணத்தைச் சேர்ந்த மந்த்ரங்கள் பித்ரு கோத்ரத்தைப் போக்குகின்றவைகள் ஆகும். (ஆகையால்) ஸ்த்ரீகளுக்கு, பர்த்ரு கோத்ரத்தால் பிண்டோதகங்களைக் கொடுக்க வேண்டும்.* **மனுவும்:-** *விவாஹமாகாத குமாரிகளுக்குப் பித்ரு கோத்ரத்தாலும், விவாஹம் ஆகியவர்களுக்குப் பர்த்தாவின் கோத்ரத்தாலும்*

செய்யப்பட வேண்டும்.

आसुरादिविवाहाभिप्रायेण विज्ञानेश्वरीये — पितृगोत्रं समुत्सृज्य न कुर्याद्भर्तृगोत्रतः । जन्मन्यपि विपत्तौ च नारीणां पैतृकं कुलम् इति । लोकाक्षिः — मातामहस्य गोत्रेण मातुः पिण्डोदकक्रियाम् । कुर्वीत पुत्रिकापुत्र एवमाह प्रजापतिः इति ।

*ஆஸுராதி விவாஹ அபிப்ராயத்தால் சொல்லப்பட்டு உள்ளது விஜ்ஞாநேச்வரீயத்தில்:- பித்ரு கோத்ரத்தை விட்டு, பர்த்தாவின் கோத்ரத்தால் செய்யக் கூடாது. ஜநநத்திலும், மரணத்திலும் ஸ்த்ரீகளுக்குப் பித்ரு கோத்ரமே ஆகும். லோகாக்ஷி:- மாதாவுக்குப் பிண்டோதக க்ரியையை, மாதாமஹனின் கோத்ரத்தால் புத்ரிகாபுத்ரன் செய்ய வேண்டும் என்றார் ப்ரஜாபதி.*

कालादर्शेऽपि — विवाहपुत्रभेदेन तद्गोत्रं च व्यवस्थितम् इति । ब्राह्मादिविवाहभेदेन औरसपुत्रिकापुत्रभेदेन च, तद्गोत्रं - स्त्रीगोत्रम्, इति व्यवस्थितम् । ब्राह्मादि विवाह चतुष्टयोढायाः स्त्रियाः भर्तृगोत्रेण और्ध्वदैहिकं कार्यं, आसुरादिविवाह-चतुष्टयोढायाः स्त्रियाः पितृगोत्रेण । औरसपुत्रो भर्तृगोत्रेण, पुत्रिकापुत्रो मातामहगोत्रेण कुर्यादित्यर्थः ।

*காலாதர்சத்திலும்:- "விவாஹபேதம், புத்ரபேதம் இவைகளைக் கொண்டு ஸ்த்ரீகளின் கோத்ரம் வ்யவஸ்தை செய்யப்பட்டு உள்ளது." ப்ராம்ஹாதி விவாஹ பேதத்தாலும், ஔரஸன், புத்ரிகாபுத்ரன் என்ற பேதத்தாலும் ஸ்த்ரீயின் கோத்ரம் வ்யவஸ்தை செய்யப்பட்டு உள்ளது. ப்ராம்ஹம் முதலிய நான்கு விவாஹங்களால் மணக்கப்பட்ட ஸ்த்ரீக்குப் பர்த்ரு கோத்ரத்தால் ப்ரேத க்ரியை செய்யப்பட வேண்டும். ஆஸுரம் முதலிய நான்கு விவாஹங்களால் மணக்கப்பட்டவளுக்குப் பிதாவின் கோத்ரத்தால் செய்ய*

வேண்டும். ஔரஸ புத்ரன் பர்த்ரு கோத்ரத்தால் செய்ய வேண்டும். புத்ரிகா புத்ரன் மாதாமஹ கோத்ரத்தால் செய்ய வேண்டும் என்பது பொருள்.

एतच्च — अभ्रातृकां प्रदास्यामि तुभ्यं कन्यामलङ्कृताम् । अस्यां यो जायते पुत्रः स मे पुत्रो भवेदिति इति वसिष्ठोक्तप्रकारेण दाने मातामहगोत्रत्वं, अपुत्रोऽहं प्रदास्यामि तुभ्यं कन्यां भवानपि। पुत्रार्थी चेदिहोत्पन्नः स नौ पुत्रो भवेदिति इति कात्यायनोक्त-प्रकारेणोढाया मातुर्मातामहगोत्रेण पितृगोत्रेण वा कुर्यात् । एवं पुत्रिकापुत्रस्य मातामहसम्बन्धे तद्गोत्रत्वम्, उभयसम्बन्धे गोत्रविकल्पश्च सिद्धः ।

இதுவும், 'ப்ராதா இல்லாத இந்தப் பெண்ணை உனக்குக் கொடுக்கிறேன், இவள் இடத்தில் பிறக்கும் புத்ரன் எவனோ அவன் எனக்குப் புத்ரனாக வேண்டும்' என்று வஸிஷ்டர் சொல்லியபடி தானம் செய்து இருக்கும் விஷயத்தில் மாதாமஹ கோத்ரம். 'புத்ரன் இல்லாத நான் உனக்குப் பெண்ணைக் கொடுக்கிறேன். நீயும் புத்ரனை விரும்பியவனாகில் இவளிடம் பிறந்த பிள்ளை நம் இருவருக்கும் புத்ரனாக வேண்டும்' என்று காத்யாயனர் சொல்லியபடி மணக்கப்பட்டவளான மாதாவுக்கு மாதாமஹ கோத்ரத்தாலாவது பித்ரு கோத்ரத்தாலாவது செய்யவும். இவ்விதம் புத்ரிகா புத்ரனுக்கு மாதாமஹ ஸம்பந்தமாகில் மாதாமஹ கோத்ரத்வம். இருவருடைய ஸம்பந்தமுமாகில் கோத்ரத்தில் விகல்ப்பம் என்பது ஸித்தித்து உள்ளது.

तथा कालादर्शे — कुर्यान्मातामहश्राद्धं नियमात् पुत्रिकासुतः । उभयोरपि सम्बन्धे कुर्यात् स उभयोरपि इति । वृद्धहारीतश्च — उभयोरपि सम्बन्धे यस्मादुभयगोत्रता इति । दत्तस्य प्रतिग्रहीतृगोत्रमेव, गोत्रान्तरप्रविष्टानां दायमाशौचमेव च ।

ज्ञातित्वं च निवर्तन्ते तत्कुले सर्वमिष्यते इति स्मरणात् । यत्तु पैठीनसिवचनम् – अथ दत्तकृत्रिमपुत्रिकापुत्रक्षेत्रजाः परिग्रहेणार्षेण जाता व्यामुष्यायणका भवन्ति इति, तत् उपनयनानन्तरं गोत्रान्तरे यो दत्तस्तद्विषयमित्यधस्तात् निरूपितम् ।

காலாதர்சத்தில்:- புத்ரிகா புத்ரன் மாதாமஹ ச்ராத்தத்தை அவச்யம் செய்ய வேண்டும். அவன் இருவருக்கும் ஸம்பந்தப்பட்டவனுகில் இருவருக்கும் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். வ்ருத்தஹாரீதரும்:- புத்ரிகாபுத்ரன், மாதாமஹன், பிதா இருவருக்கும் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். இருவருக்கும் ஸம்பந்தம் இருப்பதால் அவனுக்கு இரண்டு கோத்ரம் உள்ளது. தத்தனுக்குப் பெற்றுக் கொண்டவனின் கோத்ரம் மட்டில். "வேறு கோத்ரத்தை அடைந்தவர்களுக்கு ஜநக குலத்தில் தாயமும், ஆசௌசமும், ஜ்ஞாதித்வமும் நிவ்ருத்திக் கின்றன. இவை எல்லாம் பெற்றுக் கொண்டவனின் குலத்தில் விதிக்கப்படுகின்றன" என்று ஸ்ம்ருதி இருப்பதால், ஆனுல் "தத்தன், க்ருத்ரிமன், புத்ரிகாபுத்ரன், க்ஷேத்ரஜன் இவர்கள் ருஷி விஹித பரிக்ரஹத்தால் உண்டாகியவர்கள். இவர்கள் த்வ்யாமுஷ்யாயணர்களாய் (இருவருக்கும் ஸம்பந்தப்பட்டவர்களாய்) ஆகின்றனர்" என்று பைடீநஸி வசநம் உள்ளதே ? எனில், அது உபநயநத்திற்குப் பிறகு வேறு கோத்ரத்தில் எவன் கொடுக்கப்பட்டவனே அவனைப் பற்றியது, என்பது கீழே சொல்லப்பட்டு உள்ளது.

धारापूर्वं दत्ताया विवाहात् पूर्वं मृताया भर्तृगोत्रेण पितृगोत्रेण वा क्रिया कार्या, दत्ताऽनूढा या कन्या संस्कार्या भर्तृगोत्रतः इति 'स्व गोत्रात् भ्रश्यते नारी विवाहात् सप्तमे पदे इत्युभ यथा स्मरणात्। अनेकभर्तृकाया आद्यभर्तृगोत्रेण कर्तव्यम् । तदाह

ऋश्यशृङ्गः — स्त्रीणामाद्यस्य वै भर्तुर्यद्गोत्रं तेन निर्वपेत्। यदि त्वक्षतयोनिस्स्यात् पतिमन्यं समाश्रिता। तद्गोत्रेण तदा देयं पिण्डं श्राद्धं तथोदकम् इति।

*ஜலபூர்வமாய் தானம் செய்யப்பட்டு விவாஹத்திற்கு முன் மரித்தவளுக்குப் பர்த்ரு கோத்ரத்தாலாவது பித்ரு கோத்ரத்தாலாவது க்ரியையைச் செய்யவும். 'தானம் செய்யப்பட்டு விவாஹமாகாத கன்யகையைப் பர்த்ரு கோத்ரத்தால் ஸம்ஸ்கரிக்கவும்' என்றும், விவாஹம் ஆகிய பத்நீ ஸப்தபதிக்குப் பிறகு பித்ரு கோத்ரத்தினின்றும் விலகுகிறுள்' என்றும் இரண்டும் ப்ரகாரமாய் ஸ்ம்ருதி உள்ளது. அநேக பர்த்தாக்களை உடையவளுக்கு முதல் பர்த்தாவின் கோத்ரத்தால் செய்ய வேண்டும். அதைச் சொல்லுகிருர், ருச்யச்ருங்கர்:- அநேக பர்த்தாக்களை உடைய ஸ்த்ரீகளுக்கு முதல்வனை பர்த்தாவின் கோத்ரத்தால் செய்யவும். ரஜோதர்சனத்திற்கு முன் அன்யனை பதியை அடைந்தவளாகில் அவளுக்கு 2-ஆவது பதியின் கோத்ரத்தால் பிண்டம், ச்ராத்தம், உதகம் இவைகளைக் கொடுக்கவும்.*

स्मृत्यन्तरे — गोत्रस्य त्वपरिज्ञाने काश्यपं गोत्रमिष्यते। यस्मादाह श्रुतिस्सर्वाः प्रजाः काश्यपसम्भवाः। पित्रादीनां नाम यदा पुत्रैर्न ज्ञायते तदा। पृथिवीषत् पिता वाच्यस्तत्पिता चान्तरिक्षसत्। अभिधानापरिज्ञाने दिविषत् प्रपितामहः इति। राजविशोः पुरोहितगोत्रेण कार्यम्। तथा च कात्यायनः — पुरोहितस्य गोत्रेण कार्या राजविशोः क्रियाः। दद्यात् पिण्डोदके श्राद्धं तूष्णीं शूद्रस्य नामतः इति। तच्च नाम शूद्रस्य दासान्तमित्याह बोधायनः — शर्मान्तं ब्राह्मणस्योक्तं वर्मान्तं क्षत्रियस्य तु। पोषान्तं चैव वैश्यस्य दासान्तं शूद्रजन्मनः इति। स्वसूत्रेणैव सपिण्डीकरणं कार्यम् — अलब्धात्मीयसूत्रस्य श्राद्धान्तं

परसूत्रतः। कुर्यात् सपिण्डीकरणं स्वसूत्रेणैव नान्यतः इति भरद्वाजस्मरणात्। अपुत्रायाः पत्न्याः सापिण्ड्ये भर्ता स्वपित्रादीन् भोजयित्वा स्वमात्रादि पिण्डैः सह तत्पिण्डं संयोजयेत्। स्त्रीमृताहे स्त्रियो भोज्याः पितरः स्त्रीसपिण्डने। पित्रादेरेव होमः स्यात् पिण्डदानं तु वर्गयोः। अपुत्रायां मृतायां तु पतिः कुर्यात् सपिण्डताम्। श्वश्र्वादिभिः सहैवास्याः सपिण्डीकरणं भवेत्। पत्न्याः कुर्यादपुत्रायाः पतिर्मात्रादिभिः सह इत्यादिस्मरणात्।

**மற்றொரு ஸ்ம்ருதியில்:-** *கோத்ரம் அறியப்படாவிடில் காச்யப கோத்ரம் விதிக்கப்படுகிறது. எக்காரணத்தாலோ வேதம், ப்ரஜைகள் எல்லோரையும் காச்யபர் இடமிருந்து உண்டானவைகளாகச் சொல்கின்றனர். பிதா முதலியவரின் பெயர் எப்பொழுது அறியப்படவில்லையோ, அப்பொழுது பிதாவை 'ப்ருதிவீஷத்' என்றும், பிதாமஹனை 'அந்தரிக்ஷஸத்' என்றும், ப்ரபிதாமஹனை 'திவிஷத்' என்றும் சொல்லவும். க்ஷத்ரிய வைச்யர்களுக்குப் புரோஹித கோத்ரத்தால் செய்யவும். அவ்விதமே,* **காத்யாயனர்:-** *க்ஷத்ரிய வைச்யர்களுக்கு, புரோஹித கோத்ரத்தால் க்ரியைகளைச் செய்யவும். பிண்டோதக ச்ராத்தங்களையும் கொடுக்கவும். சூத்ரனுக்கு மந்த்ரம் இல்லாமல் பெயரை மட்டில் சொல்லிக் கொடுக்கவும். அந்தப் பெயரும் சூத்ரனுக்கு 'தாஸ' என்பதை முடிவில் உடையதாய் உள்ளது என்றார்.* **போதாயனர்:-** *ப்ராம்ஹணனுக்குப் பெயர் 'சர்ம' என்பதை முடிவிலுடையது, க்ஷத்ரியனுக்கு 'வர்ம' என்பதையும், வைச்யனுக்கு 'போஷ' என்பதையும், சூத்ரனுக்கு 'தாஸ' என்பதையும் முடிவில் உள்ளதாய் இருக்க வேண்டும். தனது ஸூத்ரத்தாலேயே ஸபிண்டீகரணம் செய்யப்பட வேண்டும். 'தனது ஸூத்ரம் கிடைக்காதவனுக்கு ஏகோத்திஷ்டம் முடியும் வரையில் அன்யஸூத்ரத்தால் செய்யலாம். ஸபிண்டீகரணத்தைத் தனது*

ஸூத்ரத்தாலேயே செய்யவும். அன்ய ஸூத்ரத்தால் செய்யக் கூடாது' என்று பரத்வாஜ ஸ்ம்ருதி இருப்பதால். புத்ரன் இல்லாத பத்னியின் ஸாபிண்ட்யத்தில் பர்த்தா தனது பிதா முதலியவரைப் புஜிப்பித்து, தனது மாதா முதலியவரின் பிண்டங்களுடன் பார்யா பிண்டத்தைச் சேர்க்கவும். 'பத்னியின் ச்ராத்தத்தில் ஸ்த்ரீகளைப் புஜிப்பிக்கவும். பார்யையின் ஸாபிண்ட்யத்தில் பித்ருக்களைப் புஜிப்பிக்கவும். பிதா முதலியவர்களுக்கே ஹோமம். பிண்டதானமோ வெனில் இருவர்களுக்கும். புத்ரன் இல்லாத பார்யை மரித்தால் அவளுக்குப் பதி ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். அவளுக்கு மாமியார் முதலியவருடனேயே பிண்டஸம்யோஜநம் செய்யப்பட வேண்டும். 'புத்ரன் இல்லாத பத்னிக்குப் பதி மாதா முதலியவருடன் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும் என்பது முதலிய ஸ்ம்ருதி இருப்பதால்.

पत्नीमृताहश्राद्धे तु पत्नीमातृपितामहीः भोजयेत् — स्त्रीश्राद्धे वृणुयाद्भर्ता पत्नीमातृपिताहीः । पितृव्याग्रजयोः श्राद्धे तत्तत्पितृपितामहौ इति स्मरणात्। स्मृतिरत्ने तु — अभर्तुर्योषितः पिण्डं भर्तृपिण्डे नियोजयेत् । यदि जीवति भर्ता तु श्वश्र्वादिषु नियोजयेत् । पत्यौ जीवति संसर्गः स्त्रीपिण्डेषु स्त्रिया भवेत् । मृते भर्तरि पत्यौ च सर्वत्रेति विनिर्णयः । अनपत्या यदा नारी पतिपिण्डेन योजयेत् । यदा पुत्रवती नारी पितामह्यादिभिः सह इति ।

பத்னியின் ம்ருதாஹ ச்ராத்தத்திலோ வெனில் பத்நீ, மாதா, பிதாமஹீ இவர்களைப் புஜிப்பிக்கவும். ''பத்னியின் ச்ராத்தத்தில் பர்த்தா, பத்னீ, மாத்ரு, பிதாமஹிகளை வரிக்கவும். பித்ருவ்யன், ஜ்யேஷ்டன் இவர்களின் ச்ராத்தத்தில் அவரவர்களையும் அவரவர்களின் பித்ரு பிதாமஹர்களையும் வரிக்கவும்'' என்று ஸ்ம்ருதி

இருப்பதால். ஸ்ம்ருதிரத்னத்திலோ வெனில்:- பர்த்தா இல்லாத ஸ்த்ரீயின் பிண்டத்தைப் பர்த்தாவின் பிண்டத்தில் சேர்க்கவும். பர்த்தா ஜீவித்து இருந்தால் மாமியார் முதலியவரின் பிண்டங்களில் சேர்க்கவும். பர்த்தா ஜீவித்து இருக்கும் போது ஸ்த்ரீயின் பிண்டத்தை ஸ்த்ரீகளின் பிண்டங்களில் சேர்க்கவும். பர்த்தா இறந்த பிறகு பதி பிண்டத்தில் சேர்க்கவும். புத்ரன் இல்லாதவளாகில் பதி பிண்டத்துடன் சேர்க்கவும். புத்ரன் உள்ளவளாகில் பிதாமஹ்யாதி பிண்டங்களுடன் சேர்க்கவும்.

सङ्ग्रहेऽपि — मृतप्रियायाश्च तथैव लोके पठन्ति सन्तः पतिपिण्डयोगम्। जीवत्प्रियायाश्च तथैव पिण्डं श्वश्र्वादिपिण्डैः सह संसृजेद्धि इति । पित्रोः सपिण्डीकरणं ज्येष्ठेनैव कार्यम् — सर्वैरनुमतिं कृत्वा ज्येष्ठेनैव तु यत् कृतम् । द्रव्येण चाविभक्तेन सर्वैरेव कृतं भवेत् । सपिण्डीकरणं पित्रोर्न कार्यमखिलैः सुतैः । एकेनापि कृते सम्यक्पुत्रत्वगुणसम्भवात् । ज्येष्ठपुत्रस्य सद्भावे कनिष्ठः कुरुते क्रियाम्। प्रेतत्वान्न विमुच्येत पितृत्वं च न गच्छति। ज्येष्ठपुत्रे तु दूरस्थे कनिष्ठस्तु यथोदितम्। कुर्यात् पित्रोस्तु संस्कारं सपिण्डीकरणं न तु । यवीयसा कृतं कर्म प्रेतशब्दं विहाय तु । तदग्रजेन कर्तव्यं सपिण्डीकरणं पुनः । नवश्राद्धं सपिण्डत्वं श्राद्धान्यपि च षोडश । एकेनैव तु कार्याणि संविभक्तधनेष्वपि इत्यादिवचनान्यत्रावगन्तव्यानि। एतच्चाधस्तात् प्रतिपादितम्।

ஸங்க்ரஹத்திலும்:- பர்த்தா இல்லாதவளின் பிண்டத்தைப் பதி பிண்டத்துடன் சேர்க்க வேண்டும் என்கின்றனர் ஸாதுக்கள். பதி ஜீவித்து இருந்தால் அவளின் பிண்டத்தை மாமியார் முதலியவர்களின் பிண்டங்களுடன் சேர்க்கவும். மாதா பிதாக்களின் ஸபிண்டீகரணத்தை ஜ்யேஷ்டனே செய்ய வேண்டும். 'எல்லோருடைய அனுமதியினுல் பிரிக்கப்படாத தனத்தைக் கொண்டு

ஜ்யேஷ்டனாலேயே செய்யப்பட்டது எதுவோ அது எல்லோராலுமே செய்யப்பட்டது ஆகும். மாதா பிதாக்களின் ஸபிண்டீகரணத்தைப் புத்ரர்கள் எல்லோரும் செய்யக் கூடாது. ஜ்யேஷ்டன் ஒருவனாலேயே செய்யப்பட்டால் எல்லோரும் செய்ததாய் ஆகும் ஆதலால், ஜ்யேஷ்ட புத்ரன் இருக்கும் பொழுது கனிஷ்ட புத்ரன் க்ரியையைச் செய்தால், பிதா ப்ரேதத் தன்மையினின்றும் விடுபடுவது இல்லை. பித்ருத்வத்தையும் அடைவது இல்லை. ஜ்யேஷ்ட புத்ரன் தூர தேசத்தில் இருந்தால், கனிஷ்ட புத்ரன் விதிப்படி ஸம்ஸ்காரத்தைச் செய்யவும். ஸபிண்டீகரணத்தைச் செய்யக் கூடாது. கனிஷ்டன் ஸபிண்டீகரணத்தைச் செய்து இருந்தால், ஜ்யேஷ்டன், ப்ரேத சப்தத்தைச் சொல்லாமல், மறுபடி ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டும். நவ ச்ராத்தம், ஸபிண்டீகரணம், ஷோடச ச்ராத்தம் இவைகளை ஒருவனே செய்ய வேண்டும், ப்ராதாக்கள் விபக்தர்களாய் இருந்தாலும்'' என்பது முதலிய வசனங்களை இவ்விஷயத்தில் அறியவும். இதைப் பற்றியது முன்பே சொல்லப்பட்டுள்ளது.

ज्येष्ठस्यापत्नीकत्वे कनिष्ठ एव सपिण्डनं कुर्यात् तस्यैव साग्निकत्वात् । तथा पैठीनसिः — सपिण्डीकरणं पुत्रः पितुः कुर्वीत योऽग्निमान् । अनग्नेस्तु क्रिया नान्या ह्येकोद्दिष्टादृते क्वचित् इति । स्मृत्यन्तरे च — यद्यग्निर्दूरगो विप्रः सापिण्ड्ये समुपस्थिते । भ्रातृभिः कारयेत् श्राद्धं साग्निकैर्विधिवत्ततः । औपासनाग्नौ दूरस्थे समीपे भ्रातरि स्थिते । यद्यग्नौ जुहुयाद्वाऽपि पाणौ वा स हि पातकी । ज्येष्ठपुत्रोऽग्निमान्न स्यात् कनिष्ठस्त्वग्निमान् यदि । कनिष्ठ एव कुर्वीत सपिण्डीकरणं पितुः इति ।

ஜ்யேஷ்டன் பார்யை இல்லாதவனாகில், கனிஷ்டனே ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும்.

அவனே அக்னி உள்ளவனாய் இருப்பதால். அவ்விதமே, பைடீநஸி:- அக்னி உள்ள புத்ரன் எவனோ அவனே பிதாவின் ஸாபிண்ட்யத்தைச் செய்யவும். அனக்னிகனுக்கு ஏகோத்திஷ்டம் தவிர்த்த மற்ற க்ரியை விதிக்கப்படவில்லை. மற்றொரு ஸ்ம்ருதியிலும்:- 'அக்னி தூரதேசத்தில் இருந்தால் ஸாபிண்ட்யம் செய்ய ப்ரஸக்தியானால், ப்ராம்ஹணன், அக்னிமான்களான ப்ராதாக்களால் ஸபிண்டீகரணத்தை விதிப்படி செய்விக்கவும். ஔபாஸனாக்னி தூரத்திலிருக்கும் பொழுது, ப்ராதா ஸமீபத்தில் இருந்தால், ஜ்யேஷ்டன் அக்னியிலாவது பாணியிலாவது ஹோமத்தைச் செய்தால் அவன் பாபியாய் ஆகிறான். ஜ்யேஷ்ட புத்ரன் அனக்னிகனாய் இருந்து, கனிஷ்டன் ஸாக்னிகனாய் இருந்தால், பிதாவின் ஸாபிண்ட்யத்தைக் கனிஷ்டனே செய்ய வேண்டும்' என்று உள்ளது.

उद्वाहानन्तरं पुनः सपिण्डीकरणं कर्तव्यम् । ज्यायस्यनग्नावन्यस्तु साग्निः पित्रोः सपिण्डनम् । कुर्यात्त्यक्त्वा प्रेतशब्दं सत्यग्नावग्रजः पुनः इति । पुनः सपिण्डीकरण-प्रकारश्चन्द्रिकायामभिहितः - यवीयसा कृते श्राद्धे प्रेतशब्दं विहाय च । तच्चाग्रजेन कर्तव्यं सपिण्डीकरणं पुनः । सपिण्डीकरणं नाम पुनः पार्वणवद्भवेत् । अर्घ्यं संयोजनं कुर्यात् पिण्डसंयोजनं तथा । प्रेतत्वात्तु विनिर्मुक्तः पुनस्तेन न निर्दिशेत् । प्रेतशब्दं विना सर्वं कार्यमित्याह गौतमः इति ।

விவாஹமாகிய பிறகு ஜ்யேஷ்டன் மறுபடி ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும். 'ஜ்யேஷ்டன் அனக்னிகனாயிருக்கையில், கனிஷ்டன் ஸாக்னிகனாகில் அவன் மாதா பிதாக்களுக்கு ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும் ஜ்யேஷ்டன் ஸாக்னிகனாய் ஆனால் மறுபடி ஸாபிண்ட்யத்தைச் செய்ய வேண்டும்' என்று உள்ளது.

*புனஸ் ஸபிண்டீகரணத்தின் ப்ரகாரம் சொல்லப் பட்டுள்ளது சந்த்ரிகையில்:- 'கனிஷ்டன் ஸபிண்டீ கரணத்தைச் செய்து இருந்தால், அதை ஜ்யேஷ்டன் மறுபடி செய்ய வேண்டும். ப்ரேத சப்தத்தைச் சொல்லாமல். அந்த ஸபிண்டீகரணம் பார்வண ச்ராத்த தர்மத்துடன் செய்யப்பட வேண்டும். அர்க்ய ஸம்யோஜநம் செய்யவும். பிண்ட ஸம்யோஜநம் செய்யவும். ப்ரேத பாவத்தினின்றும் விடுபட்டு இருப்பதால், மறுபடி அந்தச் சப்தத்தால் நிர்தேசிக்கக் கூடாது. ப்ரேத சப்தத்தைத் தவிர்த்து மற்ற எல்லாவற்றையும் செய்ய வேண்டும் என்றார் கௌதமர்' என்று*

हेमाद्रौ — सपिण्डीकरणं नाम पुनः पार्वणधर्मवत् । पितृशब्देन कर्तव्यं प्रेतशब्दं विहाय च । अर्घ्यसयोजनं नास्ति पिण्डसंयोजनं तथा । एकादशेऽह्नि कर्तव्यं सपिण्डीकरणं पुनः । द्वादशाहे न कर्तव्यमिति शातातपोऽब्रवीत् । यः सपिण्डीकृतं प्रेतं पुनः पिण्डेन योजयेत् । विधिघ्नस्तेन भवति पितृहा चोपजायते इति । एवञ्चार्घ्यपिण्डसंयोग तदभावयोर्विकल्पः । अत्र केचिदाहुः । — पुनः पिण्डसंयोगनिषेधश्रवणात्, सपिण्डीकरणे वृत्ते पृथक्त्वं नोपपद्यते । पृथक्त्वे तु कृते पश्चात् पुनः पित्रोस्सपिण्डता इत्येकोद्दिष्टनिषेधस्मरणाच्च पुनः पार्वणधर्मवत् इति पुनः पार्वण धर्ममात्रस्मरणाच्च, पुनः सपिण्डीकरणं पार्वणविधानेन कर्तव्यम् इति । पुनस्सपिण्डीकरणे ततः पूर्वं न मासिकानि पुनः कर्तव्यानि, सपिण्डीकरणमात्रस्य पुनःकरणविधानात्, सपिण्डीकरणादूर्ध्वं नैकोद्दिष्टं समाचरेत् इत्येकोद्दिष्टरूपमासिक निषेधस्मरणाच्च ।

**ஹேமாத்ரியில்:-** *''புனஸ் ஸபிண்டீகரணம் என்பது பார்வண தர்மங்களை உடையது. ப்ரேத சப்தத்தை விட்டு, பித்ரு சப்தத்தால் செய்யவும். அர்க்ய ஸம்யோஜனம் இல்லை. பிண்ட ஸம்யோஜனமும் இல்லை. 11-ஆவது*

நாளில் செய்ய வேண்டும். 12-ஆவது நாளில் செய்யக் கூடாது என்றுர் சாதாதபர். ஸபிண்டீகரணம் செய்யப்பட்டுள்ள ப்ரேதனே மறுபடி பிண்டத்துடன் சேர்ப்பவன் விதியை அதிக்ரமித்தவனுகிருன், பித்ருஹத்யை செய்தவனுயும் ஆகிருன்'' என்று உள்ளது. இவ்விதம் இருப்பதால் அர்க்ய பிண்ட ஸம்யோகத்தைச் செய்வதற்கும், செய்யாமல் இருப்பதற்கும் (ஸம) விகல்பம். இவ்விஷயத்தில் சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர்:- ''மறுபடி பிண்ட ஸம்யோகத்திற்கு நிஷேதம் கேட்கப்படுவதால், 'ஸபிண்டீகரணம் செய்தபிறகு, தனிமை என்பது உபபன்னமாகாது. தனியாய்ப் பிரித்து ஏகோத்திஷ்டம் செய்தால் மறுபடி மாதா பிதாக்களுக்கு ஸபிண்டீகரணம் செய்யவும்' என்று ஏகோத்திஷ்டத்தை நிஷேதிக்கும் ஸ்ம்ருதி இருப்பதாலும், மறுபடி ஸாபிண்ட்யத்தைப் பார்வண தர்மமாய்ச் செய்யவும், என்று பார்வண தர்மத்தை மட்டில் விதிப்பதாலும், புனஸ் ஸபிண்டீகரணத்தைப் பார்வண தர்மமாய் செய்ய வேண்டும்'' என்று இந்த புனஸ் ஸபிண்டீகரணத்தில் அதற்கு முன் உள்ள மாஸிகங்களைச் செய்யக் கூடாது. ஸபிண்டீகரணத்தை மட்டில் மறுபடி செய்யும்படி விதி இருப்பதாலும், 'ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு ஏகோத்திஷ்டத்தைச் செய்யக் கூடாது' என்று ஏகோத்திஷ்ட ரூபமான மாஸிகத்தை நிஷேதிக்கும் ஸ்ம்ருதி இருப்பதாலும்.

## सपिण्डीकरणादावग्निनिर्णयः

अथ सपिण्डीकरणादिश्राद्धेष्वग्निनिर्णयः । तत्र याज्ञवल्क्यः — कर्म स्मार्तं विवाहाग्नौ कुर्वीत प्रत्यहं गृही इति । श्रीधरीये — द्वादशाहे त्रिपक्षे वा षण्मासे मासि चाब्दिके । सपिण्डीकरणं कुर्यात् पित्रोरौपासने सुतः इति । विष्णुः — सपिण्डीकरणं पित्रोः कुर्यादौपासने सुतः । अभावे लौकिके ह्यग्नौ सर्वं संपादयेद्बुधः इति ।

लौकिकाग्नाविति विधुरादिविषयम् । तथा च स्मृत्यन्तरे — औपासनाग्नौ कर्तव्यं मातापित्रोर्गुरोरपि । अन्येषां लौकिकाग्नौ तु विधुरस्य च लौकिके । वटुश्चेत् (लौकिकाग्नौ च) समिदग्नौ वा कुर्यात् पित्रोः सपिण्डनम् इति । अन्यत्रापि — कुर्यादौपासने श्राद्धं मातापित्रोर्यथाविधि । अन्येषां लौकिके तद्वत् ब्रह्मचार्यप्यनग्निकः इति ।

**ஸபிண்டீகரணம் முதலியதில் அக்னியின் நிர்ணயம்.**

*இனி ஸபிண்டீகரணாதி ச்ராத்தங்களில் அக்னி நிர்ணயம் சொல்லப்படுகிறது. அதில்,* **யாஜ்ஞவல்க்யர்:-** *க்ருஹஸ்தன் ப்ரதி தினம் ஸ்மார்த்த கர்மத்தை விவாஹாக்னியில் செய்யவும்.* **ஸ்ரீதரீயத்தில்:-** *புத்ரன் மாதாபிதாக்களுக்கு ஸபிண்டீகரணத்தை, 12-ஆவது நாள், த்ரிபக்ஷம், 6-ஆவது மாஸம், வர்ஷத்தின் முடிவு இவைகளுள் ஒரு காலத்தில் ஔபாஸனாக்னியில் செய்யவும்.* **விஷ்ணு:-** *'மாதா பிதாக்களுக்கு ஸபிண்டீகரணத்தைப் புத்ரன் ஔபாஸனாக்னியில் செய்யவும். இல்லாவிடில், அறிந்தவன் லௌகிகாக்னியில் எல்லாவற்றையும் செய்யவும்.' லௌகிகாக்னியில் என்றது, விதுரன் முதலியவர்களைப் பற்றியது. அவ்விதமே,* **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** *மாதா, பிதா, குரு இவர்களுக்கு ஔபாஸனாக்னியில் செய்யவும். மற்றவர்க்கு லௌகிகாக்னியில் செய்யவும். விதுரன் லௌகிகாக்னியில் செய்யவும். ப்ரம்ஹசாரீ (லௌகிகாக்னியில்) 'ஸமிதாதானக்னியிலாவது மாதா பிதாக்களுக்கு ஸபிண்டனத்தைச் செய்யவும்'* **மற்றொரு ஸ்ம்ருதியில்:-** *மாதா, பிதாக்களுக்கு ச்ராத்தத்தை விதிப்படி ஔபாஸனாக்னியில் செய்ய வேண்டும். மற்றவர்க்கு லௌகிகாக்னியில் செய்யவும். ப்ரம்ஹசாரியும், விதுரனும் லௌகிகாக்னியில் செய்யவும்.*

तथा — सपिण्डीकरणं कुर्यादग्नावौपासने द्विजः । मातापित्रोर्गुरोश्चैवमितरेषां तु लौकिके । इति । अखण्डादर्शे — पित्रोः सपिण्डीकरणं कुर्यादौपासने सुतः । इतरेषां सपिण्डानां लौकिकाग्ना विति स्थितिः इति । सायणीये — सपिण्डीकरणं कुर्यात् पित्रोरौपासनानले । तथा मातामहस्यापि मातामह्याश्च निर्णयः । तथा सीमन्तजातस्य ज्येष्ठस्यापि सपिण्डनम् । औपासनाग्नौ कर्तव्यं जनकस्य समो हि सः । पितामहस्य तत्पत्न्याः कार्यमौपासनानले इति ।

*அவ்விதம் — 'ப்ராம்ஹணன் மாதா பிதாக்களுக்கும், குருவுக்கும் ஔபாஸனாக்னியில் ஸபிண்டீகரணத்தைச் செய்யவும். மற்றவர்க்கு லௌகிகாக்னியில் செய்யவும். **அகண்டாதர்சத்தில்:-** புத்ரன் மாதா பிதாக்களுக்கு ஸபிண்டீகரணத்தை ஔபாஸநத்தில் செய்யவும். மற்ற ஸபிண்டர்களுக்கு லௌகிகாக்னியில் செய்யவும். இது நிர்ணயம். **ஸாயணீயத்தில்:-** மாதா பிதாக்களுக்கும், மாதாமஹனுககும், மாதாமஹிக்கும் ஔபாஸனாக்னியில் ஸபிண்டீகரணத்தைச் செய்யவும். ஸீமந்தஜனான ஜ்யேஷ்ட ப்ராதாவுக்கும் ஔபாஸநத்தில் செய்யவும். அவன் பிதாவுக்கு ஸமனல்லவோ ? பிதாமஹனுக்கும் பிதாமஹிக்கும் ஔபாஸநத்தில் செய்யவும்.*

स्मृत्यन्तरे — मातुः पित्रोर्मातुलादेर्मरणे तु स्ववह्निना । सापिण्ड्यं मासिकादींश्च तत्तत्सूत्रेण कारयेत् । अपुत्रस्य पितृव्यस्य ज्येष्ठस्याप्यसुतस्य च । सपिण्डीकरणं कुर्यात् स्वस्यौपा सनवह्निना इति । अन्यत्रापि — मातुः पित्रोर्मासिकादीन् दौहित्रः स्वीयवह्निना । तथा महालयादींश्च कुर्यात् पार्वणतः शुचिः इति । तदेवं मातापित्रोर्मातामहमातामह्योर्मातुलस्यापुत्रस्य ज्येष्ठभ्रातुः

पितृव्यस्याचार्यस्य च स्वौपासने सापिण्ड्यादि पार्वणश्राद्धं कुर्यादिति स्थितम् ॥

**மற்றொரு ஸ்ம்ருதியில்:—** *மாதாமஹன், மாதாமஹீ, மாதுலன் முதலியவர் இவர்களின் மரணத்தில் ஔபாஸனக்னியில் ஸாபிண்ட்யம் மாஸிகம் முதலியவைகளை அவரவரின் ஸூத்ரப்படி செய்யவும். புத்ரன் இல்லாத பித்ருவ்யன், அபுத்ரனான ஜ்யேஷ்டன் இவர்களுக்கும் ஸபிண்டீகரணத்தைத் தனது ஔபாஸாநக்நியில் செய்ய வேண்டும்.* **மற்றோர் ஸ்ம்ருதியிலும்:-** *மாதாமஹன் மாதாமஹீ இவர்களுக்கு மாஸிகம் மஹாளயம் முதலியவைகளைத் தௌஹித்ரன் தனது ஔபாஸனக்னியில் பார்வண விதியாய்ச்சுத்தனாய்ச் செய்ய வேண்டும். இவ்விதம் இருப்பதால், மாதா, பிதா, மாதாமஹன், மாதாமஹீ, மாதுலன், அபுத்ரனான ஜ்யேஷ்டப்ராதா, பித்ருவ்யன், ஆசார்யன் இவர்களுக்கு, தனது ஔபாஸனத்தில் ஸாபிண்ட்யம் முதலிய பார்வண ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும் என்பது ஸித்தித்தது.*

यत्तु कैश्चिदुक्तम् — पित्रोर्मातामहयोश्च श्राद्ध-मौपासने, तदितरेषां श्रोत्रियागारादाहृते लौकिकाग्नौ कर्तव्यम्, इति, पूर्वोक्तस्मृत्यनभिज्ञानविलपितत्वा दुपेक्ष्यम् । अग्नौकरणं द्विविधम्, कात्यायनाश्वलायनाद्युक्तं पितृयज्ञधर्मकमेकम्, आपस्तम्बाद्युक्तं तद्रहित मन्यत्, तत् स्वरूपं चाग्रे वक्ष्यते । उभयविधमग्नौकरणमपि अनाहिताग्नेरौपासनवतः आहिताग्नेरप्यर्धाधानेनौपासनवत औपासन एव, सर्वाधानेनौपासनवत्त्वासम्भवे आपस्तम्बोक्ताग्नौकरणहोमस्य लोपः । न तु वैतानिकाग्नावनुष्ठानम्, श्रौतं वैतानिकाग्निषु इत्यभिधानात् । न च लौकिकाग्नौ । देवतादेरिवाग्नेरपि प्रतिनिध्यभावात् । अत एव सर्वाधानेनौपासनाभावविषये धूर्तस्वामिना भाष्यकारेणोक्तम् -

श्राद्धमूर्ध्वं होमात् कर्तव्यं ब्राह्मणा आहवनीयार्थाः तस्यापि प्रधानत्वादिति।

ஆனால் சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர் — "மாதா, பிதா, மாதாமஹன், மாதாமஹீ இவர்களுக்கு ச்ராத்தம் ஔபாஸநாக்னியிலும், மற்றவர்களுக்கு ச்ரோத்ரிய க்ருஹத்தினின்றும் எடுத்து வரப்பட்ட லௌகிகாக்னியிலும் செய்யப்பட வேண்டும்" என்று. அது, முன் சொல்லப்பட்ட ஸ்ம்ருதிகளை அறியாமையால் சொல்லப்பட்டதாகியதால் உபேக்ஷிக்கத் தகுந்தது. அக்னௌகரணம் (ஹோமம்) என்பது 2-ப்ரகாரம் உள்ளது. காத்யாயனர், ஆச்வலாயனர் முதலியவர்களால் சொல்லப்பட்டு, பித்ருயஜ்ஞ ப்ரகாரத்தை உடையது ஒன்று. ஆபஸ்தம்பர் முதலியவர்களால் சொல்லப்பட்டு, பித்ருயஜ்ஞ தர்மம் இல்லாதது மற்றது. அவைகளின் ஸ்வரூபம் மேலே சொல்லப்படும். இரண்டு விதமான அக்னௌகரணமும், ஔபாஸனமும் உடையவனான அநாஹிதாக்னிக்கும், அர்த்தாதானத்தால், ஔபாஸநம் உடையவனான ஆஹிதாக்னிக்கும் ஔபாஸநாக்னியிலேயே விஹிதம். ஸர்வாதாநத்தால் ஔபாஸநம் இல்லாதவனாகில் ஆபஸ்தம்பரால் சொல்லப்பட்ட அக்னௌகரண ஹோமத்திற்கு லோபம். ச்ரௌதாக்னியில் ஹோமம் என்பது இல்லை, 'ச்ருத்யுக்தமாகிய ஹோமத்தை ச்ரௌதாக்னியில் செய்ய வேண்டும்' என்று சொல்லி இருப்பதால். லௌகிகாக்னியிலும் செய்யக் கூடாது. தேவதை முதலியதற்குப் போல் அக்னிக்கு ப்ரதிநிதி என்பது இல்லையாதலால். ஆகையாலேயே ஸர்வாதானத்தால் ஔபாஸநமில்லாத விஷயத்தில் தூர்த்த ஸ்வாமி என்ற பாஷ்யகாரரால் சொல்லப்பட்டுள்ள — "ச்ராத்தத்தை ஹோமத்திற்கு மேல் செய்யவும். ப்ராம்ஹணர்கள் ஆஹவநீயஸ்தானீயர்கள். அதுவும் ப்ரதானம் ஆகியதால்" என்று.

तस्यापि होमादूर्ध्वं क्रियमाणस्य अन्नाशनलक्षणस्य श्राद्धस्यापीत्यर्थः । पितृयज्ञधर्मकाग्नौकरणस्य तु सर्वाधानेनौपासनाभावेऽपि न निवृत्तिः कर्म स्मार्तं विवाहाग्नौ कुर्वीत प्रत्यहं गृही इत्यादिनोपदिष्टौपासनाग्न्यभावेऽपि पितृयज्ञवदित्यतिदेशतः प्राप्तदक्षिणाग्नेः संभवात् दक्षिणाग्नावनुष्ठानम् ।

*இதிலுள்ள 'தஸ்யாபி' என்பதற்கு, ஹோமத்திற்கு மேல் செய்யப்படும் அன்ன போஜன ரூபமான ச்ராத்தத்திற்கும், என்பது பொருள். பித்ருயஜ்ஞ தர்மகமான அக்னௌ கரணத்திற்கோ வெனில், ஸர்வாதாநத்தால் ஔபாஸநம் இல்லாவிடினும் நிவ்ருத்தி இல்லை. 'க்ருஹஸ்தன் ஸ்மார்த்த கர்மத்தை ப்ரதி தினமும் விவாஹாக்னியில் செய்யவும்' என்பது முதலியதால் உபதேசிக்கப்பட்ட ஔபாஸநாக்னி இல்லாவிடினும், 'பித்ருயஜ்ஞவத்' என்ற அதி தேசத்தால் கிடைத்த தக்ஷிணாக்னி ஸம்பவிப்பதால் தக்ஷிணாக்னியில் (அக்னௌகரணத்திற்கு) அனுஷ்டானம்.*

अनेनैवाभिप्रायेण मार्कण्डेयेनोक्तम् — आहिताग्निस्तु जुहुयाद्दक्षिणाग्नौ समाहितः इति । आपस्तम्बोक्ताग्नौकरणे तु पिण्डपितृयज्ञवदित्यतिदेशाभावान्न दक्षिणाग्निप्राप्तिरिति सर्वाधाने धूर्तस्वाम्युक्ताग्नौकरणाभावो युक्तः । पूर्वोक्ताभिप्रायेण वायुपुराणेऽप्युक्तम्— आहृत्य दक्षिणाग्निं तु होमार्थं वै प्रयत्नतः । अग्न्यर्थं लौकिकं वाऽपि जुहुयात् कर्मसिद्धये इति । अस्यायमर्थः — अग्नौकरणहोमार्थं गृह्याग्न्यभावे दक्षिणाग्निं लौकिकाग्निं वाऽऽहृत्य होमकर्मसिद्धये जुहुयात् इति । अत्र दक्षिणाग्निपक्षस्य प्रवासादिना असंभवे लौकिकाग्नि पक्षः, तस्यातिदेशोपदेशरूप प्रमाणद्वयावगत दक्षिणाग्न्यबाधकत्वेन अगत्याऽऽश्रयणीयत्वात् । अत एव प्रयत्नतो दक्षिणाग्निमाहृत्येत्युक्तम् । दक्षिणाग्न्यसन्निधाने पाणौ वा होमः कर्तव्यः ।

இந்த அபிப்ராயத்திலேயே சொல்லப்பட்டுள்ளது **மார்க்கண்டேயரால்:—** 'ஆஹிதாக்னியோ வெனில் கவனமுடையவனாய், தக்ஷிணாக்னியில் ஹோமம் செய்யவும்' என்று, ஆபஸ்தம்பர் சொல்லிய அக்னௌகரணத்திலோ வெனில் 'பிண்டபித்ருயஜ்ஞவத்' என்ற அதிதேசம் இல்லாததால், தக்ஷிணாக்னி ப்ராப்தி இல்லை என்பதால் ஸர்வாதாந பக்ஷத்தில் தூர்த்த ஸ்வாமியினால் சொல்லப்பட்ட அக்னௌ கரணாபாவம் யுக்தம் ஆகிறது. முன் சொல்லிய அபிப்ராயத்துடன் சொல்லப்பட்டு உள்ளது. **வாயுபுராணத்திலும்:—** 'ஆஹ்ருத்ய+ஸித்தயே' என்று, இதன் பொருள் இவ்விதம்:- ''அக்னௌகரண ஹோமத்திற்காக க்ருஹ்யாக்னி இல்லாவிடில், தக்ஷிணாக்னியையாவது லௌகிகாக்னியையாவது எடுத்து ஹோமகார்யம் ஸித்திப்பதற்காக ஹோமம் செய்ய வேண்டும்'' என்று. இவ்விஷயத்தில், தக்ஷிணாக்னி பக்ஷம் தூரதேசகமனாதிகளால் ஸம்பவிக்காவிடில், லௌகிகாக்னி பக்ஷத்தை க்ரஹிக்க வேண்டும். லௌகிகாக்னி பக்ஷமானது, அதிதேசம் உபதேசம் என்ற இரண்டு ப்ரமாணங்களாலும் அறியப்பட்ட தக்ஷிணாக்னியைப் பாதிக்காது. ஆகையால், அதைக் கதி இல்லாததால் ஆச்ரயிக்க வேண்டி இருக்கிறது, ஆகையால் தான் ப்ரயத்னத்துடன் 'தக்ஷிணாக்னி மாஹ்ருத்ய' என்று சொல்லப்பட்டது. தக்ஷிணாக்னி இல்லாவிடில் பாணியிலாவது ஹோமத்தைச் செய்ய வேண்டும்.

तथा हि स्मृत्यन्तरम् — हस्तेऽग्नौकरणं कुर्यात् अग्नौ वा साग्निको द्विजः इति । साग्निकः सर्वाधानाहिताग्निः दक्षिणाग्न्यसन्निधाने हस्ते लौकिकाग्नौ वा अग्नौकरणं कुर्यादित्यर्थः । अत्रापि प्रवासादिना दक्षिणाग्न्यसम्भवे लौकिकाग्न्यादिपक्षौ पूर्वोक्तन्यायादवगन्तव्यौ । लौकिकाग्नेस्तु तादृश विशेषानवगमात्

पाणिना सह समविकल्प एव । यद्यपि न्यायतोऽग्नेः प्रतिनिध्यभावः, तथाऽपि न प्रतिनिधिन्यायेनात्र दक्षिणाग्न्यादेरुपादानम् । किन्तु गृह्याग्न्यभावेन तत्साध्यकर्मणोऽननुष्ठाने प्राप्ते वचनेनागृह्याग्न्यादावपि गृह्याग्निसाध्यं कर्म विधीयते इति न कश्चिद्दोषः ।

*ஓர் ஸ்ம்ருதி:— ஸாக்னிகனான ப்ராம்ஹணன் பாணியில் அக்னௌ கரணத்தைச் செய்யவும் அல்லது அக்னியில் செய்யவும். மூலத்தில் உள்ள 'ஸாக்னிக:' என்ற பதத்திற்கு ஸர்வாதானத்தால் ஆஹிதாக்னி ஆகியவன் என்று பொருள். அவன் தக்ஷிணாக்னி ஸமீபத்தில் இல்லாவிடில் பாணியிலாவது, லௌகிகாக்னியிலாவது அக்னௌ கரணத்தைச் செய்ய வேண்டும் என்பது பொருள். இவ்விஷயத்திலும் ப்ரவாஸம் முதலியதால் தக்ஷிணாக்னி ஸம்பவிக்காவிடில், லௌகிகாக்னி முதலிய இரண்டு பக்ஷங்கள் முன் சொல்லிய ந்யாயத்தால் அறியத் தகுந்தவை. லௌகிகாக்னிக்கோ வெனில் அவ்வித விசேஷம் அறியப்படாததால் பாணியுடன் ஸம விகல்பமே. எப்படியும் அக்னிக்கு ப்ரதிநிதி இல்லை என்பது உண்டு. ஆனாலும், ப்ரதிநிதி ந்யாயத்தைக் கொண்டு இங்குத் தக்ஷிணாக்னியை க்ரஹிக்கவே இல்லை. ஆனால் ஔபாஸநாக்னி இல்லாததால் க்ருஹ்யாக்னி ஸாத்யமான கர்மத்திற்கு அனனுஷ்டானம் ப்ராப்தமாயிருக்க, வசநத்தால் க்ருஹ்யாக்னி அல்லாததிலும் க்ருஹ்யாக்னி ஸாத்யமான கர்மம் விதிக்கப்படுகிறது என்பதால் தோஷம் ஒன்றும் இல்லை.*

तथा नारदीये — अग्न्यभावे तु विप्रस्य पाणौ होमो विधीयते । यथाचारं प्रकुर्वीत पाणावग्नौ तु वा द्विजः इति । यत्तु स्मृत्यन्तरम् — हस्तेऽग्नौकरणं कुर्यात् सर्वाधानी न लौकिके । अर्धाधानी तु गृह्याग्नौ जुहुयात् पितृयज्ञवत् इति । अत्र न लौकिक इति

विधुरादिविषयम् । तथा च स्मृत्यन्तरं — साग्निरग्नावनग्निस्तु द्विजपाणावथाप्सु वा । कुर्यादग्नौ क्रियां नित्यं लौकिकेनेति निश्चितम् इति ।

நாரதீயத்தில்:- 'அக்னி இல்லாவிடில் ப்ராம்ஹணனின் பாணியில் ஹோமம் விதிக்கப்படுகிறது. பாணியிலாவது, அக்னியிலாவது ஆசாரப்படி செய்யவும், என்றுள்ளது. ஆனால் "ஸர்வாதானியானவன் பாணியில் ஹோமத்தைச் செய்யவும், லௌகிகாக்னியில் செய்யக் கூடாது. அர்த்தாதானியோ வெனில், க்ருஹ்யாக்னியில் பித்ருயஜ்ஞ தர்மமாய்ச் செய்யவும்" என்ற ஓர் ஸ்ம்ருதி வசனம் உள்ளதே ? எனில், இதில் லௌகிகாக்னியில் கூடாது என்றது விதுரன் முதலியவரைப் பற்றியது ஆகும். அவ்விதமே மற்றொரு ஸ்ம்ருதியில்:— 'ஸாக்நி + லௌகிகேநேதி நிச்சிதம், என்று உள்ளது. இதன் பொருள் இவ்விதம்:— "ஆஹிதாக்னியானவன், ஔபாஸனாக்னியிலாவது, தக்ஷிணாக்னியிலாவது, லௌகிகாக்னியிலாவது, முன் சொல்லிய வ்யவஸ்தைப்படி அக்னௌ கரணத்தைச் செய்யவும். பார்யை இல்லாததாலோ, விவாஹம் ஆவதற்கு முன் ஔபாஸனாக்னியை ஸ்வீகரிக்காததாலோ, எவன் அக்னி இல்லாதவனோ அவனோ வெனில் ப்ராம்ஹணனின் பாணியிலாவது, ஜலத்திலாவது, அக்னௌ கரணத்தைச் செய்ய வேண்டும். ஒரு காலும் லௌகிகாக்னியில் செய்யக் கூடாது" என்று.

यत्तु मनुनोक्तम् — अग्न्यभावे तु विप्रस्य पाणावेवोपपादयेत् इति, तत् ब्रह्मचारिविषयम् । तदाह जातुकर्णिः— अग्न्यभावे तु विप्रस्य पाणौ दद्यात्तु दक्षिणे । अग्न्यभावः स्मृतस्तावद्यावद्भार्यां न विन्दति इति । अन्येषां लौकिके तद्वत् ब्रह्मचार्यप्यनग्निकः इति वचनं सपिण्डीकरणविषयम्, तत्पूर्वमुक्तं, आपस्तम्बादि विषयं वा । तथा च वक्ष्यते ।

ஆனால், மனு ''அக்னி இல்லாவிடில் ப்ராம்ஹணனின் பாணியிலேயே ஹோமத்தைச் செய்யவும்'' என்கிறாரே ? எனில், அது ப்ரம்ஹசாரியைப் பற்றியது. அதைச் சொல்லுகிறார், ஜாதூர்கணி:— 'அக்னி இல்லாவிடில் ப்ராம்ஹணனின் வலது கையில் ஹோமத்தைச் செய்யவும். அக்னி இல்லை என்பது பார்யையை அடையாத வரையில் என்று சொல்லப்பட்டு உள்ளது'' என்று 'மற்றவர்கள் லௌகிகாக்னியில் செய்ய வேண்டும். ப்ரம்ஹசாரியும் அக்னி இல்லாதவனே' என்ற வசனம் ஸபிண்டீகரணத்தைப் பற்றியது. அது முன்பு சொல்லப்பட்டு உள்ளது. ஆபஸ்தம்பீயாதி விஷயம் என்றாவது ஆகலாம். அவ்விதம் மேலே சொல்லப்படப் போகிறது.

वृद्धमनुः — कुर्यादनुपनीतोऽपि श्राद्धमेको हि यस्सुतः । पितृयज्ञाहुतिं पाणौ जुहुयान्मन्त्रपूर्वकम् । इति । विद्यमानेऽप्यग्नौ कामादिषु चतुर्षु श्राद्धेषु पाणावेव होमः । तदाह गृह्यकारः — अन्वष्टक्यं च पूर्वेद्युर्मासि मास्यथ पार्वणम् । काम्यमभ्युदयेऽष्टम्या मेकोद्दिष्टमथाष्टमम् । चतुर्ष्वाद्येषु साग्नीनां वह्नौ होमो विधीयते । पित्र्यब्राह्मणहस्ते स्यादुत्तरेषु चतुर्ष्वपि इति । अष्टकाश्राद्ध दिनादुत्तरदिने क्रियमाणं श्राद्धमन्वष्टक्यम्, पूर्वदिने सप्तम्यां क्रियमाणं श्राद्धं पूर्वेद्युरितिपदेनोक्तम्, मासिमासीत्यनेन मासिश्राद्धमुक्तम् । पार्वणं त्रिपुरुषोद्देशेन क्रियमाणममावास्यादि-श्राद्धम्, काम्यं - फलकामनया क्रियमाणम्, अभ्युदय इत्यनेनाभ्यु-दयिकमुक्तम्, अष्टम्यामिति पदेनाष्टकाख्यं श्राद्धमुक्तम्, एकमुद्दिश्य क्रियमाणमेकोद्दिष्टम्, एतेषामष्टविधानां श्राद्धानामाद्येषु चतुर्षु साग्निकानां बह्वग्निकानामेकाग्नीनां च पूर्वोक्तव्यवस्थयाऽग्नौ होमो विधीयते, उत्तरेषु चतुर्षु होमः पित्र्यब्राह्मणहस्ते स्यादित्यर्थः। आद्येषु चतुर्ष्वपि प्रवासादिना औपासनासन्निधाने द्विजपाणावप्सु वा कर्तव्यम् ।

வ்ருத்தமனு:— உபநயநம் ஆகாதவனுயினும் ச்ராத்தத்தைச் செய்பவன் ஏகபுத்ரனுகில் அவன், பித்ருயஜ்ஞாஹுதியை மந்த்ரத்துடன் பாணியில் ஹோமம் செய்யவும். அக்னி இருந்தாலும், காம்யம் முதலிய நான்கு ச்ராத்தங்களில் பாணியிலேயே ஹோமம். அதைச் சொல்லுகிருர், க்ருஹ்யகாரர்:— 'அன்வஷ்டக்யம்ச + சதுர்ஷவபி' என்று. இதன் பொருள்— 'அஷ்டகா ச்ராத்தத்திற்கு மறு தினத்தில் செய்யப்படும் ச்ராத்தம் அன்வஷ்டக்யம் எனப்படும். முதல் நாளில் ஸப்தமியில் செய்யப்படும் ச்ராத்தம் பூர்வேத்யு: என்ற பதத்தால் சொல்லப்பட்டு உள்ளது. மாஸி மாஸி என்ற பதத்தால் மாஸி ச்ராத்தம் சொல்லப்பட்டது. பார்வணம் - 3-புருஷர்களே உத்தேசித்துச் செய்யப்படும். அமாவாஸ்யா ச்ராத்தம் முதலியது. காம்யம் - பலனே உத்தேசித்துச் செய்யப்படும் ச்ராத்தம். அப்யுதய சப்தத்தால் நாந்தீ ச்ராத்தம் சொல்லப்பட்டு உள்ளது. அஷ்டம்யாம் என்பதால் அஷ்டகை என்ற ச்ராத்தம் சொல்லப்பட்டது. ஒருவனே உத்தேசித்துச் செய்யப்படும் ச்ராத்தம் ஏகோத்திஷ்டம். இவ்விதமாகிய இந்த எட்டு ச்ராத்தங்களுள் முன்புள்ள நான்கு ச்ராத்தங்களிலும், ஸாக்னிகர்களுக்கும், அநேகாக்னி உடையவர்க்கும், ஏகாக்னிகர்களுக்கும், முன் சொல்லிய வ்யவஸ்தைப்படி அக்னியில் ஹோமம் விதிக்கப்படுகிறது. மற்ற நான்கு ச்ராத்தங்களிலும் ஹோமத்தைப் பித்ரு ஸ்தாநத்தில் உள்ள ப்ராம்ஹணனின் கையில் செய்ய வேண்டும்'' என்பதாம். முதலாகிய நான்கு ச்ராத்தங்களிலும், ப்ரவாஸம் முதலிய காரணத்தால் ஒளபாஸனம் ஸமீத்தில் இல்லாவிடில், பாணியிலாவது, ஜலத்திலாவது செய்யவும்.

तदाह विष्णुधर्मोत्तरे मार्कण्डेयः — अनाहिताग्निश्चौपासनेऽग्न्य भावे द्विजोऽप्सु वा इति । औपासनः - गृहाग्निः । विज्ञानेश्वरीये — आहिताग्निस्तु जुहुयाद्दक्षिणेऽग्नौ समाहितः ।

अनाहिताग्निरौपासनेऽग्न्यभावे द्विजेऽप्सु वा इति । अप्स्वग्नौकरणं जलसमीपे श्राद्धकरणे वेदितव्यम् । तदाह कात्यायनः — विष्णुधर्मोत्तरे चाप्सु मार्कण्डेयेन यः स्मृतः । स यदाऽपां समीपे स्यात् श्राद्धे ज्ञेयो विधिस्तदा इति । यदा तु पाणिहोमपक्षः, तदैकस्यैव विप्रस्य पाणौ होमो न तु सर्वविप्राणामित्याह कात्यायनः । पित्र्ये यः पङ्क्तिमूर्धन्यस्तस्य पाणावनग्निकः । हुत्वा मन्त्रवदन्येषां तूष्णीं पात्रेषु निक्षिपेत् इति । मनुः - अग्न्यभावे तु विप्रस्य पाणावेवोपपादयेत् । पर्युक्ष्य दर्भानास्तीर्य यतो ह्यग्निसमो द्विजः इति । अग्निसमत्वात् पित्र्यब्राह्मणं पर्युक्ष्य परिस्तीर्य जुहुयादित्यर्थः ।

*அதைச் சொல்லுகிறார், மார்க்கண்டேயர், விஷ்ணு தர்மோத்தரத்தில்:—அநாஹிதாக்னியும், ஒளபாஸனத்தில், அக்னி இல்லாவிடில் ப்ராம்ஹணனிடத்திலாவது, ஜலத்திலாவது செய்யவும். ஒளபாஸனம் என்பது க்ருஹ்யாக்னி என்று. விஜ்ஞாநேச்வரீயத்தில்:— ஆஹிதாக்னியானவன் தக்ஷிணாக்னியில் ஹோமம் செய்யவும். அநாஹிதாக்னி ஒளபாஸனத்தில் அக்னி இல்லாவிடில் ப்ராம்ஹணனிடத்திலாவது, ஜலத்திலாவது ஹோமம். ஜலத்தில் ஹோமம் என்றது ஜல ஸமீபத்தில் ச்ராத்தம் செய்யும் விஷயத்தில் என்று அறியவும். அதைச் சொல்லுகிறார், காத்யாயனர்:— பித்ரு ஸ்தானத்தில் எந்த ப்ராம்ஹணன் முதல்வனோ அவனது கையில், அக்னி இல்லாதவன் மந்த்ரத்துடன் ஹோமம் செய்து, மற்ற ப்ராம்ஹணர்களின் போஜன பாத்ரங்களில் மந்த்ரம் இல்லாமல் அன்னத்தை வைக்கவும்.*

मनुः – अग्न्यभावे तु विप्रस्य पाणावेवोपपादयेत् । पर्युक्ष्य दर्भानास्तीर्य यतो ह्यग्निसमो द्विजः इति । अग्निसमत्वात् पित्र्यब्राह्मणं पर्युक्ष्य परिस्तीर्य जुहुयादित्यर्थः । यत्तु यमेनोक्तम्

— दैवविप्रकरेऽनग्निः कृत्वाऽग्नौकरणं द्विजः इति, तत्र विकल्पेन व्यवस्था द्रष्टव्या।

**மனு:**— *"அக்னி இல்லாவிடில் ப்ராம்ஹணனின் கையிலேயே ஹோமம் செய்யவும். ப்ராம்ஹணன் அக்னிக்கு ஸமனாகியதால், அவனைச் சுற்றிப் பரிஷேசனம் செய்து தர்ப்பங்களால் பரிஸ்தரணம் செய்து, ஹோமம் செய்யவும்." அக்னிக்குச் சமனானதால் பித்ரு ஸ்தானத்திலுள்ள ப்ராம்ஹணனைப் பரிஷேசனம் செய்து, பரிஸ்தரணமும் செய்து ஹோமம் செய்யவும் என்பது பொருள். ஆனால், "அக்னி இல்லாத ப்ராம்ஹணன் தேவஸ்தானத்திலுள்ள ப்ராம்ஹணனின் கையில் ஹோமம் செய்து" என்று யமனால் சொல்லப்பட்டு உள்ளதே ? எனில் அவ்விஷயத்தில் விகல்பத்தால் வ்யவஸ்தை அறியத்தக்கது.*

अत्र अपत्नीककर्तृकपाणिहोमे विशेषमाह कात्यायनः— अपत्नीको यदा विप्रः श्राद्धं कुर्वीत पार्वणम्। पित्र्यविप्रैरनुज्ञातो विश्वदेवेषु हूयते इति। वायुपुराणे च।— अभार्यो दैविके कुर्याच्छेषं पित्र्ये निवेदयेत्। न हि स्मृताः शेषभाजो विश्वदेवाः पुराणगैः इति। विश्वदेवकरे होमपक्षे हुतशेषं पित्रर्थभोजनपात्रेष्वेव निक्षिपेदित्यर्थः। स्मृत्यन्तरे च — दैवविप्रकरेऽभार्यः कृत्वाऽग्नौकरणं द्विजः। शेषयेत् पितृविप्रेभ्यः पिण्डार्थे शेषयेत्तदा। अग्नौकरणशेषं तु न दद्या द्वैश्वदैविके इति।

*இவ்விஷயத்தில் பத்னி இல்லாதவன் செய்யும் பாணி ஹோமத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார்,* **காத்யாயனர்:**— *பத்னி இல்லாத ப்ராம்ஹணன் பார்வண ச்ராத்தம் செய்தால், பித்ரு ஸ்தானீய ப்ராம்ஹணர்களின் அனுஜ்ஞையைப் பெற்றவனாய் விச்வதேவஸ்தானீய ப்ராம்ஹணர்கள் இடத்தில் ஹோமம் செய்யவும்.* **வாயு**

**புராணத்திலும்:—** பார்யை இல்லாதவன் தேவ ப்ராம்ஹணன் இடத்தில் ஹோமத்தைச் செய்து, மீதியைப் ப்ராம்ஹணன் இடத்தில் வைக்கவும். விச்வதேவர்கள் பித்ரு சேஷபாகிகள் என்று புராணம் அறிந்தவர்களால் சொல்லப்படவில்லை. விச்வதேவ ப்ராம்ஹணர்களின் கையில் ஹோமம் செய்தால் ஹோம சேஷத்தை, பித்ரு ஸ்தானீய ப்ராம்ஹணனின் போஜன பாத்ரத்தில் வைக்கவும் என்பது பொருள். **மற்றொரு ஸ்ம்ருதியிலும்:—** பார்யை இல்லாத ப்ராம்ஹணன் தேவ ப்ராம்ஹணனின் கையில் ஹோமத்தைச் செய்து, பித்ரு ஸ்தானீய ப்ராம்ஹணனுக்காக மீதி வைக்கவும். பிண்டத்திற்காகவும் மீதியை வைக்கவும். ஹோம சேஷத்தை விச்வதேவ ப்ராம்ஹணன் இடத்தில் கொடுக்கக் கூடாது.

यमः — अग्नौकरणवत्तत्र होमो दैवकरे भवेत् । पर्युक्ष्य दर्भानास्तीर्य यतो ह्यग्निसमो हि सः इति । यदा दैवविप्रकरे होमस्तदा महालयादौ पितृमातामहश्राद्धार्थं वैश्वदेवविप्रभेदेऽपि सकृदेवानुष्ठेयः, यदा पित्र्यब्राह्मणकरे होमस्तदा मातामहब्राह्मण करेऽपि पृथगनुष्ठेयः, वैश्वदेवे यदैकस्मिन् भवेयुर्ब्रह्मचार्यादयो द्विजाः । तदैकपाणौ होतव्यं स्याद्विधिर्विहितस्तथा । मातामहस्य भेदेन कुर्यादिति विनिर्णयः इति स्मरणात् । पाणौ यत्कर्तव्यं तदाह शौनकः — अनग्निश्चेदाद्यं गृहीत्वा भवत्स्वेवाग्नौकरणमिति पूर्वं तथाऽस्तु इति । अयमर्थः — आद्यं - घृताप्लुतमन्नं गृहीत्वा भवत्स्वेवाग्नौकरणहोमं करिष्ये इति पूर्वं पृष्ट्वा, तथाऽस्त्विति तैरनुज्ञातो जुहुयादिति । पाणितले हुतस्यान्नस्य विनियोगमाह गृह्यपरिशिष्टकारः — यच्च पाणिले दत्तं यच्चान्यदुपकल्पितम् । एकीभावेन भोक्तव्यं पृथग्भावो न विद्यते । अन्नं पाणितले दत्तं पूर्वमश्नन्त्यबुद्धयः । पितरस्तेन तृप्यन्ति शेषान्नं न लभन्ति ते इति ।

**யமன்:—** அதில் அக்னௌகரணத்தில் போல் ஹோமத்தை, தைவ ப்ராம்ஹணனின் கையில் செய்ய வேண்டும். பரிஷேசன பரிஸ்தரணங்களைச் செய்து செய்யவும். ப்ராம்ஹணன் அக்னிக்குச் சமம் ஆனதால். தைவ ப்ராம்ஹணனின் கையில் ஹோமம் செய்தால் அப்பொழுது, மஹாளயம் முதலியதில் பிதா மாதாமஹன் இவர்களுக்காக விச்வதேவ ப்ராம்ஹணர்கள் தனியாய் இருந்தாலும், ஹோமத்தை ஒரு தடவை மட்டில் செய்யவும். பித்ர்ய ப்ராம்ஹணனின் கையில் ஹோமம் செய்யும் பக்ஷத்தில், மாதாமஹ ப்ராம்ஹணனின் கையிலும் தனியாக ஹோமம் செய்யப்பட வேண்டும். ''விச்வதேவ ஸ்தானத்தில் இருவருக்கு மேல் ப்ராம்ஹணர்கள் இருந்தால், அப்பொழுது ஒருவனின் கையில் ஹோமம் செய்ய வேண்டும். அவ்விதம் விதி இருப்பதால். மாதாமஹனுக்குத் தனியாய்ச் செய்ய வேண்டும் என்பது ஸித்தாந்தம்'' என்று ஸ்ம்ருதி இருப்பதால். பாணி ஹோமத்தில் செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார். **சௌனகர்:—** 'அனக்னிச்சே+ததாஸ்து' என்று. இதன் பொருள்:— ''அக்னி இல்லாதவன், ஆத்யம் = நெய்யால் நனைந்த அன்னத்தை க்ரஹித்து, பவத்ஸ்வேவ அக்னௌகரண ஹோமம் கரிஷ்யே' என்று முன்பு கேட்டு, 'ததாஸ்து' என்று அவர்களால் அனுஜ்ஞை செய்யப்பட்டவனாய் ஹோமம் செய்ய வேண்டும்'' என்று. கையில் ஹோமம் செய்யப்பட்ட அன்னத்திற்கு விநியோகத்தைச் சொல்லுகிறார், க்ருஹ்யபரிசிஷ்டகாரர் :— கையில் கொடுக்கப்பட்டது எதுவோ, போஜன பாத்ரத்தில் வைக்கப்பட்டது எதுவோ, அவ்விரண்டையும் ஒன்றாக்கிப் புஜிக்க வேண்டும். தனியாகச் செய்யக் கூடாது. கையில் கொடுக்கப்பட்ட அன்னத்தைப் புத்தி இல்லாதவர்கள் முன்பே புஜித்து விட்டால், பித்ருக்கள் அதினாலேயே த்ருப்தர்களாகின்றனர். பிறகு கொடுக்கப்படுவதை அவர்கள் அடைவதில்லை.

यत्तु शौनकवचनम् — तेषु तद्भुक्तवत्स्वन्नमन्यदन्नञ्च भोजयेत् इति, पात्रस्थापितं पाणिहुतं पूर्वं भुक्तवत्सु ब्राह्मणेष्विति तस्यार्थः । कालादर्शेऽपि — दैवार्थपाणौ जुहुयादभार्योऽन्यो यथार्हतः । पाणौ हुतं यदन्नं तत् पृथङ्नाश्नाति कुत्रचित् इति । अनेनैवाभिप्रायेण कात्यायनः — हस्ते हुतं यदश्नीयात् ब्राह्मणो ज्ञानदुर्बलः । नष्टं भवति तत् श्राद्धमिति शातातपोऽब्रवीत् इति ।

*ஆனுல், 'அவர்கள் அந்த அன்னத்தைப் புஜித்த பிறகு, வேறு அன்னத்தையும் புஜிப்பிக்கவும்' என்று ஶௌனக வசனம் உள்ளதே ? எனில், அதன் பொருள் இவ்விதம்:— போஜன பாத்ரத்தில் வைக்கப்பட்ட, பாணியில் ஹோமம் செய்யப்பட்ட அன்னத்தை முன்பு ப்ராம்ஹணர்கள் புஜித்த பிறகு' என்பதாம். **காலாதர்சத்திலும்:**— பார்யை இல்லாதவன் தேவதார்த்த ப்ராம்ஹணனின் கையில் ஹோமத்தைச் செய்யவும். மற்றவன் விதிப்படி செய்யவும். பாணியில் ஹோமம் செய்யப்பட்ட அன்னமெதுவோ அதைத் தனியாய் ஒரு காலும் புஜிக்கக் கூடாது. இவ்விதமான அபிப்ராயத்துடனேயே சொல்லுகிறுர், **காத்யாயனர்:**— 'பாணியில் ஹோமம் செய்யப்பட்ட அன்னத்தை அறியாத ப்ராம்ஹணன் புஜித்தால், அந்த ச்ராத்தம் நஷ்டம் ஆகின்றது' என்றுர் சாதாதபர்.*

पारिजाते तु — हस्ते हुतं तु नाश्नीयादब्दं मुक्त्वाऽऽनुमासिकम् । अग्नौ प्रक्षेपणं कार्यं सपिण्डीप्रेतकर्मसु इति । तदेवमनाहिताग्नेरौपासनवत आहिताग्नेरर्धाधानेनौपासनवत औपासन एव सपिण्डीकरणादि श्राद्धं कर्तव्यम् । सर्वाधाने-नौपासनासम्भवे आपस्तम्बोक्ताग्नौकरणस्य लोपः, पितृयज्ञधर्म-काग्नौकरणस्य न निवृत्तिः, किन्तु तस्य दक्षिणाग्नावनुष्ठानम्, दक्षिणाग्न्यसन्निधाने लौकिकाग्नौ वा जले वा होमः कर्तव्यः ।

பாரிஜாதத்திலோ வெனில்:— ப்ரத்யாப்திகம், அனுமாஸிகம் இவைகளைத் தவிர்த்த ச்ராத்தத்தில் பாணியில் ஹோமம் செய்யப்பட்டதைப் புஜிக்கக் கூடாது. ஸபிண்டீகரணம் ப்ரேத ச்ராத்தம் இவைகளில் புஜிக்காமல் அக்னியில் போட வேண்டும். ஆகையால் இவ்விதம் இருப்பதால், அநாஹிதாக்னியாய் ஔபாஸனமும் உள்ளவனும், அர்த்தாதாநத்தால் ஔபாஸனம் உள்ள ஆஹிதாக்னியும் ஔபாஸனாக்னியிலேயே ஸபிண்டீ கரணம் முதலிய ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். ஸர்வாதானத்தால் ஔபாஸனம் இல்லாவிடில், ஆபஸ்தம்பர் சொல்லிய அக்னௌ கரணத்திற்கு லோபமே தான். பித்ருயஜ்ஞ தர்மகமான அக்னௌ கரணத்திற்கு லோபம் இல்லை. ஆனால், அதற்குத் தக்ஷிணாக்னியில் அனுஷ்டானம். தக்ஷிணாக்னி ஸன்னிதி இல்லாவிடில் லௌகிகாக்னியிலாவது, பாணியிலாவது ஜலத்திலாவது ஹோமம் செய்யப்பட வேண்டும்.

एवमनाहिताग्निरप्यौसनासन्निधाने पितृयज्ञधर्मकमग्नौ करणं लौकिकाग्नौ द्विजेऽप्सु वा कुर्यात्। दायात् प्रागगृहीताग्निर्ब्रह्मचारी विधुरश्च पाणौ कुर्यात् न लौकिकाग्नौ काम्यादिचतुष्टयेऽपि पाणावेव होमः । आपस्तम्बोक्तमग्नौकरणमनाहिताग्निः दूरस्थाग्निश्चेत् लौकिकाग्नौ कुर्यात्, ब्रह्मचारी विधुरश्च लौकिकाग्नौ कुर्यात् । औपासनाग्नौ दूरस्थे केचिदिच्छन्ति सत्तमाः । पाणावेव तु होतव्यमिति नैतत् समञ्जसम् । प्राचीनावीतिना होमः कार्योऽग्नौ द्विजसत्तमाः । तच्छेषं विप्रपात्रेषु विकिरेत् संस्मरन् हरिम् । अभार्यो दूरभार्यश्च ब्रह्मचारी च पैतृके । अग्नौकरण मेतेषां वह्नावेवोचितं भवेत् इति स्मरणात् ।

இவ்விதம் அநாஹிதாக்னியும், ஔபாஸனம் ஸமீபத்தில் இல்லாவிடில் பித்ருயஜ்ஞதர்மகமான அக்னௌ கரணத்தை லௌகிகாக்னியிலாவது,

